# ஸ்ரீ பகவத்கீதை

## விளக்கப்பேருரை



நலங்கிள்ளி

# ஸ்ரீ பகவத் கீதை

விளக்கப் பேருரை

தத்துவத் தமிழொளி
கவிரத்ந நலங்கிள்ளி

வானவன் பதிப்பகம்
5, மேட்டுத் தெரு, அரக்கோணம்-631 003.

முதற்பதிப்பு : டிசம்பர், 1992



விலை : ரூ. 70-00

தயாரிப்பு : இலக்கியச்சுடர்
Dr. மூவேந்தர் முத்து D.Litt.

விற்பனை உரிமை :

பூவழகி பதிப்பகம்
29/2 சீனிவாசப் பெருமாள் சன்னதி தெரு
இராயப்பேட்டை
சென்னை-600 014.

அச்சிட்டோர் :

மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014.

# காணிக்கை



**வள்ளல் பெருந்தகை, சிங்கப்பூர்**

**திரு. மாயழகு அவர்கட்கு**

எல்லையிலா அன்புடைமை ஈடில்லாச் சான்றாண்மை
கல்வி பரஞானமுடன் காருணமை—பல்வளம் கொள்
வள்ளலாம் மாயழகு சாமிக்குஇம் மாமறைநூல்
தெள்ளு தமிழ்க் காணிக்கைத் தேன்.



உ

*ஸ்ரீசந்த்ரமௌளீச்வராய நம :*

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

## ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள்

## ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம், காஞ்சிபுரம்

தேதி : 23-11-92

# ஸ்ரீ காஞ்சிப் பெரியவாள் ஆசியுரை

மோகத்தில் மூழ்கி — கடமை மறந்து — பிஞ்சு வேதாந்தியாகப் பழுத்து நின்ற பார்த்தனுக்கு ஸாங்க்யம்—யோகம் முதலான முறைகளை விளக்கமாக எடுத்துக் காட்டியும் விச்வரூப தர்சனத்தின் மூலமாகவும் உண்மையை உணர்வித்துக் கடமையுணர் வூட்டியருளிய ஸ்ரீ கண்ணபிரானின் உபதேசங்களே ஸ்ரீமத் பகவத் கீதையாகும்.

இதற்கு எளிய தமிழில் உரையெழுதி உபசரித்துள்ளார் புலவர் நலங்கிள்ளி.

தமிழறியும் நல்லுலகம் இந்நூலின் துணைகொண்டு கீதையின் பொருளுணர்ந்து பெரும் பயன் பெற்றுய்வதாக.

நாராயணஸ்ம்ருதி

சங்க இலக்கியச் சதுரர்
மும்மொழிப் புலவர்

## திரு. அ. வே. சுப்பிரமணியம்

அவர்கள் உளமுவந்து வழங்கிய

# அணிந்துரை

இந்தியா என்பது ஒரு தேர் என்றால் அதற்குப் பகவத் கீதையும் திருக்குறளும் இரு அச்சுகளாம். இவ்விரு அச்சுகளே தேரினை அபாயமின்றி முறையாக நல்ல வழியில் செலுத்துவன. திருவள்ளுவமாலை என்ற சங்க நூலில் தொகுக்கப்பெற்ற ஒரு பாட்டின் கருத்தாகும், இது.

ஒரே ஆசிரியர் பாரதத்தின் இந்த இரு பெரிய நூல் களுக்கும் விளக்கம் எழுதுவது என்பது காண்டற் கரியது. திரு நலங்கிள்ளி பல ஆண்டுகளுக்கு முன் திருக்குறள் விளக்கம் எழுதி வெளியிட்டார்கள். இன்று பகவத் கீதை விளக்கத்தைத் தமிழ் மக்களுக்கு அளிக்கிறார்கள். இது தமிழகத்தின் இன்றைய நிலையில் அரியதொரு செயலாகும். இதற்காக இவ்வாசிரியரைத் தமிழர் பாராட்ட வேண்டும்.

பகவத் கீதைக்குச் சில தமிழ் உரைகள் இருப்பினும் அவற்றுக்கும் இந்நூலுக்கும் நெடுவாசி உண்டு. தத்துவ சாத்திரம் என்பது நுட்பமானது. அதை விளக்கும் பொழுது குழப்பம் என்பதே நுழையக் கூடாது. தத்துவம் குறித்துத் தெளிவு பெறவே மக்கள் இத்தகைய நூல்களைப் படிக் கிறார்கள்; அவர்களைப் பின்னும் குழப்பமடையச் செய்வது ஒருதொண்டாகுமா? நலங்கிள்ளி கீதையின் தத்துவக் கோட் பாடுகளைத் தாம் தெளிவாகத் தெரிந்துகொண்டு சிறிதும் குழப்பத்துக்கு இடமின்றித் தெளிவாக இந்நூலில் விளக்கு கிறார். ஆன்மாவின் சிறப்பியல்புகள், விளைநிலமாம் உடல்

அதையறியும் ஆன்மா இவற்றிடையே உள்ள பெரும் வேறு பாடுகள், கருமயோகத்தின் அடிப்படைத் தத்துவங்கள் இவற்றை அவர் விளக்கும் முறை தனித்தன்மையானது. தெளிவும் ஆழமும் கொண்டது. இப்பகுதிகள் இந்நூலைப் படிப்போர்க்குப் பெரும் உதவியாக விளங்குவன. இதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை.

வடமொழித் தத்துவ வரலாற்றிலே பகவத்கீதையில் கரும யோகத்தைக் குறித்த கருத்துகள் முன்பு காணாத வகையில் புதுமைப் பொலிவொடு தோன்றின. உபநிடதங்களிலும் பிரம்ம சூத்திரத்திலும் கருமயோகத்தை இத்துணை தெளி வாகவும் ஆழமாகவும் கூறப்படவில்லை. இக்கருத்துகளை நலங்கிள்ளியார் 3, 4, 5, அத்தியாயங்களில் மிகச் சிறப்பாக விளக்கியிருக்கிறார். நம் போன்றார்க்குப் பக்தி ஞான யோகங்களைவிடக் கரும யோகமே அன்றாட வாழ்க் கைக்குப் பெரும் பயனளிக்கும் நல்லுரையாகும். இதை இவ்வாசிரியர் எடுத்துக் கூறும் முறை தனித்தன்மை வாய்ந்த தாகும். சிறப்பாகப் பக்கங்கள் 84, 88, 89, 98, 100—102, 102—104 இவைகளில் அடங்கிய விளக்கங்கள் தெளிவின் கொடுமுடியை எட்டிப் பிடிக்கின்றன. படிக்கச் சுவையாக வும் அமைந்துள்ளன.

பக்தியோகம் பற்றிய இவரது விளக்கங்கள் அறிவின் நுட்பத்தோடு உணர்ச்சியின் அடிப்படையில் அமைந்த முறை பாராட்டத்தக்கது. உணர்ச்சியின் அடிப் படையில் அமைந்த பக்தியோகத்தை வெறும் அறிவைக் கொண்டு உணர முடியாது. சிறப்பாக ஒன்பது, பதினொன் றாம் அத்தியாயங்களின் விளக்கங்கள் உயர்ந்த இலக்கியத் தரத்தை எட்டிப் பிடிப்பதோடு கண்ணனாம் ஆசானின் உள்ளக்கிடக்கையைத் திறந்து காட்டுகின்றன. திருவாசகம் உணர்ச்சிப் பிழம்பான ஒரு சமயப்பனுவல். அதனை இப்பகுதியில் ஆசிரியர் அழகுறப் பயன்படுத்தி இருப்பது பெரிதும் போற்றத் தக்கது.

13 முதல் 18 வரை உள்ள ஆறு அத்தியாயங்கள் பெரும்பாலும் ஞானத்தைப் பற்றியே பேசுவதால் இவை ஞான ஷட்கம் என்றழைக்கப்பெறும். இப்பகுதியின் விளக்கம் மிகத் தெளிவாகவும் ஆழமாகவும் அமைந்திருக்கிறது. இப்பகுதியை எல்லோரும் உணரும்படி விளக்குவது மிகக் கடினம். இச்சாதனையை நலங்கிள்ளி எளிதில் சாதித்திருக்கிறார். நூலின் கடைசிப் பகுதியாகிய 18ஆம் அத்தியாயத்தில் சுலோகங்களுக்கு விளக்கம் தரும்பொழுது அங்கங்கே, தேவையான இடங்களில் கருத்துகளைப் படிப்படியாக அலசி ஆராய்ந்திருப்பது நூலின் பயனைப் பெரிதும் உயர்த்துகிறது. ஏதோ எழுதி முடிக்கவேண்டும் என்றில்லாமல் ஒவ்வொரு கருத்தையும் ஆழமாகச் சிந்தித்துப் பகுதிகளாகப் பிரித்துத் தெளிவாகத் தெரிந்து கொண்ட பின்னரே விளக்கத்தை எழுதியிருக்கிறார் என்பதை நாம் உய்த்துணர முடிகிறது.

நூல் முழுவதிலும் நலங்கிள்ளியின் அடக்கம் நன்கு வெளிப்படுகிறது. பல தத்துவ மேதைகள் கீதைக்கு உரை காணும் பொழுது ''எமது கொள்கையைத்தான் கீதை வற்புறுத்துகிறது'' என்று உறுதியுடன் ஐயத்துக்கிடமின்றி எழுதிவிடுவதைத்தான் நாம் பார்க்கிறோம். சைவ சித்தாந்தத்தில் பெரும் புலமை பெற்றுப் பல நூல்கள் இயற்றிய இவ்வுரையாசிரியர் ''இப்படி இருக்கலாம்'' என்றுதான் கூறுவார். சித்தாந்தக் கொள்கைகளுக்கு ஒத்து வரும் கருத்துகளை விளக்கும்பொழுது சித்தாந்த நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுவார். பொருளில் ஒப்புமை இல்லாத இடங்களில் வலிந்து ஒப்புமை காண மாட்டார். பொருள் கண்டு உரை எழுதுவதில் நலங்கிள்ளியின் நேர்மை காணக்கிடைக்காத ஒன்று.

நலங்கிள்ளியின் தமிழ்நடை அழகிய எளிய நடை. தமிழில் பெரும் புலமை அமையப் பெற்றிருப்பினும் அவருடைய தமிழ் இத்துணைஎளியதாக இருப்பது தனிச்

சிறப்பாகும். நூலின் சுவையையும் பொருளின்தெளிவையும் மிகுதியாக்க உரையாசிரியர் எத்தனை எத்தனையோ உயரிய தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டியுள்ளார். திருக்குறளிலிருந்து பற்பல பாக்களை மேற்கோள்களாகக் காட்டியது இயற்கையே. இதுதவிரக் கடோபநிடதம், கைவல்ய நவநீதம், திருமந்திரம், திருவாசகம், பட்டினத்தார், தாயுமானவர் பாடல்கள், பெரியாழ்வார் திருமொழி, சங்க இலக்கியம், இராமலிங்க அடிகளின் திருஅருட்பா இவற்றிலிருந்தும் பல மேற்கோள்களைக் காட்டிக் கருத்துகளை விளக்கியுள்ளார். காளிதாசனின் குமார சம்பவத்திலிருந்தும் ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்தின் கவிதையிலிருந்தும் கூடச் சில வரிகளைக் காட்டி விளக்கம் தந்திருப்பது நூலின் சுவையை மிகுதியாக்குகிறது.

உலகின் தத்துவ சாத்திர நூல்களில் தலைமை தாங்கும் பகவத் கீதைக்கு நலங்கிள்ளியால் எப்படி இத்துணை சிறந்த உரை எழுத முடிந்தது? அவர் தமது வாழ்க்கையில் இந்நூலின் கோட்பாடுகளை எல்லாம் நடைமுறையில் கொண்டு வந்து அவற்றினின்றும் எக்காரணம் கொண்டும் பிறழாமல் இன்றும் வாழ்ந்து வருவதேயாம். கீதையின் அறிவுரைகளுக்கு விளக்கமாக அமைந்தது அவரது வாழ்க்கை முறை. ஆகவே கீதைக் கருத்துகளுக்குப் பொருளை அறிய அவர் வேறு ஆசான்களைத் தேடிச் செல்லத் தேவைஇல்லை. நூல்களைப் படித்துத்தான்அறியவேண்டும் என்பதுமில்லை. தமது பட்டறிவை ஆய்ந்து சிந்திப்பதாலேயே அத்தனை கருத்துகளுக்கும் விளக்கம் அவருக்குக் கிடைத்துவிடும். திருநலங்கிள்ளியின் விளக்க உரை தலைசிறந்து விளங்க இதுவே தலையாய காரணம் ஆகும்.

— அ. வே. சுப்பிரமணியன்

# வாழ்த்துரை

திருக்குறள் நம்பி, திருக்குறள் சீர்பரவுவார்
ஊ. வ. தட்சிணாமூர்த்தி

நண்பர் கவிரத்ன நலங்கிள்ளி அவர்கள் எழுதியுள்ள பகவத் கீதை என்ற நூலுக்கு அணிந்துரை எழுதிக் கொடுக்கப் பணித்தார். 567 பக்கம் உள்ள நூலின் நுட்ப-திட்டங்களை ஒரு சில வரிகளில் எழுத முடியாதென்பதை உணர்வேன். இருப்பினும் துணிந்து நான் அறிந்த சில கருத்துக்களைத் தெரிவிக்கிறேன்.

பகவத் கீதை என்பது ஒரு வடமொழி தத்துவநூல். இவ்வுலகப் பொதுமறை பலமொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டு முன்னணியில் நிற்பது. இதுவரையில் இதற்கு விளக்க உரை எழுதியவர் பலர். ஆனால் எவரும் தமிழ் மொழியில் சைவ சித்தாந்த மரபில் தெளிந்தவர் யாரும் விளக்க உரை எழுதவில்லை. குறிப்பாக வடமொழிப் பயிற்சியும், தமிழ் அறியாதவருமே எழுதி உள்ளனர். நண்பர் நலங்கிள்ளி சைவ சித்தாந்தக் கருத்துக்களை நன்குணர்ந்தவர். சிவஞான போதம், திருமந்திரம், போன்ற அடிப்படை நூல்களைக் கற்றுணர்ந்து விளக்க உரை எழுதியிருப்பவர். மேலும் பட்டினத்தார், தாயுமான சுவாமிகள், வள்ளலார் போன்ற தமிழ்ச் சான்றோர்களின் நூல்களில் ஊறித் திளைத்தவர். ஆகவே இவர் விளக்க உரை பழைய உரை போலல்லாது ஒரு புதிய கோணத்தில் அமைந்துள்ளது.

இறைவன் ஒருவனே. ஒன்றே குலம் ஒருவனே தெய்வம். ஒன்றது, பேரூர், வழிஆறு. அதற்குள. என்பது மந்திரம் இதை

அறியாது இதுவரையில் எங்கள் தெய்வம், எங்கள் தெய்வம் என்று பெருவழக்கு நடந்து வருகிறது. இது சிறு பிள்ளைகள் விளையாட்டு. தங்கள் தாய்தான் உயர்ந்தவள் என்று சச்சரவிடுவது போன்றது. தாயாகித் தந்தையுமாய்த்தாங்கு கின்ற தெய்வம் உலகிற்கு ஒருவனே. இது தெரிந்தோ தெரியாமலோ சமயச் சான்றோர் வழக்கிடுகின்றனர்.

இறைவன் பேரொளி. அதில் சிந்திய சிதறிய ஒருஅணுவே மனிதன். ''புல்லாகிப் பூடாகிப் புழுவாகி, மரமாகிபல் விருகமாகி, பறவையாய், பாம்பாய், கல்லாய், மனிதராய்'' எல்லாப் பிறப்பும் பரிணாம வளர்ச்சியில் எய்தி கடைசியில் இறைவன் திரு அருளால் மனித தேகம் பெற்று வந்தவன். மனிதப் பிறப்பு துன்பச்சூழல் உடையது. பிறத்தல் துன்பம், வாழ்தல் துன்பம், இறத்தல் அதைவிடத் துன்பம். நான் ஏதும் பிறப்பஞ்சேன், இறப்பதற்கு என் கடவேன், என்று பெரியோர்கள் வருந்தியுள்ளனர். துன்பம் நீங்கி இன்பம் அடைவதற்கு என்னதான் வழி? பிறப்பிறப்பு நீங்கி என்றும் ஒருபடித்தாய் சாகாவரம் பெற்று இறைவன் தாள் சேர்வது ஒன்றே சரியான வழி.

**''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்''**

என்பது வள்ளுவம்.

இறைவனடி சேர்தற்கு உபாயம் வடமொழியின் படி சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை எனும் ஆறாம் என்று கைவல்யம் கூறும். இதையே திருவள்ளுவர் ஒழுக்கமும், ஊக்கமுண்டமையும் வழி என்பர்.

**''ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்**
**எய்துவர் எய்தாப் பழி''**

**''எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்''**

பகவத்கீதையில் பகவான் கிருஷ்ண பரமாத்மா அவர்கள் உபதேசப்படி ''யார் ஒருவர் தனக்கு உற்ற கடமைகளை

என்னையே நினைந்து யான் என்னும் செருக்கற்று எல்லாம் இறைவன் கட்டளை, 'என் செயலா லாவயாதொன்றில்லை' என்ற திட சித்தத்துடன் பயன் கருதாது செய்கிறாரோ அவர் என்னையே அடைவர்'' என்பர். மனிதன் தான் செய்யும் வினையின் பயனைத் தானே அனுபவிப்பான். அதை பகவானாலும் மாற்ற முடியாது என்பர்.

**''தந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பர்''**

**''ஊழ்வினை வந்து உருத்தூட்டும்''**

'வினை விதைத்தவன் வினை அறுப்பான். தினை விதைத்தவன் தினை அறுப்பான்' என்பன எல்லாம் தமிழ்ச் சான்றோர் மொழி.

ஆகவே ஒவ்வொரு மனிதனும் நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து இறைவனை அடைவதற்கு வைராக்கியமாய் நீள நினைந்து தனக்குற்ற கடமைகளைத் தட்டிக் கழிக்காமல் எல்லாம் இறைவன் கட்டளை என்று கருதி அவைகளின் பயன் கருதாது செய்வானாயின் அவர்கள் இறைவனை அடைவர். 'நிஷ்காம்ய கர்மம்' என்பர் இதனை.

**''யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்''**

என்பது வள்ளுவம்.

இந்த உண்மைகளை ஆங்காங்கு பொருந்திய இடங்கள் தோறும் இந்நூலாசிரியர் எடுத்துக் காட்டுவது பயனுடையது. இதை வாங்கிப் பலமுறை படித்து அதன்படி மக்கள் ஒழுகுதல் வேண்டுவன்.

பகவத் கீதையின் திரண்ட கருத்து பயன் கருதாது புணியாற்றுதல்; நிஷ்காம்மிய கர்மம்.

**—ஊ. வ. தட்சிணாமூர்த்தி**

# கீதைவழி வாழ்க!

இலக்கியச்சுடர் டாக்டர் மூவேந்தர் முத்து டி.லிட்.
*துணைத்தலைவர்,*
*அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம்.*

ஆண்டவன் அன்புமயமானவன்; அவன் அருளால் இந்த உலகம் இன்பமாக இருக்கிறது. உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் நல்லவண்ணம் வாழ வேண்டும் என்றே தேவையான அனைத்தையும் ஆண்டவன் படைத்திருக்கிறார். மலை, கடல், செடி, கொடி, புல், பூண்டு மற்றும் எல்லாவற்றையும் தேவைக்கேற்ப இயற்கையிலேயே அமைந்திருக்கின்றன.

இந்த நிலம் வெறும் மண்ணாக இருந்தால் அதற்கு மதிப்பிருக்காது, அதற்காகக் கல்லையும் படைத்தான்; கல்லை வெறுமனே மண்ணோடு அமையாமல் ஓங்கி வளர்ந்த மலைகளாகப் படைத்துள்ளான். மலைக் கற்களால் மண்ணும் பெருமையடைகிறது. மண், பெண் என்றால் மலை ஆண் வடிவமாக நிமிர்ந்து நிற்கிறது. நிலமகள் பெண் போல் அனைத்து உயிர்களையும் பெற்றெடுக்கிறது. மலையோ—ஆணைப் போல் நிமிர்ந்து நின்று பார்ப்பதோடு மட்டுமல்லாமல், நிலமகள் பெற்ற உயிரினங்களைப் பாதுகாத்துக் கொண்டு, அமைதியாக நின்று கொண்டிருக்கிறது.

இயற்கையின் திருவிளையாடல்களை நாம் சற்று நேரமாவது எண்ணிப் பார்ப்போமானால் அதன் விந்தைகள்

புரியும். என்னென்ன கண்கொள்ளாக் காட்சிகள் என்பதை யும் அறிந்து கொள்ளலாம். ஓங்கி வளர்ந்த மரமும், உயர முடியாமல் இருக்கும் படர் செடிகளையும் பார்க்கும் போது பலவித மனித மனங்களையும் அவைகளில் பார்க்கலாம்.

உலகப் பகுதியை உற்று நோக்கினாலும் அதிலும் விந்தை களை அறியலாம். முக்கால் பாகம் நீரினாலும், கால் பாகம் நிலமாகவும் காட்சி நல்குவது ஏன்? சூரிய வெப்பத்தால் இந்த மண் எரியாமல் இருக்க, பரந்து விரிந்த கடல் நீரால் காப்பாற்றிக் குளிர்ச்சியாக்கிக் கொண்டிருக்கிற இயற்கையின் சக்தியை என்னென்பது?

மண்ணில் மட்டுமா விந்தை! விண்ணிலும் வியன்மிகு கோள்களால் கண்ணாமூச்சி விளையாட்டுகள்! கதிரவனை—காய்கதிர் செல்வனாகப் படைத்து, சந்திரனை—தண்ணில வாக ஏன் படைத்தான். எல்லாம் இந்த உலகம் இன்பம் (சுபிட்சம்) பெறவே. மனிதர்கள் வேற்றுமை இன்றி ஒற்றுமை யுடன் வாழவே.

ஆனால், ஆறறிவு கொண்ட மனிதன் அனைத்திலும் அறிவியல் சாதனை மூலம் வெற்றி கொண்டான். வியத்தகு காரியங்களைச் செய்து வருகிறான். என்ன பயன்? ஒரு பக்கம் வளர்ச்சியும் இன்னொரு பக்கம் தாழ்ச்சியும்—அதில் வறுமை யும் போராட்டங்களும். சிலர் மகிழவும் பலர் வாடவும் மனிதர்கள் மத்தியில் வாழ்க்கை முறைகள். சிலர் உழைக்க வும்—பலர் உண்டு கொழுக்கவுமான நிலைகள். சிலர் மாடுகள் போல் உழைத்துக் காப்பாற்றவும், பலர் உல்லாசபுரி சவாரி செய்பவர்களாகவும் இருப்பது ஏன்?

இதன் விளைவுகள் மனமாச்சரியங்கள்; வேறுபாடுகள்; வேதனைகள். அடிமட்டத்தில் நசுக்கப்பட்ட ஏழைகள்; அவர் களின் கண்ணீர்க் கதறல்கள்; அவர்களைக் கைதூக்கி விடுகிறேன் என்று நீலிக் கண்ணீர் வடிக்கும் மனித முதலைகள். மனித வாழ்க்கைகள் மலையாகவும் மடுவாகவும்

மேடு பள்ளங்கள். இதை நல்வழிப்படுத்த ஏற்பட்டனவே மனிதவள மேம்பாட்டு மதநெறிகள். வேதங்கள் — போதகர்கள்!

மக்களை மதம் என்னும் 'மத'த்திலிருந்து நல்வழிப் படுத்தவே மகான்கள் தோன்றுகிறார்கள். அந்த மகான்கள் சொல்லும் நல்ல போதனைகளைக் கூடக் கேட்பதற்கு— கேட்டு வழி நடப்பதற்கு நேரமில்லாமல் ஓடிக் கொண்டே இருக்கிறோம். ஒவ்வொரு காலகட்டத்திலும் மகான்கள் தோன்றிக் கொண்டே இருக்கிறார்கள். அவர்களில் சிலர் தியாக தீபங்களாகவும் விளங்குகிறார்கள்.

அன்பே வடிவான இயேசு பெருமான், எளிமையாக வாழ்ந்த நபிகள் நாயகம், கன்பூஷியஸ் மற்றும் எண்ணற்றோர் மேலை நாடுகளிலும், நம் நாட்டில் கிருஷ்ண பெருமான் போன்ற மகான்களும் தோன்றி இந்த உலகம் நலம் பெற பலவற்றை உபதேசித்துச் சென்றார்கள். மகாபாரதக் கதையில் வியாச பகவான் — கண்ணனின் உபதேசத்தை எங்கு சொல்ல வேண்டுமோ அந்த இடத்தில் பயன்படுத்தி உள்ளார். அதுதான் இன்றைக்கும் தேவைப்படுகிறது.

மகிழ்ச்சியாக இருக்கும் போது—விளையாடும் போது— மற்ற காரியங்கள் செய்யும் போது—அறிவுரை தேவை இல்லை. ஆனால் மனிதர்கள் போராட்டங்களுக்குத் தங்களை ஆட்படுத்திக் கொள்ளும் போது—அவர்களை வழி நடத்த' திருந்தி வாழ அறிவுரைகள் கட்டாயம் தேவை. அந்த அறிவுரையைத்தான் கிருஷ்ண பரமாத்மா என்னும் மகான்— பாரதப் போரில்—போர்க்களத்தில் உபதேசிக்கிறார்.

கடமையைச் செய்; பலனை எதிர்பார்க்காதே. ஒழுங்காக உழைத்தால் உரிய பலன் நிச்சயம் கிடைக்கும் என்பதை ஆணித்தரமாக உணர்த்துகிறார். உழைப்பு, உழைப்பு என்று வள்ளுவர் போல் உணர்த்துகிறார். சோர்ந்து போகும் மக்களுக்கு இப்படிப்பட்ட வீர அறிவுரை சுவை உணவாகும் அல்லவா!

'எங்கெங்கு, எந்தெந்த நேரத்தில் தர்மம் அழிக்கப்பட்டு, அதர்மம் தலைதூக்குகிறதோ அங்கெல்லாம் நான் தோன்று வேன்' என்றார் கீதையில் கண்ணன். ஆம்; இந்த நாட்டில் மதங்களால் இப்போது மக்கள் மாண்டு கொண்டிருக் கிறார்கள். கலவரங்கள் போராட்டங்களாக வெடித்து விபரீத நிலையை உருவாக்கியிருக்கின்றன. நல்லவர்கள் மனம குமுறுகிறார்கள்; தீயவர்கள் வெறியாட்டம் ஆடுகின்றார்கள். மக்கள் திசை தெரியாது திகைக்கிறார்கள். ஆம்; இந்த நேரத்தில் கண்ணன் சொன்னது போல், அவருடைய கீதோப தேசம் கவிரத்ன நலங்கிள்ளியால்—தமிழில் 'பகவத்கீதை தெளிவுரை'யாக வெளிவருகிறது. மக்களை நல்வழிப்படுத்த —பேதமற்ற சமுதாயம் மலர்ந்திட—பலனை எதிர்பார்க்காமல் உழைத்திட—அழகான உலகத்தை மகிழ்ச்சியோடு உலாவர — இதோ கண்ணன் அருளிய பகவத்கீதை உரிய நேரத்தில் வருகிறது. இதுவும் கண்ண பெருமான் அன்று சொன்னது போல் நடக்கிறது.

அவ்வப்போது பல—கீதை உரைகள் வரலாம். ஆனால்— இப்போது இந்த விளக்கவுரை வருவது கண்ணனின் அழியாத வாக்கு வரம்தானே! இதைத்தான் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். சிந்திக்க வேண்டும். அதன் வழி நடக்க வேண்டும்.

வான்மறை வள்ளுவர் திருக்குறளும், கண்ணனின் கீதைப் பேருரையும் எனக்கு என்றும் மனத்தை நிறைவு செய் வன, அந்த இரண்டையுமே அண்ணன் திருமிகு. கவிரத்ன நலங்கிள்ளி அவர்கள் தம் இரு கண்கள் போல் போற்றி வருவதோடு, எளிய தமிழில்—கீதைக்குக் குழப்பமின்றி உரை எழுதியுள்ளார், இந்த உரை தமிழ் மக்கள் வாழ்விற்கு மிகுந்த பயன் அளிக்கும். உரையாசிரியர் அவர்களுக்கும் நீட்டிய பெருமையையும் பயனையும் அளிக்கும் என்பதில் அட்டி இல்லை. இந்த நூலை அவர் அளித்ததில் அவரை எல்லோ ரோடும் சேர்ந்து நானும் பாராட்டுகிறேன். வாழ்த்துகிறேன்.

அவரைப் பாராட்டுவதற்கு முன், அலைகடலுக்கு அப்பால்—தமிழை வளர்த்துக் கொண்டு வரும்—தமிழ் வளர ஆதரவு அளித்து வரும்—சிங்கப்பூரில் வாழ்ந்தாலும்—தாய்த் தமிழும் வாழ வேண்டுமென்பதில் ஆறாக் காதல் கொண்டு—அதற்கு ஏதேனும் சிறு உதவி செய்ய வேண்டுமென்று நினைத்து, இந்நூல் வெளிவர உதவி செய்துள்ளார் திரு. மாயழகு அவர்கள். அவர்களை சடையப்ப வள்ளல் என்பதா? சிங்கை வாழ் தமிழ் மறவர் என்பதா? இப்படிப்பட்ட ஒரு நல்ல நூல் வெளிவர ஆக்கம் தந்த அவரை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

அடிக்கடி தொலைபேசி வாயிலாக — நூல் முடிந்து விட்டதா? என்று அன்பொழுகக் கேட்பார். அவர் போன்ற மனம் எல்லாப் பெருமக்களுக்கும் வர வேண்டும்.

நல்ல நேரத்தில்—நல்ல முறையில்—எளிய தமிழில் பகவத் கீதை விளக்க உரை எழுதி, தமிழ் மக்களுக்கு வழங்கும்—தமிழறிஞர் கவிரத்ன நலங்கிள்ளி அவர்களை மீண்டும் மீண்டும் பாராட்டுகிறேன். தொண்ணூற்றிரண்டு வயதான தாயிடம் அவர் கொண்டுள்ள பாசமே—அவரை இப்படியெல் லாம் நல்ல நூல்களை எழுத வைக்கிறது. தமிழ் அன்னை போல் அவரை எழுதத் தூண்டும் அந்த அன்னையையும் இந்த நேரத்தில் வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூலுக்கு ஒரு பாராட்டு நீங்கள் எழுதித் தரவேண்டும் என்று அன்புக் கட்டளையிட்ட அண்ணன் கவிரத்ன நலங்கிள்ளி அவர்களையும் போற்றிப் பாராட்டி வணங்கு கிறேன்.

—மூவேந்தர் முத்து

# நூன்முகம்

பகவத் கீதை மக்களுக்கு அறிமுகப்படுத்தப்படவேண்டிய ஒரு நூல் அன்று. அது இதிகாச காலத்திலிருந்து மக்கள் அறிந்து போற்றி வழிபடும் ஒரு மகத்தான நூல்.

அது வியாசமா முனிவரின் மகாபாரதத்தின் 25ஆம் அத்தியாயத்தில் இருந்து 42ஆம் அத்தியாயம் வரையில் கிருஷ்ணன் அருச்சுனன் இடையே நடைபெற்ற உரையாடலாக, நாடகபாணியிலே அமைந்துள்ள 700 சுலோகங்களைக் கொண்ட ஒரு ஒப்பற்ற நூலாகும். வியாசர் தொடாத துறையே இல்லை. வேதங்கள், உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், கீதை, பாரத மகாகாவியம், இவை யாவும் அவர் நமக்களித்தவை. மேனாட்டார் **இலியத்தின்** ஆசிரியர் **ஹோமரை** மகாகவி எனப் போற்றுவர். ஹோமரைப் பற்றி அலெக்சாண்டர் போப் இவ்வாறு கூறுகிறார் :

**"Homer was the grater genious: we acknowledge him the father of poetical diction;the first who taught that language of Gods to men."**

இந்த ஹோமரினும் பலப்பல மடங்கு உயர்ந்தவர் வியாச முனிவர். மேலே சொன்ன வாக்கியத்தின் முதலில் அமைந்துள்ள சொற்களை இப்படி **Viyasa was the gratest genious** என மாற்றி அமைத்தால் போதும் பிற யாவும் அவருக்கு அப்படியே பொருந்தும். இவரே, இவர் மட்டுமே பகவான் சொற்களை மனிதனுக்குப் போதித்தார் என்பதில் ஐயமே இல்லை.

**"Viyasa only" taught that language of god to men."** இந்தக் கடவுளின் மொழியே கீதை; இது தெய்வ கீதம்;

இதை நான் தமிழிலே தர பெருந்தவம் செய்திருக்க வேண்டும்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் அரக்கோணத்தில் பிரம்ம வித்யா பீடம் ஆண்டு விழா நடந்தது. அதற்கு, சிங்கப்பூர் நண்பர் வள்ளல் பெருந்தகை **திரு. மாயழகு** அவர்கள் வந்திருந்தார். அவர் வேதாந்தி, தமிழக பிரம்ம வித்யா பீடத் தலைவர். அவர்களிடம் நான் பேசிக் கொண்டிருந்தபோது; அவர் என்னிடம் ''நீங்கள் எழுதிய சிவஞான போதத் தெளிபொருள் விளக்கம், நன்றாக விளக்கமாக அமைந்துள்ளது. சித்தாந்தம் பயில்வோர்க்கு அது ஒரு நல்ல நூல். அதைப்போல பகவத்கீதையையும்,"தமிழில் தெளிவாக எழுதித் தாருங்கள்'' என வேண்டுகோள் விடுத்தார். அதன் பயனே, உங்கள் கரங்களில் தவழும் இந்நூல்! நன்னூல்!

இந்த அரிய பெரிய தத்துவக் கருவூலத்தினை நான் தமிழிலே வடித்தெடுத்த பின் அதை வெளியிட பெரும் பொருள் உதவிய அவ்வள்ளல் **திரு. மாயழகு** அவர்களைப் பாராட்ட வார்த்தைகள் இல. அவருக்கு என் மனமார்ந்த நன்றியினைக் காட்டுமுகத்தான் இதை அவருக்குச் சமர்ப்பிக்கிறேன்.

மிகச் சாதாரண சிறு மூங்கில் துண்டிலே அமர கீதத்தினை நாம் அள்ளிப் பருக அளிப்பவன் அவன். நான் ஒரு மூங்கில் துண்டு மட்டுமே; இந்நூலோ அவன் அருளிய கீதம்.

**"This little flu e of a reed, thou hast carried over hills and dales and brethed through it melodious songs eternally new"**

இந்நூல் வேதாந்தம் பயில்வோர்க்கும் தத்துவ தாகம் உடையவர்களுக்கும் துணை செய்யும் என நம்புகிறேன்.

இந்நூலுக்கு ஆசியுரை வழங்கி என்னை ஆசீர்வதித்த **காஞ்சி காமகோடி பெரியவாள்** அவர்களை நான் போற்றி வணங்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இதை எழுதுங்கால் எனக்கு ஊக்கம் அளித்து இதற்கு அரியதொரு முன்னுரை நல்கிய என் மதிப்புக்கும் வணக்கத்திற்கும் உரிய மும்மொழி வித்தகர் திரு. **அ. வே. சுப்பிரமணியன்** அவர்களுக்கும் என் இலக்கியப் பணிகளிலும் தத்துவப் பணிகளிலும் ஆக்கமும் ஊக்கமும் தந்து மதிப்புரையும் வழங்கிய என் உடன்பிறவா தமையனார் திரு. திருக்குறள் நம்பி **ஊ. வ. தட்சிணாமூர்த்தி** முதலியார் அவர்கட்கும் என் உளமார்ந்த நன்றி உரித்தாகுக.

என் கைப்பிரதியைத் தட்டச்சோடும், பின் அதை அச்செழுத்தோடும் ஒப்புநோக்கியும் பிற பல உதவிகளை உடனிருந்தாற்றியும் உதவிய என் மாணவச் செல்வங்கள், திரு. புலவர் **வ. தங்கவேலு M.A., B.Ed.,** அவர்களுக்கும் திரு. **சீனி நடராசன் M.A., B.Ed.,** அவர்களுக்கும் கவிஞர் திரு. D. . **நாதன்** அவர்கட்கும் என் நன்றி.

அழகுற இதைத் தயாரித்த என் நண்பர் இலக்கியச்சுடர் **Dr. மூவேந்தர் முத்து D.Litt.,** அவர்களின் பணி இதில் மகத்தானது. அதோடு அவர் இந்நூலுக்கு அரியதொரு முன்னுரையும் வழங்கி உள்ளார்கள். அவர்கட்கு என் நன்றி. மற்றும் புரூப் திருத்தி உதவிய திருமதி **பிரபாவதிக்கும்,** அச்சக ஊழியர்கட்கும் என் நன்றி.

இதைத் தமிழ்கூறு நல்லுலகம் ஏற்று கீதையின் சாரத்தை அறிந்து கொள்ளுமாயின் என் பணி பயனுடைத்தென நான் கருதுவேன்.

என் தமிழ்ப் பணியினையும் ஏற்று என்னை ஊக்கப் படுத்தும் தமிழ்ப் பெருமக்களுக்கு என் நன்றி.

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே.

அன்பன்

அரக்கோணம்
26-11-92

**நலங்கிள்ளி**

ஓம்

# பகவத் கீதை

## தோற்றுவாய்

பகவத் கீதை பிற மகத்தான நூல்களைப் போலவே, கடந்த கால யுகங்களின் ஞானத்தைப் பிரதிபலிக்கிறது.

பகவத் கீதை கடலைக் காட்டிலும் ஆழமானது. இமய மலையிலும் உயர்ச்சி மிக்கது. உலகை விட மிகப் பரந்தது. இவற்றோடு கீதைக்குக் காலம் கடந்து நிலை பெறும் தன்மையும் உண்டு. கீதை காலத்தை வென்ற நூல்; காலம் கடந்த நூல்.

பற்பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை இந்த நிலவுலகத்திலே கீதோபதேசம் செய்த கண்ணனைப் போன்ற ஓர் அற்புத புருஷன் தோன்றுகிறான். தோன்றிப் பண்ணார்ந்த சொற்களால் தானே கவிஞனாய், தானே பாடகனாய், யுகயுகாந்தரங்களுக்கு ஏற்ற இத்தகைய அற்புத நூலை அருளிச் செய்கிறான்.

இருளிலே துன்பப்பட்டு, கண்ணீரோடும், துக்கத்தோடும் துடிதுடிக்கும் இவ்வுலகத்திய குழந்தைகளுக்கு

அழிவற்ற, சாதலில்லாத, இறவா வரம் பெற்ற, அன்புப் பிரவாகத்தை அருளியவன் கீதாச்சாரியன் ஒருவனே.

அழிதலே இல்லாத உயிர் மூச்சை நிலவுலகத்திற்கு அளிப்பது பகவத் கீதையே.

கீதையிலே உள்ள 700 சுலோகங்கள் ஒவ்வொன்றும் வடிவமைப்பின் அழகிலே ஒளிர்வதாகும். அதைவிட ஒவ்வொரு சுலோகமும் சிந்தனை அழகு கொண்டது.

கீதை மூன்று வகைப்பட்ட மார்கங்களை உரைக்கிறது. (மார்கம்-வழி-யோகம்). முதல் ஆறு அத்தியாயங்கள் கூறுவது கர்ம யோகம்: அதாவது தன்னலமற்ற சேவை, தொண்டு செயல், (நிஷ்காம்யகர்மம்). இது முதல் ஷட்கம் (ஷட்கம்-ஆறு). இந்த ஷட்கத்திலே ஆத்மா சத்சொருப மாக வடிவெடுக்கும்.

இரண்டாவது ஆறு அத்தியாயங்கள் கூறுவது பக்தி யோகம்—அன்பு, பக்தி, பிரேமையின் மார்க்கம். இது இரண்டாவது ஷட்கம். இதிலே ஆன்மா பிரேமை (அன்பு) சொருப மாக, வடிவமாக வடிக்கப்படும்.

மூன்றாவதான ஆறு அத்தியாயங்கள் விளக்குவது—ஞான யோகம் அதாவது தத்துவ ஆராய்ச்சியைச் சார்ந்த அறிவுப் பூர்வமான நெறி யோகத்தைக் கூறுவது. இது மூன்றாவது ஷட்கம். இதில் ஆன்மா சித் சொருபமாக—ஞானருபமாக விளக்கப்படும்.

இறைவனை அடைய பல வழிகள் உள. ஆனால் முடியும் எல்லை ஒன்றே—இறைவன். மனித குலத்தில்—ஆத்மாவின்—எண்ணிக்கையைப் போன்று வழிகளும் பற்பலவாகும். ஏனெனில் மனித இனத்தின், பழக்க தோஷங் களாலும், மனம் ஆன்மா இவைகளின் வாசனைகளாலும், ஆன்மாக்கள் வேறுபட்டிருக்கும். கீதையோ முடிவைத் தேடிச் செல்லும் ஒவ்வொருவனையும் அவன் செல்லும்

வழியிலேயே பரம்பொருளிடம் கொண்டு சேர்க்கும் எனக் கூறுகிறது.

கீதையிலே கண்ணன் கூறுகிறான் :

''மனிதர்கள் எந்த வழியிலே என்னைத் தேடிஅணுகு கின்றார்களோ, நான் அவர்களை ஆட்கொள்ள அவ்வழியிலேயே சென்றுஅவர்களை அடைகிறேன். ஏனெனில் எல்லா வழியுமே என்னுடையன; உண்மையாகவே என்னுடையன!''

இந்த முறையிலே பகவத் கீதை சமயவாத மாறுபாடு களிலிருந்து விலகிய தனித்தன்மை வாய்ந்தது.

''கோத்த மணிகளின் ஊடே உள்ள இழையைப் போல் நான் ஒவ்வொரு மதத்திலேயும் (சமயத்தி லேயும்) உள்ளேன்''

என்கிறார் பகவான்.

கீதை ஓர் உலக நூல்; உலகத்திற்கு உயிர் ஊட்டமுள்ள தத்துவ ஞானத்தை உணர்த்த—காலத்தை வென்ற, காலத் தைக் கடந்த மகத்தான நூல். சுமார் ஐயாயிரம் ஆண்டு கட்கு முன்னர் அது அருளப்பட்டிருப்பினும், இக்கால உலகக் குழந்தைகளாகிய நமக்கு அது போதிக்க வேண்டியவை பல உள. எனவே அது நிலைத்து இன்னும் இருக்கிறது— வாழ்கிறது.

கீதையில் உள்ள சுலோகங்களில் பொதிந்து உள்ளவை சொற்கள் அல்ல; வார்த்தை ஜாலங்கள் அல்ல; அது வாழ்க்கைப் போதனை. வாழ்க்கைக்கு வேண்டிய இன்றி யமையாத் தத்துவங்கள். அதன் சுலோகங்களை வெறுமே முணுமுணுப்பதால் ஒரு பயனுமில்லை. அவைகளை உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டும். ஏனெனில் அந்தச் சுலோகங்கள் நம்முடைய அன்றாட வாழ்க்கை முறைக்கு ஏற்ற உண்மைகளைப் போதிக்கின்றன.

எனவே இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட ஓர் உன்னதமான வாழ்க்கையைக் கைக்கொள். கீதையிலே சுட்டிக் காட்டப்படும் மானுடன், தன்னுள்ளே உள்ள ஒளியைக்காண்பவனே. தன்னுள்ளே ஒளிரும் அந்த ஒளியைக் காண்பதற்காக அவன் வீட்டைத் துறந்து காட்டுக்கு ஓடுபவன் அல்லன்.

அவன் தன்னைத்தானே கடமை சார்ந்த வாழ்க்கைக்கு அர்ப்பணித்துக் கொள்ளுகிறான். தன்னுடைய அன்றாட வாழ்க்கை முறைக் கடமைகள், தன் குடும்பத்துக்கான கடமைகள், தன் இனம், நாடு, மக்களினம் இவைகளுக்கான கடமைகள் பறவைகள், விலங்குகள் இவைகளிடம் இவன் ஆற்ற வேண்டிய கடமைகள் (ஏனெனில் பறவைகளும், விலங்குகளும் கூட சிருஷ்டியின் மகத்தான குடும்பத்திலே தனக்கென்று வாய்ந்த அண்ணன் தங்கைகள் என இவன் உணர்ந்திருக்கிறான்). யாவற்றையுமே அன்புள்ளத்தோடு ஆற்றுகின்றான். அவன் தன் பணிகளைப் பற்றற்ற துறவுள்ளத்தோடு செய்கிறான்.

அன்புடைமை பற்றற்ற துறவுள்ளத்தோடு கலந்தியங்க வேண்டும். ஏனெனில் முத்துக் குளிக்க கடலுள் மூழ்குபவன் எவ்வித ஆடையும் அற்று மூழ்கினால்தான் முத்துக் குளிக்க முடியும். அவ்விதமே எவ்விதமான பற்றுமின்றி, பந்தமு மின்றிக் கடமையை ஆற்றினால்தான் விலைமதிப்பற்ற கைவல்லியம்—மோட்சம் எனும் முத்து நமக்குக் கிடைக்கும்.

துறவு மனப்பான்மை இல்லாமல் ஆன்ம முன்னேற்றம் நமக்குக் கிடைக்காது. துறவு என்பது உள்ளத் துறவுதான். நீ உலகைத் துறந்து கானகம் சென்று தியானிக்க வேண்டிய தில்லை; மலைமேல் உள்ள குகையிலே சென்று வசிக்க வேண்டியதில்லை.

இந்த உலகிலேயே நீ வசிக்கலாம்; வாழலாம். ஆனால் எப்பொருளோடும் யாரோடும் பற்றற்று வாழ்; துறவு மனப் பான்மையோடு வாழ். உனக்கு யாரும் சொந்தமல்ல.

எதுவும் உனக்கு உடைமையல்ல. இறைவன் ஒருவனே உன் சொந்த பந்தம் உடைமை என உணர்.

ஓர் உண்மையான துறவி மக்கள் கூட்டத்தோடு, சமுதாயத்தோடு ஒன்றி வாழ்வான். அவர்களோடு உண்டு, உறங்கி, வாங்கி, விற்று, இல்லறத்திலே தோய்ந்து, சமுதாயத்திலே ஈடுபட்டு வாழ்பவன் அவன். ஆனால் அவன் ஒரு வினாடி கூட இறைவனை மறக்க மாட்டான். இவன் வேர்த்தால் குளித்து, பசித்தால் புசித்து,விழி துயின்று பார்த்தால் உலகத்தவர் போல் இருப்பான்.

உண்மையான துறவி தன் மனக்கண்ணை மூடிக் கொள்வான். அது உள்ளத்தின் அகச் செயல். இந்த உள்ளத் துறவு — உண்மையான பற்றற்ற தன்மை மனிதனுக்கு எப்போது உண்டாகும்? நான் யார்? என்னும் உண்மையான விசாரம் ஏற்பட்டால்தான் உண்டாகும்.

உடலோ, உள்ளமோ, அந்தக்கரணங்களோ நான் அல்ல. நான் என்பது ஆன்மா. இதை உணர்த்துகிறது கீதை.

பகவானுடைய தெய்வீக கீதம் பகவத் கீதை. அது வாழ்வின் கீதம். பிரிந்து தனித்து வாழ்கின்ற மனிதன் (மனித ஆன்மா) மீண்டும் முதற் காரணனோடு எப்படி ஐக்யமாவது என்பதை விளக்குவது கீதை.

மனிதன். தன்னுடைய உண்மையான வீடாகிய நித்தியத்துவத்தில் இருந்து பிரிந்து தனிமையாக்கப்பட்டு விட்டான். அதுவே மனித குலத்தின் அலைச்சலுக்கும் உளைச்சலுக்கும்காரணம். நம்முடைய எல்லாப்பணிகளிலும் அமைதியில்லை; அவசரம், அலைச்சல்தான். நாம்சொல்லிக் கொள்ளுகிறோமே மக்கள் தொண்டு அதில்கூட அமைதி யில்லை; அலைச்சல்தான்.

இந்தக் கட்டத்திலே நாம் மூன்று முக்கியமானவற்றை நினைவில் கொள்ள வேண்டும். ஒன்று ஆத்மா. நம்முடைய உண்மையான இருப்பிடத்தைத் தேடும் உயிர்;

இரண்டாவது—பிரகிருதி (பிரபஞ்சம்). அதாவது நாம் வாழ, நாம் கண்டுள்ள உலகம்.

மூன்றாவது யோகம் (மார்க்கம்). அதாவது நம்முடைய தாய் வீடாகிய மோட்சத்தைச் சென்றடைய நம் ஆன்மா பயணம் செய்ய வேண்டிய வழி.

ஆன்மா நாடு கடத்தப்பட்டு இங்கே, இவ்வுலகில் வாழ்கின்றது. நாம் அனைவரும் நாடு கடத்தப்பட்டுள்ளோம். நம்முடைய வீடோ வேறெங்கோ உள்ளது. அந்த வீடுதான் நம்மை அழைக்கின்றது.

இந்த உலகிலே நாம் (ஆத்மா) வந்துவிட்டோம். உருவமும் பேரும் அடைந்து விட்டோம். காலம், இடம் இவைகளாலே சூழப்பெற்றுச் சிக்கலிலே சிக்கி உள்ளோம்.

புருஷனுக்கும், பிரகிருதிக்கும், உலகத்திற்கும் இடையிலே ஒரு நாடகம், ஒரு போராட்டம் நடை பெற்றவண்ணமுள்ளது. இடையறாது நடந்து கொண்டே இருக்கிறது. ஆன்மா இந்தப் போராட்டத்தில் இருந்து தன் வீட்டை அடைவது எப்படி? அதைத்தான் கீதை விளக்குகிறது. எப்படி? யோகத்தால். இந்த வகையில் கீதை ஒரு யோக நூல். யோகம் என்பதற்கு இணைப்பு என்பதுதான் சரியான பொருள்.

இந்த ஆத்மா ஒளிமயமான பிரதேசத்தில் இருந்து இங்கே வந்து விட்டது. அந்தப் பிரதேசத்திலே, காலம் இல்லை; பிறப்பு இல்லை; இறப்பும் இல்லை. ஆனால் இந்த ஆத்மா வந்தடைந்த இந்த உலகமோ, மாயையைப் பொருளாக உடையது; பிரிவினைத் தோற்றத்தைத் தருவது; பொய்யை மெய்யெனக் காட்டுவது.

இங்கேதான் கீதை ஆத்மாவுக்கு உதவுகின்றது. சாஸ்திர ஞானமற்ற ஒரு பிரதேசத்திலிருந்து (இடத்தில் இருந்து) பொறிபுலன் உணர்ச்சி அந்தக்கரணங்கள் இவைகளைக் கடந்து இந்த ஆத்மாவை மேலே மேலே உயர்த்தி அங்குள்ள

மேலான ஒன்றோடு கீதை கலக்க வைக்கிறது. இந்த முறை யையே யோகம் என்கிறோம்.

கீதை நாம் என்ன செய்ய வேண்டும் என விளக்குகிறது. ''தர்மத்தின் வாயிலாகத்தான் நாம் வெற்றியடைய வேண்டும்.'' இது கீதையின் குறிக்கோள். தர்மம் என்றால் என்ன? அதுதான் அறம்—அறவழியில் வெற்றியடைதல். இதுவே கீதையின் குறிக்கோள். உலகத்திற்குக் கீதைஅறவழி வெற்றியையே உபதேசிக்கிறது. கீதை மற்றொரு கட்ட ளையும் இடுகிறது. அதுதான் ''உறங்கிக் கிடக்கும் ஆத்மா விழித்தெழட்டும்'' என்பது.

நம்மிலே பலர் தூக்கத்திலே ஆழ்ந்து உள்ளனர். நம்முடைய தூக்கம் பொறிபுலன்களிலே, விஷய போகங் களிலே ஆழ்ந்துள்ள தூக்கம். அது எவ்வளவு ஆழமானது தெரியுமா? ''அர்ஜுனா விழித்தெழு! உன் உள்ளே உள்ள ஆத்மா விழித்தெழட்டும்'' என ஆத்மாவின் மகத்தான மேன்மையைக் கீதை அழுத்தமாக விளக்குகிறது.

பகவத் கீதை ஆத்ம சக்தியை, மனித சக்தியை, வலிமை மிக்க வாழ்க்கையை விளக்கும் நூல். இந்நூல்தத்துவ விளக்க நூல் மட்டுமல்ல. இது இந்திய ஞானப் பேரொளி. இது மக்கள் கடமையை மன்பதைக்கு உணர்த்தும் கவிதை நூல்.

பகவத் கீதை வினா விடைகளாக, உரையாடல்களாக அமைந்த நூல். இந்த உரையாடல் கிருஷ்ணன், அருச்சுனன் இருவருக்கும் இடையே நடைபெற்றது. இருவரில் ஒருவர் (குரு) ஆசிரியர். அவரே கிருஷ்ணன். மற்றவனோ மாணவன்—அருச்சுனன்.

கீதை உபநிடதங்களின் சாரம் பிழிவு; பிரம்ம சூத்தி ரத்தின் விளக்கம். மேற்கூறியஅவைகளிலே விளங்கிக்கொள்ள இயலாத கடினமான பகுதிகள் அனைத்துமே கீதையிலே எளிதாக விளக்கப்படுகின்றன.

உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், கீதை; இவைகளை முதல் நூல், வழிநூல், சார்புநூல் எனக் கொள்ளலாம்,

இவைகளை பிரஸ்தானத்திரயம் என்று வேதாந்திகள் குறிப்பிடுவார்கள்.

தத்துவ ஞானம் எங்கே பிறக்கிறது? சாவிலேதான் பிறக்கிறது. நேற்று நம்மோடு இருந்தவன், வாழ்ந்தவன் இன்று பிணமானான். நம்மோடு பேசினான். இன்று பேச வில்லை. நம்மைப் பார்த்தான், சிரித்தான், நம்முடன் உண்டான், நம்முடனே நடந்தான். இன்று அவை இவ்வுட லிடம் இல்லை. ஏன்? எது இல்லாததால் இவ்வுடல் இவை யனைத்தும் இழந்து விட்டன எனச் சிந்தித்தான் ஆதி மனிதன். குடம்பை தனித்தொழியப் பறந்து போய் விட்டதே, அதற்கு ஆத்மா (உயிர்) எனப் பெயர் கொடுத் தான். அதன்மீதுதான் மனித இனத்தின் தத்துவ ஞானங் களே கிளைத்தெழுந்தன.

இந்திய நாட்டு இத்தத்துவங்கள் வேதம், பிராமணங்கள், உபநிடதங்கள் என்பவைகளிலே அடங்கும்.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன நான்கு வேதங்கள். இவைகள் யாவுமே மந்திரங்கள். இம்மந்திரங் களை அவ்வவற்றிற்குரிய தெய்வங்களை நோக்கி உச்சரிப் பதால் நம்மை அத்தெய்வங்கள் காப்பாற்றும் என நம்பி உச்சரிக்கப்பட்ட மந்திரத் தொகுதிகளே நம் வேதங்கள்.

அடுத்து பிராமணங்கள். அந்த அந்த வேத மந்திரங் களை ஒருவர் அந்த அந்தத் தெய்வத்தை நோக்கி உச்சரிக்கும் போது கைக்கொள்ள வேண்டிய கிரியைகளை விளக்குவது ஆகும் இது.

இந்த வகையிலே, வேதங்களும், பிராமணங்களும் கரும காண்டம் எனப்படும்.

இவைகளை அடுத்து வருவனவே உபநிடதங்கள். இவை களின் தொகுதிகளையே வேதாந்தம் என்று கூறுவர், இதுவே ஞான காண்டம் என்றும் கூறப்படும்,

இவ்வுபநிடதங்களே வேத வரிசையில் இறுதியாக எழுந்தவை. எனவேதான் வேதத்தின் முடிவு; வேத அந்தம் வேதாந்தம் என்று இவைகளைக் குறிப்பிட்டனர்.

இந்த வகையிலே விரிந்து கிடந்த வேத உபநிடதங் களைச் சுருக்கித் தெளிவும் வரையறையும் ஏற்படுத்தவே பிரம்ம சூத்திரம் எனும் நூல் பாதராயணர் என்பவரால செய்யப்பட்டது. இதனது விளக்க நூலே பகவத்கீதை என முன்னர்க் குறிப்பிட்டோம்.

மரணத்தில் இருந்துதான் தத்துவ ஞானம் பிறந்தது என முன்னர்க் குறிப்பிட்டோம். எனவேதான், கீதோபதேசம் செய்யப் பல கோடி உயிர்கள் விடுதலை அடையும் யுத்த களத்தைத் தேர்ந்தெடுத்தான் பகவான் கண்ணன்.

தர்ம க்ஷேத்திரம் எனப்படும் குருக்ஷேத்திரத்திலே யுத்த களத்தின் இடையிலே—நடுப்பகுதியிலே, கீதோபதேசம் தொடங்குகின்றது.

கண்ணன் அர்ச்சுனனுக்குச் சொன்ன முதல் மந்திரமே, "அர்ச்சுனா, எழு! எழு! இவ்வுள்ளச் 'சோர்வு எங்கிருந்து உன்னை வந்தடைந்தது? பேடியின் இயல்பு கொள்ளாதே! இழிவான உள்ளத் தளர்வை விட்டு எழுந்திராய்! வீரனைப் போல் எழுந்து நில்! போர் செய்! போராடு, வெற்றி கொள்! ஏனெனில் ஆத்மா அழிவற்றது. நம் நாட்டிலே சாதுவான மக்கள் பலரை நாம் பார்க்கிறோம். ஆனால் சாதுத் தன்மைக்கு அடிப்படை கோழைத்தனமே! கொடுமையைக் கண்டு துடித்தெழாதவன் ஞானியாக முடியாது. ஞானம் என்பதே வெற்றிதான். எனவே வீரனாக வாழ வேண்டும். வாழ்க்கையிலே எவன் வீரத்தோடு போராடித் தன் ஆசை களை, இந்திரியங்களை வெற்றிக் கொள்ளுகிறானோ அவனே ஞானி." அடுத்தடுத்து, கண்ணன் அர்ச்சுனனிடம் கூறுகிறார்: 'வீரனாக வாழ்! வீரனாகப் போராடு! தன்ன டக்கம் கொள்! உன் ஆசைகளை அடக்கு! தூய்மையாக இரு! ஆக்க வேலைகளைச் செய்" என்கிறார் பகவான்

கண்ணன். எனவேதான் கண்ணன் அர்ச்சுனனிடம், ''குழந்தாய்! உன் ஆசைகளை வெல்க!'' எனக் கூறுகிறார்.

உண்மையாகவே, இம்முறையிலே தன் கடமையை ஆற்றுகின்றவன் அறிவாளி! ஞானி! அவன் தன் கடமையை ஆற்றுகிறான். ஆனால் கடமைகளால்அவன் தளைப்படுத்தப் படுவதில்லை. அவன் செயலாற்றுகிறான்; ஆனால் அவன் சுதந்தரமானவன். தன்னுடைய அவாக்கள் அனைத்தையும் வெற்றி கொண்ட அவனுக்கு வேண்டுவது ஒன்றுமே இல்லை.

''கிருஷ்ணா! என்னுடைய அனைத்தும் நீயே! எனவே உன்னை அடைந்துவிட்ட எனக்கு மற்றெதுவுமே தேவை இல்லை'' என்பதே அவன் குறிக்கோள்.

இப்படிப்பட்டவனே நிலைபேறுடைய துறக்க வாழ்வின் கடமையினும் மேலே உயர்ந்து உயர்ந்து நிற்கிறான்.

கடமையை கைம்மாறு கருதாமல் நிஷ்காம்யமாக ஆற்றுபவனுக்கு எப்பொருளின் மீதும் ஆசை இல்லை. எப் பொருளையுமே தன்னுடையதாகக் கருத மாட்டான் அவன். அவன் பற்றற்றவன். இதயத்திலே ஒளி வாய்ந்தவன். அவன் வாழ்க்கையே ஒரு நிலைக்கண்ணாடி. அதிலே இறைவனின் பிரதி பிம்பத்தைக் காண்கிறான் அவன்.

ஒவ்வொருவனுக்கும் மனத்திலே உறுதி வேண்டும். அந்த மன உறுதியைக்கூட இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும்.

மிக உயர்ந்த பணியே தியாகம். தியாகத்தோடு ஆற்றும் பணியே மிகச் சிறந்தது. எல்லாப் பணிகளுமே இறைவனுக்கு அர்ப்பணம் எனச் செய்யும்போது அதுவே யக்ஞம்—யாகமாக மாறிவிடுகிறது.

உன்னுடைய செயல்கள் யாவும் தன் செயலாக அல்லாமல் அவன் செயலாக மாறட்டும். நீ உன்னை ஒரு

கருவியாகக் கருது. செயல் ஆற்றுபவனாக நினைக்காதே! உன்னுடைய உழைப்பை, நாட்பணிகளை இறைவனுக்கு அர்ப்பணித்துவிடு. இவ்வகையில் உன் கடமையே நிவேதன மாக—பூசையாக மாறிவிடும்.

ஒரு கர்மயோகி பற்றற்ற நிலையிலே தன் கடமையை ஆற்றுகிறான். "கடமையாற்றும் மக்களே! மாந்தர்களே! எழுந்து நில்லுங்கள். வீரத்தோடு தீமைகளை எதிர்த்துப் போராட எழுந்து நில்லுங்கள்." இதுதான் கண்ணன் வழி!

ஆனால் மனிதர்கள் பற்பல நேரங்களில் சண்டைக்கு நிற்கிறார்கள். தற்பெருமையோடு தான் என்கிற அகங் காரத்துக்கு அடிமைப்பட்டுப் போராடுகின்றனர். அகங்கார, மமகாரத்திற்கு அடிமையாகி விடுகின்றனர். நம்முடைய செயல்கள் அனைத்தும் பெரும்பாலான நேரத்தில் பேராசை எனும் நச்சரவத்தால் தீண்டப்பட்டதாகி விடுகிறது.

கண்ணபிரான், நமக்கு இந்த நூல் மூலம் உயர்ந்த, பலன் கருதாத (நிஷ்காம்ய) செயலாற்றுகின்ற தன்மையை, அதன் கீர்த்தியை விளக்குகின்றார். அதிலே ஒளிப் பிரவாகம் உண்டு; பற்றற்ற நிலை உண்டு; ஆத்ம சமர்ப்பணம் உண்டு.

தன் குமுதவாய் வைத்தூதிய வேய்ங் குழலின் இனிய நாதத்தால் கண்ணன் பசுக் கூட்டங்களைக் கட்டுண்டு கிடக்க வைத்தான். தன் குமுதவாய் திறந்து அருளிய இக்கீதையின் நாத வெள்ளத்தால் ஆன்மப் பசுக்களின் புலன்கள் கட்டுண்டு கிடக்கச் செய்கிறான் கண்ணன். புறமே போந்து, அலைந்து திரியாமல் தன்னிலே கட்டுண்டு கிடக்கச் செய்கிறான் கண்ணன்.

## அத்தியாயம்—1

# அர்ச்சுனன் மனச்சோர்வு

தர்மக்ஷேத்திரம் எனப்படும் குருக்ஷேத்திரத்திலே; பாண்டவர்கள் படையும் கௌரவர்கள் படையும் எதிர் எதிரே அணிவகுத்துப் போருக்குத் தயாராக நிற்கின்றன. அர்ச்சுனன் கிருஷ்ணனை நோக்கி, "அச்சுதா! இரு படைகளுக்கும் இடையில் தேரைக் கொண்டு போய் நிறுத்துக! யான் யாரோடு போர் செய்ய வேண்டும்? போரை விரும்பி என் முன் நிற்கின்றவர் யார் என நான் அறிய வேண்டும்" என்றுகூறக் கண்ணன் அங்ஙனமே தேரை நிறுத்துகிறான்.

பாண்டவர் அணிவகுப்பின் முன்னே ரதத்திலே வீற்றிருக்கும் அர்ச்சுனன் தன் எதிர் அணியிலே உள்ள கௌரவர் சைன்னியத்திலே காணப்பட்ட மூத்தவர்களாம், பீஷ்மரையும் ஆச்சாரியர் துரோணரையும், கிருபரையும் காண்கிறான்.

இரு பக்கங்களிலும் உள்ள தந்தையாரையும், பாட்டன்மாரையும் ஆச்சாரியர்களையும் மாமன்மார்களையும், உடன் பிறந்தோர்களையும், பேரர்களையும் மாமனார்களையும் தோழர்களையும் பார்க்கிறான்.

பார்த்த பார்த்தன் தடுமாறுகிறான்; கண்ணனைப் பார்த்துச் சொல்கிறான்.

"கண்ணா! இங்குப் போர் செய்யக் கூடியுள்ள உறவினர்களைப் பார்த்து என் உறுப்புக்கள் சோர்ந்து போகின்றன; உடல் நடுங்குகின்றது; மயிர் சிலிர்க்கின்றது; கையில் உள்ள காண்டீபம் நழுவுகின்றது; உடம்பெல்லாம் எரிகிறது. என்னால் நிற்க முடியவில்லை. உள்ளம் சுழல்கின்றது,

''கண்ணா! என் உறவினர்களைக் கொல்வதனால் ஏற்படும் எந்த நன்மையையும் நான் காணவில்லை. வெற்றி, அரசுரிமை, இன்பம் இவைகளை நான் விரும்பவில்லை'' என்கிறான் பார்த்தன்.

பார்த்தன் சாதாரண மானுடன் அல்லன்; மிகவும் புகழ் வாய்ந்த வீரன்; தவத்திலே சிறந்தவன். இறைவன் சிவனோடு எதிர் நின்று போர் செய்தவன்; பல கலைகளைக் கற்றவன்; சுருதி சாத்திரங்களை ஆய்ந்தவன்; ஆனாலும் பேரிடருக்குள்ளாக்கும் போர் நிலையைக் கண்டதும் தடுமாற்றம் அடைகிறான்.

அர்ச்சுனன் போர் முனைக்குப் போர் செய்யும் தயார் நிலையிலேதான் வந்தான். ஆனால் எதிர் அணியிலே உள்ள தன் உறவினர்களைக் கண்டதும் அவன் குழம்பி விட்டான். பெரிய பெரிய படித்த மேதாவிகள்கூட மிகப் படித்த பெருஞ் சபையிலே பேச நாவெழாமல் நிற்பதைப்போல செயலிழந்து நின்றான் பார்த்தன். முடிவெடுத்துச் செயலாற்ற வேண்டிய தருணத்திலே அர்ச்சுனன் குழப்பமுற்றான்.

அர்ச்சுனன் தன் தனிமையை உணர்கிறான். எல்லாமே அவனை விட்டு நழுவிப் போவதாக நினைக்கிறான். அவன் உள்ளம் சோக மேகங்களால் சூழப்படுகிறது; சித்தம் கலங்கு

அவனுடைய உணர்வுகளை மறதியாம் மேகங்கள் மறைத்து விடுகின்றன. ஏன்? ஏன்? பற்பல போர்களிலே வெற்றி வாகை சூடிய பார்த்திபன் ஏன் இப்படிப்பட்ட பேரச்சத்திற்கு ஆளாக வேண்டும்?

அவன் கண்ணனை நோக்கிச் சொல்கிறான். ''கண்ணா! எனக்கு வெற்றியும் வேண்டா; அரசும் வேண்டா; வாழ்க்கையின் இன்பமும் வேண்டா; ஏன் இந்த உயிரும் வேண்டா! யாருக்காக இந்த அரசும் அரச போகமும் இன்பங்களும் வேண்டுமென விரும்புகின்றோமோ அவர்கள் இந்த

உறவினர்களே, ஆச்சாரியர்களேதத்தம் உயிரையும், உடமை களையும் துறந்தவராய் இங்கு வந்து நிற்கின்றனர். இந்த அரசாலும் அரச போகத்தாலும் அல்லது நாம் வாழும் வாழ்க்கையாலும் ஆகப் போவதென்ன? நான் கொல்லப் பட்டாலும் சரி, இந்த மூவுலகை ஆளுவதற்குக் கூட இவர் களைக்கொல்ல மாட்டேன். கேவலம், இந்த பூமிக்காக நான் இவர்களைக் கொல்லுவேனா?'' என்கிறான்.

அர்ச்சுனனது சொற்கள் அனைத்தும் மனோ வேதனையி லிருந்து வெளிப்பட்டவை. அவை மோகத்தின் (பற்றின்) அடிப்படையிலிருந்து எழுந்தவை.

மோகம், அன்பு என்னும் இவை இரண்டின் இடையே உள்ள வேறுபாடு என்ன?

அன்பு தன்னலமற்றது. ஆனால் மோகம் தன்னல முடையது. அது ஆழமற்ற பற்றுள்ளம். அன்பினது பேரார்வத்தின் சிறகுகளை வெட்டி விடும் தன்மை வாய்ந்தது மோகம்.

போர் முனையிலே, எதிர் முகாமிலே உள்ள தன் உறவினர்களை, பாட்டனை, ஆசிரியரைக் கண்டதும், அர்ச்சுனன் கண்ணனை நோக்கிக் கேட்கிறான்: ''நான் என் அன்புக்குரியவர்களை எப்படிக் கொல்வேன்?'' கிருஷ்ணன் இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அர்ச்சுனன் அவர்களிடம் அன்பு செலுத்தவில்லை; மாறாக அவனுடைய சுற்றத்தார், நண்பர்களிடையே மோகம் கொண்டுள்ளான்; ஆழமற்ற பற்றுள்ளம் கொண்டுள்ளான்; என விளக்க வேண்டி இருந்தது.

''ஜனார்தனா! திருதராஷ்டிரன் மக்களைக் கொல்வ தால் நமக்கு வரும் இன்பம் என்ன? இந்தப் பாபிகளைக் கொல்வதால் பாபமே நம்மை வந்தடையும். எனவே இது தகாது. மற்றும் உற்றாரைக் கொன்று நாம் மகிழ்ச்சியோடு இருப்பது எப்படி?'' என்று கேட்கிறான்.

அர்ச்சுனன் பெரும் போரால் ஏற்படக்கூடிய சர்வ நாசத்தை உணர்கிறான். உடல் வேதனையை உணர்கிறான். ஆனால் வாழ்க்கையின் முடிவு உலக இன்பங்களின் பின் ஓடுதல் அன்று அவன் என்பதை உணரவில்லை. உடல், உயிர் இவைகளின் வேறுபாட்டை உணரவில்லை. ஆன்ம நிச்சயம் அவனிடமில்லை. அர்ச்சுனன் செயல்கள் சொற்கள் அனைத்தும் அவாவின் அடிப்படையில் முகிழ்த்தெழுந்தவைகளே. அறத்தின் அடிப்படையில் வெளிப்பட்டவை அல்ல. அர்ச்சுனன் பற்றற்ற நிலையை அறியமாட்டான். நிஷ்காம்ய கர்மம் (கைம்மாறு கருதாத கடமை) அவனிடம் இல்லை.

எனவேதான் உடல் தொடர்பான குலம், குலதர்மம் இவைகளைப் பற்றிப் பேசுகிறான் அர்ச்சுனன். அவனைச் சமுதாயச் சடங்குகள், குலதர்மக் கோட்பாடுகள், பழக்க வழக்க நடைமுறைகள் ஆகியவை ஆட்டிப்படைக்கின்றன.

> ‘‘பேராசையால் அறிவிழந்த இவர்கள், குல நாசத்தால் ஏற்படும் கேட்டையும் நண்பரைக் கொல்வதால் விளையும் பாதகத்தையும் அறியார். அறிந்த நாம் இந்தப் பாவத்தில் இருந்து ஏன் பின்வாங்கலாகாது?’’
>
> ‘‘குலம் அழிந்தால் குலதர்மம் அழியும். தர்மம் அழிந்தால் குலத்தையே அதர்மம் சூழும், என்கிறான்’’ பார்த்தன்.

‘‘திருதராஷ்டரனுடைய மக்கள் தங்கள் கைகளிலே ஆயுதம் ஏந்தி எதிர்க்காமல் நிராயுதபாணியாக நிற்கும் என்னைக் கொன்று விடுவார்களானால், எனக்கு அதுவே பெரு நன்மையாகும்’’ என்று சொல்கிறான் பார்த்தன்.

தன்னுடைய பலவீனத்தால் அர்ச்சுனன் இவ்வாறு பிதற்றுகிறான். தன்னுடைய உள்ளொளியை அவன் செவிமடுக்கவில்லை. சாஸ்திர அறிவால் அவன், மயக்கப்படுகிறான். அவன் கண்களை மோகம் மறைக்கிறது.

நல்ல காலம், அர்ச்சுனனது தேர்ச்சாரதியாக கிருஷ்ணன் அமைந்திருக்கிறான். குதிரைகளின் லகானைப் பற்றி இருப்பவன் கிருஷ்ணனே.

இறைவனும் மனிதனும் இருவருமாகத் தீமையை, கொடுமையை, பாவத்தை எதிர்த்து அழிக்கும் போரில் ஈடுபட்டுள்ளனர். நல்ல காலம், மனிதனின் வாழ்க்கைத் தேரில் பூட்டியுள்ள குதிரைகளின் லகானை இறைவன்தான் பிடித்திருக்கிறான்.

இந்த முறையிலே அர்ச்சுனன் ''நான் போர் செய்ய மாட்டேன்'' என்று கூறி மௌனமாக நின்றபோது, பகவான் கிருஷ்ணன் புன்னகையோடு பார்த்தனிடம் ஞான மொழிகளைச் சொல்லலுற்றார். ''அழாதே, அர்ச்சுனா, மனிதனாக இரு! ஆண்மையோடு எழு! பலவீனத்தை ஒழி! தைரியத்தோடு எழுந்து நில்! நின்று போர் செய்!'' என்கிறான்.

கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் இருந்து கீதோபதேசம் தொடங்குகின்றது.

கிருஷ்ணன் அர்ச்சுனனிடம் பற்றற்ற உள்ளத்தோடு ''நான் செய்கிறேன், என்ற அகங்காரமற்ற வீரத்தோடு போர் செய்; உன் கடமையைச் செய்'' என்று கட்டளை இடுகிறான்.

பலவீனம் என்பது ஒரு பாவம் என்பதைக் கீதை போதிக்கிறது. சக்தி என்பது ஆத்மபலம்—லாபம் என்பதை அது உணர்த்துகிறது.

''மனத் திண்மை, உளத்திட்பம், இவைகளை நாம் வளர்க்க வேண்டும். இந்த உளத்திட்பம் தூய்மையாக, வலிவுள்ளதாக அமைய வேண்டும்'' என்பது கீதையின் குறிக்கோள். ''உன்னுள் உறங்கிக் கிடக்கும்ஆத்ம பலத்தை,மனத் திட்பத்தை விழித்தெழச் செய்'' என்கிறது, கீதை.

வாழ்க்கையின் பொருள் என்ன? நாம் ஏன் இங்கு இருக்கிறோம்! எங்கு நாம் போகிறோம்? இவைகளுக்கு எல்லாம் நாம் கீதையிலே விடை காண்கிறோம்.

## அத்தியாயம்—2

# உபதேசத் தொடக்கம்

**த**ன் வில்லையும் அம்பையும் வீசி எறிந்து விட்டு கண்களில் நீர் தளும்ப, பார்வை மங்க, துக்கத்தோடு உள்ள பார்த்தனுக்குப் பகவான் சொல்லத் தொடங்குகிறார். இது வரை கிருஷ்ணன் பேசவில்லை. அர்ச்சுனன் பேசுவதைக் கேட்டபடி இருந்தார். இப்போது பேசத் தொடங்குகிறார்.

மனிதத் தன்மை வாய்ந்த, தன்னை உணர்ந்த ஒருவனுக்கு—அடாததான, துறக்கத்தைத் தடுப்பதான—புகழை மாய்த்து விடுவதான—இத்தகைய உள்ளச் சோர்வு, இந்த நெருக்கடியிலே எப்படி உன்னை வந்தெய்தியது?

"பேடியின் இயல்பினை அடையாதே! இழிவான இந்த மனத்தளர்வை விட்டு எழு! இத்தளர்ச்சி உனக்குப் பொருத்தமானதல்ல" என்றார் கண்ணன்.

அர்ச்சுனன் கண்ணனை நோக்கி "மதுசூதனா! வணக்கத்துக்குரிய பீஷ்மரையும் துரோணரையும் நான் எப்படி அம்பெய்து கொல்வேன்? இவர்களை நாம் வெல்வது; அல்லது இவர்கள் நம்மை வெல்வது; இதில் நமக்கு எது மேலானது என எனக்கு விளங்கவில்லை" என்றான்.

**'மனத்தளர்ச்சி, துயரம் என்னும் கேட்டால், என்னுடைய இயற்கை இயல்பை இழந்த நான் தர்மத்தைப் பற்றி குழப்பங் கொண்ட உள்ளத்தவனாய் உம்மைக் கேட்கிறேன். நான் உன் சீடன்; உன்னைச் சரணடைந்தேன்; எனக்கு உபதேசம் செய்ய வேண்டுகிறேன்' என்று வேண்டிக் கொள்ளுகிறான் அர்ச்சுனன்.** II (7)

இந்தச் சுலோகத்திலேதான் பார்த்தன் ஸ்ரேயஸ் என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறான்.

கடோபநிஷத் (2.1) திவிதீயாவல்லியின் முதல் சுலோகத் திலே யமன் (காலன்) கூறுவதாகக் கூறப்படுவது இது, **சிரேயஸ** என்பது ஒன்று (உயர்ந்த நன்மையைத் தருவது மோட்ச சாதனம்.)

**பிரேயஸ்** என்பது மற்றொன்று. குறுகிய பார்வை உள்ள வர்களுக்குப் பிரியமாய்த் தோன்றும் சிற்றின்ப சாதனம்.

சிரேயசும் பிரேயசும் மனிதனை நாடி வருகின்றன. தீரன் அவைகளை நன்கு பரிசீலனை செய்து அவற்றின் இடையே உள்ள வேறுபாட்டை உணர்கிறான். அவன் **பிரேயசை** விட்டு **சிரேயசை** வரிக்கிறான்.

மந்த புத்தியுள்ளவன் பொருளை ஈட்டுவதிலும், காப்பாற்றுவதிலும் நோக்கங் கொண்டு பிரேயசை வரிக் கிறான்.

இந்த சிரேயசையே உபதேசிக்கும்படி கேட்கிறான் பார்த்தன் கண்ணனிடம்.

இதன் பின்னர் கண்ணன் தன் உபதேசத்தைத் தொடங்குகின்றார்.

**'அாச்சுனா! நீ துக்கப்படத் தகாதவர்கள் பொருட்டுத் துக்கப்படுகிறாய்; ஞானியர்களைப் போல ஞானச் சொற்களை உதிர்க்கிறாய். ஆனால் உண்மையான ஞானிகள் இறந்தவர் களுக்காகவோ இருப்பவர்களுக்காகவோ விசனப்படுவ தில்லை.'**

ஆம், உண்மையான ஞானிகள் எதற்கும் துயரமுறுவ தில்லை. அவர்கள் இறப்பும் பிறப்பும் நாடகக் காட்சியின் மாற்றம் என்பதை அறிவார்கள். உள்ளே வசிக்கும் ஆத்மா எக்காலத்தும் மரணமடைவதில்லை. இறந்து போவது இந்தப் புறஉடல் மட்டுமே என்பதை அவர்கள் அறிவார்கள்.

*எல்லா சாத்திரங்களும் தத்துவ நூல்களும் உணர்த்து வது உண்மையான மனிதன் என்பவன் உடல் அன்று; ஆத்மா என்பதையே.*

*ஆனால் அர்ச்சுனனோ மனிதன் என்பவன் உடலே எனக் காண்கிறான்; உடலுக்கு ஏற்படும் இன்ப துன்பங்கள், மகிழ்ச்சி துயரங்கள் யாவும் உயிருக்கு (மனிதனுக்கு) ஏற்படுவதாக மயங்குகிறான்.*

*பகவான் தொடர்கிறார் :*

**உண்மையாகவே நான் இல்லாத காலம் என்பதாக ஒன்று கிடையாது. அதைப் போலவே, நீயும் உன் எதிரிலே நிற்கும் இவ்வரசர் பிரமுகர்களும் இல்லாமலிருந்த காலம் என ஒன்று இல்லை. இனி வருங்காலத்திலும் (நம் உடல் அழிந்து போயினும்) நாம் அழிய மாட்டோம்; இல்லாமற் போக மாட்டோம், II (12)**

*இந்த வகையிலே, இன்று, இப்பொழுது உயிரோடு உலாவு கின்ற—வாழ்கின்ற அனைத்து ஆத்மாக்களும் எண்ணற்கரிய பன்னெடுங் காலமாக உள்ளனவே! இனியும் பலப்பல யுகங் களாக அழிவின்றி இருப்பனவே!*

*மேலும் கண்ணன் உபதேசிக்கிறார்.*

**'இந்த உடலிலே அமைந்துள்ள ஆத்மா, உடல் அடையும் குழவிப்பருவம், யௌவனப்பருவம், கிழப்பருவம் எனும் மூன்று நிலைகளையும் கடந்து நிற்கிறதே அதைப்போலவே, இந்த உடலை இந்த ஆத்மா உதறிவிட்டு வேறு உடல் எடுப்பதும் அமைகிறது. எனவே, தீரன் அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டான்.' II (13)**

*அதாவது, ஒருவன் குழந்தையாகிப் பின் காளையாகிக் கிழவனாகிறான். இந்த மாறுதல் யாவும் ஒரே மனிதனிடத் திலேதான் உண்டாகின்றன. குழவியாக இருந்தவன் ஒருவன்; காளையாக இருந்தவன் மற்றொருவன்; கிழவனாக இருப்பவனோ வேறொருவன் என நாம் கொள்வ தில்லை. தேகியாகிய ஆத்மாவுக்குக் குழவி, காளை, மூப்பு*

என்று ஒன்றுக்கொன்று முரணாய மூன்று அவஸ்தைகள் உள. அந்த மூன்று அவஸ்தைகளின் பேதத்தால் அந்தத் தேகியாகிய (உடலின் உள்ளுரையும்) ஆத்மாவும் பேதமுளதாகாது. அப்படியே இந்த உடலை விட்டு மற்றோர் உடலுக்குப் போகும் ஆத்மாவும் அதே ஆள்தான்(ஆத்மாவே தான்.) ஞானிக்கு இவ்வுண்மை நன்கு விளங்குகின்றது. எனவே அவன் கவலைப் படமாட்டான்.

பகவான் தொடர்கிறார்:

**'குந்தி மைந்தனே! மனிதனுடைய ஐம்பொறிகள் ஐம்புலன்களோடு பொருந்துவதால்தான் குளிர், வெப்பம், இன்பம், துன்பம் முதலியவை உண்டாகின்றன. தோன்றுதலும் மறைதலும் நிலையாமையும் அவைகளின் இயல்பு. அவைகளை நீ சகித்துக்கொள்'**
**II (14)**

ஐம்பொறிகள் புலனகளோடு ஒன்றி அந்தக்கரணங்களோடு பொருந்தி உணருங்காலத்தில்தான் விஷயங்கள் தோன்றுகின்றன. உணராத காலத்தில் விஷயங்கள் மறைந்து விடுகின்றன. ஒருவனுக்கு ஒரு காலத்தில் இன்பம் தரும் ஒரு பொருள் பிறிதோர் காலத்தில் துன்பம் தருகிறது. உதாரணம், குளிர் அல்லது வெப்பம். இவ்வந்தக்கரணத்தின் கண், ஒரு காலத்தில் இன்பத்தை உண்டாக்கும் அதே சீதோஷ்ணம், மற்றொரு காலத்தில் துக்கத்தை உண்டாக்கும். ஒருவனுக்குத் துக்கத்தை உண்டாக்கிய குளிர், வெப்பமோ மற்றொருவனுக்கு இன்பத்தைத் தரும். சுவை மிக்க அறுசுவை உணவும் நோய் வாய்ப்பட்டிருக்கும் காலத்தில் துன்பத்தைத் தருகிறது. இவ்வகையில் அவையாவும் அநித்தியமானவைகளே; ஆத்மாவுக்கு புறம்பானவைகளே. விஷயம் என்பது இங்கே பொறிகள் உலவும் நிலத்தைக் குறிக்கும்; கண்ணுக்கு விஷயம் காட்சிகள்; செவிக்கு ஓசைகள். எனவே இந்த உடல் ஆத்மா அல்ல. நான் என்னும் அகங்காரமும் ஆத்மா அல்ல. உடலும், அகங்

காரமும் மாறும்; கழிந்து கடந்து போய்விடும். ஆத்மா அழிவில்லாதது; தொடர்ந்து வாழ்வது; நிலையானது.

இந்த இரண்டாம் அத்தியாயமான சாங்கிய யோக அத்தியாயத்திலே, பதினொன்றாம் சுலோகத்தில் இருந்து 17ஆம் சுலோகம் வரை பகவான் கண்ணன் இறப்பைப் பற்றியும் மகிழ்ச்சியைப் பற்றியும் துக்கத்தைப் பற்றியும் விளக்குகின்றார்.

கண்ணன் சொல்வது :

**'எனவே, (மேற்கூறிய) சுக துக்கங்களைச் சமமாகக் (கொள்ளும்) காணும் தீர மாந்தனை இவை துன்புறுத்தா. ஆகையினாலே அவன் இன்ப துன்பங்களை ஒப்பாக உணர்வான். அவனே துறக்க நிலைக்கு (மோட்சத்திற்கு) ஏற்றவனாவான்'** II (15)

உடலையே நான் என்று எண்ணுபவனைத் தப்பாமல் இன்ப துன்பங்கள் வந்தடையும். அதனால் அவன் சலன மடைகிறான். 'ஆத்மாவே நான்; இந்த உடல் நான் அல்ல' என்று உறுதியாக உணர்ந்தவனை இன்ப துன்பங்கள் வந்தடைவதில்லை. அவன் சலனமற்ற மனம் படைத்தவன். அவன் சாந்தி வடிவானவன். உள்ளத்திலே தெளிவான அமைதி பூண்டவன் அவன். அவனே சாகா நிலைக்கு ஏற்றவன்.

'அசத்தான (அழியும் தன்மை வாய்ந்த) பொருளுக்கு நிலைத்தன்மை கிடையாது. அங்ஙனமே, நிலையான (அழிவற்ற) சத்பொருளுக்கு அழிதல் இல்லை (முடிவென்ப தில்லை). இந்த சத்து அசத்து எனும் இரண்டின் தன்மை களையும் தத்துவ தர்சினிகள்(உண்மையை உணர்ந்தவர்கள்) அறிவார்கள்.

மனிதன் உண்மையை அறியும் வேட்கை உள்ளவன். ஒவ்வோர் உயிரும் உண்மையைக் கண்டறிய முயல்கின்றது. உள்ளது என நாம் கருதுகின்ற இந்த உடல் ஒருநாள்

இறந்து விடுகின்றது; அழிகின்றது. உடலுக்கு வளர்ச்சியும் தேய்வும் உண்டு; விகாரம் உண்டு, விகாரப்படும் பொருள் அழிவுக்கு உட்படும். இவ்வகையில் நம் உடல் அசத்து—நிலையற்றது.

மாறாக, ஆத்மாவோ அழிவற்றது (சத்து); நிலைபேறுடையது (நித்தியமானது).

'நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவு' என்கிறார் வள்ளுவர்.

நித்திய அநித்திய வஸ்துக்களை (பொருள்களை) பகுத்துணர்ந்து அறிதலே விவேகம் என்கிறது வேதாந்தம்.

கண்ணன் மேலும் கூறுகிறார் :

**'அது (அந்த ஆத்மா) அழிவற்றது. யாராலும் அதை அழிக்க முடியாது.'**

**'உலகெல்லாம் பரந்துள்ள ஒரு பொருள் அழிவற்றதென உணர்க.'** II (17)

இந்த சுலோகத்திலே ஒரு சொல் 'தத்' (அது) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆத்மாவையே அதுகுறிக்கும். இந்த உண்மையை அதாவது ஆத்ம தத்துவ அறிவை ஒவ்வொரு சாதகனும் தேடி அறிய ஆவல் கொண்டுள்ளான்.

ஆத்மா என்பது ஜீவன் (உயிர்). அது அழிவற்றது; தொடர்ந்து நிலைத்து நிற்பது. ஆத்மாவைத் தாங்கி நிற்கும் உடலே அழிவுக்குட்படுவது.

**'நிலைத்து அழிவின்றி நிற்பது, நாசமற்றது, அளவுக்குட்படாதது ஆத்மா. ஆனால் இந்த ஆத்மாவைத் தாங்கி நிற்கும் உடல்கள் யாவும் அழியும் தன்மையை உடையன. ஆகையினாலே பார்த்த! போர் செய்க!'** I (18)

தேசத்தாலாம் பரிச்சேதம்; காலத்தாலாம் பரிச்சேதம்; வஸ்துவாலாம் பரிச்சேதம். அதாவது தேசத்தால் ஏற்படும்

அழிவு, காலத்தால் ஏற்படும் அழிவு, பொருள்களால் உண்டாகும் அழிவு, இவைகளை அழிவு (விநாசம்) என்பர். இம்மூவகையும் இல்லாதது எதுவோ அதுவே நிலையுதலுடையது. அதுவே ஆத்மா. கால, தேச, வஸ்து, பரிச்சேதமற்றதாகையால் ஆத்மா அழிவுற யாதொரு காரணமுமின்றாம். அதுவுமன்றி ஆத்மா மனமொழிக்கு அப்பாற்பட்டதாகையினால் அளப்பரியது. (ஆனால் உடலின் தன்மையை உடல் மனம், அறிவு இவைகளால் அளக்க முடியும்.) இந்த வகையில் ஆத்மா நித்தியமானது.

**'கொல்லுகின்றவன் என இவ்வாத்மாவை எவன் நினைக்கின்றானோ, அல்லது கொல்லப்பட்டவன் என இவ்வாத்மாவை எவன் நினைக்கின்றானோ அவ்விருவருமே அறிவிலிகள். ஆத்மா கொல்வதுமில்லை; கொல்லப்படுவதுமில்லை' II(19)**

மனிதன் 'நான்' என்னும் அகங்காரத்தாலும், எனது என்னும் மமகாரத்தாலும் ஆளப்படுபவன். அறிவு மயக்கத்தால் மெய்ஞ்ஞானமற்று உடலையே நான் என்கிறான்; பொன் பொருள்களை எனதென்கிறான்.

தன் பெரும்பொருள் அடியோடு நாசமான காலத்திலே 'நான் அழிந்தேன்' எனக் கூறி கூக்குரலிடுகிறான். மமகாரத்தினால் எனதென்று கருதிய பொருள் இழப்பால் தானே அழிந்ததாகக் கருதுகிறான்.

அதைப்போலவே, மரணப்படுக்கையில் இருக்கும் ஒருவன் நான் இறந்து விடுவேன் என்று வருந்துகிறான். இறப்பது அவன் அல்லன்; அவன் உடலே. தன் உடலை 'தான்' என நினைப்பதனால் அவன் தானே இறந்து விடுவதாக நினைக்கிறான்.

**'இந்த ஆத்மாவுக்குத் தோற்றமும் இல்லை; முடிவும் இல்லை. (முதல் இறுதியற்ற, பிறப்பு இறப்பற்ற ஒன்று ஆத்மா) இல்லாதிருந்து அது உற்பத்தியானதோ அல்லது இருந்து, பின்னர் இறந்து போவதோ அன்று இந்த ஆத்மா.**

**இதற்குத் தோற்றம் இல்லை; மறைவும் இல்லை. வளர்ச்சி இல்லை; தேய்தலும் இல்லை. மாற்றமும் இல்லை. உடல் கொல்லப்பட்டாலும் ஆத்மா கொல்லப்படுவதில்லை.'** II (20)

*பிறத்தல், இறத்தல், வளர்தல், அயலொன்றாய் விளைந்தமைதல், தேய்தல், அறமாய்தல் எனும் ஆறு வகைப்பட்ட விகாரங்கள் உலகின்கண் உள்ள வாழும் உயிரினங்கள் யாவுமே அடையும். எப்பொருள்முன்னில்லாத தாய் பின் உண்டாகுமோ அல்லது எப்பொருள் முன்னிருந்து பின் அழிவெய்துமோ அப்பொருளே மேற்சொன்ன ஆறு வகைப்பட்ட விகாரங்களை எய்தும்.*

*இவ்வாத்மாவோ முற்காலத்தும் இருந்தது; இக்காலத்தும் உள்ளது; எக்காலத்தும் இருக்கும்.*

*'என்று நீ அன்று நான்' என்கிறார் தாயுமானவர். பரம்பொருள் என்ற ஒரு பொருள் இருந்த, இருக்கும், காலங்கடந்த அக்காலம் தொட்டு ஆத்மாவும் இருக்கின்றது; இருக்கும்; நிலைத்து நிற்கும்.*

*எனவே ஆத்மாவும் இறைவனைப் போன்ற அனாதி— முதலற்றது (ஆரம்பமில்லாதது); முடிவுமில்லாதது (அழிவற்றது).*

*மேலும் கூறுகிறார் கண்ணன் :*

**'பார்த்தனே! எவன் இந்த ஆத்மா அழிவற்றது; நிலை பேறுடையது; பிறவாதது; குறையாதது என்பதை உள்ளபடி உணர்கிறானோ அவன் யாரைக் கொல்லக்கூடும்? யாரைக் கொல்ல இவன் காரணமாவான்?'** II (21)

*உண்மையாக ஆத்மா என்பதை நாம் நன்கு உணருங் காலத்திலே, ஆத்மா பிறரால் ஊறு செய்ய முடியாதது என்பதை அறிகிறோம்.*

*எனவே ஊறு செய்ய இயலாத ஆத்மாவை யார் கொல்ல முடியும்? யாரால் கொல்விக்க இயலும்? ஊறு படுவதும் அழிவதும் ஊறுபடுத்தக் கூடியதும் அழிவிக்கக் கூடிய*

தும் இந்த உடலே. இந்த உடலே பிறக்கும், இறக்கும்' வளரும், தேயும், ஊறடையும்.

தன்னை உணர்ந்த ஆத்ம ஞானிக்கு அகங்காரம் சிறிதும் இராது. தான் செய்யும் எவ்வினைக்கும் தானே கர்த்தா எனும் முனைப்பு அவனிடம் இல்லை. எவ்வினையும் முனைப்பின்றி அவன் ஆற்றுவதால் அவ்வினைப்பயன் ஏதும் அவனைச் சென்றடைவதில்லை.

இந்த வகையிலே ஆத்மாவுக்கும் இவ்வுடலுக்கும் உள்ள தொடர்பை மேலும் விளக்குகிறார் பகவான்.

**'எவ்வண்ணம் மனிதன் நைந்துபோன பழைய ஆடைகளைக் களைந்து எறிந்துவிட்டுப் புதிய ஆடைகளை எடுத்து உடுத்திக் கொள்வானோ அதைப் போலவே இந்த ஆத்மாக்களும் பழைய உடல்களைத் துறந்துவிட்டுப் புதிய உடல்களைச் சென்றடைகின்றன.'** II (22)

'இதன் உண்மையைத் தெளிவுறக் கண்டவன் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. இந்த ஆத்மா எங்கிருந்தும் உண்டாகவில்லை. இது பிறப்பற்றது; என்றும் உள்ளது; அழிவற்றது; அனைத்துக்கும் முன்னுள்ளது; சரீரம் அழிக்கப் படும்போது அழிக்கப்படாமல் நிற்பது'—கடோபநிஷத் 2.18.

பரமாத்மா பிரம்மம்—சர்வ வியாபி. காலத்தையும் இடத்தையும் கடந்து நிற்பது. அது இடம் விட்டு இடம் பெயராது. ஆனால் ஜீவாத்மா (நம் உயிர்) ஓர் உடலை விட்டு மற்றோர் உடலுக்குச் சென்றடையும் தன்மை வாய்ந்தது.

பழைய ஆடைகளைக் களைந்து புத்தாடை புனையும் உடலைப் போலவே உயிரும் பழைய உடலை நீத்துப் புத்துடலைச் சென்றடைகிறது.

கீதையின் இந்த ஆத்ம விளக்கம் தனிச்சிறப்பும் நுட்பமும் வாய்ந்தது. உபநிடதத்தை அடியொற்றியது இது.

இனி மரணம்என்பது என்ன? உடல் என்னும் கூட்டுக்குள் அடைப்பட்டிருந்த ஆத்மா விடுதலையடைதலே மரணம். அவ்விடுதலைக்குப் பிறகுஅது வேறொரு உடலுக்குள் பறந்து சென்றடைகிறது.

குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. —குறள்

இந்த உடலாகிய ஆடையை உயிர் தனக்குத் தேவைப் பட்ட காலம் வரை உபயோகப்படுத்துகிறது. அது பழைமை யடைந்து நைந்து, கிழிந்து போனதும் அதை உதறித் தள்ளி விட்டுப் புத்தாடையை ஆத்மா அணிந்து கொள்ளுகிறது. அணிந்துள்ள ஆடை மனிதன் அல்லன் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

உண்மையான மனிதன் ஆத்மாவே! உடல் அவனுடைய வசம்; அவன் ஆடை; அவனுடைய கருவி. மற்றோர் கோணத்திலிருந்து நோக்கினால் உடல் ஆத்மாவின் சிறைக்கூடம்.

அனாதியான அழிக்க முடியாத இந்த ஆத்மாவின் இருப்பிடம் இவ்வுலகமன்று; இந்த மண் அன்று. இந்த உலகத்திற்கு யாத்திரையாக வந்துள்ளது ஆத்மா. மண் ணுலகத்தில் உள்ள ஆத்மா விண்ணை நோக்கியே உள்ளது. இவ்வுலகிலேயே இந்த ஆத்மா இருப்பது, வாழ்வது தன்னைத் தூய்மை செய்து கொள்ளவே ஆகும். இதையே மலபரிபாகம் என்பர் சைவ சித்தாந்திகள்.

கடோபநிடதத்திலே இந்த உடலை இரதமாகவும் இந்திரியங்களைக் குதிரைகளாகவும் கூறப்பட்டுள்ளது.

'சரீரத்தைத் தேராகவும், மனதைக் கடிவாளமாகவும், புத்தியைச் சாரதியாகவும், ஆத்மாவைத் தேர்மேல் வீற் றிருப்பவனாகவும் அறிக'. (கடோப—3.3)

இந்திரியங்களைக் குதிரைகள் என்றும் விஷயங்களை அவை செல்லும் பாதைகள் என்றும் கூறுவர். சரீரம்

இந்திரியம் மனம் இவற்றுடன் கூடிய ஆத்மாவையே 'போக்தா' என்று ஞானிகள் கூறுவர். கடோப 3-4

கிருஷ்ண பரமாத்மா அர்ச்சுனனிடம் நான் என்று கூறபபடுவது இந்த ஆதமாவையே என்றும், ஆத்மா அழி வதில்லை, நித்தியமானது என்றும் கூறி மேலும் அதன் இலக்கணங்களை விளக்குகின்றார்.

**'அர்ச்சுனா! இந்த ஆத்மாவை வாள முதலிய எவ்வகை ஆயுதங்களும் வெட்ட மாட்டா, இதை நெருப்பும் எரிக்காது; நீரும் நனைக்காது; காற்றும உலாத்தாது. II (23)**

இந்த உடலை வாள் முதலிய கூர்மையான ஆயுதங்கள் வெட்டும், குத்தும், சேதிக்கும். ஆனால் ஆத்மாவைச் சேதிக்கா. இந்தத் தூல தேகத்தை நெருப்பு எரித்துச் சாம்ப லாக்கும். ஆனால் ஆத்மாவை அங்ஙனம் எரிக்காது. தண்ணீர் இவ்வுடலை நனைக்கும்; உயிரையும் போக்கும். ஆனால் ஆத்மாவை நீர் அங்ஙனம் செய்ய இயலாது. இவ் வுடலைக் காற்றானது உலர்த்தி வற்றலாக்கிவிடும். ஆனால் ஆத்மாவைக் காற்று அங்ஙனம் செய்ய முடியாது.

இவ்வுலகத்திலே உண்டாகும் எல்லா மாற்றங்களுக்கும் நாசங்களுக்கும் பிரிதிவி (மண்), அப்பு (நீர்), தேயு (தீ), வாயு (காற்று) என நான்கே காரணங்களாகும். பஞ்ச பூதங்களிலே ஒன்றாகிய ஆகாயம் எப்பொருளின் நாசத் தன்மைக்கும் காரணமாவதில்லை. பிற நான்கும் நிலவ இடந்தரும் வெட்டவெளியே ஆகாயம்; எனவே ஆகாயம் இதில் கூறப்பட்டிலது.

வாள், கதை முதலியனவும் கல்லைப் போல ஊறு செய் வனவே. (மண்ணிலிருந்து எடுத்துச் செய்யப்பட்டன வாதலின்) அவை பிரிதிவியின் விகாரமே ஆகும்.

பகவான் மேலும் கூறுகிறார்:

**"அர்ஜுனா, இவ்வாத்மா ஆயுதங்களால் சேதிக்க முடியாதவன்; வேகாதவன்; நனையாதவன்; உலராதவன்;**

**இவன் நித்தியன்; முழுமையானவன் (குறைவிலா நிறைவு); நிலையானவன்; சலனமற்றவன் (அசைவற்றவன்)** II. (24)

முன் சுலோகத்தில் வாள், நெருப்பு, நீர், காற்று, இவைகளின் இயலாத செயலைச் சொன்ன பகவான் இச்சூத்திரத்திலே ஆத்மா இலக்கணத்தை ஆத்மாவைக் கொண்டு விளக்குகிறார்.

ஆயுதங்களால் (வாள், அம்பு, கதை) அழிக்க முடியாதவன் என்பதால் அவன் நித்தியனாகிறான் (சிரஞ்சீவி). நித்தியமானது எதுவோ அது முழுமையானதாகிறது. ஏனெனில் குறையுடைய பொருள் நித்தியமாக இருக்க முடியாது. இடம் பெயர்தலையே அசைதல் (சலனம்) என்கிறோம். ஆத்மா சலனமற்றது (அசலம்). ஆத்மா சொல்லுக்கடங்காதத் தொன்மை வாய்ந்தது. இதை மேலும் விளக்கிக் கூறுகிறார் பகவான்.

**'இவ்வாத்மா பொறிகளுக்கு எட்டாதது; சிந்தனைக்கு எட்டாதது; விகாரமற்றது; மாறுபாடற்றது என ஞானநூல்களில் சொல்லப்படுகிறது. எனவே ஆத்ம இலக்கணத்தை நன்கறிந்து துன்பத்தை அகற்றிவிடு.'** II. (25)

ஆத்மாவைப் பார்க்க முடியாது; கேட்க முடியாது; முகர முடியாது; ருசிக்க முடியாது; தொட்டுப் பார்த்தறிய முடியாது. இங்ஙனமாகப் பார்க்கக் கேட்கத் தொட முகர ருசிக்க முடியாத பொருள் உள்ளத்திலே படியாது. எனவே பொறிகளுக்கு எட்டாதது சிந்தனைக்கு எட்டாதது என்பதாயிற்று.

வெட்டவெளி கண்களுக்குப் புலப்படாதது; பொறிகளுக்கு எட்டாதது. பொருள்களைத் தன் கண் பெற்றிராமையின் அது விகாரமற்றது. ஆத்மாவும் அவ்வண்ணமே விகாரமற்றது எனக் காண்க.

இந்த இரண்டாம் அத்தியாயத்திலே, சுலோகம் 20 முதல் 25 முடிய ஆத்ம இலக்கணத்தை நமக்குக் கீதை போதிக்கிறது. ஆத்மாவைப் பற்றி அறிந்து கொள்ளுதலே

கீதையின் உட்கிடக்கை; அது போதிக்கும் ஞானம் ஆகும். இந்த ஞானம் நமக்குவாழ்க்கை உலகம் என்பதைக்கால தேச வர்த்தமானங்களால் போதிக்கவில்லை. வேறு வகையிலே வாழ்க்கை உலகம் என்பதைப் போதிக்கிறது. அவைதான் அன்பு, உண்மை, நேர்மை, நன்மை, அழகு, தூய்மை, புனிதம் என்பனவாம். கீதையின் ஞானம் இவைகள் மூலமாக நம் உடலின் உள்ளே உறையும் ஆத்மாவின் தன்மையை நமக்குப் போதிக்கிறது. இந்த உண்மை முதலிய பண்புகள், வாழ்க்கையின் மேல் மட்டத்தை நமக்கு உணர்த்தவில்லை. மாறாக அதன் ஆழத்தை உணர்த்துகிறது. மேலே சொன்ன நற்பண்புகளின் ஊடே சஞ்சரித்தது மாமுனிவர்களும் மகாத்மாக்களும் உலகிலே வாழும் உண்மைகளை நமக்கு உபதேசித்தனர் என்பதை நாம் உணர வேண்டும்.

**'இந்த ஆத்மாவை அழியும் தன்மை வாய்ந்தது; அநித்தியமானது என எண்ணி (உடலையே ஆத்மாவாக எண்ணிப் பாவித்து) இதுதான் உலகிலே தினந்தோறும் பிறக்கிறது இறக்கிறது என நீ எண்ணுவாயானால், அப்படிப்பட்டவர்களுக்காக நீ வருந்துவது பொருந்தாது.'** II (26)

'இத்தூல தேகமே ஆத்மா எனும் கருத்தின் கண்ணும்; உடலோடு ஆத்மாவும் மரணமடையும் எனும் கருத்தின் கண்ணும், இவை இரண்டும் உண்மையே என வாதத்திற்காகக் கொண்டாலும்; நிலையுதலுள்ளது நித்தியமான பொருள் யாதொன்றும் இல்லை என்னும் லோகாயதர் கொள்கைப்படிப் பார்த்திடினும் இந்த உயிர்களைக் குறித்து—இவை இறந்து போகுமே என்பதற்காக நீ வருத்தமுறுவது சரியன்று.

**'பிறந்தவன் இறப்பது நிச்சயம். இறந்தவன் மறுபடி பிறப்பதும் நிச்சயம். இந்த வகையில் யாதொரு பரிகாரமுமில்லாத—பரிகாரம் செய்து கொள்ள முடியாத இதற்காக, நீ துக்கப்பட அருகதையற்றவன்.'** II (27)

இவ்வுலகிலே ஒவ்வொரு நாளும் எண்ணற்றவர்கள் இறந்து போகின்றனர். எண்ணற்ற குழந்தைகள் பிறக்கின்றன. இவ்வகையிலே இறப்பதும், பிறப்பதும் இயல்பானது. இதற்கு எவ்வகைப்பட்ட பரிகாரமுமில்லை.

முன் கூறப்பட்ட ஆத்ம லட்சணத்தை நீ அறிய இயலாவிடினும், அல்லது அந்த ஆத்மாவைப் பற்றி வேறு வகையான, மாறுபாடான—அபிப்பிராயம் கொண்டிருந்தாலும், பார்த்த! நீ, பீஷ்மர் முதலான இவர்களது இறப்பைப் பற்றி துக்கிக்க அருகதை அற்றவனே!

இந்த ஆத்மாவே உடல் அழியும் போது கூடவே அழிவது என்று கொண்டாலும், அதனால் நீ வருத்தமடைவது பொருத்தமில்லை. வினைப்போகமே இந்தத் தேகம். வினை முடிந்தால் மரணம் நிச்சயம். வினை விளைவால் வரும் சாவைத் தடுக்க யாரால் இயலும்? வினை முடிந்ததும் மனித உடலே இல்லை.

**'பாரதா! எல்லா உயிர்களும் ஆதியிலே உலகத்திற்குள் வருமுன்னே கண்ணுக்குக் காணப்படுவன அல்ல. இடையிலே கண்ணுக்குக் காணப்படுகின்றன; இறுதியிலே திரும்பவும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. தொடக்கத்தில் தோன்றாமலும் இடையிலே தோன்றியும் இறுதியிலே காணாமலும் போய் விடுபவர்களைப் பற்றி நீ வருந்துவானேன்.'** II (28)

தொடக்கத்தில் புலனாகாது இடையில் சில காலம் மட்டுமே புலனாகி முடிவில் என்னானார் என்பதே தெரியாமல் மறைவோரைக் குறித்து நீ வருந்துவானேன்.

இந்த உடல்களோ மாயையிலிருந்து உண்டாகி, இடையிலே சில காலம் நம்மால் காணப்பட்டு, மாயையிலே லயிக்கின்றன. கனவிலே நாம் காணுகின்ற பொருள்கள் உறங்குவதற்கு முன்னும் இருந்ததில்லை; உறங்கி விழித்த பின்னும் இருக்கப் போவதில்லை. இடையிலே கனவிலே தோன்றி மறைகின்றவர்கள் உண்மையில் இல்லாதவர்களே

அல்லவா? நம் உற்றார் உறவினர்களும் அப்படியே முன்னே இல்லாமல், இடையிலே தோன்றி, பின்னால் மறைந்து போகின்றவர்களே! எனவே இதன் பொருட்டு நீ துயர மடைதல் எதற்காக?

கண்ணன் மேலும் பார்த்தனுக்கு ஆத்ம இலக்கணத்தை உணர்த்துகிறார்:

**'அர்ச்சுனா! ஒருவன் இவ்வாத்மாவை தன் சாதனையால் மிகவும் அற்புதப் பொருளெனக் காண்கிறான். மற்றொரு வன் இவ்வாத்மாவை வியத்தற்குரிய பொருளெனப் பேசு கிறான். வேறொருவனோ, இவ்வாத்மாவை ஆச்சரியம் மிக்கப் பொருளெனத் தன் காதால் கேட்கிறான். பார்த்தவனும் பேசியவனும் கேட்டவனும் எவனுமே ஆத்மாவை அறியவே இல்லை.'** II (29)

முதலில் அற்புதப் பொருளாகக் கண்டவர் யோகியர். இவர்கள் தங்கள் யோக சாதனையால் ஆத்மாவை அற்புதப் பொருளெனக் கண்டனர்.

அடுத்தவர்கள் சாத்திரங்களில் கூறியுள்ள ஆத்ம இலக் கணத்தைக் கற்றுணர்ந்த அறிஞர்கள். இவர்கள் தங்கள் கூர்த்த அறிவால் ஆத்ம இலக்கணத்தை உணர்ந்து அதை வியத்தகு பொருளென விளக்கிப் பேசுவர்.

மேற்கூறிய கற்று வல்ல அறிஞர்களால் ஆத்மாவை இன்னதென, ஆச்சரிய மிக்கப் பொருளெனப் போதிக்கக் கேட்டவர்கள் மூன்றாமவர்கள்.

இம்மூன்று வகையாகச் சொல்லப்பட்டோர் எண்ணிக் கையில் மிகச் சிலரே. ஆகவே பன்மையைப் பயன் படுத்தாது ஒருமையில் கூறினார். வியத்தகு பொருளாக மற்றவர் கூறக் கேட்ட பின்னும் பலர் அறிவதில்லை. ஆத்மாவை உணர்ந்து கொள்வதில்லை என்பதே இதன் பொருள்.

எனவே ஒருவரும் இந்த ஆத்மாவை உள்ளபடி அறிந்தவரல்லர்.

கடோபநிஷத் (II 17) இவ்வண்ணம் கூறுகிறது:

எதைப் பற்றிய கேள்வி பலருக்குக் கிட்டுவதில்லையோ, கேட்டிருந்தாலும் அதைப் பற்றி அறியவில்லையோ, அதைப் பற்றிக் கூறுகிறவன் அரிது. அதை அடையும் நிபுணன் அரிது. நிபுணனான ஆச்சாரியனால் உபதேசிக்கப் பெற்று அதை அறிகிறவன் அனைத்திலும் அரிது.

இந்த ஆத்மா கண்ணுக்குப் புலப்படும் பொருள்களைப் போன்ற ஒன்றன்று. எனவே, இது மனம் மொழிகளுக்கு எட்டாதது. ஆகையினாலே கண்டவனும் பேசுபவனும் கேட்பவனும் இதை அறிந்தவனாகான். ஏனெனில் மனிதன் மனம் என்னும் திரையால் மறைக்கப்பட்டிருக்கிறான்.

மேலும் கூறுகிறார் கிருஷ்ணன்;

**'பாரத! யாவருடைய உடல்களிலும் உறைகின்ற (தேகி) ஆத்மா எக்காலத்தாலும் அழிக்கப்படாதவன், எனவே இவ்வுயிர்களின் பொருட்டு நீ வருந்த வேண்டா.'** II (30.)

சக்தியிலிருந்து ஆத்மா வெளிப்படுகிறது. சக்தியும் பூர்ணம்; ஆத்மாவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூரணம் உதிக்கிறது. உதித்ததும் பூரணம். பூரணம் உதித்த பின் எஞ்சி நிற்பதும் பூரணமே.

சக்தி உயிர் என்னும் ஆத்மாவை ஊடுருவி நிற்கிறது. சக்திதான் பரமாத்மா. ஆத்மா—பரமாத்மா இவ்விரண்டும் ஒன்றே.

சக்தி (பரமாத்மா) நிலை பேறுடைய பொருண்மை. ஆத்மாதான் உயிர்; வலிமை ஆக்க சக்தி.

ஆத்மா இருவேறு நிலைபேறுடைய வாழ்க்கையையுடையது. அது இருவேறு உலகத்திலே வாழும். மேலுலகத்திலும் இவ்வுலகத்திலும் அது சஞ்சரிக்கும்.

மேலுலகம் சக்தி உலகம். இவ்வுலகமோ பருப் பொருள் (சடப்பொருள்). இந்த ஆத்மாவோ இச்சடவுலகத் திலே பரமாத்ம சக்தி உலகமாம் மேலுலகத்தை அவாவும் தாகத்தோடு வாழ்கிறது. ஆனால் இந்த அவா (தாகம்) பற் பல காலங்களில் வலுவாக அமுக்தப்படுகிறது. நம்முடைய ஆத்மா இச்சடவுலகிலே உடலோடு கூடி வாழ்கிறது. ஆனால் அதற்கு அமைதியே கிடையாது. மனித உடலிலே கட்டுண்ட ஆத்மா, காற்றிலே அலைப்புண்ட தீபத்தைப் போல் அமைதியின்றித் துடிதுடித்து அலைகிறது.

பரமாத்மா (கடவுள்) எந்த ஆத்மாவிற்கும் புறத்தே கிடையாது. பரமாத்மாவே (கடவுளே) மனித உயிரின் உட்கரு. ஆத்மாவை அறி. ஆத்மாவில வாழ். இதற்கென நீ சடங்குகள் அனைத்தையும் துறந்து மேலெழு.

ஆத்மாவை உள்ளபடி அறிந்து அதிலே வாழ்கின்ற வாழ்க்கையைக் காட்டிலும் உயர்ந்தது வேறொன்றுமில்லை. மிக உயர்ந்த உண்மை என்பதுஆத்மாவை நாம் அடைதலே. அதற்கு நீ துறக்க வேண்டியது, கர்ம காண்டத்தையே, சடங்குகளையே என்கிறது கீதை.

மேலும் உரைக்கிறார் கிருஷ்ணன் :

**'நீயோ அரச குலத்தவன். உன்னுடைய சுயதர்மம், எதிரிகளை அழித்தல். அதை நோக்குமிடத்து, நீ மனம் சலித்தல் ஆகாது. அறப்போரைக் காட்டிலும் வேறு எவ்வகைச் சிறப்பும் அரசனுக்கு இல்லை.'** II (31)

**'அர்ச்சுனா! துறக்கத்தை அடையும் பொருட்டு தற்செயலாக ஏற்பட்ட இந்தப் போரை பாக்கியவான்களாகிய க்ஷத்திரியர்களே நிச்சயமாக அடைகிறார்கள்.'** II (32)

இங்கே பகவான், அரச கடமை என்ன என்பதை அருச்சுனனுக்கு நினைவூட்டுகிறார். அறத்தை நிலைநாட்ட, சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற, சமூக அமைதியை நிலை நாட்ட, தேவைப்பட்ட காலத்திலே, அரசன் போர்க்

களத்திலே புகவேண்டியது இன்றியமையாதது. அது அவன் கடமை. தன் கடமையில் இருந்து அரசன் விலகிவிட்டால் அறம் தேய்ந்து மறம் ஓங்கும். எனவே ஆள்பவன் அறத்தை நிலைநாட்ட பலாத்காரம், போர் இவைகளைக் கைக் கொள்ள வேண்டிய காலமும் உண்டு.

க்ஷத்திரியனின் ஆனந்தம் இல்லற சுகங்களிலே, இன்பங் களிலே இருப்பதில்லை. மாறாக அறத்தை நிலைநாட்டச் செய்யும் அறப்போரில்தான் அமைந்துள்ளது.

**'எனவே அறத்தை நிலைநாட்ட, நீ இப்போரைச் செய்யாமற் போனால், உன் கடமையிலிருந்து நீ தவறி விடுவாய்; கீர்த்தியை இழப்பாய்; பாபத்தை அடைவாய்.'**
II (33)

**'அதோடு மக்கள் உன்னை எக்காலத்தும் தூற்றுவார்கள்; இகழ்வார்கள். போற்றுதலுக்கு உரியவனாக விளங்கிய ஒருவன் தூற்றுதலுக்குள்ளாவது சாதலைக் காட்டிலும் மிகவும் இன்னாதது.'**
II (34)

அறத்திற்கும் மறத்திற்கும், நன்மைக்கும் தீமைக்கும் நடக்கும் பயங்கரப் போராட்டத்திலே எவன் ஒருவன் தன் தவறான மனோபாவத்தினாலோ பலவீனத்தாலோ கோழைத்தனத்தினாலோ விலகி நிற்கிறானோ அவன் பாவத்தையே செய்தவனாவான். எல்லா உயிரினங்களுக்கும் தம் உயிர் வெல்லம் போன்றதே; இனிமையானதே. யாவரும் உயிர் ஆசை உடையவர்களே. ஆனால் வீரன் அப்படிபட்டவன் அல்லன்; தர்மத்தின் பொருட்டு உயிரை யும் துச்சமாக மதிப்பான். உற்றவிடத்தில் உயிர் வழங்கும் தன்மை அவனிடம் உண்டு; பற்றலரைக் கண்டால் பணிய மாட்டான்; கற்றூணைப்போல பிளந்து மடிவானே தவிர தளர்ந்து தலைகுனிய மாட்டான். தளர்ந்து தலைகுனிந்து தன் உயிரை ஓம்பினால் இவன் பெருமை கேடுறும்; பழி வந்தெய்தும்.

'அர்ச்சுனா! நீ எவர்களால் நன்கு மதிக்கப்பட்டிருந்தாயோ அந்தப் பெருவீரர்கள், போருக்குப் பயந்து நீ புறங்கொடுத்து ஓடிவிட்டதாக நினைப்பார்கள். புகழ்பெற்ற போர் வீரனான நீ இழிவடைவாய்.' II (35)

'உன் விரோதிகள் உன் வல்லமையை நிந்திப்பார்கள்; சொல்லத்தகாத சொற்களால் இழிவாகப் பேசுவார்கள். உனக்கு இதைவிடத் துன்பமும் உளதோ? போரிலே நீ மடிந்தால் சுவர்கம் அடைவாய்; வெற்றி பெற்றால் உலகாள்வாய். எனவே குந்தி மைந்தனே! நீ போர் செய்ய உறுதி பூண்டு எழு! போர் செய்!' II (36)

'அர்ச்சுனா! நீ உன் பாட்டன், ஆசிரியன், பந்துக்கள் மேல் கொண்டுள்ள அன்பு காரணமாகத்தான் போர்க்களத்தை விட்டு நீங்கினாய் என உன் எதிரிகள் யாராவது எண்ணுவாரளா? மாட்டார்கள். கோழைபோல் பயந்து புறமுதுகிட்டு ஓடினாய் என்றுதான் நினைப்பார்கள். இதனால் நீ அடைவது இழிவுதான். II (37)

*'இந்த அர்ச்சுனன் சிறுசிறு போர்களிலே தன்னுடைய திறமையைக் காட்டினான். ஆனால் பெரும்போரைக் கண்டு பயந்து விட்டான். நம் வீரர்களின் எண்ணிக்கை இவனுக்கு அச்சமூட்டிவிட்டது. இவன் சூரர்களாகிய நம் முன்னிலையிலே ஒரு வினாடிகூட நிற்க முடியவில்லையே. இவன் ஒரு சூரனா?' என்று திருதராஷ்டிரன் மக்கள் கேலி அல்லவோ பேசுவார்கள்? எனவே போர் செய்யத் துணிந்தெழு. இறந்தால் அவ்வுலகம்; வெற்றி பெற்றால் இவ்வுலகம்!*

*அடுத்து வரும் சுலோகத்தில் இருந்து கண்ணன அருச்சுனனுக்கு, ஒவ்வொருவரும் தத்தம் கடமையை எப்படி ஆற்ற வேண்டும் என விளக்குகிறார்.*

'இன்ப துன்பங்களை, வரவு இழப்புக்களை, வெற்றி தோல்விகளைச் சமமாக ஏற்றுக் கொண்டு போர் செய்க! இப்படிப்பட்ட மனநிலையோடு தான் ஏற்றுச் செய்யும் எக்கருமமும் பாவமானதல்ல.' II (38)

இதற்கு முன் சொன்ன சுலோகங்களிலே கண்ணன், ஒருவர் தன் கடமையிலிருந்து தவறுவதால் ஏற்படும் அவமானம், பழிச்சொல், ஏளனம், வீர சுவர்க்கமின்மை முதலியவற்றை,—தனக்கு உரிய அரசுரிமையையும் இழந்து போதலாகும் லௌகீக இழப்புக்களைக்—குறிப்பிட்டார். இந்தச் சுலோகம் முதல் இப்போர் அமைதியற்ற அவா, கோபதாபங்கள் இவைகளை நீக்கி மனம் சமநிலையோடு தத்தம் நிலையில் வழுவாமல் கடமைகள் ஆற்றப்பட வேண்டுமென வலியுறுத்துகிறார்.

இதன் மூலம் ஒவ்வொருவரும் விருப்பு வெறுப்பற்றவராக வாழ்க்கை நடத்த வேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது. இன்பம், லாபம், வெற்றி ஆகிய இவைகளால் மகிழ்வும், அவைமேல் விருப்பமும், துன்பம் இழப்பு தோல்வி இவைகளால் துக்கமும், அவைமேல் வெறுப்பும் தோன்றுகின்றன.

இப்படிப்பட்டவைகளால் விருப்பமும் வெறுப்பும் கொள்ளலாகாது. நமக்கு ஏற்படுவன யாவையும் நடுநிலையிலிருந்து சமமாக ஏற்றுக் கொள்ளல் வேண்டும்.

**''இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்**
**துன்பம் உறுதல் இலன்''**

என்கிறது குறள்.

பற்றுள்ளம் கொண்ட ஒருவனும், தான் ஆற்றும் கடமைகளை எல்லாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யும் ஒருவனும், செய்யும் கடமைகளில் (கர்மங்களில்) வேறுபாடு உண்டு. இருவேறு மனநிலைகளில் இருவரும் தத்தம் கடமைகளை ஆற்றுவதால் முன்னையது பந்தபாசத்தி னடிப்படையது; பின்னையது பற்றற்றது என்பதை உணரலாம். பற்றற்ற ஒருவன் இதயம் தூய்மையானது. அதில் மருட்சி இல்லை; மோகம், பற்று இல்லை. துவந்தங்களில் இருந்து அவன் விடுபட்டவன். இப்படிப்பட்டவர்கள் தங்கள் ஆன்மாவிலே

வசிப்பவர்கள்; உடலைத் துறந்தவர்கள்; ஆசையை வென்று, சுக துக்கங்களில் இருந்து விடுபட்டவர்கள். அவர்களே சூழ்நிலைக்கு அடிமையாகாமல் சூழ்நிலையை வென்றவர்கள்.

கண்ணன் மேலும் சொல்லுகிறார்:

**'அர்ச்சுனா! இதுவரை உனக்கு சாங்கியத்தைப் பற்றிய (ஆத்ம தத்துவத்தை) அறிவு சொல்லப்பட்டது. இனி, யோகத்தைப் பற்றிய ஞானத்தைக் கேள். யோகத்தைப்பற்றிய ஞானத்தையும் நீ பெற்று விட்டால், கர்மபந்தத்தை நீ நிவர்த்தி செய்ய வல்லவனாவாய்.'** II (39)

இங்கு, கீதையில் சொல்லப்பட்டுள்ள சாங்கியம் என்பது கபில முனியால் செய்யப்பட்ட சாங்கிய மதத்தைப் பற்றியதல்ல. அது (கபில முனி சாங்கியம்). ஆறுவகைச் சமயத்தொன்று. தத்துவங்கள் இருபத்தைந்து என அது கூறும். இருபத்தைந்தாவது தத்துவமாகிய புருடன், மற்றைய இருபத்து நான்கினையும் பிரித்தறிந்து, மாயையை நீக்குவது தான் முக்தி என்பதே அந்த சாங்கியம்.

ஆனால் இந்தச் சுலோகத்தில் கீதை சொல்லும் சாங்கியம் வேறு. இந்தச் சாங்கியம் குறிப்பிடுவது 1. ஆத்ம ஞானம் 2. அவாவை முற்றத் துறத்தல் 3. கடமையை பற்றின்றி ஆற்றுதல் முதலிய தத்துவ விசாரங்களே. இந்தச் சாங்கியன் உடல் வேறு, ஆத்மா வேறு என்று உணர்ந்தவன்; ஆத்மா அழியாதது என்றறிந்தவன்; உலக நடப்புக்களால் சலனமடையாதவன்; தன்னுடைய புத்தியிலே நிலவுகின்ற அறிவு, உறுதி இவைகளை அழித்து நாசமாக்கும் சுவை முதலாம் ஐம்புல அவாக்களையும் வென்றவன். புருஷன், பிரகிருதி இவைகளின் வேற்றுமையை உணர்ந்தவன்.

ஐந்து புலன்களாய குதிரைகளைப் பூட்டிய உடலாகிய ரதத்திற்கு அவன் புத்திதான் சாரதியாகும். அவன் தன் உள்ளமாகிய கடிவாளத்தால் அவைகளைத் தன் வசமாக்கி ஓட்டுகிறான். ஆத்மா புத்தியினின்றும் வேறுபட்டது. அது

சாட்சி பூதமாக உள்ளது என்பதை அவன் அறிந்தவன். ஆத்ம ஒளி தன் புத்தியின்மீது சரியான முறையில் பட்டு பிரதிபலித்தால், புத்தி ஆத்மாவில் ஐக்கியமாகிவிடும். ஆங்கு 'தான்' என்பது இல்லை; வேற்றுமை இல்லை; ஆத்ம நேய ஒருமைப்பாடுதான் உண்டு.

இந்தச் சுலோகத்திலே ஆத்ம தத்துவ விசாரமே சாங்கியம் எனப்படுகிறது. அதைச் செயலாற்றும் அனுஷ்டானமே யோகம் எனப்படுகிறது.

இச் சுலோகத்தின் பிற்பகுதியிலே சொல்லப்பட்டுள்ளது யோகம். இதையே சாதனம் என்று கூறுவர். சாதனம் நான்கு வகைப்படும் (சாதன சதுஷ்டயம்). அவை :

1. நித்திய அநித்திய வஸ்து விவேகம்.
2. இக அமுத்திரபல போக விராகம் (வைராக்கியம்)
3. சமதமாதி ஷட்க சம்பத்தி
4. முமுட்சுத்வம்—என்பவையாம்:

1. நிலையான பொருள் எது; நிலையற்ற பொருள்கள் யாவை எனும் அறிவைப் பெறுவது.
2. இம்மை மறுமை இரண்டிலும் வந்து சம்பவிக்கும் கர்ம பலன்களிலே இச்சை கொள்ளாமல் இருத்தல்.
3. சமம், தமம் முதலிய ஆறு பேறுகளை அடைவது.
 இதில் சமம் என்பது அந்தக்கரணங்களை அடக்குவது.
 தமம் புறக்கரணங்களை அடக்குவது
 உபாதி : ஆசையின்மை
 திதிட்சா : தானாக வரும் துன்பங்களைச் சகித்தல்.
 சமாதனம் : மன அமைதி.
 சிரத்தை : மன வல்லமையுடன் அநுஷ்டானத்தில் (சாதனத்தில்) ஈடுபடுதல்.
4. முமுட்சுத்வம் : முத்தியடைவதில் கண்ணும் கருத்துமாய் இருத்தல்.

**'இப்படிக் கூறப்பட்ட அநுஷ்டானங்களிலே, செய்யும் முயற்சி வீணாதல் இல்லை. எக்குற்றமும் இதில் வராது. செய்யப்படுவது தினைத்துணையேனும், பெரும் அச்சத்தில் இருந்து இது காப்பாற்றும்.'** II (38)

*இந்த அனுஷ்டானம் வீணாதல் இல்லை. இந்நெறியிலே வைக்கப்படும் ஒவ்வொரு காலடியும் முன்னேற்றமே! பயனற்றுப் போகாது. ஒவ்வொரு கணமும் லாபமே!*

*'துணைத்துணை வேள்விப்பயன்' என்ற குறளுக்கு ஏற்ப சாதனைக்கு ஏற்ற அளவு பயன் இந்த யாகத்திலே உண்டு.*

**''சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை**
**ஆதலால் இந்த நான்கும் அறிந்தவர்க் கறிவுண்டாகும்''**
*கைவல்ய நவநீதம்—4*

*இக்கரும யோகத்திலே, செயலாற்றும் சொற்ப அப்பியாசமும் பிறப்பு இறப்பு எனும் கடலன்ன சம்சார அச்சத்தினின்றும் விடுதலையை உண்டாக்கும்.*

*எனவே இந்தக் கர்ம யோக முயற்சியிலே, ஈடுபடும் காலத்திலே அடையும் ஒவ்வொரு விளைவும் நற்பேறாகவே வைத்து எண்ணப்படும்.*

*இத்தகையவர்கள் அடையும் பயனைக் கண்ணன் பின்வரும் சுலோகத்தால் விளக்குகிறார்.*

**'குருகுலத் தோன்றலே (அர்ச்சுனா)! இந்த யோகத்திலே உறுதி உள்ளவனுக்கு புத்தி ஒருமுகப்பட்டிருக்கும். ஏகாக்கிர சித்தம் உண்டு. ஆனால் இதில் உறுதி அற்றவர்களுக்கோ புத்தி ஒருமுகப்பட்டிராது (ஏகாக்கிர சித்தம் இராது). புத்தி பல கிளைகளை உடையதாகவும், ஒரு முடிவுக்கும் வராததாகவும் அமைந்திருக்கும்."**

*உறுதியற்ற புத்தி உள்ளவனுக்கு இந்த யோகத்திலே பற்று உண்டாகாது. வேத மந்திரங்களை*

உயர்ந்தது என்றும், யாகங்களை இயற்றுவதுதான் சிறந்தது என்றும், சுவர்க்காதி பதவிகளே மேலானவை என்றும், மந்திரங்களை முணுமுணுப்பதும் பாராயணம் செய்வதுமே மேலானது என்றும் கருதுபவர்களின் உள்ளம் ஒருமுகப் பட்டிராது. (இவர்கள் உண்மை அறியாத அவிவேகிகள் ஆவார்கள்).

**'அவிவேகிகளின் மலர் போன்ற அலங்கார மொழிகளால் கட்டுண்ட மனம் உடையவர்கள் செல்வத்திலும் போகத்திலும் பற்றுடையவர்களாய் இருப்பர். அவர்கட்கு உறுதியான புத்தி உண்டாவதில்லை; காமிய கர்ம பலன் தரும் மறுபிறவியை அடைவார்கள்'** II (42-44)

தாவித் தாவி, வளைந்து வளைந்து பல வகையாக ஓடும் உறுதியற்ற புத்தி, ஸ்திர புத்தி உடையவனின் ஒருமுகச் சிந்தனைக்கு மாறுபட்டது.

மனித வாழ்க்கை ஒரு மேம்பட்ட முடிவிலே தன்னை அர்ப்பணிப்பதிலேதான் நிறைவைக் காண்கிறதே ஒழிய முடிவற்ற சாத்தியக் கூறுகளைத் தேடி கட்டற்று ஓடி அலைவதிலே அல்ல.

ஒருமுகச் சிந்தனை என்பது சாதனையால் எய்தப் பெறும். எண்ணச் சிதறல் நம் இயற்கை நிலை. இதிலிருந்து நாம் விடுபட வேண்டும். ஒருமுகச் சிந்தனைதான் கிடைத் தற்கரிய ஒப்பற்ற பெரும்பேறு. இதை நாம் அடைந்திட வேண்டும்.

இங்கே பகவான் கண்ணன், உண்மையான கருமத்திற் கும் (கர்மயோகத்திற்கும்) சடங்கு வெறியின் பாற்பட்ட கடமை உணர்ச்சிக்கும் உள்ள வேற்றுமையை சுட்டிக் காட்டு கிறார். வேத வேள்வியால் அடையும் பலன்கள் லௌகீக மானவை; சுவர்கம் முதலான பதவிகளைத் தருபவை.

ஆனால், கீதை உபதேசிக்கும் இந்தக் கர்மயோகம் தன்னலம் பற்றிய எல்லா அவாக்களையும் துறந்து விடும்படி

நமக்குப் போதிக்கிறது. இதிலே, வாழ்க்கையே ஒரு வேள்விக் களம். உண்மையான பக்தியோடு சமர்ப்பிக்கும் ஆத்ம நிவேதனமே வேள்வியாகும். இந்தச் சந்தர்ப்பத்திலே, ஈசாவாஸ்யோப நிஷத்தும், கடோப நிஷத்தும் கூறுவதைக் காண்போம் :

'எவர்கள் கர்மமாகிய அவித்தையை மட்டும் உபாசிக்கின்றார்களோ அவர்கள் சம்சாரமாகிய காரிருளில் புகுகின்றனர்.

'எவர்கள் தேவதைகளின் உபாசனையாகிய வித்தையில் மட்டும் ஆசை வைத்தவர்களோ அவர்கள் இன்னும் அதிகமான இருளில் புகுகின்றனர்.' ஈசா—9

'வித்தையால் பெறப்படுவது வேறு; அவித்தையால் பெறப்படுவது வேறு என, நமக்கு உண்மையை விளக்கிய தீரர்களிடமிருந்து கேட்டிருக்கிறோம்.' ஈசா—10

'எவன் வித்தையையும் அவித்தையையும் ஒன்றாகக் கூட்டி அறிகிறானோ அவன் அவித்தையினால் சாவைத் தாண்டி, வித்தையினால் சாகாத தன்மை எய்துகிறான்.' ஈசா—11

(இவ்விரண்டு மார்க்கங்களும் வெவ்வேறு பலனை அளிப்பவை; ஆத்ம ஞானத்தினின்றும் முற்றும் வேறுபட்டவை.)

'அவித்தையினுள் ஆழ்ந்து கிடக்கும் மூடர்கள், தாமே தீரர்கள் என்றும் பண்டிதர்கள் என்றும் நினைத்துக்கொண்டு தடுமாற்றத்தை அடைந்தவர்களாய் குருடர்களால் வழி காட்டப் பெற்றக் குருடர்களைப் போல் சுற்றிச் சுற்றி வருகின்றனர்.' கடோ. II—5

மக்கள் முக்குண வயப்பட்டவகள்: சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் மாறுபாடு எய்துங்காலத்திலே அதற்கேற்பத் தத்தம் குணநலன்களில் மாறுபாடு எய்துவர்.

முக்குண வயப்பட்ட மாந்தர்கள், ஆசையாம் கயிற்றிலே ஆடிடும் பம்பரம் போல வாழ்க்கையிலே உழல்வர். இவர்கள் மக்களுள் கடைப்பட்டவர்கள். இவர்கட்கு இந்திரிய சுகங்களே இன்றியமையாதவை. கல்வி, கேள்வி, செல்வம், புகழ், பதவி யாவும் சிற்றின்பத்துக்கே இவர்களால் பயன் படுத்தப்படுகின்றன. வேதத்தின் கருமகாண்டமும் இப்படிப் பட்ட இகபோக இன்பத்துக்கும் மறுமை இன்பத்துக்குமே அமைகின்றது.

பலவகைப்பட்ட இன்பங்களை நாடிப் பிறவிக்கடலுள் அழுந்திக் கிடப்பவர்க்கு அது பயன்படும். ஆனால் நம் வாழ்க்கையின் குறிக்கோள் இன்பங்களைத் துய்ப்பதல்லவே- பரிபூரணமடைவதல்லவா நம் இலக்கு? இதற்கு யோக ஞானத்தில் உறுதியான உள்ளம் தேவை அல்லவா?

வேதங்களின் கர்ம காண்டப் பகுதிகளில் கூறப்படும் அனுஷ்டானங்களை அனுஷ்டிப்பதால் ஸ்திர புத்தியோ (உறுதியான உள்ளமோ) சமாதியோ உண்டாகா.

அடுத்து வரும் சுலோகத்திலே, பகவான் கண்ணன், நம் ஆத்மா பரிபூரண நிலையை அடைய கைக்கொள்ள வேண்டியவை யாவை? விலக்கப்பட வேண்டியவை யாவை? என்பதை விளக்குகிறார்.

**'அர்ஜுனா! வேதங்களோ சத்துவ குணம், ரஜோகுணம், தமோகுணம் எனும் முக்குணங்களை விஷயமாக உடையன. எனவே நீ ஆசையற்றவனாய், சுகம் துக்கம், லாபம் நஷ்டம் எனும் இருமைகள் அற்றவனாய் எக்காலத்தும் சத்துவகுணத் திலே நிலை பெற்றவனாய், யோக க்ஷேமங்களை கடந்தவ னாய் ஆத்ம சொருபத்திலே நிலை பெற்றவனாகுக.' II (55)**

இந்தச் சுலோகத்திலே அர்ஜுனனை நித்ய சத்துவனாக இருக்கக் கண்ணன் கட்டளை இடுகிறார். நித்திய சத்துவன் என்பவன் உலகியல் வழக்கிலிருந்து விடுபட்டு மேலோங்கி சத்துவ குணத்திலே எக்காலும் நிலைபெற்று நிற்பவன்.

உலகத்திலே வாழ்கின்ற மக்கள் யாவரும் சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் முக்குண வயப்பட்டவர்களே. வேதங்களோ இம்மூன்று குணங்களை உடைய மக்களுக்கென அமைந்தவை.

வேதங்களிலே பூர்வ மீமாம்சை என்று சொல்லப்படும் கர்ம காண்டத்திலே, இகபர சுகங்களுக்காக இயற்றப்படும் யாக, யக்கியங்களைப் பற்றிச் சொல்லப்பட்டு உள்ளன. முக்குணங்கள் வசப்பட்டுள்ள மக்கள் இன்ப நாட்டங் கொண்டு தத்தம் குணத்துக்குத் தக்கபடி, சுவர்க்கம், இகலோக இன்பம் முதலியவைகளுக்குரிய சாதனங்களையே கைக்கொள்வார்கள்; அவைகளால் அடையும் இன்ப துன்ப லாப நஷ்டங்களால் அல்லலுறுவார்கள். சடங்குகளிடையே உள்ள பற்று உலக வாழ்க்கைக்குத் தேவைப்படுகிறது. அதன் பலனே வைதீக பழக்க வழக்கங்கள்.

மேலான பரிபூரணத்தன்மையை நாம் எய்த வேண்டுமெனில், நாம் நம்முடைய இலக்கை மேலான பரம் பொருளை நோக்கிச் செலுத்துதல்வேண்டும். அதற்கு இன்றியமையாதவை; சத்துவ குணத்திலே நிலைத்து நிற்றலும், இருமைகள் அற்றவனாய், ஆசை இல்லாதவனாய் வாழ்தலுமே ஆகும்.

இச்சுலோகத்திலே குறிப்பிடப்படும் 'யோக க்ஷேமங்களைக் கடந்தவனாய்' என்பதிலே உள்ள யோகம், கர்மயோகம்; ஞான யோகம் அல்ல. செல்வம், பதவி இவைகளை எய்தப் பாடுபட்டு அடைவதையே யோகம் என இங்கு குறிப்பிடப்படுகிறது. அவைகளைக் காப்பாற்றி வைப்பதையே க்ஷேமம் என்கிறோம். இவை இரண்டும் சாதகனுக்குத் தேவையற்றவை. சுகபோக வாழ்க்கை யோக மார்க்கத்திற்கு விரோதமானது என்றறிதல் வேண்டும்.

இறுதியாக உள்ள ஆத்மவான் என்பதற்கு ஆத்மாவில் நிலைபெற்றிருப்பவன் என்பது பொருள். ஆத்மவான் எக்காலத்திலும் விழிப்போடிருப்பான். ஆத்மாவை அறிந்து

அதை அடையப் பெற்றிருத்தலே மேலான செல்வமாகும். நாம் அறிந்திராத ஒன்றைப்பற்றி அறிவதே மனிதனின் உண்மையான முடிந்த முடிவாகும். இதை எவன் புறக் கணிக்கிறானோ அவனே ஆத்ம ஹத்தி செய்கிறவனாகிறான்.

முக்குணங்களைக் கடந்து, இருமை வகை அறிந்து, ஆத்மாவிலே நிலைத்து நிற்பதால் மனிதன் அடையும் பயன் தான் என்ன?

**'எங்கும் தூயநீர் பெருக்கெடுத்து மண்டிக் கிடக்கும் போது, கிணற்றில் உள்ள நீரால் ஒருவனுக்கு எத்துணைப் பயன் உண்டோ, அவ்வளவு பயனே ஞானம் எய்திய பிரம்ம நிஷ்டையில் உள்ளவனுக்கு வேதங்களால் உண்டு.' (அதாவது ஏதும் இல்லை என்பதாம்.)** II (47)

ஆற்றுநீர் எளிதிலே அமிதமாகக் கிடைக்கும் இடத்திலே வசிக்கும் ஒருவன் கிணற்றுநீரைச் சட்டைசெய்யமாட்டான். அதைப் போலவே ஞானியும் வேதங்களிலே விதிக்கப்பட்டுள்ள சடங்கு ஆசாரங்களைச் சட்டை செய்வதில்லை.

கிணற்றுத்தவளை கிணற்றை மட்டுமே அறியும். உலகம் அதற்குத் தெரியாது. அஞ்ஞானத்திலே ஆழ்ந்து கிடக்கும் ஒருவனுக்கும் சடங்கு ஆசாரங்களே புரியும்; தத்துவ விசாரம் அவனுக்குப் புலப்படாது.

ஆனால் தன்னையறிந்து ஆத்மாவிலே நிலைபெற்று நிற்கும் ஞானிக்கு இந்த உலக இன்பங்கள், வேள்விகள், சடங்குகள், ஆசாரங்கள் அனைத்தும் அற்பமானவைகளே!

அடுத்து, பகவான் கிருஷ்ணன் அருச்சுனனுக்கு உபதேசிக்கும் சுலோகம், மிக இன்றியமையாத புகழ் வாய்ந்த ஒன்றாகும்.

**'செயலாற்ற மட்டுமே உனக்கு உரிமை உண்டு; அதனுடைய பலனை அனுபவிக்க அல்லவே அல்ல. கர்ம**

**பலனிலே, நீ எக்காலத்தும் விருப்பம் வைக்காதே! அது மட்டும் அல்ல; எச்செயலையும் ஆற்றாமலிருப்பதிலும் நீ விருப்பம் வைக்காதே!'** II (48)

செயலாற்று; அது உன் கடமை. அதனுடைய பலனை எதிர்பார்த்தலாகாது. வெறுமனே செயலற்றும் இராதே!

இச்சுலோகத்திலே, தன்னலமற்ற தன்மைக்குத் தேவைப் படும் மூலக்கூறுகள் உள்ளன.

நாம் நம் தொழிலைச் செய்யும் காலத்தில் எழுது கிறோம்; உழுகிறோம்; நெய்கிறோம்; பணியாற்றுகிறோம். இக்காலங்களில் நாம் தன்னலத்தில் இருந்து திசை திருப்பப் படுகிறோம். எப்படி?

நாம் அதனால் எய்துகின்ற புகழ், பணம், பதவி அல்லது அதன் புறச்சார்பான காரணங்களை நாம் நினைக்கும்போது திசை திருப்பப்படுகிறோம்.

இவை எதுவுமே நமக்கு ஒருபொருட்டல்ல. எதுவரினும் வருக; அல்லது எது போகினும்போக! நம் செயல் பிறர்க்கு நற்பயனை அளிக்க வேண்டும். அதோடு இறைவனின் செயல் நோக்கத்தினை விருப்பத்தோடு நிறைவேற்றுகின்ற தாகவும் இருத்தல் வேண்டும்.

வெற்றியும் தோல்வியும் தனி மனிதனை மட்டும் சார்ந்ததன்று; பிற சூழல்களும் அதற்குக் காரணமாகும்.

'நான் செயலாற்றினேன்; போரிட்டேன்; போராடி னேன்; அவ்வளவே. வெற்றியோ, தோல்வியோ அது விதியின் கையில்,' என்றிருத்தல் வேண்டும்.

சத்கருமமும் பிறவிக்கு ஏதுவாகும். நான் செய்தேன் என்னும் ஆணவத்தோடு செய்யும் அக்கருமமும் அதன் பலனை நல்கும். அக்கருமத்திற்கான பலனை நீ அனுபவிக்க வேண்டி வரும். அங்ஙனம் செய்து அக்கரும பலனுக்கு நீ பாத்திரனாக வேண்டா.

பலனைக் கருதாமல் கருமம் செய்வதைக் காட்டிலும் கருமமே செய்யாமல் வாளா கிடப்பேன் என்னும் ஆசையும் உன்னிடம் எழக் கூடாது.

ஏனெனில் எல்லா கருமங்களும் தேக, இந்திரிய, சொரூபமான பிரகிருதியை உடையன. ஆத்மாவோ ஒரு கருமத்தையும் செய்வதில்லை. ஆத்மா நிர்க்குணன்; நிஷ்கிரியன்; நிர்விகற்பன்; நிர்விகாரி என சிந்தித்து கர்ம பலனைக் கருதாமல், நான் செய்கிறேன் என்னும் அகங்கார மின்றி ஈசுவரார்ப்பணமாய்க் கடமையை ஆற்றல்வேண்டும்.

**'தனஞ்செயா! நீ யோகத்திலே நிலைபெற்று, பற்று அற்றவனாய், வெற்றித் தோல்விகளைச் சமமாக ஏற்றுக் கொண்டு உன்னுடைய கடமையை ஆற்றுக (கருமம் செய்) ஏனெனில் நடுநிலையே (உள்ளத்தின்சலனமற்ற சமநிலையே) யோகம் எனப்படுகிறது. II (48)**

'என் செயலாவது யாதொன்றுமில்லை. இனித் தெய்வமே உன் செயலே என்று உணரப் பெற்றேன்' என்று (பட்டினத்தார்). 'நம் செயல் யாவுமே இறைவன் செயல்' என உறுதியுடன் உணர்வதே யோகத்திலே நிலைபெறுத லாம். அதாவது உள்ளத்தின் தன்னிறைவமைதியில் உறுதி உடைமை.

இச் சுலோகத்திலே சொல்லப்பட்ட 'சமத்துவம்' அதாவது சமநிலையுடைமை என்பது உட்கோட்டமின்மை யாம். அதுதான் தன்னை வென்ற நிலை. கோபம், உணர்ச்சி, பெருமை, அவா இவைகளை வெற்றி கொள்ளும் நிலையே சமநிலை. இன்பம் துன்பம் இரண்டையுமே சமமாகக் கொள் வதுதான் சமநிலை அல்லது நடுநிலை என்று இங்குக் கூறப் படுகிறது.

பலனைப் பற்றிய சிந்தனை ஏதுமின்றி முழு மன அமைதி யோடு நாம் நம் கடமையை ஆற்றுதல் வேண்டும்.

தன்னுடைய மனப்போக்கின் ஆணையின்படி தன் கடமையைச் செய்பவனைக் காட்டிலும், எவன் ஒருவன் அறம் சார்ந்த உள்ளுணர்வின் ஆணையின்படி நடுநிலை யோடு பணியாற்றுகிறானோ (கருமம் செய்கிறானோ) அவன் பணிதான் மிகச் சிறந்தது.

திரும்பத் திரும்ப இது ஏன் வலியுறுத்தப்படுகிறது என்பதற்கு உரிய காரணத்தை கண்ணன் அடுத்து வரும் சுலோகத்தில் கூறுகிறார்.

**'பலனிலே பற்றுவைத்து ஆசையோடு (பற்றுள்ளத்தோடு) பணிகள் ஆற்றுவது, பலனை எதிர்நோக்காது சமநிலை யுடைய யோகத்தில் நிலை பெற்றுப் பணிகளை ஆற்றுவதினும் கீழ்ப்பட்டதே. எனவே தனஞ்செய! நீ எச்செயலைச் செய்யும் போதும் நடுநிலையிற் நிலைத்து நின்று வினையாற்றுக. முன் சொன்ன வகையிலே தாம் ஆற்றும் பணிகளுக்கான பலனை எதிர்பார்த்துச் செயல் செய்பவர்கள் இரங்கத் தக்கவர்களே!'**
II (49)

கருமப் பலன்களை எதிர்பார்த்துத் தம் கடமையைச் செய்பவர்கள் அவாவின் அடிப்படையிலே செயலாற்றுபவர் கள். ஆகையினால், அவர்கள் பிறப்பு இறப்பு என்னும் சுழற்சி யில் சிக்கிப் பெருந்துயர் அடைவார்கள். எனவே இரங்கத் தக்கவர்கள் ஆகின்றனர். ஆனால் நடுநிலை எனும் பற்றற்ற யோக மார்க்கத்திலே நிலைபெற்றுத் தன் கடமையை ஆற்றும் செயலே மேலானதாகும்.

**'அர்ச்சுனா! நடுநிலைப் பிறழாத சமபுத்தி உடையவன் இம்மையில் நன்மை, தீமையின் பலன்கள் இரண்டையும் துறந்து விடுகிறான். எனவே, நீ இந்த யோகத்தைச் சார்ந்து நில். இந்த யோகம் என்பது திறமையோடு செயலாற்றுவதே ஆகும்.'**
II (50)

அஞ்ஞான இருளிலே கொண்டு சேர்ப்பதே இரு வினைகள். இருள்சேர் இருவினை என்கிறார் வள்ளுவர்.

ஆனால் நடுநிலையிலே நிலை பெற்ற சமபுத்தி உடையவனை கர்ம இருவினைகள் சென்றடையா. ஏனெனில் அவனிடம் தன்னலம் இல்லை. நன்மை, தீமை எனும் நெறி முறை பற்றிய நிலையைக் கடந்து அவன் மேலோங்கி நிற்கிறான்.

அவன் சிறிதும் தன்னலமற்றவனாதலின் துன்பம் அவனைச் சென்றடைவதில்லை.

இங்கே யோகம் என்பது தன்னுடைய அறஞ்சார்ந்த கடமைகளிலே, சிறிதும் வழுவாமல், தன் கடமையை செவ்வனே, பலனை எதிர்பாராது ஆற்றும் ஒருவனுக்கு ஏற்படும் வெற்றி தோல்விகளில் மனம் துள்ளாமல், துவளாமல், சமநிலையோடு இறைவனிடத்திலே ஒன்றி இருத்தலேயாகும்.

**'இந்த சமநிலையுடைய ஞானிகள், தாங்கள் தங்கள் கருமத்தால் அடைகின்ற பலன்கள் அனைத்தையும் தியாகம் செய்து விடுகின்றனர். அதனால் அவர்கள் பிறவித் தளையில் இருந்து நிச்சயமாக விடுபட்டு, துன்பமற்ற பெரும் பதவியை அடைகின்றனர்.'** **II (51)**

உள்ளம் சமநிலை உள்ளவன் கருமபலன் அனைத்தையும் துறந்து தன் கடமையை ஆற்றுகிறான். இக்காரணத்தால் அவன் முழுமையாகப் பிறவித்தளையில் இருந்து விடுபடுகிறான். துன்பத்திலிருக்கும் இந்த உலக வாழ்க்கையை அவன் துன்பம் அற்றதாகச் செய்து கொள்ளுகிறான். பிறவிக்கு வித்தாகும் கர்ம பலனை அறவே நீக்கி விட்டுப் பிறப்பற்ற பெருநிலைக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்ளுகிறான்.

மேலும் பகவான் சொல்லுகிறார் :

**'எக்காலத்திலே உன்னுடைய அறிவானது மோகமாய, மனக் குழப்பம் என்னும் கலக்க நிலையைத் தாண்டுமோ, *அப்பொழுதுதான் நீ இதுவரை கேட்டதிலும், இனிமேல் கேட்கப் போவதிலும் கடு வெறுப்படைவாய்.'** **II (52)**

தன்னையறிந்த உள்ளுணர்வு உடையவனுக்கு சாஸ்திர அறிவு தேவையே இல்லை. அந்த உயர்ந்த ஞான நிலையை அடைந்தவன் வேதங்கள் உபநிடதங்கள் எனும் எல்லையை கடந்து நிற்கிறான்.

**'கனவைப் போன்றது மோகமாகிய மனக்குழப்பம். கனவு தாண்டிய நிலை நனவு. நனவிலே கனவின் குழப்பம் நீங்கி விடுகிறது; மனம் தெளிவடைகிறது. தன்னை அறிந்தவனுக்குத் தத்துவ ஞானங்கள் தேவை இல்லை. வேத மந்திர சுலோகங்களால் குழப்பமடைந்த உன் அறிவு ஆத்மாவினிடத்து எப்போது கலங்காமல் நிலைத்து (சமாதியில்) உறுதியாக நிற்குமோ, அப்பொழுதுதான் நீ உள்ளொளி பெற்று புத்தி யோகத்தினை எய்துவாய்.'** II (53)

வேத மந்திர சுலோகங்களால் குழப்பமடைதல் என்பது பலவகைப்பட்ட விளக்கங்களால், பலருடைய பாஷ்யங்களால் மனம் குழம்புதல்.

சமாதியில் நிற்றல் என்பது உள்ளத்துணர்ச்சியின் உச்ச நிலை; உணர்ச்சியற்ற நிலையன்று. இந்த நிலையில் உள்ளமானது கூடி இணைந்து நிற்பது தெய்வீக ஆத்மாவே.

அப்பொழுதே அந்த வினாடியே என்று உரை காண்கிறார் ஸ்ரீ இராமானுஜர்.

புத்தி யோகமானது வேத மந்திர, சுலோக, சடங்குகள் அனைத்தையும் கடந்து நம் கடமைகளை எவ்விதப் பற்றுமின்றிப் பலனை எதிர்பாராது செய்தல். நாம் உள்ளச் சலனமின்றி நடுநிலையோடு செயலாற்றுதலே இன்றியமையாதது. எந்தச் செயலை நாம் ஆற்ற வேண்டும் என்பதல்ல முக்கியம். எப்படி (கருமத்தை) செயலைச் செய்ய வேண்டும், எந்த மனநிலையோடு நாம் கடமைகளைச் செய்ய வேண்டும் என்பதே முக்கியம்.

இவைகளை எல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அர்ஜுனன் கண்ணனை நோக்கி,

**'கேசவா! சமாதியிலே நிலைபெற்று நிற்கும் (ஸ்திதப் பிரக்ஞன்) நிலைத்த ஞானமுடையவனுடைய இலக்கணம் யாது? அந்த உறுதியான அறிவுடையவன் எதைப் பேசுகிறான்; எப்படி அமர்ந்திருப்பான்; எவ்வாறு நடக்கிறான் (அதாவது அவன் செயல்கள் எவ்வண்ணமிருக்கும்) என தன் உள்ளத்திலே எழுந்த கேள்வியைக் கேட்டான்.'** II (54)

*இந்தக் கேள்விக்குப் பதிலாக, கண்ணன் நிறைஞானியின் இலக்கணத்தை அர்ஜுனனனுக்கு, அடுத்து வரும் பதினெட்டு சுலோகங்களால் பதிலளிக்கிறார்.*

**'பார்த்தனே, எவன் ஒருவன் தன் உள்ளத்திலே கிளர்ந் தெழும் அவாக்களை எல்லாம் விலக்கித் தன் ஆத்மாவில் மட்டுமே, ஆத்மாவைக் கொண்டு நிறைவு அடைகிறானோ அவனே ஸ்திதப்பிரக்ஞன் (நிலைத்த ஞானமுடையவன்) எனப் படுகிறான்.'** II (55)

*உலகப் பொருள்களிலே பலவகைப்பட்ட ! காண்கிறது உள்ளம். மனம் பிறபொருள்களை நாடிச் செல் கிறது இன்பங்காண. அந்த இன்பம் கணநேரத்திலே மறைகிறது.*

*தோன்றி அடுத்து மறையும் இன்பத்தை நாடி மனம் ஓடுகிறதே, அதற்குக் காமம் என்று பெயர். இது பொறி புலன்களால், அந்தக்கரணங்களால் ஏற்படுகிறது. நீரில் ஏற்படும் அலைகளைப் போன்று இதனால் மனம் சலன மடை*

*'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின்*
*நாமம் கெடக் கெடும் நோய்'*

*என்கிறது தமிழ் மறை. தவத்துக்கு இடையூறானவை காமமும் கோபமும் என்கிறார் கம்பர். காமமும் அதன் தொடர்பாக எழும் கோபமும்இவைகட்கு அடிப்படையான மயக்க அறிவும் அழிந்தால் பிறவி நோய் நீங்கும் அல்லவா?*

காம அலைகள் இன்றி—மனம் சலனமின்றி—இருக்கும் காலத்திலே, சலனமற்ற உள்ளமானது அமைதியிலே நிலைத்து நிற்கும். இதுதான் ஆத்ம ஆனந்தம்; நிலைத்த ஆத்ம ஆனந்தம். இப்படிப்பட்ட ஆன்மாவின் ஆனந்த சொருபத்தை ஆத்மாவே காண்கிறது; அனுபவிக்கிறது. இதுவே ஞானத்தின் பால் கொள்ளும் அசையாத ஒருமுக நோக்காகும்.

அதாவது, தன்னலத்தின்பாற்பட்ட ஆசைகளில் இருந்து விடுபட்டு மேலான பரம்பொருளிடத்திலே உள்ளத்தை ஒருமுகப் படுத்துபவனே ஸ்திதப்பிரக்ஞன்.

**'தனக்குத் துக்கம் வந்த காலத்திலே, அசைவிலா உள்ளத்தை உடையவன் எவனோ, விஷய சுகங்களில் நாட்டமில்லாதவன் எவனோ, ஆசை, அச்சம், சினம் இவைகளைத் துறந்தவன் எவனோ, அவனே முனிவன் என்றும், நிலைத்த ஞானமுடையவன் என்றும் சொல்லப் படுகிறான்.'** II (56)

இது தன்னைத்தான் வென்ற நிலை. இன்ப துன்பங்கள் தன் உள்ளத்தைத் தொடாதபடி ஆசை, அச்சம், சினத்தை வென்றவனே தன்னை வென்றவன் எனப்படுகிறான்.

தன் அன்புக்கு உரியவர்கள் பிரிந்தாலும் இறந்தாலும் துக்கப்படாதவன் எவனோ, தாங்கொணா வறுமை வந்துற்ற காலத்தும் துன்பப்படாதவன் எவனோ,

தனக்கு இன்பந்தரும் பொருள்கள், தன் கைக்கெட்டுந் தூரத்தில் இருந்தாலும் அவைகளிடம் சிறிதும் நாட்டம் கொள்ளாதவன் எவனோ,

அடைய முடியாத இன்பப் பொருள்கள்பால் ஏக்கம், அவா, அச்சம், சினம் இவைகளைத் துறந்து உவர்ப்போடு உள்ளவன் எவனோ, அவனே நிலைத்த ஞானமுடையவன். அவனே முனிவன்.

கிருஷ்ணன் மேலும் விளக்குகிறார்:

**'எவனொருவன் எப்பொருளிடத்தும், எப்பகுதியிலும் பற்றற்றவனாய் இருக்கிறானோ, எவனொருவன் நலம் தருபவை தன்னை அடைந்த காலத்தும் மகிழாமலும், கேடு தருபவை தன்னை வந்து அடைந்த காலத்தும் வெறுப்படையா மலும் உள்ளானோ அவனுடைய ஞானம் நிலை பெற்றது.'**

II (57)

**'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்'** —*குறள்*

*இன்பம் தருவனவோ, துன்பம் தருவனவோ எவை நம்மை வந்தடைந்தாலும் மன எழுச்சி ஏதுமின்றி நாம் அவைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். அதனால் மகிழ்ச்சி யில் துள்ளலோ துக்கத்தில் துவளலோ கூடாது. நன்மையும் தீமையும் கலந்துள்ளதே வாழ்க்கை. பற்றற்றவனுக்கு—ஞானிக்கு அவைகளால் பாதிப்பு ஏதும் ஏற்படுவதில்லை. அதனால் இன்ப துன்பங்கள் அவனுக்கு இல்லை. அவனுக்கு நல்லது கெட்டது, உயர்ந்தது தாழ்ந்தது என்ற வேற்றுமை இல்லை.*

*மாறாக, பற்றுள்ளம் கொண்டவனோ அவைகளால் உள்ளம் பாதிக்கப்படுகிறான்; அதனால் இன்ப துன்பங்களில் உழல்கிறான். ஆனால் நிறை ஞானியோராக துவேஷம் அற்றவன். அவனே நிர்மோகி. அவன் உள்ளத்தில் இருந்து எல்லா ஆசைகளையும் அகற்றி விட்டவன். எந்தப் பொருளின் கவர்ச்சியும் அவனை மயக்க முடியாது.*

**'எல்லாக் காலங்களிலும்—எல்லா இடங்களிலும் விஷய சுகங்களில் ஈடுபடத் துடிக்கும் ஐம்பொறிகளையும், ஆமை தன் அவயங்களை—தலை, கால்களை ஆபத்துக் காலத்தில் உள்ளிழுத்துக் கொள்வதுபோல் தன் உள்ளத்தினை உள்முக மாக்கி அடக்க வல்லவனே நிறை ஞானத்தில் நிலை பெற்றவன்.'**

II (58)

**'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்**
**எழுமையும் ஏமாப் புடைத்து'** —*குறள்*

ஐம்பொறிகளும் எல்லா வகையிலும் எல்லா இடங்களிலும் அலைந்து திரியும். அந்தப் பொறிகள் விஷய சுகங்களில் இன்பங்காண பொருள்களிடத்தில் ஈடுபட விழையும் போது அதைத் தடுத்து, ஐம்புலன் ஆசைகளை உள்வாங்கி அடக்கிக் கொள்பவனே நிறை ஞானி.

அது மட்டுமல்ல, ஐம்புலச் சுவைகளில் அவனுக்கு ஈடுபாடோ சுவையோ இல்லை. அவைகளில் அமைந்து உள்ளதாகக் கருதப்படுகிற எல்லாச் சுவைகளிலும் அவன் உவர்ப்பு அடைகிறான். ஏனெனில் அவன் பரம்பொருளிலே வாசம் செய்கிறான்.

**'ஐம்பொறிகளைப் புலன் நுகர்ச்சியுள் போகவொட்டாது தடுப்பவனுக்கு விஷய போகங்கள் அற்றுப் போய்விடுகின்றன. ஆனால் இச்சை (ரசம், மனோவிகாரம்) மட்டுமே அங்கு எஞ்சி நிற்கிறது. அதுவும் பரம்பொருளைத் தரிசித்த கணமே அழிகிறது.' II (59)**

**'பொறிவாயில் ஐந்தவித்தான்'**

அதாவது, பொறிகள் மூலமாக—பொறிகளை வழியாக உடைய—ஐந்து விதமான அவாக்களையும் நுகராமலிருக்கிற உள்ளத்திற்கு இச்சையைத் தவிர பிற உலகப் பொருள் நுகர்ச்சிகள் (விஷயானுபவங்கள்) அற்றுப் போய்விடும். ஆனால், அவைகளை அனுபவித்த போது, தான் அடைந்த ருசி—ரசம் மட்டும், உணவு செரித்த பின்னும் உண்ட உணவின் மணம் (வாசனை) மட்டுமே கையில் எஞ்சி நிற்பதைப் போல உள்ளத்திலே எஞ்சி நிற்கிறது. இந்த இடத்திலே (சுலோகத்திலே) பகவான் வெளி உலக அவாக்களைத் தவிர்த்தலுக்கும், உள்ளத்திலே எஞ்சிய இச்சையைத் துறத்தலுக்கும் உள்ள வேறுபாட்டைக் குறிப்பிடுகிறார். உடல் மீது மட்டுமல்ல, உள்ளத்தின் மீதும் நம் கட்டுப்பாடு இன்றியமையாதது. ஏனெனில் புலனுகர்ச்சியில் அனுபவித்த இன்பங்களின் ருசியின் ஏக்கம் அவ்வளவு விரைவில் நம்மை விட்டுப் போய்விடாது.

நம் உடற்பொறிகளின் கொடுங்கோன்மையிலிருந்து மட்டும் நாம் விடுதலையடைந்தால் போதாது; நம்முடைய உள்ளத்திலே எஞ்சி நிற்கும் பண்டைய ருசியாம் கொடுங்கோன்மையில் இருந்தும் நாம் விடுதலையடைய வேண்டும்.

**'ஏனெனில், குந்தியின் மைந்தனே! தன் ஐந்து பொறிகளையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க ஓயாமல் யத்தனிக்கும் (முயலும்) ஒரு ஞானியின் உள்ளத்தையும் கூட, மூர்க்கத்தனமான பொறிகள் தம் ஆற்றலால் பலவந்தமாகப் பற்றி இழுத்துச் செல்கின்றன.'** II (60)

ஐம்பொறிகள் மிகப் பொல்லாதவை. ஞானிகளையும் தவ விரதிகளையும் கூட அவை தடுமாறச் செய்யும்; படுகுழியில் வீழ்த்தும்.

தன் ஆத்மாவிலே உள்ளத்தினை நிலைநிறுத்தி வைத்திருக்கும் காலம் தவிர்த்துப் பிற காலங்களிலே, தாம் அனுபவித்த இன்ப சுகங்களின் ஏக்கமும் ஆசையும் போய் விடுவதில்லை. அப்படிப் போகாத காரணத்தினால் ஐம்புலன்களை அடக்க முயலும் ஞானிகளின் பொறிகள் கூட, அடக்க முடியாதவைகளாய், அவர்கள் மனதைப் பலாத்காரத்தால் ஈர்த்துக் கொண்டு போய் விடுகின்றன.

இவ்வகையிலே, ஐம்புலனை வெற்றி கொள்ளுதல் ஆத்ம தரிசனத்தால்தான் இயலும். ஆத்ம தரிசனமோ இந்திரிய ஜயத்தினால்தான் இயலும். இப்படியாக ஐம்புலன் வெற்றியும் ஆத்ம தரிசனமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகிறது.

பரமாத்மா மேலும் தொடர்கிறார் :

**'பொறிகள் அனைத்தையும் தன் கட்டுப்பாட்டிலே கொண்டு வந்த பிறகு அந்த யோக நிஷ்டன் என்னையே பரம் பொருளாகக் கொண்டு தியானத்தில் ஈடுபட்டிருப்பான். ஏனெனில் எவனுடைய பொறிகள் கட்டுப்பாட்டிலே வைக்கப் பட்டிருக்கிறதோ, தன்னுரிமையற்ற கடமை நிலையில் வைக்**

கப்பட்டுள்ளதோ, அவனுடைய அறிவு, ஞானம் அசையாமல் நிலை பெற்றிருக்கும்.' II (61)

தன்னைத் தான் அடக்கியாளல் என்பது புத்தியினால் மட்டும் உண்டாவதல்ல, மனோதிடத்தாலும் உணர்வினாலுமே உண்டாவதாகும்.

அடக்குவதற்குக் கடினமான ஐம்பொறிகள் காட்டுக் குதிரைகள் போல் கட்டுக்கடங்காமல் ஓடும்; வழியற்ற பல வழிகளிலே பாய்ந்தோடும். அவைகளை நம் வசப்படுத்தி அவைகளின் பாதையை மாற்றி அமைக்க வேண்டும். அதாவது விஷய சுகங்களிலே ஈடுபட்டு ஓடும் புலன் உணர்ச்சிகளைப் பரம்பொருளைப் பற்றிய எண்ணமாக மாற்றி அமைக்க வேண்டும்.

சுலோகத்திலே சொல்லப்பட்டுள்ளபடி, 'என்னையே பரம்பொருளாகக் கொண்டு தியானத்திலே ஈடுபட்டிருந்தால் அப்படி ஈடுபட்டிருப்பவன் உள்ளம் ஒருமுகப்பட்டும் சாந்தமாகவும் இருக்கும் '

மனம் தன்னுடைய குறிக்கோளாக என்னை ஏற்றுக் கொண்ட பிறகு, அந்தத் தியான வலிமையால் எண்ணத்தின் திண்மையால் எல்லாவிதமான மலங்களும் அசுத்தங்களும் பாவங்களும் சாம்பலாகும்; நிர்மலமாகும்; விஷயங்களில் ஆசையறும்; உள்ளமும் பொறிகளும் தன் அடிமையாகும். அதன் பின்னர்தான் மனம் ஆத்மாவைக் காண முடியும்.

இப்படிப்பட்ட முனிவன்—யோகி ஆகிய தன்னை அறிந்தவனுக்கும் பொறிபுலன்களால் ஆட்டுவிக்கப்படும் ஒரு சாதாரண மனிதனுக்கும் எத்தனை வேறுபாடு? சாதாரணமான இம்மனிதன் சபல சித்தம் உள்ளவன். திட சித்தம் இவனிடம் கிடையாது. கவர்ச்சி மிக்கப் பொருள்களால் இவன், பயங்கரமாக மயக்கப்படுகிறான். இவனிடம் விருப்பு வெறுப்புகள் உள, இவன் மிக எளிதாக மனக்குழப்பத்திற்கு ஆளாகிவிடுவான். இவனைக் கவலைகள் தொடர்ந்து

வரும்; சஞ்சலங்கள், அச்சம், பரபரப்பு இவைகளுக்கு இவன் அடிமையானவன்; அமைதி, சாந்தி என்பதையே காணாதவன்; எக்காலத்தும் இன்பந்தரும் பொருள்களையே தேடி அலைபவன் இவன்.

இதற்கு நேர்மாறானவர்கள் முனிவர்களும் யோகியர்களும் என்பதறிக. உள்ளம் தன் கட்டுப்பாட்டிலே புலன் உணர்ச்சிகளை அடக்கி வைத்திருந்தால் மட்டுமே உள்ளத்திற்கு ஆத்ம தரிசனம் உண்டாகும்.

காற்றோடு கலந்த பெருந்தீ எப்படி உலர்ந்த மரங்களுடைய காட்டைப் பொசுக்கிச் சாம்பலாக்குமோ அதைப் போலவே யோகியர் உள்ளத்திலே வீற்றிருக்கும் பரம் பொருளும் அவர்களுடைய பாவங்கள் அனைத்தையும் சாம்பலாக்கிவிடும்.

'எவனொருவன் தன்னுடைய கடுமுயற்சியை மட்டுமே தன் துணையாகக் கொண்டு தன் புலன் உணர்வை வெற்றிக் கொள்ள முயல்வானோ, அவன் மேலே சொன்ன முறையிலே தன் உள்ளத்தினை என் மேல் நிலை நிறுத்தாமல் அம்முயற்சியில் இறங்கினால் அவன் தோல்வியையே தழுவிடுவான்.'

எனவே கண்ணன் கூறுகிறார் :

**'புலன் உணர்ச்சிகளுக்குக் காரணமான பொருள்களையே (விஷய சுகங்களையே) நினைத்துக் கொண்டிருக்கும் ஒருவனுக்கு அவைகளிடத்தே அளவற்ற பற்றுண்டாகிறது. பற்றிலிருந்து ஆசை—காமம் உண்டாகிறது. காமத்திலிருந்து குரோதம் (சினம்) பல வகையிலும் கிளைத்தெழுகிறது.'** II (62)

குமார சம்பவத்தில் காளிதாசன் கூறுகிறார் :

'தடுமாற்றம், குழப்பங்களுக்கு மூல காரணங்கள் நிலவியுள்ள காலத்திலே எவனொருவன் தன் உள்ளம் சலிக்காமல் சமநிலையிலே இருக்கிறானோ அவனே தீரன்.'

உள்ளத்திலிருந்தெழும் ஆசை, காமம் புறத்தே உள்ள வலிமிக்க இயற்கைச் சக்திகளைப் போன்று (காற்று, தீ, வெள்ளம்) தடுத்து நிறுத்த இயலாதவை. குரோதத்திலிருந்து (சினம்) மிகுந்த மனக்குழப்பம் உண்டாகிறது. இக்குழப்பத்தால் சரி எது, தவறு எது என்று கண்டறிய முடியாது. இக்குழப்பத்தினால் நினைவின்மையும் (மறதியும்) இம்மறதியால் புத்திநாசமும், புத்திநாசத்தால் தன்னழிவும் (ஆள் நாசமும்) உண்டாகிறது.

மேல் உள்ள 62-ம் சுலோகமும், இந்த 63-ஆம் சுலோகமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. ஒன்றாக வைத்தெண்ணப்படத் தக்கவை.

(புத்தி நாசம் என்பது நன்மை தீமை, சரி, தவறு எனும் இருமையைப் பகுத்தறியும் தெளிவின்மை)

புத்தி நாசத்தால் (புத்தித் தெளிவின்மையால்) ஒருவன் தன்னுடைய ஆத்ம போத தத்துவ நெறியிலே சென்று அடையும் ஆனந்தத்தை இழந்து விடுகிறான். தன் குறிக்கோளில் இருந்து அவன் வழுக்கி விழுகிறான். அவன் பாதை மாறிவிடுகிறது; மறதியிலே மூழ்கி விடுகிறான். அவன் யாவற்றையும் இழந்து விடுகிறான். அவ்வகையில் அவன் ஓர் அழிவெய்திய மனிதனே!

பலவகைப்பட்ட பொருள்களைப் பார்க்கும் ஒருவன் கண்களை ஒரே ஒரு பொருள் மட்டும் ஈர்க்கின்றது. அதனால் அவன் உள்ளம் சலனமடைகிறது. திரும்பத் திரும்ப அதைக் காண உள்ளம் விழைகிறது, அதைப் பார்ப்பதில் உளம் மகிழ்ச்சி அடைகிறது. அதைத் தானே அடைய மனம் துடிக்கிறது. இதுவே ஆசை, காமம் என்பது. இந்தக் காமத்தைப் பற்றிய சிந்தனையே காமத் தீயாகிய ஜ்வாலைக்கு விறகாக விளங்குகிறது.

இந்தக் காமம் அல்லது ஆசை தடை செய்யப்படும்போது தடை செய்யப்பட்ட ஆசை, சினமாக மாறுகிறது. சினம் கொண்ட மனம் புயலில் சிக்கிய பூங்காவனம் போன்றது. ஒரே குழப்பம்தான். நல்லன தீயன எவை எவை எனப் பகுத்தறியும் தெளிவு அங்கு, அப்பொழுது கிடையாது. நம் உள்ளத்திலே முடிவு செய்யப்பட்ட நல்லவை இவை; கெட்டவை இவை; என்னும் நினைவு, பொருள்களின் உண்மையறிவின் நினைவு மறந்து விடுகிறது; இந்த மறதியால் அறிவு அழிந்து விடுகிறது. அறிவு இழப்பு ஆத்மநாசம்.

கண்ணன் மேலும் தொடர்கிறார் :

**'அர்ஜுனா! எவன் ஒருவன் விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டில் இருந்து விடுபட்டவனாய் தன்னுடைய ஆத்மாவின் வசமான, ஆத்ம தரிசனம் அடைந்த இந்திரியங்களுடன் உலக விவகாரங்களில் சஞ்சரிக்கின்றவனாய், தன் கட்டுப்பாட்டில் உள்ளத்தை வைத்திருக்கின்றானோ அவன் மனத்தெளிவை அடைகின்றான்.'** II (64)

ஐம்பொறிகளும் மனம் ஆட்டி வைக்கிறபடி பொருள்களைச் சென்று பற்றுகின்றன. பற்றப்பட்ட பொருள்களால் அவை இன்பம் அடைந்தால் அதில் விருப்பமும், துன்பம் அடைந்தால் அதில் வெறுப்பும் அடைகின்றன. ஆட்டி வைக்கின்ற மனமும் விருப்பு வெறுப்புக்கு உள்ளாகின்றது. இவைகளில் இருந்து விடுபட்டவனாய், உள்ளத்திலே ஆத்மாவை நிலைநிறுத்தியவனாய், உள்ளவனுக்கு உள்ளத் தெளிவு உண்டாகிறது.

**'மனத்தெளிவு (மனச்சாந்தி) சகல துக்கங்களிலிருந்தும் ஒருவனுக்கு விடுதலை அளிக்கிறது. சமாதானமான உள்ளத்தை உள்ளவனுக்கு விரைவில் புத்தி நிலையாய் நிற்கும்.'** II (65)

இப்படிப்பட்ட ஸ்திதப் பிரக்ஞன் ஞான முடையவன்) தன்னலமற்றவன். அவன் கன எதிர்

பார்த்து ஏங்கும் குறிக்கோள் இல்லை. ஆர்வ, நட்பிக்கைகள் அவனுக்கு இல. புறப்பொருள்களின் தாக்கத்தால் அவன் தடுமாற்றத்துச்குள்ளாவதில்லை. எவை எவை தன்பால் வந்துறுமோ அவை அவைகளை அவன் விருப்போ, வெறுப்போ இன்றி அப்படியே ஏற்றுக் கொள்கிறான். எதையும் அவன் இச்சிப்பதில்லை. யாரிடமும் பொறாமை கொள்வதில்லை. அவாவோ அவனுக்கு இல்லை. யாரிடமும் எதையும் அவன் வேண்டுவதுமில்லை.

**உள்ளம் தன் வசமாக அடக்கப் பெறாதவனுக்கு ஆத்ம போதம் இல்லை. தூய ஆத்மாவைப் பற்றிய ஞானம் இல்லை. அந்த ஞானமற்றவனிடம் அதைப் பற்றிய பாவனையும் (ஆத்ம பாவனையும்)தியானமுமில்லை. ஆத்மதியானமில்லாதவனுக்கு அமைதியில்லை (சாந்தி இல்லை). சாந்தியில்லையாதலால் இன்பமுமில்லை.'** II (66)

முன்னர் சொன்னவைகளே இப்போது எதிர்மறை முகத்தால இயம்பப்படுகிறது. மனத்தினை அடக்கும் திறன் சுலோகம் 61ல் சொல்லப்பட்டது. இந்திரிய ஜெயம் (பொறிகளை வெல்லல்) மட்டும் போதாது. அலையும் பொறி புலன்களை அடக்கி ஒருமுகப்படுத்தி அதைப் பரம்பொருள் மீது செலுத்தல் வேண்டும் என முன்னர் கூறப்பட்டது அல்லவா?

அந்த முறையிலே தன் உள்ளத்தை என்பால் செலுத்தாமல் தன் கடுமுயற்சியாலேயே இந்திரியங்களை அடக்கி விடுவேன் என கருதுவோனுடைய உள்ளம் அடங்குவதில்லை. அவனுக்கு ஆத்ம ஞானம் உண்டாகவே உண்டாகாது. அந்த மெய்யறிவு எனும் ஆத்ம ஞானத்தை அடையாதவனுக்கு தன் ஜீவாத்மாவிலே பரமாத்மாவைக் காணும் ஆத்ம பாவனையும் உண்டாகாது. அப்படியானால் ஆத்ம (பரமாத்மா) தியானம் எப்படி உண்டாகும்? பின் சாந்தி எப்படி அவனைச் சென்றடையும்? சாந்தி இல்லையேல் பின் இன்பம் எங்ஙனம் உண்டாகும்?

*அது மட்டுமா? கண்ணன் மேலும் சொல்கிறார் :*

**'உலக இச்சைகளின் இன்ப சுகங்களிலே ஈடுபடும் இந்திரியங்களை (பொறிகளை) எந்த மனமானது கண்டிக்காமல் அதை அனுசரித்துப் பின் தொடர்ந்து ஓடுகிறதோ அந்த மனம் (அவனுடைய) அறிவை—ஞானத்தை—கடுங்காற்றால் அலைப்புண்ட நாவாயைப் போல அலைக்கழிக்கிறது.'**

II (67)

**'எனவே ஆற்றல் மிக்கவனே! எவனுடைய பொறிகள் (இந்திரியங்கள்) முற்றும் அடக்கப்பட்டிருக்கின்றனவோ, எல்லா விஷய சுகங்களினின்றும் விடுபட்டிருக்கின்றனவோ, அவனது ஞானம் நிலைபெற்றதாய் நிலைத்து இருக்கும்.'**

II (68)

*எவனுடைய பொறிபுலன்கள் உலக விஷயங்களில் ஈடுபட அவன் மனம் அவைகளைப் பின் தொடர்ந்து ஓடுகிறதோ அந்த மனம் (அவனுடைய மனம்) களங்கமற்ற அவன் ஆத்மாவைப் பற்றிய ஞானத்தை அபகரித்து விடுகிறது. எவ்வாறு கடலிலே செலுத்தப்படும் நாவாயினை எதிர் காற்றானது தன் பலாத்காரத்தினால் வேறுதிசையில் இழுத்துக் கொண்டு போகின்றதோ, அதைப்போல மனமானது புத்தியை விஷய இன்பங்களிலே இழுத்துச் செல்கின்றது.*

*எனவே, எவனுடைய இந்திரியங்கள் எல்லா விதங்களாலும் அடைக்கப்பட்டு, அதனால் எவ்வித விஷய சுகங்களிலும் ஈடுபடாமல் விடுபட்டிருக்கின்றனவோ, அவ்வகையில் எவன் உள்ளம் இறைவன் மீதே நிலைத்து நிற்கின்றதோ அவனுக்கே ஆத்மாவினிடத்தில் புத்தி நிலைத்து இருக்கிறது.*

*கண்ணன் மேலும் ஸ்திதப்ரக்ஞனின் (ஆத்மாவிலே புத்தி நிலைபெற்றவனுடைய) இலக்கணங்களைக் கூறுகிறார்.*

**எல்லா உயிரினங்களுக்கும் எது இரவோ, அக்காலத்தில் சித்த அடக்கத்தினைப் பயின்ற ஒரு யோகி (ஞானி) விழித்திருக்கிறான். எப்பொழுது எல்லா உயிரினங்களும் விழித்துக் கொண்டிருக்கின்றனவோ அப்பொழுது மேற்சொன்ன யோகியும், ஞானியும் அந்தகாரமாகிய இருளிலே உள்ளனர். (அதாவது அந்த விஷயம் யோகிக்கும் ஞானிக்கும் இரவைப் போன்றது) II (69)**

*எல்லா உயிரினங்களுக்கும் ஆத்மாவைப் பற்றிய எந்த அறிவானது இரவைப் போல ஒளியின்றி, இருண்டு கிடக்கின்றதோ, அந்த புத்தியிலே—அறிவிலே தன் இந்திரியங்களை அடக்கித் தன் ஆத்மாவைத் தான் உணர்ந்த ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான்.*

*எந்த வகையில்—எந்தப் புலன் உணர்ச்சிகளைப் பற்றிய புத்தியில் இந்திரிய சுகத்துக்கான அறிவிலே, எல்லா உயிரினங்களும் விழித்த வண்ணம் உள்ளனவோ அந்த விஷய சுகபோக புத்தியானது ஆத்ம தரிசனம் செய்த வண்ணம் உள்ள யோகிக்கு இரவைப் போன்றது (அந்தகாரமானது). விஷய சுகங்கள் அவனுக்குப் புலப்படா. புலன் அடக்கமற்ற போகத்தை விரும்புகின்றவனுக்கு உலகக் காட்சி பகல் போன்றது. யோகிக்கும் ஞானிக்கும் இரவாகும் அது.*

*புலன் அடக்கிய யோகியர்க்கும் ஞானிக்கும், ஆத்ம தரிசனமே பகலுக்கு ஒப்பானது; ஒளி மயமானது. ஆனால் போகியர்களுக்கோ ஆத்ம தரிசனம் விளங்காத விளங்கக் கூடாத ஒன்று. எனவே அது அவர்கட்கு இருள்.*

**'நீரால் முற்றுமாக நிரம்பப் பெற்றும் சிறிதும் மாறுதலற்றத் தன்மையை உடையதான பெருங்கடலிலே ஆறுகள் பற்பல ஓடிச்சென்று அடங்குவது போல (கடல் பல ஆறுகள் பிரவேசித்தும் அணை கடவாததைப்போல) சுவை ஒளி ஊறு ஓசை முதலியவைகளால் உண்டாகும் சகல ஆசைகளும் உள்ளம் ஆத்மாவில் நிலைபெற்ற யோகி, ஞானியின் உள்ளே**

**பாய்ந்து சென்றாலும், அவன் அதனால் சலனமற்று நிர்விகாரி யாய், சாந்த சித்தமுடையவனாய் இருப்பான். ஆனால் விஷய இச்சை உடையவனுக்குச் (புலன் உணர்ச்சிகளுக்கு அடிமைப் பட்டவனுக்கு) சாந்தியே கிடையாது.' II (70)**

*ஆறுகள் வெள்ளம் மிகுந்து வந்து கடலிற் கலந்தாலும், அல்லது வற்றி நீரற்றுப் போனாலும் கடல் நீர் எவ்வித மாறுதலையும் அடைதல் இல்லை. ஆனால், ஆற்று நீரோ தன் உரு, சுவை இழந்து கடல் மயமாகிவிடுகிறது. அதைப் போலவே இந்திர சுகங்கள் பொறிகள் வாயிலாக ஞானியின் உள்ளே புகுந்தாலும், அவை தன் அறிவு ஆத்மாவிலே நிலைத்திருக்கும் காரணத்தினால் மனோவிகாரம் அடைவ தில்லை. கடலிலே நதிகள் சென்று ஒடுங்குவதைப் போலவே, யோகியின் உள்ளத்திலே புலன் உணர்வுகள் பாய்ந்து சென்ற போதிலும் அவன் உள்ளத்திலே ஒடுங்கி மறைந்துவிடு கின்றன. அவன் ஆத்மாவைத் தன் உள்ளத்திலே காண் கின்றவன் ஆதலால் அவன் சித்த விகாரமடைதலிலன். அவனே சாந்தி அடைவான். ஆனால் புலன் உணர்வுகளை உலக இன்பங்களிலே உலாவவிட்டவனுக்குச் சாந்தி என்பதே இல்லை.*

**'எந்த மனிதன் எல்லா ஆசைகளையும் அறவே துறந்து, பற்றற்றவனாய், நான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமகாரமும் இல்லாமல் உலகிலே நடமாடுகிறானோ; (செத்தாரைப் போலத் திரிகின்றானோ) அவனே சாந்தி அடைவான்.' II (71)**

*ஆசை உள்ள மனிதனுக்கு அமைதி கிடையாது. ஆசை அற அற, அதன் பரிமாணத்திற்கேற்ப அமைதி உண்டா கிறது.*

> **'ஆசைப் படப்பட ஆய்வரும் துன்பங்கள்**
> **ஆசை விட விட ஆனந்தமாமே'**

*என்கிறார் திருமூலர்.*

மனிதனுக்கு உள்ளத்திலே எழும் ஆசை உடலைப் பற்றி வருவதே ஒழிய, ஆத்மாவைப் பற்றி வருவதன்று. இந்த உடலையே 'நான்' என்று எண்ணும் தவறான எண்ணந் தான் அனைத்து ஆசைகளுக்கும் மூல காரணம்.

எவன் பொய்யான உடலை மெய்யான ஆத்மாவாகக் கருதி இவ்வுடலுடன் தொடர்பு கொண்டுள்ள அனைத்துப் பொருள், உறவுகள் யாவற்றையும் எனது எனக் கருது கிறானோ அது மயக்கமான உறவே (தொடர்பே) ஆகும்.

முதற் சொன்ன 'நான்' என்பதை அகங்காரம் என்றும் அடுத்துச் சொன்ன 'எனது' என்பதை மமகாரம் என்றும் சொல்வர்.

> **'யான்எனது என்னும் செறுக்கருப்பான் வானோர்க்கு**
> **உயர்ந்த உலகம் புகும்'**

என்கிறார் வள்ளுவர்.

இந்த 'நான்' என்பதும் 'எனது' என்பதும் அவிச்சையாம் மயக்கத்தால் உண்டாகும் தளைகள். இவை மனிதனைக் கரும பந்தத்தில் தளைக்கின்றன.

எனவே, எவன் ஒருவன் புலன் உணர்வுகளில் இருந்து விடுபட்டு, அவைகளால் உண்டாகும் ஆசைகளை அறவே அகற்றியவனாகவும், அவைகளால் ஏற்படும் இன்பங்களை நான் அடைந்தேன் எனவும் லாபங்களை என்னுடையவை என்னும் எண்ணம் முழுமையும் அற்றவனாகவும், ஆத்மா அல்லாத உடலிடத்து நான் என்னும் அபிமானம் அற்றவனாகவும் இருக்கிறானோ அவன் பரமாத்மாவைத் தன் ஆத்மாவிலே கண்டு சாந்தியடைகிறான்.

இந்த நிலைதான் பிரம்மத்திலே நிலைபெறும் பேறு எனப்படும். இந்நிலை அடையப் பெற்றவன் மோகம் (உலக இச்சைகள்) அடைவதில்லை. தன்னுடைய இறுதிக் காலத்திலாவது இந்த நிலையை அடைபவன்கூட பிரம்ம

நிர்வாணத்தை (பிரம்மத்திலே லயிக்கும் பேரானந்தப் பெருநிலை அடைகிறான். அப்படியானால் வாலிப முதலே இந்நிலை எய்தியவனைப் பற்றி என்ன சொல்ல உள்ளது?)

ஆத்மாவின் குறிக்கோள் பிரம்ம நிர்வாணம் அடைதலே. இந்நிலை அடைந்தவன் மறுபடியும் பிறப்பிறப்பாம் சம்சார சாகரத்தில் ஆழ்வதில்லை.

ஞானம் ஒன்றுதான் விடுதலைக்கு மேலான மார்க்கம். ஆனால், இந்த ஞானமோ கடவுளின் பக்தியிலிருந்தோ அவாவற்ற கர்ம மார்க்கத்திலிருந்தோ விடுபட்டதன்று

உயிரோடு இருக்கும் காலத்திலும், இந்த முனிவன்— யோகி, பிரம்மத்திலேயே லயித்திருக்கிறான். அவன் அமைதியற்ற ஆரவார உலகில் இருந்து விடுதலையடைகிறான். ஆத்மாவில் நிலை பெற்ற ஞானமுடைய அந்த யோகி தன்னலமற்ற கடமையாற்றி வாழ்கிறான்.

இரண்டாவது சாங்கிய யோகம் முற்றும்



## அத்தியாயம்—3

# கர்மயோகம்

அர்ச்சுனன், கண்ணன் தனக்கு உபதேசித்த உபதேசத்தின் மூலம் ஒரு தவறான முடிவுக்கு வந்து விடுகிறான். உபதேசத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளுகிறான்.

கண்ணனால் படம் பிடித்துக் காட்டப்பட்ட ஞானியின்—யோகியின் உருவம் மிகவும் கவர்ச்சிகரமானதாக அர்ச்சுனன் உணர்கிறான். கடவுளின் சிந்தனையிலே மூழ்கி, தியானத்திலே ஆழ்ந்து கிடக்கின்ற, ஒரு மகா புருஷனாக அவன், அர்ஜுனன் கண்களுக்குத் தென்படுகிறான். எனவேதான் அவன் (அர்ச்சுனன்) கண்ணனை நோக்கி,

**'ஜனார்தனா! கர்மத்தைக் காட்டிலும் ஞானமானது மிக மேலானது என உம்மால் மதிக்கப்படுகிறதானால், கேசவா! என்னை ஏன் பயங்கரமான கர்ம மார்க்கத்திலே செல்லத் தூண்டுகின்றீர்?'**

III (1)

**'முரண்படுவன போன்றதாகிய சொற்களால் என் அறிவைக் குழப்புகின்றீர் போலும். நான் எதனால் சிறப்பினை அடைவேனோ அந்த ஒன்றை மட்டும் எனக்கு உறுதியாகச் சொல்லுக' என்று கண்ணனை வேண்டுகிறான்.'** III (2)

அர்ஜுனனின் இக்கேள்விக்குக் கண்ணன் தன் விடையாகக் கர்ம யோக தத்துவத்தை விளக்குகிறார்.

அதைக் கண்ணன் கீழ்க்கண்ட வகையில் விளக்குகிறார்: இருப்பது ஒரே வழிதான்—அந்த வழிதான் ஞானமார்க்கம்.

ஆனால் அந்த ஞானத்துக்கு இரண்டு மூன்று வகைக் கோணங்கள்—பக்கங்கள் உள. நாணயத்திற்கு இருவகைப் பக்கங்கள் அமைந்திருப்பதைப் போல.

*நாம் பரம்பொருளையே இரண்டு மூன்று வகையாகப் பார்க்கிறோம்; நினைக்கிறோம். அந்த வகையிலே, ஞான மார்க்கத்தினை அடையவும் பலவழிகள்*

**இறைவனைச் சித்தாக (அறிவுவடிவாக) சில நேரங்களிலே நாம் கருதுகிறோம். இந்த வகையில் நாம் அறிவின் பிழிவான ஞானத்தை வலியுறுத்துகிறோம். இது ஞானமார்க்கம்.**

**அவனையே சத்தாக, (சக்தியாக) உண்மையாக, நாம் நினைத்துப் பார்க்கிறோம். அங்கே வாழ்க்கையின் இயக்கம் உள்ளது. இயங்குதல் என்பது வினையாற்றல். இது கர்ம மார்க்கம்.**

*அப் பரம்பொருளையே ஆனந்த வடிவமாகக் கருதிப் பார்க்கிறோம், ஆனந்தம் என்பது அன்பின் பரிணாமம்— காதலின் உருவம். இங்கே முகிழ்க்கிறது* **பக்திமார்க்கம்.**

*ஞானம் என்பது ஒன்றுதான். அது மூவகையாக, ஞானம், கர்மம், பக்தி என விரிகிறது.*

*பழைய ஞானநூல்கள், சாங்கியம், யோகம், இரண்டையுமே கற்பித்தன. சாங்கியம் என்பது அறிவு (ஞானம்). யோகம் என்பது கர்மம் (தொழில்).*

*பலர், அர்ஜுனன் நினைப்பதைப் போலவே நினைத்து இரண்டையும் பிரிக்கின்றனர், ஆனால் உண்மையான யோகியும் ஞானியும் இவைகளைப் பிரிப்பது கிடையாது. இவ்விரண்டும் பிரிக்க முடியாதவை.*

*கண்ணன், இதை இவ்வதிகாரத்திலே விளக்குகிறார் :*

**'அர்ச்சுனா! பாவமற்றவனே! இந்த உலகத்திலே, தத்துவ விசாரணை செய்கின்றவர்களுக்கு ஞானயோகமெனவும், அதை அனுஷ்டிக்கிறவர்களுக்கு(நடைமுறைப்படுத்துகின்றவர் களுக்கு) கர்மயோகமெனவும், இரண்டுவகை நன்னெறிகள் என்னால் முன்னமே சொல்லப்பட்டன.'** III (3)

சென்ற 2ஆம் அத்தியாயத்திலே, 39ஆம் சுலோகத்திலே 'ஆத்ம தத்துவத்தைப் பற்றிய (சாங்கிய) அறிவு உனக்குப் புகட்டப்பட்டது. இனி பார்த்தா! யோகத்தைப் பற்றிக் கேள்' என்று கூறுகிறார்.

2ஆம் அதிகாரம் 11ஆம் சுலோகத்தில் இருந்து 30ஆவது சுலோகம் வரையிலும் ஆத்ம தத்துவமும், சுலோகம் 40, 41, 45 முதல் 53 முடிய உள்ள சுலோகங்களில் யோகமும் கூறப் பட்டது. அதனால்தான் கண்ணன்

'அர்ஜுனா, இவ்வுலகிலே ஞான யோகத்தோடு பிரம்ம நிஷ்டை செய்ய முயலும் சாங்கியர்களுக்கு ஞான யோகமும் கருமம் செய்து, அதனால் சித்த சுத்தி அடைந்து பிறகு சாங்கிய யோகத்திலே பிரவேசிக்க இச்சிக்கும் கர்ம யோகி களுக்கு நிஷ்காம கர்மயோகமும் ஆக இரண்டுவிதமான மார்க்கங்கள் என்னால் போதிக்கப்பட்டன' என்கிறார்.

முதல்வகை, 'விசாரத்திலே ஈடுபடும் வகை'

இரண்டாம் வகை, 'செயலில் ஈடுபடும் வகை' இவ்விரு வகையினரும் எக்காலத்தும் உளர். ஆகையினால் இவ்விரு நெறிகளுமே எக்காலத்தும் நிலவி வருகின்றன.

உலகத்திலே வாழும் மனிதர்களில் பலர் தாம் ஞான மார்க்கத்திலே ஈடுபட வேண்டும் என இச்சிக்கின்றனர். அவர்கள் அனைவருமே ஞானமார்க்கத்திலே செல்ல அருகதை உடையவர்களா? இல்லை.

நித்திய, அநித்திய (அழிவற்ற, அழியும்) பொருள் எது? என்று பகுத்தறியும் விவேகம்—(1)

இவ்வுலகிலும், மறுமையிலும் நாம் அடைகின்ற— அடையப் போகும் போகங்களிலே இன்பங்களிலே ஆசையறுதல் (2)

சமம்—அந்தக்கரண அடக்கம்
தமம்—தச இந்திரியங்களை அடக்கல்

விடல்—பற்றற்றல்

சகித்தல்—இருமைகளை (இன்ப துன்பம் நன்மை தீமைகளை) சமசித்தமாய் ஏற்றுக் கொள்ளல்.

சமாதானம்—மறைபொருள்களை அவாவி சிந்தித்தல்.

சிரத்தை—ஞான வழியிலே, கவனத்தோடு நிற்றல்—(3)

முமுட்சுத்துவம்—முக்தியை விரும்பும் இச்சை—(4)

இந்த நான்கையும் சாதன சதுட்டயம் எனக் குறிப்பிடுவார். இதை நன்கு பயின்ற பின்னரே நாம் ஞான மார்க்கத்தில் அடி எடுத்து வைக்க இயலும்.

ஆனால் செயலாற்றுவதாலும் ஞானமடைய முடியும். எவ்வாறெனில் கருமங்களைப் பலன் கருதாமல் ஈசுவரார்பண புத்தியாய் (என்னுடைய எல்லா செயல்களும் இறைவனுக்கே அர்ப்பணம்) எனச் செய்து வந்தால் அதனால் சித்த சுத்தியும், சித்த சுத்தியால் ஞானமும் அடைய முடியும்.

**'பணி செய்வதே உன் கடமை'**

என் கடன் பணி செய்து கிடப்பதே—அப்பர்.

வாழ்க்கை என்பது செயலாற்றலே, பயனைப் பற்றிக் கவலையற்றிருப்பதே.

எந்த மனிதனும் தன்கடமையை, பணியைத் தொடங்கி செய்யாமலிருப்பதனால் கடமையிலிருந்து விடுபட்டு, சித்தி (ஞான நிஷ்டை)யை, ஆத்ம சொரூபத்தை அடைவதில்லை.

**'வெறும் கர்ம சந்நியாசத்தினால் மட்டுமே அவன் சித்தியை (நிறைநிலையை) அடைந்து விடுவதுமில்லை.'** ... (4)

கர்ம சந்நியாசம் தொடங்கிய பணியை விட்டு விட்டு விலகிப் போதல்.

* **'நைஷ் கர்மம்'** என்று சுலோகத்திலே சொல்லப் பட்டுள்ள நிலை யாதெனில் தன் கர்மத்தால்தான் பாதிக்கப் படாத நிலையே.

இயற்கையின் சட்டம் யாதெனில், நாம் நம் தொழிலின், (பணியின்) கர்மத்தின் பலனால் கட்டுப்பட்டிருப்பதுதான்.

ஒவ்வொரு கர்மத்திற்கும் (செயலுக்கும்) இயற்கையாகவே பலன் உண்டு. எதிர்விளைவு உண்டு. அதைப் போலவே ஒவ்வொரு கர்மாவும் நம் ஆத்மாவை, பரம் பொருளிடமிருந்து விலக்கி உலக பந்தத்தில் கட்டுப்படுத்து

எனவே தேவைப்படுவது கர்மத்திலிருந்து விலகி நிற்ப தன்று; விடுதலையடைவதும் அன்று; ஆனால் கர்மத் தால் விளையும் பயன்களை—அதனால் விளையும் பலனை தன்னலமற்றுத் துறந்து விடுவதே!

இந்த வகையான கர்மமே, பணியாற்றலே, ஞான யோகத்தின் முதல்படியாகும்.

**'ஏனெனில் எந்த ஓர் உயிரும், ஒரு கணம் கூட, ஏதாவது ஒரு தொழிலும் செய்யாதிருப்பதில்லை. இயற்கையிலிருந்து உதித்தெழும், உந்துதலால் (முக்குணங்களால்) ஒவ்வோர் உயிரும் தன் வயமின்றி இயங்கும்படிச் செயலாற்றும்படி ஆட்டுவிக்கப்படுகின்றன.** III (5)

உடலுடன் பொருந்தியதான வாழ்க்கையை நாம் இவ்வுலகிலே நடத்த வேண்டி இருப்பதால், நாம் நமக்கான செயல் செய்வதில் இருந்து தப்ப முடியாது.

செயல் இல்லாமல், உடல் மனம் இயக்கமின்றி—உலக வாழ்க்கையை நாம் நடத்த இயலாது. ஆத்மாவை

* Naiskarmya is the state where one is unaffectea by work..........................................Dr. Radhakrishna

The eye cannot choose but see
We cannot lid the ear be still
Our bodies feel where'er they be
Against or with our will —Wordsworth

உணர்ந்து (தன்னை அறிந்து) ஆத்மாவில் லயித்திருப்பவன் குணங்களால் இயக்கப்படான். ஆனால் எவன் தன் உடலையும், இந்திரியங்களையும் தன் கட்டுப்பாட்டில் அடக்கி வைத்திருக்கவில்லையோ, அவன் முக்குணங்களின் செயல்களால் ஆட்டுவிக்கப்படுவான்.

உயிர் உள்ளவரைச் செயலாற்றலை விட்டுவிட முடியாது. நினைத்தலும் ஒரு செயல். வாழ்தலும் செயலே. இந்தச் செயல்கள் பலவகைப்பட்ட விளைவுகளை உண்டாக்குகின்றன.

ஆசையை அறவே ஒழித்தல், மயக்கத்திலிருந்து விடுதலை பெறுதல், தன்னலம் அற்றிருத்தல், இவைகளே, கர்மத்தில் இருந்து விடுபடல் ஆகும்; உடலால் செய்யும் தொழிலைச் செயல்களைத் தவிர்த்திருத்தல் அன்று.

ஆத்ம விடுதலை அடைந்த மனிதன், கர்ம பந்தத்தில் இருந்து விடுபட்டு விட்டான் எனில், தனக்கென அவனுக்கு ஆற்ற வேண்டிய பணி, யாதொன்றுமில்லை என்றுதான் பொருள். அவன் தன்னுடைய கடமைகளை அப்படியே போட்டுவிட்டு விலகி ஓடி, பேரின்பமயமான, செயலின்மை நிலையில் அடைக்கலம் புகுந்தான் என்பது பொருள் அன்று.

அவனும் பணியாற்றுகிறான், கடவுளைப் போல. அவனுக்கு என வரையறுக்கப்பட்ட தேவைகள் இல. அவனை வலியுறுத்திப் பற்றி ஈர்க்கும் அஞ்ஞானம் இல்லை அவன் பணியாற்றும் போதும் அவன் உள்ளம் அதில் மூழ்கி இருக்காது. தாமரை இலைத் தண்ணீரைப்போல பற்றற்று அவன் வினையாற்றுகிறான். ''தான்'' என்னும் அகந்தை அவனிடமிருந்து விடைபெற்று ஓடிவிட்டது. அவன் உள்ளத்திலே மறைவாக இருந்து ஆள்கின்ற பரம்பொருளால் அவன் செய்யும் வினைகள் அமைகின்றன. அவனுக்குப் பற்றும் இல்லை, ஆசையும் இல்லை. இவ்வகையில் ஆத்ம வினைகளால் அவன் பந்தப்படுவதில்லை.

இயற்கை எனும் பிரகிருதி சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் முக்குண மயமாக உள்ளது. மனிதன் முக்குண வசத்தவன். முக்குணங்களால் ஆட்டு விக்கப்படுபவன் அவன்.

இடையறாமல் செயலாற்றிக் கொண்டே இருக்கத்தான் வேண்டும். உண்கிறான், உறங்குகிறான். தொழில் செய்கிறான். நினைக்கிறான். பிறருக்காக ஓடுகிறான். அல்லல் படுகிறான். அவன் இதயம் ஓயாமல் துடிக்கிறது. ஜீரணக் கருவிகள் செயலாற்றுகின்றன இவை யாவுமே செயல்—தொழில்—கர்மங்களே! இயற்கையால் யாவுமே இயங்குகின்றன. இயங்குந் தன்மையில் இருந்து தப்பி ஓட முயல்வது மனிதனால் முடியாத ஒன்று.

**'கர்மேந்திரியங்கள் ஆன வாய், கால்கள், கைகள், குதம் குறி (வாக்கு, பாதம் பாணி, பாயுறு, உபத்தம்)என்னும் இவைகளை அடக்கியவனாய், செயலற்றிருக்கச் செய்பவனாய் இருந்துகொண்டு, ஞான இந்திரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி இவைகளை ஓடவிட்டு இவைகளால் உண்டாகும் விஷய சுகங்களை உள்ளத்தால் எண்ணிக் கொண்டிருப்பவன் மூடன்; பொய் ஒழுக்கமுடையவன்; என்று சொல்லப்படுவான்.'** III (6)

வாய் பேசாது, மௌனியாக பலநாள் இருப்பார்கள். ஆனால் உள்ளம் பேசும்; கூவும். பேசாத வாய் செய்ய வேண்டிய பணியை மனம் செய்யும். கால்களை ஓட ஓட்டாமல், கைகளால் எவ்விதத் தொழிலையும் செய்யாமல், அடக்கி வைத்திருப்பவனும் தன் உள்ளத்தால் தன் உள்ளம் கவர்ந்தவரைப் பார்க்க ஓடுகிறான்.

இந்த வகையில் கர்மேந்திரியங்களை அடக்கியவர்கள் எவருமே, தன் ஞானேந்திரியங்களால் அடைந்த அடையும் விஷய சுகத்தினை எண்ணி அசை போட்டுக் கொண்டிருப்பார்களானால் அவர்கள் வஞ்ச ஒழுக்கம் உடையவர்களே மூடர்களே.

நாம் நம்முடைய வெளி விவகாரங்களில் ஈடுபட்டுப் பணி யாற்றுதலைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியும்; கட்டுப் படுத்திக் கொள்ளலாம். ஆனால் அப்படி ஈடுபட்டு வைக்கச் செய்யும் அவாக்களை நாம் நமது கட்டுப்பாட்டின் கீழ்க் கொணர்ந்து அடக்கி வைக்க முடியவில்லையானால், கர்மத் தில் இருந்து நாம் விடுபட்டு விட்டோம் எனச் சொல்வது பொய்.

நாம் நம்முடைய இந்திரியங்களைப் (பொறி புலன்களை) ஒரும்வளை கட்டுப்படுத்தி நிறுத்தினாலும் மனதைக் கட்டுப் படுத்த இயலாது. பந்தம், ஆசை இவைகளுக்கு உள்ளமே மூல காரணமாகும். நாம் செயலைச் செய்யும் போதாயி னும், கர்மத்திலே ஈடுபட்டிருக்கும் போதாயினும்—மனம் சற்று நிலைத்திருக்கும். ஆனால் எக்காரியமும் செய்யாமல் சும்மா இருக்கும்போது, விஷய சுகங்களைப் பற்றிச் சிந்திப்ப தில் மனத்தின் செயல் அதிகமாகவே இருக்கும்.

**'எனவே அர்ச்சுனா! இப்படிப்பட்ட மனதால், தன் மெய் வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களை (பொறி களை) அடக்கி—விஷயாதிகளில் போகாமல் செய்து, பலன் கருதாமல் பற்றற்று, தன் கர்மேந்திரியங்களால் (வாய், கால், கை, குதம், குறி ஆகிய செயல் பொறிகளால்) தன் கடமை களை எவன் (முறையாகச்) செய்கிறானோ அவனே சிறந்தவ னாவான்.'** III (7)

ஆறாவது சுலோகத்திலே, பகவான், புறக்கரணங்களை மட்டுமே, துறந்து விடுவது பற்றிக் கண்டித்துரைக்கிறார். இந்தச் சுலோகத்திலே, அகக்கரணங்களின் தொடர்பறுத்த லாம், உண்மையான ஆற்றலைப் பற்றிய மேன்மையை உரைக்கிறார்.

முன்னர் உரைக்கப்பட்டவன், கர்மேந்திரியங்களை அடக்கினவன். ஆனால் உள்ளத்தை அடக்க முடியாதவன். இப்போது சொல்லப்படுகிறவன். உள்ளத்தைத் தன் வசமாக்கியவன்; பற்றற்று தர்மத்திலே ஈடுபடுகிறவன்.

மனிதனுடைய மனோபலம், எப்படிப்பட்ட சட்ட மரபுகளின் கடுமையினையும் வெற்றி கொள்ள முடியும். முதலில் நாம், இந்த உலகில் உள்ள எல்லாப் பொருள்களை யும் நம் சுய இன்பத்துக்கெனவே ஏற்பட்டுள்ளதாகக் கருதுவதைத் தவிர்த்தல் வேண்டும்.

நாம், நம்முடைய இழந்த உள்ளச் சமநிலை, இழந்து விட்ட முழுமை, இழந்துவிட்ட குழந்தை உள்ளம் ஆகிய இவை அனைத்தையும், நாம் திரும்பப் பெற வேண்டுமா னால், நாம் இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் உண்மைப் பரம்பொருளின் உரு வெளிப்பாடு என்பதை உணரவேண்டும். உலகில் உள்ள பொருள்களை நாம் கையகப் படுத்திக் கவரவேண்டும்; அனுபவிக்க வேண்டும்; என நாம் கருதக் கூடாது; கருதுவதைத் தவிர்க்க வேண்டும்.

இந்த மனப்பாங்கினை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டுமானால், நமக்கு உலகப் பொருள்கள்பால் உள்ள பற்றினை அறவே விட்டுவிட வேண்டும்; பற்றற்ற நிலைக் கான ஒருமுகச் சிந்தனை வேண்டும்.

**'நாள்தோறும் செய்ய வேண்டிய கர்மத்தை, கடமையை நீ செய்க! ஏனெனில் கருமம் செய்யாது தவிர்த்தலைப் பார்க்கிலும் கருமம் செய்வது சிறந்தது. கருமம் செய்யாமல் விட்டுவிட்டால் உன் உடலைக் காப்பதும் இயலாத ஒன்றாகி விடும்.'** III (8)

**'கருமம் செய ஒருவன் கைதூவேன் என்னும்**
**பெருமையிற் பீடுடைய தில்'** —குறள்

நாள்தோறும் நாம் நமக்கென இயற்றிக் கொள்ள வேண்டிய கர்மங்கள் கடமைகள் பல உள. அவை உண்டல், உறங்குதல், நீராடுதல் போல்வன. இவைகளை நாம் தவிர்த்திருக்க இயலாது. அநித்தியமான உடலைப் பேணி பாதுகாக்க நாம் சில கடமைகளைக் கைக்கொள்ள வேண்டி யுள்ளதைப் போலவே, நித்தியமான ஆத்ம நலனுக்காக, சில கடமைகளைச் செய்யலாமல்லவா?

'கர்மம் பந்த ஹேது' என்று சொல்லப்படுகிறதே எனில் அது பலனை எதிர்பார்த்த கர்மங்களுக்கே அன்றி பலனை எதிர்நோக்காத தன்னலமற்ற கர்மங்களுக்கல்ல.

ஞான யோகிகளுக்கும் சரீரம் வேண்டப்படுகிறது. நாம் நம்முடைய இலக்கை அடைய, ஆத்மானுபவம் பெற இவ்வுடம்பு மிக இன்றியமையாதது. ஆகையால் இவ்வுடலைக் காப்பாற்றி வைத்தலே ஒரு ஒப்பற்ற கருமமாகிறது. கர்மத்தால் அன்றி இது நிறைவேறாது.

**'உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்**
**உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே!'**

என்கிறார் திருமூலர்.

இந்த உடம்பின் உள்ளே உத்தமன் இருக்கிறான். எனவே இதைப் பேண வேண்டியது அவசியம். இதற்காகவாவது நாம் கர்மம் செய்தாக வேண்டும்.

கடமை, கர்மம், செயல், பணி இவைகள் ஒன்றையே குறிக்கும்.

நாம் செய்ய வேண்டியது நற்பணி மட்டுமே, அதற்கு நமக்குத் தேவை பகுத்தறிந்து காணும் பார்வை. இது அகர்மம் (செயலின்மை), இது விகர்மம் (தீச்செயல்) என அறியும் அறிவு தேவை.

நற்செயல் என்பது என்ன? எவை எவை நற்செயல்கள்? தனிப்பற்று, அல்லது தற்சார்பின்றி ஆற்றும் செயல்கள் எவைகளோ அவைகளே நற்செயல்கள்.

செயல்களால் விளையும் பயனோ, அல்லது பின்விளைவுகளைப் பற்றி ஏற்படும் இச்சையோ நம்மை ஆதிக்கம் செலுத்தாதவைகளே நற்செயல்கள்.

நற்செயல்கள், செயல் நோக்கம் கொண்டவையாக இரா. அவைகள் கடமைக்காகக் கடமையே தவிர, பலனைப் பற்றிக் கவலையற்றவையாகவே இருக்கும்.

இந்த உலகமே ஒரு நாடக மேடை. இயக்குநர் இறைவனே. நமக்கு இந்த மேடையில் நடிக்க ஒரு வாய்ப்பு. நாம் ஒரு நாடக பாத்திரம். உன்னுடைய பாத்திரப் பகுதியின் நடிப்பு, உன் கடமையை நீ ஆற்றுதலே; வேறு எந்த நினைவும் இதில் உனக்குக் கூடாது. அப்படி இருந்தால் மட்டுமே உன்னிடமிருந்து ஐயமும் அச்சமும் விலகி ஓடும். பேச்சைக் குறைத்துக் கொள். செயலாற்று.

சிலர் உன்னைத் தூற்றலாம். சிலர் உன்னைக் குற்றஞ் சாட்டலாம். சட்டை செய்யாதே. நல்லதைச் செய். அவன் புகழ் பாடு.

நம்முடைய செயல்கள் யாவும் உட்கோள் (செயல் நோக்கம்) இன்றி இருத்தல் அவசியம். ஏனெனில் உட்கோளோடு செய்யும் செயல்கள் பந்தத்தினை உண்டாக்கிவிடும்.

இனிவரும் 9ஆம் சுலோகத்தில் இருந்து 16ஆம் சுலோகம் வரையிலும், கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு வேள்வியின் (யக்ஞ கர்மத்தின்) சிறப்பினை உணர்த்துகிறார்.

**குந்தியின் மைந்தனே! யக்ஞ கர்மம் எனும் வேள்வி இயற்றலாம் செயலைத் தவிர மற்றைய பணிகளால் இவ்வுலகம் கர்ம பந்தத்தை அடைகிறது. எனவே, வேள்விக்கான செயல்களைப் பற்றற்று நன்கு இயற்றுவாயாக!** III (9)

உலகம்; உயிர்கள் அனைத்தையும் குறிக்கும்.

கர்மபந்தம்; செயல்களால் உயிர்கள் கட்டுப்படல்.

**'உலகத் தோற்ற காலத்திலே, இறைவன் (பிரஜாபதி) வேள்வியோடு கூடவே மக்களைத் தோற்றுவித்து இதனால் நீங்கள் செழிப்படைக; இது உங்களுக்குக் காமதேனுவாக விளங்கட்டும் என்றார்.'** III (10)

**'இந்த வேள்விகளால் நீங்கள் தேவர்களை வளரச் செய்யுங்கள். அந்தத் தேவர்களோ உங்களை வளரச் செய்வார்கள். இங்ஙனமாக ஒருவரை ஒருவர் வளர்த்துப் பெரு நன்மைகளை அடைவீர்கள்.' III (11)**

தேவர்களுக்கு மட்டுமல்ல, மனித இனத்துக்கு உபகாரம் செய்வதும் வேள்விதான். பிற மாந்தர்களின் இன்னல் நீங்க உபகாரம் செய்பவனுக்கு இயற்கையே, அந்த உபகாரத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான உபகாரத்தைத் தந்து விடுகிறது.

**'யாகத்தால் உபகரிக்கப் பெற்ற தேவர்கள், உங்களுக்கு இஷ்ட போகங்களைத் தருவார்கள். அங்ஙனம் அவர்களால் தரப்பட்ட போகங்களை அவர்கட்கே, கைம்மாறு நோக்கி சமர்ப்பிக்காமல் தானே அனுபவிப்பவன் திருடனே.' III (12)**

**யாகத்திலே (வேள்வியிலே) எஞ்சியுள்ளதைத் துய்ப்பவர்களே சான்றோர்கள். அவர்கள் சகல பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். ஆனால் தங்கள் பொருட்டு மட்டுமே உணவு சமைக்கின்ற பாவிகள் பாவத்தையே உண்கின்றனர். III (13)**

வேள்விகள் ஐவகைப்பட்டனவாம். அவை,

தேவ வேள்வி — இஷ்டதேவதைகளுக்கு இயற்றும் வேள்வி — நாள் தோறும் வழிபடல்.

முனி வேள்வி — சான்றோர்கள் முனிவர்கள் இயற்றிய நூல்களை ஆராய்தல், அந்நெறி நிற்றல்.

தென்புலத்தார் வேள்வி (பிதுரு வேள்வி) — தன் முன்னோர்களுக்கு ஆற்றும் நினைவு நாள் சடங்கு

முதலியனவும், வாழ்கின்ற தன் பெற்றோர்களுக்குப் பணி விடை செய்தலும்.

மானுட வேள்வி — சமுதாயத்திலே உள்ள அற்றார் அழிபசி தீர்த்தல்; நோய் நீக்கல்; பிறவகை உதவி செய்தல்.

உயிர் வேள்வி — மாந்தர் அல்லாத பிற உயிர் களிடத்தில் அருளோடு நடத் தல், பேணுதல் முதலியன.

இந்த ஐம்பெரும் வேள்விகளையும் இயன்ற அளவு செய்தல் வேண்டும். சமைத்த உணவைக் கூட பிறர்க்கு அளித்து எஞ்சியதை உட்கொள்பவன் மேலோன். பிறரைப் பற்றிய எண்ணமின்றித் தானே அனுபவிப்பதற்கென உணவைச் சமைத்துண்பவன் கர்ம பந்தத்தை பெருக்கிக் கொள்வதால் பாவத்தை உண்ணுகின்றான்.

**'அனைத்து உயிர்களும் உணவினால் உண்டாகின்றன; அந்த உணவுதான் மழையால் உண்டாகிறது. மழை வேள்விப் பயன், அந்த வேள்விக்குப் பிறப்பிடமோ, கர்மம் எனப்படும்.'** III (14)

வேள்விக்குப் பிறப்பிடம்—கர்மம் என்பது என்ன? முறை யாகச் செய்யும் கர்மம் (பணிகள்) வேள்வியாகின்றது என்பதேயாம்.

**'கர்மம் (செயல்கள்) வேதத்தில் இருந்து உண்டானது. வேதமோ, அழிவற்ற பரமாத்மாவில் இருந்து வந்தது. ஆகை யினால், எங்கும் நிறைந்துள்ள வேதம், எக்காலத்தும் வேள்வி யிலே நிலை பெற்றுள்ளதென அறிக.'** III (15)

வேதத்தின் கர்ம காண்டத்திலே சொல்லப்பட்டிருப் பனவே வேள்வி முறைகள். எனவே எல்லா கர்மங்களுக்கும் வேதமே வேர் என்கிறார் கண்ணன். வேதம் பரமாத்மாவில்

வாக்கு. அந்தப் பரமாத்மாவின் வாக்காகிய வேதமும் வேள்வியிலே நிலை பெற்றுள்ளது. இதன் மூலம் கண்ண ப்ரான் வேள்விக்கு ஆதாரம் வேதம்; அந்த வேதமோ வேள்வியிலே நிலை பெற்றுள்ளதென்று இயம்புகிறார். ஒன்றுக்கொன்று தொடர்புள்ள தன்மையை விளக்குகிறது இச்சுலோகம்.

**'இப்பிறவியிலே இவ்விதமாக இயக்கப்பட்டுள்ள சக்கர நெறியை எவன் பின்பற்றவில்லையோ அவன் சுபாவத்திலே, பழிபாவ வாழ்வுடையோன்; பொறிபுலன் நுகர்வில் பொருந்தி யவன்; அவன் வாழ்க்கையே வீணானது.'** III (16)

**'ஆனால் எந்த மானுடன், தன் ஆத்மாவிலே, ஆத்மாவில் மட்டுமே—பேருவகையைக் காண்கிறானோ, தன் ஆத்மாவில் மட்டுமே மன நிறைவு அடைகிறானோ தன் ஆத்மாவில் மட்டுமே இன்பங்களை நுகர்கிறானோ, இன்ப நுகர்வு அடைகிறானோ அவனுக்கு மேற்கூறிய வினையாற்றும் கடமை இல்லை.'** III (17)

எந்த மனிதன் உணவிலே, சுவைபானங்களிலே, ஆடை அணிகளிலே மகிழ்ச்சியடையாதவனாய் தன் ஆத்மாவிலே மட்டுமே, உவகையைக் காண்கிறானோ—

இசை, நாட்டியம், கூத்து, மலர்கள் இவைகள் ஊட்டும் இன்பத்தை விலக்கித் தன் ஆத்மாவிலே மட்டுமே மனநிறைவடைகிறானோ—

புலன்களால் மட்டும் நுகர்கின்ற சிற்றின்ப சுகங்களில் அல்லாமல் தன் ஆத்மாவில் மட்டுமே இன்பங்களை நுகர்கின்றானோ—

அவனால் மட்டுமே தன் ஆத்மாவிலே, மகிழ்வை மன நிறைவை, இன்பங்களைக் காண இயலும். ஏனெனில், அவனுக்குத் தன் ஆத்மா மட்டுமே, வாழ்வாதாரம், ஊட்டச்சத்து, பேருவகையின் பிறப்பிடம்; அவன் தன் ஆத்ம தரிசனத்துக்கு மேற்கூறிய கர்மங்களை எல்லாம்

ஆற்ற வேண்டியதில்லை. ஏனெனில் அவன் தன்னைத்தான் அறிந்து தன்னையே காண்கிறான்.

அவன், கர்மங்களை இயற்ற வேண்டிய கடமைகளிலிருந்து விடுதலையடைந்து விட்டவன். அவன் ஆற்றுகின்ற கர்மங்கள் யாவுமே, மனம், அந்தக்கரணம், இந்திரியங்களின் தொடர்பின்றியே நடைபெறும். அவன் இயற்றும் கர்மங்கள் யாவுமே அவனுடைய ஆத்மாவையே பற்றி இருப்பதால், அந்த ஆனந்த மயமான, ஆத்மாவிலிருந்து அவன் நிலைத்த இன்பமும், மன நிறைவும், மகிழ்ச்சியும் அடைகிறான்.

**'அவனுக்குப் பணி (கர்மம்) செய்வதால், இப்பிறவியிலே, எவ்விதப் பயனும் (பிரயோஜனமும்) இல்லை, மற்றும் வினை ஆற்றாதிருப்பதனால் எவ்வித இழப்பும் (நஷ்டமும்) இல்லை. யாரையும் எந்த உயிரையும் எப்பொருளுக்காகவும் அவன் சார்ந்திருப்பதும் இல்லை.'** III (18)

கிடைத்தற்கரியதான தன் ஆத்மாவையே அடைந்து விட்டவன் அவன்; தன்னை அறிந்தவன் அவன்; பரிபூரணானந்தமானது ஆத்மாவே. ஆகவே அதை அடைந்த அவனுக்குப் பெற வேண்டியது வேறு ஒன்றுமில்லை.

ஆத்ம ஞானமற்றவன் பொறிபுலன்—அந்தக்கரண—சுத்திக்காகக் கருமங்களைச் செய்ய வேண்டும் என முன்னர் கூறப்பட்டது. ஆனால் பிரம்ம ஞானிக்குக் கருமத்தினால் யாதொரு பயனுமில்லை.

இந்தச் சுலோகத்தில், ஆத்மாவில் பேருவகையைக் காணும் ஞானிக்கு கருமம் செய்வதால் பயனோ செய்யாமையால் நஷ்டமோ கிடையாது; அவன் ஆன்மாவை அடைந்து விட்ட காரணத்தினால் பரிபூரணானந்தத்திலே இருக்கிறான் என்று சொல்லப்பட்ட போதிலும் அடுத்த சுலோகத்திலே பகவான் கண்ணன், இந்த உலகத்தின் உயிர்களின் நலனுக்கும் மேன்மைக்கும் தானே மேற்

கொள்ளும், பற்றற்ற கருமம் என்னும் ஒன்றைச் செய்கிறான். அந்தச் சுலோகம் வருமாறு :

**'ஆகையினால் எப்பொருளிலும், எச்செயலிலும் பற்றற்றவனாய், எக்காலத்தும் செய்தக்க நற்பணிகளை—நாட்பணிகளை நன்கு ஆற்றுக. ஏனெனில் பற்றற்றுப் பணி ஆற்றுகின்ற, மேம்பட்ட மானுடனே மேலான பெருநிலையை அடைகிறான்.'**

**(வானோர்க்குயர்ந்த உலகம் புகும்)** III (19)

*'இங்கே கண்ணன், பணி ஆற்ற, நேரிய முறைமை வாய்ந்த, செயல் நோக்கத்தினையே, அனுமதிக்கிறார். அது மனித சமுதாயத்திற்கு நலம் பயப்பது. மனித சமுதாயத்திற்கு நலன் உண்டுபண்ணத்தக்க, நோக்கத்தோடு இயக்கப்படும் எவ்வகைப் பணியும் நற்பணியே, நற்செயலே. தனக்கென வாழாப் பிறர்க்கென வாழும் தகைமை வாய்ந்த பணிகள் பந்தத்தினை உண்டாக்கா.'*

*மூன்று வகைப்பட்ட பணிகள் உலகில் உள.*

அவை :

1. *தன்னலத்தோடு, பலனை எதிர்ப்பார்த்து, அவாவோடு செய்யும் பணி.*
2. *வேள்வியின் மூலமாக, தேவர்கட்கு அவிர்பாகம் கொடுத்து எஞ்சியதை அனுபவிக்கும் வேள்வி சார்ந்த பணிகள் (கர்மங்கள்)*

   *முன் கூறியதைக் காட்டிலும் இது சிறந்தது.*
3. *தன்னலமற்று, பலனை எதிர்பாராது ஆசை சிறிதுமற்று ஆற்றுகின்ற நல்வினை,*

*இது முதல் இரண்டினைக் காட்டிலும் மிகச் சிறந்தது; மேலானது.*

**'ஜனகர் முதலிய ராஜ ரிஷிகள் கர்மத்தைத் (தாம் தம் ஆற்ற வேண்டிய கடமைகளைச்) செவ்வனே, ஆற்றியதாலேயே**

**முக்தி அடைந்தார்கள். உலகத்தை நல்வழியிலே நடத்துதற் பொருட்டாக, நன்குணர்ந்து, கர்மத்தைச் செய்ய நீ கடமைப் பட்டிருக்கிறாய்! III (20)**

*ஜனகர், மிதிலை நாட்டு மன்னர், இராமபிரான் மனைவி யாகிய சீதா பிராட்டியின் தந்தை. இவர் மன்னராய், ஆட்சி யில் அமர்ந்திருந்தாலும் தன்னலம் அற்று எவ்விதப் பற்று மின்றி, தான் அரசன் என்ற முனைப்புச் சிறிதுமின்றி ஆண்டிருந்தார்.*

*இராமாயண காலத்தில் ஜனகரை கிருஷ்ணன் தம் கீதையிலே ஆதர்ச புருஷராகக் குறிப்பிடுகிறார். தம்முடைய முந்தைய அவதாரமான இராமனைப்பற்றிக் குறிப்பிட வில்லை என்பது கவனிக்கத்தக்கது.*

*ஜனகரும் அவரொத்தவர்களும் பற்று இல்லாமல் கடமை ஆற்றினார்கள். பிற மக்களும் அவர்களைப் பார்த்துத் தத்தம் கடமைகளைச் செவ்வனே ஆற்ற வேண்டியே, தம் கர்மத்தை ஆற்ற வேண்டிய அவசிய மில்லையேனும், பணி புரிந்தனர். இல்லையேல் அவர்களைப் பார்த்து பிற சாதாரண மக்களும் தம் நெறி தவறி கடமை யில் இருந்து வழுவி விடுவார்கள். உலகியல் நடைபெறாது.*

*ஞானம், சித்தியாய் விட்டது. இனிக் கருமம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை எனும் நிலை அடைந்த போதிலும் அந்நிலை அடையாத கோடானு கோடி மக்கள் நற்கருமங்களைச் செய்யும் விருப்பத்தை அடையவும் துர்கரு மங்களில் மனம் செலுத்தாமலிருக்கவும் ஞானம் அடைந்த பெரியவர்களும், தாங்கள் கருமம் செய்து ஆக வேண்டிய தொன்றுமில்லா விட்டாலும் உலக மக்களுக்காகக் கருமம் செய்து வழிகாட்ட வேண்டும்.*

(இந்தச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட 'லோக சங்கிரகம்' எனும் சொல் உலக ஒருமைப்பாட்டை உணர்த்தி

நிற்கும்; சமுதாயத்தின் பின்னிப் பிணைந்துள்ள தொடர்பை உணர்த்தி நிற்கும். உலகம், உயிர், பொருள் தன்மையில் அவல நிலைக்குள் ஆழ்ந்து போகாமல் இருக்கவும். ஒழுக்க நெறியிலே, தரங் குறைந்து இழிவு நிலை அடையாமல் இருக்கவும், வழக்கமான வாழ்க்கை முறை, பண்பு. மேன்மை களோடு விளங்கவும் வேண்டுமெனில், சமய ஒழுக்க நெறி முறைகள் சமுதாயத்தை நடத்திச் செல்ல வேண்டும். கட்டுப் படுத்த வேண்டும். இதுதான் லோக சங்கிரகம் உலக ஒருமைப்பாடு. யாதும் ஊரே, யாவரும் கேளிர்).

**'மேல் நிலை அடைந்தவன் எங்தெந்த கருமத்தைச் செய்கிறானோ அந்தந்த கருமத்தையே பிற மனிதனும் (சமுதாயமே) பின்பற்றிச் செய்கிறான். அந்த மேலோன் எதை பிரமாணமாகக் (அளவை) கொள்ளுகிறானோ அதையே உலகம் ஏற்றுக்கொண்டு கடைபிடிக்கும்.**

**III (21)**

கல்வியில் வல்ல, ஒழுக்கத்தில் சிறந்த, மேலோர்கள் ஞானிகள் எதைச் செய்கிறார்களோ, அதையே பிற சாதாரண மனிதர்களும் பின்பற்றுகிறார்கள், உலகுக்கு அப்படிப்பட்ட மேலோர்களே முன்மாதிரியாக விளங்கு கிறார்கள். அவர்களது செயல்களையே உலகம் முன்மாதிரி யாக ஏற்றுக் கொள்ளுகிறது. எனவே உலகத்தைக் காப்பதற் கா, உலகம் அவல நிலைக்குள் ஆழ்ந்து விடாமல் இருக்க, அந்த மேலோர்கள், நற்கருமங்களை முழுமையும், எப்பொழு தும், அனுஷ்டிக்க வேண்டும். இல்லையெனில் உலகம் நசித்துப் போவதால் உண்டாகும் பாவம், ஞானிகளையும் ஞான யோகத்தில் இருந்து நழுவும்படிச் செய்துவிடும்.

இந்த வகையில் மேற்கூறப்பட்ட ஞானிகளே—மேலோர் களே—உலக மக்களுக்குத் தத்தம் வாழ்க்கைப் பாதையை அமைத்து வைக்கும் பாதை வகுப்பவர்கள்; வழிகாட்டிகள் ஆவர்கள். கண்ணன் மேலும் கூறுகிறார்:

**'பார்த்தா! இந்த மூவுலகிலும், எனக்குச் செய்ய வேண்டிய கடமை என ஒன்றுமே இல்லை, இன்னும் அடையாத ஒன்றை இனிமேல் அடைந்தாக வேண்டும் என்பதும் எனக்குச் சிறிதும் இல்லை. ஆயினும், நான் கருமங்களைச் செய்து கொண்டே இருக்கிறேன்.''** III (22)

*இறைவனுக்கு எனச் செய்ய வேண்டிய பணி யாதும் இல்லை, அவன் எங்கும் நிறைந்தவன்; எல்லாம் வல்லவன், காலத்தைக் கடந்தவன். அவன் கருமத்தை ஆற்றி, அதனால் அடையும் பயன் யாதொன்றும் இல்லை, ஆயினும், உலக இயக்கத்திற்காக உலகம் இடைவிடாமல் இயங்க உயிர்களின் நலனுக்காகக் கருமம் ஆற்றியவண்ணம் உள்ளான்.*

*ஏன் அப்படி இறைவனே இடைவிடாமல் கருமம் செய்யவேண்டும்? கண்ணன் இதற்கு விளக்கம் சொல்கிறார்.*

**'பார்த்தா! நான் எக்காலத்தும் சோர்வில்லாமல், கருமத்திலே ஈடுபடா விட்டால், நிச்சயமாக மனிதர்கள் யாவரும் (இறைவனே சோம்பிக் கிடக்கிறான் என) அந்த வழியையே எக்காலத்தும் பின்பற்றிச் (சோம்பி இருப்பார்கள்). தத்தம் கர்மத்தை ஆற்றமாட்டார்கள்!** III (23)

*சகல நற்குணங்களும் நிறைந்தவன் இறைவன். அன்பு, அருள், சத்தியம், இவைகளின் உருவே இறைவன். அவன படைத்தல், காத்தல் மறைத்தலாகிய தன் முத்தொழிலை இடையறாது செய்த வண்ணம் இருக்கிறான்.*

*மனித இனம் அவனுடைய மகிமை வாய்ந்த நற்குணங்களைக் கைக்கொள்ளாவிடினும், அவன் இடையறாது இயற்றி வரும் முத்தொழிலைப் பார்த்து தாமும் இடையறாது கர்மம் இயற்ற வேண்டும் என்று அவனைப் பின்பற்ற வேண்டும். அதற்காகவே இறைவன் தன் செயலில் (கருமத்தில்) சோர்வுறாமல் ஈடுபட்டுள்ளான். மனித சமுதாயம் நிச்சயமாக இந்த குணத்தை மட்டும் கட்டாயமாகப் பின்பற்றும் ஏனெனில் பெரியோர்களின் நல்ல குணத்தைப் பின்பற்றா*

விடினும் அவர்களின் கெட்ட குணத்தை (ஏதாவது இருப்பின் அதை) பின்பற்றி ஒழுகுதல் கீழோர்களது குணமாம் என்க. ஆகையால்தான் இறைவன் ஓயாது வினையாற்றுகிறார். கண்ணன் தொடர்கிறார்:

**'ஒரு வேளை நான் பணியாற்றாமல் என் முத்தொழிலை இடையிலே நிறுத்தி விட்டால் இந்த உலகமே அழிந்துவிடும். ஒழுங்கு சிதைந்த வாழ்க்கை முறைக்கு நானே காரணமாகி உலக மக்களைக் கெடுத்தவன் ஆவேன்.'** III (24)

*நானே எனக்குரிய தர்மத்தைச் செய்யாமல் போனால் எல்லா மக்களும் என்னைப் பின்பற்றி என்னையே ஆதர்ச புருஷனாகக் கொண்டு—முன்மாதிரியாகக் கொண்டு தங்கள் தங்களுக்குரிய கடமைகளை நிச்சயமாகச்செய்யாதவர்களாய் வாளா கிடப்பார்கள். அதனால் உலக ஒழுங்குமுறை கெடும். இந்த முறையிலே நானே இந்த மக்களைக் கெடுத்தவனுமாய் விடுவேன்.*

**'அர்ஜுனா! பாமர மக்கள் எவ்வாறு கருமத்திலே பற்றுடையவர்களாய்ப் (பொருள் விருப்போடும், தன்னலத் தோடும், புகழுக்கு ஆசைப்பட்டும், கருமபலனை எதிர் நோக்கியும்)தங்கள் பணிகளைச் செய்கிறார்களோ, அவ்வாறே ஞானிகளும் மேலோரும் பற்றற்றவர்களாய்த் தன்னலமின்றி, உலக நன்மையின் பொருட்டு, கருமங்களைச் செய்தல் வேண்டும்.'** III (25)

*பாமர மக்கள் என்பவர்கள் ஆத்மாவைப் பற்றிய அறிவை முற்றும் அறியாதவர்கள், அவர்களுக்குத் தத்தம் பணியிலே பற்று உண்டு. அதாவது அவர்கள் தங்கள் கருமத் திலே தவிர்க்க முடியாதபடி பிணைப்புண் டுள்ளவர்கள்.*

*அவர்கள் தம் ஆத்மாவை நன்குணராத காரணத்தினால் ஞான யோகிகளாக அருகதை அற்றவர்கள். ஆனால் அவர்கள் கர்மயோகிகளாக முடியும்.*

எனவே அவர்களைக் கர்மயோக மார்க்கத்திலே செலுத்துதல் பொருட்டும், தம் ஆத்மாவைத் தாம் அறியும் நெறியிலே உய்தற் பொருட்டும் உலகத்துக்காக, ஞான யோகிகளும், நற்கருமங்களை ஆற்றுதல் வேண்டும்.

**'மேற் குறிப்பிட்ட ஞானியானவன், கர்ம பற்றுள்ள பாமரனுக்கு அறிவுக் குழப்பத்தினை உண்டு செய்தல் ஆகாது. அந்த யோக முயற்சி உடையவனான ஞானி எல்லாக் கருமங்களையும் (பலன் கருதாமல்) தானே ஈடுபட்டு ஆற்றி, மற்றப் பாமர மக்களுக்கும் வழிகாட்டி அவர்களை அதில் ஈடுபடுத்த வேண்டும்.'** III (26)

ஞானி, எந்த வகையிலும் பாமரன் இயற்றும் கருமங்களிலே அறிவுக் குழப்பத்தை உண்டாக்கி விடக் கூடாது. அவன்செய்யும் சமயப் பற்றுள்ளஆசார அனுஷ்டானங்களைக் குறைகூறிப் புத்தியைக் குழப்பக் கூடாது. பாமரன், தன் ஆத்மாவை நன்கு உணராத காரணத்தினால், சூரியனை, ஆற்றை, சிறு தெய்வங்களை, கிராம தேவதைகளை, வணங்கலாம். ஆடல், பாடலால், பம்பை, உடுக்கை, கொண்டு அவன் வழிபடலாம்.

ஒரு ஞானிக்கு (யோகிக்கு) இவை அர்த்தமற்றவையே. ஆயினும் அவைகள் அவன் நம்பிக்கையின் அடையாளங்கள், அவன் ஏதோ ஒருவகை வழிபாட்டை மேற்கொண்டு அது தான் முத்திக்கு வழி என நினைக்கிறான். ஞானிக்கு அது அல்ல என்று தெரிந்தபோதிலும் பாமரனிடம் புத்திக் குழப்பத்தினை உண்டு பண்ணாமல் அந்தப் 'படியில் இருந்து அவன் மேல்படிக்கு முன்னேற உதவி செய்கிறான். படிப்படியாக அவன் முன்னேற ஞானி தான் இயற்றும் கருமங்களைத் தானே ஈடுபட்டு ஆற்றி, அதன் மூலம் அந்தப் பாமரனுக்கும் வழிகாட்டி நற்கருமங்களிலே, தன்னலம் அறுக்க ஈடுபடச் செய்கிறான்.

**'(பஞ்ச பூதங்கட்கு மூலாதாரமான மாயையின் காரியமாகிய) பிரகருதியின் (இயற்கையின்) முக்குணங்களால்,**

**எல்லா வகையிலும் கருமங்கள் இயற்றப்படுகின்றன. 'நான்' என்னும் அகங்காரத்தால் தடுமாற்றம் அடைந்தவன், இக் கருமங்களுக்கு நானே அதிகாரி (கர்த்தா) என நினைக்கிறான்.'** III (27)

*(மயக்கத்துக்குட்பட்ட ஆத்மா தானே கர்த்தாவென மயங்குகிறது.)*

*பிரகிருதியின் (இயற்கை) முக்குணங்களால் அதனதன் தன்மைகளுக்கேற்ப இயற்றப்படும் நல்வினை தீவினைகளை, நான் என்னும் அகங்காரத்தால் வழிதவறிப் போனவன் தானே இவைகளுக்குக் கர்த்தா என நினைக்கிறான்.*

*பிரகிருதி வேறு, ஆத்மா வேறு என அறிதல் வேண்டும். அப்படி அறியாதவன் பாமரன்.*

**'பெருந்தோளுடையவனே! சத்துவம் முதலிய குணங்களின் பிரிவிலும், அவைகளால் ஆகும் கர்மங்களின் பிரிவுகளிலும், உண்மையை உணர்ந்த ஞானி, (குண, கர்ம, விபாகத்தின் உண்மையை உணர்ந்தவன்) இந்திரியங்களாகிய முக்குணங்கள், விஷயங்களாகிய குணங்களில் இருந்தே தோன்றுகின்றன என்பதை உணர்ந்து குணங்களின் காரியங்களில்தான் கர்த்தா என்று பற்று வைப்பதில்லை.'** III (28)

*கருமங்களின் பிரிவுகளை உணர்ந்தவன் யார் எனில், முக்குணங்கள் தனதல்ல, ஆத்மாவாகிய நான் அக்குணங்களுமல்லன், கருமம் தனதன்று, கருமங்களைச் செய்பவன் நான் அல்லன் என குணங்களுக்கும் கருமங்களுக்கும் தான் வேறானவன் என்று அறிந்தவனேயாம்*

**'அர்ஜுனா! பிரகிருதியின் குணங்களால் தவறான நெறியிலே, ஈர்க்கப்பட்டவர்கள், குணங்களால் ஆன கருமங்களிலே, பந்தப்பட்டு விடுகின்றனர். நல்லறிவற்ற அந்த மந்தமதியினரைத் தெளிந்த அறிவுடைய ஞானிகள் குழப்பமடையச் செய்யக் கூடாது.** III (29)

இயற்கையின் (பிரகிருதி) குணங்களால் உண்டாவதே கர்மம் என்பதும், ஆத்மாவுக்குக் கர்மம் இல்லை என்பதும் பாமரனுக்குத் தெரியாது.

அதாவது அவர்கள் முக்குணங்களின் வசத்தால் மயங்கிச் செய்கின்ற கர்மங்கள் பயனற்றவை என்றும், ஞானமார்க்கமே சிறந்ததென்றும் ஒரு ஞானி அவர்களுக்குப் போதித்து அவர்கள் உள்ளத்தைக் குழப்பமடையச் செய்தலாகாது.

மந்த மதியினருக்கு ஞானமார்க்கம் சிந்திக்க முடியாதது. எனவே ஞானி அவர்களிடம் கருமத்தினால் ஒரு பயனுமில்லை என்று சொன்னால் அக்கருத்தை மட்டுமே மனங்கொண்டு கருமத்தை விட்டு விடுவான். அவனுக்குக் கரும பலனுமில்லை; ஞான சித்தியும் இல்லை. இவ்வகையிலே அவன் இரண்டுங் கெட்டவன்.

எனவே தத்துவ ஞானி, அவனிடம் 'கருமம், ஆத்ம தரிசனத்திற்குச் சாதனமான நெறி என்னும், அதைக் கைவிட்டால் உனக்கு வேறு பலன் இல்லை' என்றும் சொல்லித் தானே கருமத்தைச் செய்தும் செய்வித்தும் காட்ட வேண்டும்.

இங்கே சொல்லப்படுவது யாதெனில், எல்லாக் கருமங்களும் ஆத்மாவைப் போர்த்துள்ள உடலைச் சார்ந்ததே. உடல்களே பணியாற்றுகின்றன. இந்தப் பணிகளை ஆற்றுவதற்குக் காரணமாக இருப்பதோ, அவர்கள் உடலுள்ளே இயங்கும் பிரகிருதியின் முக்குணங்களே. ஒவ்வொரு உடலிடத்தும் முக்குணங்கள் மாறி மாறி வந்த போதிலும் ஒரே ஒரு குணமே ஒரே நேரத்தில் மேலோங்கி நிற்கும். அக்குணத்துக்குத் தக்கவே—அது தூண்டியபடியே அந்த உடல் பணியாற்றுகிறது. நன்மையோ, தீமையோ ஒவ்வொன்றுமே, சூழ்நிலைகளால், தூண்டப்படும் குணங்களால், ஆகும் கர்மமே என்பதாம்.

**'எனவே அர்ஜுனா! அனைத்துக் கருமங்களையும் (அவைகளின் பலன்களையும்) எனக்கு அர்ப்பணித்து விடு;**

**ஆத்மாவில் நிலைநிறுத்திய சித்தத்தோடு, ஆசை இல்லாதவனாய், எனது என்னும் மமகாரம் அற்றவனாய் உள்ளத்திலே துக்கம் கொதிப்பில்லாமல் போர் செய்க!'** III (30)

*பற்றில்லாமல் செய்யும் கர்மங்கள், ஒருவனைப் பந்தத்தில் இருந்து விடுவிக்கின்றன.*

*எக்கருமமாயினும் தன்னலம், ஆசை இவைகளை விடுத்துச் செய்ய வேண்டும்.*

*அக்கருமங்கள், அதன் பலன்கள் அனைத்தையும் ஆத்மாவிலே ஈடுபடுத்தப்பட்ட உள்ளத்துடன் எனக்கு அர்ப்பணம் செய்க!*

*எல்லா உயிரினங்களின் ஆத்மாவிலும் உள்ளே நிறைந்திருக்கும் அந்தரியாமியாம் 'இறைவன் நானே', எனவே அனைத்துக் கருமங்களும் என்னாலே செய்யப்படுகின்றன, என்று நினைத்து அவைகளை எனக்குச் சமர்ப்பித்தல் வேண்டும். அந்தக் கர்ம பலனிலே ஆசையற்றவனாயும், அக்கர்மம் என்னுடையதென்கிற அபிமானமில்லாதவனாயும், செய்யப்பட வேண்டிய உன் கடமைகளைச் செய். நீ உன் கடமைகளைக் கருமங்களை ஆற்றுங்கால் உன் உள்ளத்திலே, துக்கமும், கொதிப்பும் இல்லாமல் விலகிப் போகட்டும். 'Thy will be done' 'உன் சித்தப்படியே இவ்வுலகிலே அனைத்தும் நடைபெறும்' என்னும் மனப்பான்மையே மனப்பக்குவமே, நீ எக்கருமம் செய்யும் போதும், உன்னிடம் அமைய வேண்டும்.*

**'யார் ஒருவர் என்னுடைய இந்த சித்தாந்தத்தை (தத்துவத்தை) சிரத்தையோடும், நம்பிக்கை உள்ள மன உறுதியோடும், நிந்திக்காமலும் குதர்க்கம் இல்லாமலும் எக்காலத்தும் பின்பற்றி ஒழுகுகின்றார்களோ, அவர்களும் வினையிலிருந்து விடுபடுகின்றனர்.'**

**(வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்—இறைவன், நன்னூல்)** III (31)

'அவர்களும்' என்னும் சொல்லால் குறிக்கப்படுபவர்கள் யார் எனில், என்னுடைய கோட்பாடாம் இதைக் கைக்கொண்டு இப்பொழுது ஒழுகவில்லையாயினும், என் உபதேசத்திலே நம்பிக்கை வைப்பவர்களும், நிந்திக்காமல் குதர்க்கம் செய்யாமல் உள்ளவர்களுமே ஆவார்கள்.

அவர்களும்கூட, கர்மயோகத்தினை பயில்பவர்களைப் போலவே அனாதியாய் வருகின்ற சகல கருமங்களில் இருந்தும் விடுபடுகின்றனர்.

**'யார் என்னுடைய இந்தத் தத்துவங்களை (கோட்பாடுகளை) இகழ்ந்து பின்பற்றி நடக்கவில்லையோ, அவர்கள் ஞான சூனிய மூடர்கள்; விவேகம் அற்றவர்கள், கதி இழிந்த மூடர்கள் என்றறிக.'** III (32)

இந்தச் சுலோகம், முந்தைய 31ஆம் சுலோகத்திலே சொல்லப்பட்டிருப்பவர்களுக்கு மாறானவர்களைப் பற்றிக் கூறுகிறது.

உள்ளத்தின் செயல் யாதெனில் ஒவ்வொரு பொருளிலும், மெய்ப் பொருள் கண்டறிதலே (உண்மையை உணர்தலே). பாமரரிடம் இஃது இல்லையாதலால் அவர்கள் உள்ளத் தெளிவற்றவர்கள். அதோடு, மாறுபாடான ஞானத்தை உடையவர்கள், எனவே மூடர்கள் எனப்பட்டனர்.

ஆனால் ஆத்ம தத்துவத்தை உள்ளபடி உணர்ந்தவர்கள் தூய உள்ளம் உடையவர்கள்; ஞானிகள். இவர்களே உண்மையை உணர்ந்தவர்கள்.

ஆத்ம தத்துவத்தை உள்ளபடி உணர்ந்து வாழ்க்கையை நடத்தாதவர்கள் இழப்பும் கேடும் அடைவார்கள் என்பது திண்ணம்.

**'ஞானியும் கூட, தன் இயல்புக்கு ஏற்றபடியே நடக்கிறான் (கருமம் இயற்றுகிறான்) எல்லா உயிர் இனங்களும் தத்தம் இயல்பினைப் பின்பற்றியே நடக்கின்றன (கருமம் செய்கின்றன). அடக்கி ஒடுக்குதலால் ஆவதென்ன?'** III (33)

ஒவ்வொரு ஞானியும் தன் இயல்புக்கு ஏற்றபடியே நடக்கிறான் என்பது, ஞானமிக்கவனும் தன் பழைய வாசனைக்குத் தக்கபடியே நடக்கிறான் என்பதாம்.

இரவு உட்கொண்ட உணவு காலையில் செரிமானம் ஆகிக் கழிந்த பின்னும், உணவினைப் பிசைந்த கையிலே பதிந்த நெய்மணம் கையை விட்டுப் போவதில்லை. அதைப் போலவே ஜென்மாந்திர வாசனை ஞானியைக் கூடத் தொடரும். அந்தந்த வாசனைக் கேற்பவே ஒவ்வொரு மனிதனின் இயல்பும் அமைகின்றது.

எனவே ஞானிகளும் தத்தம் இயல்புக்கு ஏற்றபடியே பலவகை மார்க்கங்களைக் கைக் கொள்கின்றனர். அவைகள் பக்தி, ஞானவிசாரம், தியானயோக முறைகளின் பலவகை நெறிகள் முதலியனவாம்.

சென்ற பிறவியிலே செய்துவிட்டு வந்த பழவினைகளின் (கருமங்களின்) பயனாக அமையப் பெற்ற மன அமைப்போடு தான் ஒவ்வொருவரும் பிறப்பெய்துகின்றனர். இதையே **பிரகிருதி** என்கிறோம். இது தன்னுடைய இயல்பான நெறியில் சென்றே ஆகவேண்டும். இதனுடைய போக்கைக் கடவுளும் மாற்ற இயலாது. பழவினைகள் ஒவ்வொன்றும் அதனதன் பலனைத் தந்தேவிடும் என அவனே விதித்திருக்கிறான்.

பிரகிருதியின் (பிறப்பு இயற்கையின்) இயல்புக்கேற்றச் செயலாக, முன் செய்த எல்லாக் கருமங்களும், தவிர்க்க முடியாததாகி, நம்மை வந்து மோதுகின்றன. ஆத்மா இதிலே நடுநிலை வகிக்கும் ஒரு சாட்சியே. ஆகையினால் தான், 'அடக்கி ஒடுக்குதலால் ஆவதென்ன?' என்று கேட்கிறது சுலோகம்.

இந்தச் சுலோகத்தின் மூலமாக நாம் அறிவது பிரகிருதி (பழவினைவலிமை) ஆத்மாவினும் பேராற்றல் வாய்ந்தது என்பதே!

எனவே, பிரகிருதியிலே கட்டுண்டு கிடக்கும் ஒவ்வொரு வரும் தத்தம் இயல்புக்கு ஏற்றபடி மார்க்கங்களைக் கைக்கொள்ளல் வேண்டும், தம் மன எழுச்சிக்குத் தக்கபடி மாற்றியமைத்தலோ, இயல்புக்கு மாறாக அடக்கி ஒடுக்கு தலோ ஆகாது.

கண்ணன் மேலும் கூறுகிறார் :

**'இந்திரியங்களுக்கு, உலகப் பொருள்கள் (விஷயாதிகள்) மீது, விருப்பு வெறுப்புகள் உண்டு. (நாம்) அவைகளின் வசம் ஆதல் ஆகாது, (ஏனெனில்) அவைகளே நம் விரோதிகள்.'**
**III (34)**

ஒரே பொருள், சிலருக்கு விருப்பத்தையும் மற்றும் சிலருக்கு வெறுப்பையும் உண்டு செய்யும். ஐந்து இந்திரியங் கள் (மெய், வாய், கண், மூக்கு, செவி, வாயிலாக நுகரப் படும் இன்பங்கள்கூட ஒவ்வொருவர் மனோபாவத்துக்கு ஏற்ப வேறுபடுகின்றன. இந்த விருப்பு வெறுப்புக்களின் வேறுபாட்டினால் மக்களின் இயல்பு எண்ணற்ற வகையாகப் பிரிகின்றன.

எனவே மனிதன், தன்னுடைய அறிவு அல்லது புத்தி காட்டும் நெறியையே பின்பற்ற வேண்டும். நாம் நம்முடைய புறத்தூண்டுதலுக்கு அடிமைப்பட்டுப் பலிகடா (கைப் பாவை) ஆகிவிட்டால் நம்முடைய வாழ்க்கையே குறிக்கோளில்லாமல் பாழாகிவிடும். நம்முடைய அறிவு முற்றும் கெட்டு நாம் விலங்குகளாகி விடுவோம்.

நம்முடைய புத்தி (அறிவு) புறத்தூண்டுதலில்—கணப் பொழுது உணர்ச்சியில் — தலையிடவில்லை என்றால், ஆசையாம், விருப்புக்களும், வெறுப்புக்களுமே, நம் செயல் களை நிர்ணயிக்கும்.

நாம், சிற்சில பொருள்களை விரும்புகிறோம். அதனால் அவைகளைச் சார்ந்து நின்று (உதவி) செயலாற்றுகிறோம். சிற்சில பொருள்களை நாம் வெறுக்கிறோம். அதனால் அவை

களை ஒதுக்கித் தள்ளிவிடுகிறோம். இப்படிப்பட்ட சுபாவம் தான் (கருமத்தில்) நம்மை பந்தப்படுத்துகிறது.

இந்த விருப்பு வெறுப்பின் பாற்படும் மனத்தூண்டுதலை நாம் வெற்றிக் கொண்டு, கடமை உணர்வோடு விருப்பு வெறுப்பற்றுக் கருமம் ஆற்றுவோமானால், பிரகிருதியினது (மாயையின்) விளையாட்டின் பாவையாக நாம் ஆக மாட்டோம்.

**'விதிப்படி நன்கு இயற்றப்படும் பிறருடைய கருமங்களைக் காட்டிலும், தன்னுடைய கருமம் குணமற்றிருந்த போதிலும் மேலானதாம், (இவ்வகையில்) தன் கருமத்தை ஆற்றுங்கால் இறப்பினும் அது மேலானதே, பிறர் தருமமோ, தனக்கு இடரும், குழப்பமும் உண்டாக்கிவிடும்.' III (35)**

(தர்மம்—தன்னிலையில் ஆற்ற வேண்டிய கடமைகள்).

உலகில் உள்ள மாந்தர்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியான திறமை, அறிவு பொருந்தி இருக்கவில்லை. குணமும் சுபாவமும் அப்படியே. அர்ஜுனன் போர்த்தொழிலில் வல்லவன். அவன் தர்மம் போர் செய்தல். அவன் வில்லையும் அம்பையும் கீழே போட்டுவிட்டு, போர் செய்ய மாட்டேன் எனத் தன் தருமத்தை புறந்தள்ளி, சந்நியாசி ஆகிறேன், ஞானி ஆகிறேன், எனக் கூறுவது சரியல்ல, ஆசிரியத் தொழிலுக்குப் பயின்ற ஒருவன் தன்னுடைய தர்மமாகும் ஆசிரியத் தொழிலையே செய்தல் வேண்டும். விவசாயத்துக்குப் போகவோ, பிற தொழிலை மேற்கொள்ளு தலோ வீண் இடரையும் குழப்பத்தையும் உண்டாக்கிவிடும்.

பிறருடைய தருமங்களைத் தான் மேற்கொண்டு, சிறப்புறச் செய்வதைக் காட்டிலும், தன் சொந்த கருமத்தைச் சிறிதளவே செய்த காலத்தும் (திறம்பட, மிகச் சிறப்பான முறையிலே, செய்து முடிக்காத காலத்தும்) அது ஒருவனுக்கு இன்பத்தைப் பயப்பதே ஆகும்.

ஒவ்வொருவனும், தத்தம் உடல் உளத் தொடர்பினை நன்கு அறிந்து தத்தம் சுபாவத்திற்கேற்ப, தமக்கெனப் பயிற்றுவித்தத் தொழிலிலே சிரத்தையோடு ஈடுபட வேண்டும். பிறர் தொழிலிலே அவர் அடையும் சிறப்பு மேன்மை லாபம் கண்டு அதிலே விருப்புற்றுத் தம் தொழிலிலே வெறுப்படைந்து தன் கருமத்தை மாற்றிக் கொள்வது உறுதியற்ற உள்ளத்தின் போக்காகும்.

நம்மிடம் பலப்பலத் திறமைகள் உள்ளனவா அல்லது ஒரே ஒரு செயல் திறன்தான் பொருந்தி உள்ளதா என்பதல்ல முக்கியம்; நமக்கென நியமிக்கப்பட்ட பணியிலே நாம் எவ்வளவு சிரத்தையோடு செயலாற்றுகிறோம் என்பதே முக்கியமானது.

நாம் இயற்றும் பணி மகத்தானதோ அற்பமானதோ ஆயினும் ஆண்மையோடு செயலாற்றி, அழகுற நிறைவேற்ற வேண்டும்.

ஆகையினால் எளிதாகச் செய்யக் கூடியதாயினும் தன்னுடைய தர்மமாகிய கர்மயோகம் குணமற்றதானாலும் —தவறுதல் இன்மை உடையதாகையினால், ஒருவன் அதையே மேற்கொள்ள வேண்டும்.

ஞானியின் தர்மமாகிய ஞான யோகம் எல்லாக் குணங்களும் நிறைந்திருப்பினும், கர்மயோகத்தைப் பயில்பவன், ஞானயோகியைக் கண்டு வியப்புற்று, இதைக் கைவிட்டு அதற்குத் தாவி, சிறிது காலம் அதை இடரோடு அனுஷ்டித்துத் தவறுகள் பல செய்து, அதையும் விட்டுவிலகி விடுவான். இப்படிப்பட்ட ஞானயோகத்தைக் காட்டிலும் முன் சொன்ன கர்மயோகமே சிறந்தது.

கர்மயோகி தான் இயற்றும் கருமத்திலே, பயனடையாமல் இறந்தாலும் நன்றே. அடுத்த பிறவியிலே அவன் கருமபலன் அவனுக்குக் கை கொடுக்கும்.

மாறாகக் கருமத்தை விட்டு ஞானத்துக்குத் தாவியவன் இடர் குழப்பம் இவைகளால் பயந்து பயந்து செத்து அதைச் சரிவர இயற்ற முடியாமல் தவிக்கிறான்.

எனவே நீ, உன் கடமையை நன்காற்று. பிறர் கருமம் சிறந்ததென நினைத்து அதைக் கைக்கொள்ளல் தீது.

அர்ஜுனனுக்கு ஐயம் உதிக்கிறது—பாவங்கட்குப் பிறப்பிடம் எது?

அவன் கண்ணனை நோக்கிக் கேட்கிறான்,

**'விருஷ்ணி குலத்துதித்த கண்ணா! அப்படியானால் மனிதன் இச்சை இல்லாமல் இருந்தாலும், பலாத்காரமாய் ஏவப்பட்டவனைப் போல் எதனால் தூண்டப்பட்டு பாவம் செய்கிறான்.'** III (36)

மனிதன் தன் இச்சை இல்லாமலேயே செயலாற்றத் தூண்டப்படுகிறானா? பலவந்தமாக ஏவப்படுகிறானா எனில் இல்லை. மனிதன் பேரவாவால், காமத்தால் தூண்டப்படும்போது, அதை அடைய மிகத் தந்திரமாகத் தன் ஒப்புதலை அளித்து விடுகிறான். ஆனால் சூழ்நிலையால் பலாத்காரத்தால் தூண்டப்பட்டதாக பசப்புகிறான்.

இதைக் கண்ணன் அடுத்து வரும் சுலோகத்தில் சொல்கிறார்.

**'ரஜோ குணத்திலே உற்பத்தியாகும் காமம் என்பதும், குரோதம் என்பதும் எதையுமே விழுங்கி யாவற்றையும் ஜீரணிக்க வல்லது; பாவங்கள் நிறைந்தது. எனவே இங்கு இவைகளை உன் பரம சத்துருவாக அறிக (கருதுக).'** III (37)

உள்ளத்தையே அள்ளி விழுங்கும் ஆசையாம் காமமும், அதன் பயனாக உண்டாகும் குரோதமும், முக்குணங்களுள் ஒன்றாகிய ரஜோ குணத்தில் இருந்து தோன்றுபவை.

காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்று சொல்லப்படும் மனத்துக்கண் நிகழும் குற்றங்கள்

ஆறனுள் காமமும், குரோதமும் முக்கியமாக விலக்கப்பட வேண்டியவை. இவ்விரண்டையும் விலக்கி விட்டால் அடுத்த நான்கும் தானே விலகிவிடும்.

உலகத்திலே உள்ள அனைவரும் ஆசையினால்தான் அழிவெய்துகின்றனர். (ஒரு சிலர் தவிர). எனவே அழிவுக்குக் காரணமான ஆசை (காமம்) நம் எதிரியே அல்லவா? நாம் ஆசைப்படுவது நமக்குக் கிட்டாது போய்விட்டால் நாம் கோபம் கொள்கிறோம். எனவே காமமும், அதன் பயனான குரோதமுமே நம்முடைய பரம விரோதிகள் என்கிறார், பகவான் கண்ணன்.

இவை இரண்டும் ரஜோ குணத்தின் விளைவுகள்; விலக்க வேண்டியவை அவை, நம் அறிவை அவை அழிப்பதற்கு முன், நாம் அவற்றை அழித்துவிட வேண்டும்.

ஆசைப்படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தமாமே —திருமூலர்

இவ்வகையில் ஆசையை விட்டுவிட்டால் குரோதமும் நம்மிடையிருந்து மறையும்; ஆனந்தமும் உண்டாகும்.

மனிதன் மூவகை ஆசைகளால் பற்றப்படுகிறான்.

1. உடைமை (பொன் பொருள் நிலம்) 2. புகழ் 3. சிற்றின்பம்.

முதல் இரண்டும் (உடமையும், புகழும்) எவ்வளவு அடைந்த போதிலும் நிறைவே அடையாதவை, எவ்வளவுக் கெவ்வளவு நாம் அவைகளை அடைகிறோமோ அதைக் காட்டிலும் மேலும் மேலும் அதிகமாக நம் உள்ளம் அவைகளை அடைய விழையும்.

மற்றுச் சிற்றின்பமோ தணிக்கவே இயலாத நீர் வேட்கையை ஒப்பானது. அதை திருப்திபடுத்தப் படுத்த மேலும் மேலும் தீக்கு விறகை அளிப்பதைப் போல, கொழுந்து விட்டு காமம் மேலெழுந்து எரியும். காமம் மனிதனின்

ஒழுங்கு நிலையற்ற இந்திரியங்களை ஆட்சி செய்கிறது. மனிதனின் ஆத்ம நெறியை அடைத்துவிடுகிறது.

**'எப்படி, நெருப்பு புகையினாலும், கண்ணாடி அழுக்கினாலும், கருப்பையில் உள்ள குழவி கருப்பையினாலும் மூடப்பட்டுள்ளதோ அப்படியே, இந்த ஆத்ம ஞானம் ஆசையால் மூடப்பட்டிருக்கிறது.'** II: (38)

ஆசை கன்னங்கருமையான புகை மண்டலம்; அது ஆத்மாவாம் நெருப்புச் சுவாலையைச் சப்பி மூடியபடி உள்ளது.

ஆசை, மலம் எனும் அழுக்குகள் ஆத்மா என்னும் கண்ணாடியில் படிந்து, நன்மை தீமைகளிலே வேறுபாடு கண்டுணரும் தன்மையை இருட்டடிப்புச் செய்து விடுகிறது.

ஆசை, கவ்வி, மூடிய உறை. இது அறிவையும், புத்தியையும் கவ்வி மூடிக்கொள்ளும். காமம், இந்திரியங்களையும், மனத்தையும், புத்தியையும் இருண்டுவிடச் செய்யும்.

இவ்வகையில் ஒருவன் காமமானது (ஆசை) இந்திரியங்கள், மனம், புத்தி இவைகளை அடக்கி, ஆட்சி செய்யும் போது அம் மனிதன், மிக வேகமாக அழிவுப் பாதையிலே அடியெடுத்து வைத்து ஓடுகிறான்!

மேலே சொன்ன, நெருப்பைச் சூழ்ந்துள்ள புகை மண்டலத்தை நாம் விவேகம் எனும் காற்றால் விலக்கி விட்டால் ஞானமென்னும் தீ சுடர் விட்டெரியும் (இது சத்துவகுணம்). கண்ணாடி மேல் படிந்துள்ள அழுக்காகிய மலமும் சத்விசாரம் என்னும் ஈரத்துணியால் நன்கு துடைத்தால் மலம் நீங்கும்; அழுக்கின்றி கண்ணாடி சுத்தமாகும் (இது ரஜோகுணம்).

மூன்றாவதான சிசுவை மூடியுள்ள கருப்பை—கருப்பையில் இருந்து குழவியை வேறுபடுத்த காலமும் முயற்சியும்

தேவை. நல்வாழ்க்கை, நற்கருமம் மூலமே கருப்பையின் சிசுவை விடுவிக்க இயலும். (இது தமோ குணம்)

கண்ணன் மேலும் சொல்கிறார்:

**'குந்தியின் மைந்தனே! ஞானியின் நித்திய சத்துருவும், விரும்பிய வடிவத்தினை எடுக்க வல்லதும், நிரம்பாததும், திருப்தி என்பதே இல்லாததுமான இந்த ஆசையினால் ஞானம் என்பது மூடப்பட்டுள்ளது.** :II (39)

ஆசைதான் ஞானிக்குச் சத்துரு. அதாவது எக்காலத்தும் ஆசை என்பது ஞானிக்கு விரோதியே. ஞானியின் உள்ளத்திலே ஆசை தோன்றும் அக்காலமே அதை அவன் பகையாகக் கருதி விலக்கி விடுவான்.

ஆனால், பாமரன் அப்படி அல்ல. ஆகையால் அவன் இன்பங்காணும் பொழுது அதை நண்பனாகக் கொள்வான்; துன்பம் அடையும்போது அதை விரோதியாகக் கருதுவான்.

ஆசை தான் விரும்பிய வடிவத்தினை எடுக்க வல்லது. பாமரன் உள்ளத்தினை மயக்கும் வடிவம் ஏதெது உண்டோ, அந்த வடிவங்களனைத்தையும் எடுத்து மயக்க வல்லது ஆசை. இந்த ஆசை என்பதுதான் ஞானத்தை மூடிக் கொண்டிருக்கிறது.

இச்சிற்றின்ப பொருள்களை அடைந்து இன்புற்று விடுவதாலேயே ஆசை எக்காலத்தும் எவ்வகையிலும் தணிந்து விடுவதில்லை. எரியும் தீயிலே விறகைப் போடப் போட அது மேலும் மேலும் கொழுந்து விட்டு எரிவதைப் போல காமத்தை நுகர நுகர, அது மேலும் மேலும் கொழுந்து விட்டு எரியும்.

**'இந்த ஆசைக்கு (காமத்துக்கு) இருப்பிடம் இந்திரியங்கள், உள்ளம், புத்தி எனும் மூன்றுமே என்று சொல்லப்படுகிறது. (அதாவது இந்த மூன்றின் மூலமாகத்தான் ஆசை நம்முள் நுழைகிறது) இந்த மூன்றாலும் ஆசை, ஞானத்தை மறைத்து மனிதனை மயக்குகிறது.'** III (40)

இந்திரியங்கள், மனம், அறிவு ஆகிய இம்மூன்றுமே, மனிதனை ஆட்டி வைக்க ஆசை தன் கையில் ஏந்தி நிற்கும் ஆயுதங்களாகும். எப்படி எனில் இவைகளைக் கொண்டே காமம் (ஆசை) ஆத்மாவை ஆட்சி செய்கிறது. முதலில் இந்தக் காமம் அறிவைச் செயலிழக்கச் செய்கிறது. பின்னர் புத்தியை இந்திரியங்கள் மூலமாகச் செலுத்தி மனிதனை நெறி மாறச் செய்து விடுகிறது. அதாவது ஆசை ஆத்மாவை பல வழிகளிலே மயக்கி ஏமாற்றி, தன்னைத்தான் அறியும் அறிவிலே வெறுப்படையச் செய்துவிட்டு, புலன் உணர்ச்சி களால் அனுபவிக்கப்படும் இன்பங்களுக்கு அடிமையாக்கி விடுகிறது.

கண்ணன் மேலும் சொல்கிறார்:

**'எனவே பரத குலத்து வீரனே! நீ முதலிலே இந்திரியங் களை அடக்கி, ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் அழிக் கின்ற இந்தப் பாவ வடிவமான ஆசையை உறுதிப்பாட்டுடன் ஒழித்துவிடு.'** III (41)

இந்திரிய யானையை அடக்கி ஒடுக்குதல் அவ்வளவு எளிதான செயலல்ல. முரட்டுக் குதிரைகளை அடக்குவது போன்ற கடினமான செயல் அது. அதை அடக்கி நம் வசமாக்கிக் கொண்டால் ஆசையின் பலம் குறைந்து போய்விடும். இதைத்தான் முதலிலே செய்தல் வேண்டும்.

இந்த ஆசைதான் ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் அழிக்கும் தன்மை உடையது. இங்கே 'ஞானம்' என்பது ஆத்மாவைப் பற்றிய அறிவும், அதைப்பற்றித் தான் கற்றுக் கேட்டறிந்த தத்துவங்களும் ஆகும். 'விஞ்ஞானம்' என்பது தான் கற்ற கல்வி கேள்விகளால் தனக்கு ஏற்பட்ட அனுபவம் விஞ்ஞானம் ஆகும்.

முதலில் இந்திரியங்களை அடக்கி ஒடுக்கிவிட்டால் பின்னர் ஆசையை அறவே ஒழித்து விடுதல் மிக மிக எளிதாகும். உண்மையான ஞான வழி—பொய்தீர் ஒழுக்க

நெறி, 'பொறி வாயில் ஐந்து அவித்தலே', என்கிறார் வள்ளுவர். ஐம்பொறிகளை வாயில் (வாசல்)களாக உடைய ஐந்து அவாக்களையும் அவித்தலே ஞானத்தின் முதற்படி ஆகும்.

கிருஷ்ணன் மேலும் சொல்கிறார்:

**'இந்த உடலினுள் 'இந்திரியங்கள் மேம்பட்டவைகளாகும் எனச் சொல்லப்படுகிறது. இந்திரியங்களை விட மனம் மேலானது. மனதைவிட புத்திதான் உயர்ந்தது. அந்த புத்தியை விட மேலானது ஆத்மாவே.'** III (42)

பருப்பொருளைக் காட்டிலும் நுண்பொருள் மேலானது; சக்தி வாய்ந்தது. செயலைக் காட்டிலும் சொல்லும், சொல்லைக் காட்டிலும் எண்ணமும் சக்தி மிக்கது.

பரு உடலைக் காட்டிலும் இந்திரியங்கள் நுண்ணியவை. அவை பரந்து பட்டுச் செயலாற்றுகின்றன. எனவே உடலினும் இந்திரியங்கள் மேம்பட்டவை. இந்திரியங்களோடு ஒன்றி நின்று விஷயங்களை நுகரும் மனமோ இந்திரியங்களை விட நுண்ணியது; மேலானது; இந்திரியங்களைக் காட்டிலும் வியாபகமுடையது; இந்திரியங்களால் செய்ய முடியாத எண்ணுதல் தொழிலையும், சங்கல்ப விகல்பங்களையும் செய்ய வல்லது. இந்த மனதைக் காட்டிலும் புத்தி மேம்பட்டது. ஏனெனில், சந்தேகப்படுகின்ற மனதை புத்தி தெளிவுறுத்துகிறது. உண்மை இது, பொய் இது என புத்தி நிச்சயிக்கிறது. எனவே, புத்தி மனத்தினும் மேம்பட்டது. புத்திக்கும் எட்டாதது ஆத்மா. ஆத்மா யாவற்றிலும் மேலானது.

நம்முடைய உணர்வு நிலையை நாம் படிப்படியாக உயர்த்த முயல வேண்டும். அதை எவ்வளவுக்கு எவ்வளவு உயர்த்துகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நாம் புறச்சார் பற்று விடுபடுகிறோம்.

ஐம்புலன்களின் பேயாட்டத்தினால், நாமும் நம் செயல்களும், ஆட்கொள்ளப் பட்டுள்ளபோது நமக்கு உரிமை இல்லை. அப்போது ஐம்புலன்களால் அடிமைப்பட்ட அடிமைகள் நாம். பின் உள்ளத்தின் கட்டுப்பாட்டிலே ஐம்புலன்கள் செயலாற்றும்போது நமக்குக் கொஞ்சம் விடுதலை கிடைக்கிறது. ஆனால் உள்ளம் புத்தியோடு இணைந்து செயலாற்றும்போது நாம் உண்மையிலேயே புறச்சார்பற்று கொஞ்சம் விடுபடுகிறோம்.

ஆனால் உண்மையான புறச்சார்பற்ற முழு விடுதலை என்பது, நம்முடைய செயல்களெல்லாம் ஆத்ம சொரூபத்தின் பேரொளியால் விழுங்கப்பட்ட புத்தியால் இயக்கப்படும் போதுதான் ஏற்படுகின்றது.

**'வலிவார்ந்த தோளனே! அறிவினும் மேலானதும், அதைக் கடந்து நிற்பதுமான ஆத்மாவை அறிந்து ஆத்மாவால் அந்த ஆத்மாவை ஒரே நிலையில் நிறுத்தி, நினைத்த வடிவெடுக்க வல்லதும் வெல்லுதற்கு அரியதுமான ஆசை எனும் பகைவனை அழித்துவிடு.'** III( 43)

ஆசை இந்திரியங்களையும் புத்தியையும் அறிவையும் ஆட்கொண்டு, விஷய சுகங்களில் ஈடுபடுத்தும்போது, மனிதன் அதை இன்பமாக ஏற்றுக் கொள்ளுகிறான். ஆனால் இன்பத்தின் எல்லை துன்பம் என்பதை மறந்து விடுகிறான் மனிதன்.

இந்திரியங்கள், மனம், புத்தி இவையாவும் ஆசையில் இருந்து விடுபட வேண்டும். ஆசை அழிக்கப்பட வேண்டும். என்றால் ஆத்மாவை உள்ளபடி அறிந்து ஆத்மாவை ஆத்மாவால் அடக்கி ஒரே நிலையில் நிறுத்தி வைத்தல் வேண்டும். அப்படி என்றால் புலன் உணர்வும் மனமும் புத்தியும் பரமாத்மாவைச் சார்ந்து நிற்க வேண்டும். இது தான் ஆத்மாவை ஆத்மாவால் அடக்குதலாகும்.

கடோபநிஷத் கூறுகிறது:

'இந்திரியங்களை விட மேலானவை அவைகட்குக் காரணமான சூட்சும பூதங்கள், சூட்சும பூதங்களைவிட மேலானது மனம்; மனத்தைவிட மேலானது புத்தி; புத்தியைவிட மேலானது மகத்தான சூத்ராத்மா. (அதாவது சமஸ்டி புத்தி).'

அந்த மகத்தான சூத்ராத்மாவைவிட மேலானது மூலப் பிரகிருதி. மூலப் பிரகிருதிக்கும் மேலானவன் புருஷன். இந்தப் புருஷனைவிட மேலானது ஒன்றுமில்லை. அந்நிலை தான் எல்லை. அதுதான் உன்னதமான நிலை.'

(கடோ III, 10 & 11)

'நுண்ணறிவுடைய விவேகி, வாக்கை மனதில் ஒடுக்கி, அதைப் பிரகாச ரூபமான புத்தியில் ஒடுக்கி, புத்தியைச் சூத்ராத்மாவில் ஒடுக்கி, அதை எல்லாம் வல்ல பரமாத்மா விடம் ஒடுக்க வேண்டும்.'

(கடோ, III (13)

இந்த வகையில் (காமம்) ஆசை என்னும் வெல்லற்கரிய பகைவனை அழிக்க, ஆத்மாவை அறிந்து, ஆத்மாவை ஆத்மாவால் நிலைநிறுத்தி, அதைப் பரமாத்மாவிடம் ஒடுக்க வேண்டும்.

அத்தியாயம் மூன்று முற்றும்.



நான்காம் அத்தியாயம்

# ஞான யோகம்

இந்த ஞான யோகம் மேலானது; மறை பொருளது. அழிவில்லாத தன்மை வாய்ந்த இதைக் கண்ணன் தன் தோழனும் பக்தனுமான அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார்.

இந்த மறைபொருள் மிக்க யோக தத்துவம் நிஷ்காம்ய கர்மத்தைத் (தன்னலமற்ற பலன் கருதாத கருமத்தைத்) தன்னுள் கொண்டது. இங்கே செயலிலே செயலின்மையும், செயலின்மையிலே செயற்பாடும் விளக்கப்படுகின்றன.

உலகிலே நாம் வாழ வேண்டும். ஆனால் பற்றால் பற்றப்படாமல் வாழ வேண்டும். ஆத்மாவில் ஒன்றி வாழ வேண்டும்.

இப்படி இந்த உலகிலே வாழ்ந்து தன் கடமையை நன்காற்றும் மனிதன் தனக்கென ஒரு பற்றும் கொண்டவன் அல்லன்.

இந்த அத்தியாயத்திலே கூறப்படுவன :

ஆத்மா அழிவில்லாதது. நம் ஆத்மா ஒன்றே ஒப்புயர் வற்றது; மேலானது; சிறந்தது; யாவற்றினூடும் ஊடுருவிப் பரந்துள்ளது; மனிதன் இயற்கை—உலகம்—யாவற்றூடும் பரந்துள்ளது. 'ஈஸாவஸ்யம் இதம் சர்வம்.' எனவே, இந்த ஆத்மாதான் வாழ்வு அனைத்துக்கும், ஞானம் அனைத்துக்கும் அடிப்படையானது.

பகவான் கண்ணன் சொல்லுகிறார்.

**'அழிவில்லாத இந்த யோகத்தை நான் விவஸ்வானுக்கு (சூரியனுக்கு) உபதேசித்தேன். அந்த விவஸ்வான் தன்**

**மகனான மனுவுக்கு இதைப் பகர்ந்தான். மனுவோ தன் மகனான இட்சவாகுவுக்கு உரைத்தான்.'** IV (1)

**'எதிரிகளை ஒடுக்குபவனே! இவ்விதம் வழிவழியாக வந்த இந்த யோகத்தை இராஜ ரிஷிகள் நன்கு அறிந்திருந்தார்கள். இந்த யோகத்தை இவ்வுலகுக்கு உபதேசித்து நெடுங்காலமாய் விட்டதனால் இது கை நெகிழ விடப்பட்டது.'** IV (2)

**'நீயோ என் பக்தனாகவும், தோழனாகவும் இருக்கிறாய். இந்தப் பழைய அதே யோகம் இன்று உனக்கு என்னால் உபதேசிக்கப்படுகிறது. இது மிக உயர்ந்தது; ரகசியமானது.'** IV (3)

*இவைகளைக் கேட்டதும் அர்ச்சுனனுக்கு ஐயம் ஏற்பட்டது. அவன் கேட்கிறான்.*

**'கண்ணபிரானே! உம்முடைய பிறப்பு மிகவும் பிற்பட்டது. விவஸ்வானுடைய பிறப்போ மிக முற்பட்ட காலத்தியது. நீர் அந்தச் சூரிய பகவானுக்கு அக்காலத்திலேயே உபதேசித்தீர் என்பதை நான் எப்படி அறியக் கூடும்.** IV (4)

*அருச்சுனன் கொண்ட ஐயம் நியாயமானது. கண்ணபிரான் அருச்சுனனுக்கு சில ஆண்டுகளே மூத்தவர். இருவரும் ஒன்றாக உண்டு, உறங்கி, ஆடிப்பாடி மகிழ்ந்திருந்தவர்கள். 'இருபத்தெட்டு சதுர்யுகங்களுக்கு முன் உதித்த சூரிய பகவானுக்கு இப்பொழுது என்னுடன் பிறந்து வாழ்கின்ற நீர் எப்படி உபதேசித்திருக்க முடியும்' என்று கேட்கிறான் அர்ச்சுனன்.*

*இதற்கு கண்ணன் பதிலளிக்கிறார்.*

**'அர்ச்சுனா! எதிரிகளை வாட்டுபவனே! எனக்கும் உனக்கும் பல பிறவிகள் கழிந்து போயின. அவைகள் எல்லாவற்றையும் நான் அறிவேன். ஆனால் நீ அறியமாட்டாய்.'** IV (5)

*அர்ஜுனன் நரன்; கண்ணன் நாராயணன். அர்ஜுனன் கர்ம பந்தத்தால் கட்டுப்பட்டு பல பிறவிகளை எடுத்தவன்.*

கண்ணன் அவதார புருஷன். அவரும் பல பிறவிகள் எடுத்தவரே. இளமையிலே நடந்த பல செயல்கள் முதுமையிலே நினைவில்லாமல் போவதைப் போல முற்பிறவிச் செயல்கள் யாவும் சாதாரண ஜீவனான அர்ஜுனனுக்கு நினைவில்லை. ஆனால் கண்ணன் எதனாலும் மறைக்கப் படாத பூரண ஞானமுடையவர். எனவே அவர் எடுத்த பிறவி கள், அவைகளிலே அவர் ஆற்றிய அருஞ் செயல்கள் யாவும் அவருக்குத் தெரியும். அப்பிறவியிலே அவர் சூரியனுக்கு உபதேசித்தார். இப்பிறவியிலே கண்ணனாக வந்து அர்ஜுனனுக்கு இந்த ஞானத்தை அருளிச் செய்கிறார்.

**'அர்ஜுனா! நான் பிறப்பில்லாதவனாய் அழிவில்லாத ஞான சக்தியை உடையவனாய் இருப்பினும், எல்லா உயிர்களுக்கும் இறைவன் ஆக இருப்பினும் நான் என் பிரகிருதியை வசப்படுத்திக் கொண்டு, என் மாயையால் உலகிலே அவதரிக்கிறேன்.'** IV (6)

இந்தச் சுலோகத்திலே 'என் பிரகிருதியை வசப்படுத்தி' என்று வரும் சொற்றொடர் 'என்னுடைய சொந்த இயற் சக்தியால் நான் என்னை நிலைநாட்டி' என்பது பொருளாகும். அதாவது என்னுடைய சுபாவத்தோடு கூடி என் ஆத்ம ஞானமான சங்கற்பத்தினால் நான் அவதரிக்கிறேன் என்கிறார் கண்ணன்.

பிறப்பில்லாத அவன் பிறந்து செயல் புரிபவனாகத் தன்னை உலகத்தினருக்குக் காட்டுதல் அவனுக்கு அடிமைப் பட்டுள்ள மாயா சக்தியின் வலிமையாலே ஆகும்.

மக்கள் பிறந்து இறந்து பிறக்கிறார்கள். இது அவர் களால் நடைபெறுவது அல்ல. அஞ்ஞானத்தின் மூலமாக மாயையால் (பிரகிருதியால்) ஏவப்பட்டு மக்கள் திரும்பத் திரும்பப் பிறக்கிறார்கள்.

இறைவனோ பிரகிருதியை (மாயையை) தன் வசமாக்கித் தன் சங்கற்பத்தினால் பிறவி எடுக்கிறார். அவர் ஆற்ற வேண்டிய செயல் யாதொன்றுமில்லை. ஆயினும், தான்

மனிதனாகவே மக்கள் மத்தியிலே வாழ்ந்து நித்ய கருமத்திலே ஈடுபட்டு தானும் கருமத்தை ஆற்றுவதாகக் காண்பிக்கிறார். இந்த முறையில், மக்கள் உய்யும் வழிகளைத் தன் கருமத்தால் விளக்கி வைக்கிறார் அவதார புருஷன் கண்ணன்.

**'பாரத குலத் தோன்றலே! எவ்வப்பொழுது நல்லறம் கேடுற்று, அழிந்து போம்படி மறம் (அதர்மம்) மேலோங்குகின்றதோ, அப்பொழுதெல்லாம் நான் என்னை (அவதாரமாகத்) தோற்றுவித்துக் கொள்ளுகிறேன். IV (7)**

(அவதாரம் என்றால் மேலிருந்து கீழ் இறங்கி வருதல்).

அறம் தேய்கின்றது; மறம் மேலோங்குகின்றது. இறைவன் அவதரிக்கின்றான். வாழ்க்கையிலே மிகக் கடுமையான மன உளைச்சலும், விறைப்பும் ஏற்படும்போது மனித உள்ளங்களை எல்லாம் ஒருவிதமான, ஊடுருவிப் பாயும் உலோகாயுதம் (கடவுள் இல்லை எனும் கோட்பாடு) ஆட்டிப் படைக்கும்போது, உலகத்தை, உயிர்களைச் சமநிலைப் படுத்தவும் ஞானத்தையும் அறத்தையும் நிலைநிறுத்தவும், நெருக்கடிகளை உண்டு பண்ணும் குழப்பங்களைத் தவிர்க்கவும் இறைவன் தன்நிலை நீத்துக் கீழிறங்கி வந்து (அவதரித்து) மக்களுக்கு அருள் புரிகிறான்.

தெய்வம் பூமிக்குக் கீழ் நோக்கி இறங்கி வருவது இந்த மண்ணுலகத்து உயிர்களை உயர்த்தவே. அவன் இறங்கி வர மனிதன் உயர்கிறான்.

இந்த வகையில் அவதாரத்தின் நோக்கம் யாதெனில் புத்துலகம் சமைத்தலும், நல்லறத்தை நிலைநாட்டுதலுமே. அவன் தன் உபதேசத்தாலும் வாழ்ந்து காட்டும் வாழ்க்கையாலும், வாழ்க்கையின் உயர் நிலைக்கு ஒரு சாதாரண மனிதன் எப்படித் தன்னை உயர்த்திக் கொள்ள முடியும் என்பதை உணர்த்துகிறான்.

நேர்மைக்கும் பொல்லாங்குக்கும் இடைப்பட்ட செயலின் முடிவு தெளிவான ஒன்றே.

கடவுள் நேர்மையின் பாற்பட்டே தொழிலாற்றுகிறார். அன்பும் கருணையும் பகைமை, கொடுமைகளைவிட நிச்சயமாக வலிமை வாய்ந்தவை. தர்மம் அதர்மத்தை வெற்றி கொள்ளும். உண்மை பொய்மையை வெல்லும். இவைகள் அனைத்தையும் இறைவன் தன் அவதாரம் மூலம், சிறிது சிறிதாக அதர்ம வழியிலே உலகம் செல்லத் தொடங்கும்போது, அறம் மேலோங்க, மறம் வீழ்ச்சியுற அருள் செய்கிறான்.

அடுத்து, இறைவன் எக்காலத்து அவதாரம் எடுக்கிறான்? எக்காரணங்களுக்காக எடுக்கிறான்? என பகவான் இயம்புகிறார்.

**'அறவோர்களையும் ஞானிகளையும் காப்பாற்றுவதற்காகவும், தீசர்களை நாசம் செய்வதற்காகவும், நல்லறத்தினை நிலை நாட்டவும் யுகந்தோறும் யுகந்தோறும், உலகில் நான் அவதரிக்கிறேன்.'** IV (8)

அவதாரத்தின் இன்றியமையாமை இதில் இயம்பப் படுகிறது.

1. உண்மையை-மெய்யுணர்வை, அருட்பெருஞ் சோதியைத் தேடுகின்ற அறவோர்கள், ஞானிகளைக் காத்தல்.
2. தீவினையாளர்களையும் இருளையும் அறவே அழித்தல் (நீக்குதல்)
3. நல்லறத்தை உலகிலே நிலை நிறுத்தல்.

இந்த மூன்றுமே அவதாரத்தின் பயன். இவைகளுக்காகவே இறைவன் அவதாரம் உலகுக்கு இன்றியமையாத் தேவையாகிறது.

இவை மூன்றும் இறைவனுடைய கடமை மட்டுமல்ல. ஒவ்வொரு குடிமகனுடைய கடமையும் ஆகும்.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஆத்மா உள்ளது. அந்தப்பரிசுத்த மான ஆத்மாவின் செயல் மேற்கூறிய மூன்றுமே அல்லவா? ஒவ்வொருவர் கடமையும்,

1. மெய்யுணர்வைத் தேடுதல்; அறவோர்களைக் காத்தல்.
2. இருளை அழித்தல்; தீவினைக்கு எதிராகப் போராடுதல்.
3. நல்லறத்தின் வழி நிற்றல்.

இவை நம் கடமைகள் அல்லவா?

இதில் நம் பிறப்புக்கும் இறைவன் அவதாரத்திற்கும் வேறுபாடு உண்டு. நம் பிறப்பு வினைவயப்பட்டது; ஆசை அறியாமையின் காரியமானது. ஆனால் அவதாரமோ, அப்படியல்ல. அவனுடைய ஜென்மமும் கன்மமும் தெய்வீக மானது; வினையற்றது.

கண்ணன் மேலும் கூறுகிறார் :

**'அர்ஜுனா! என்னுடைய திவ்யமான (தெய்வீகமான) பிறப்பினையும் செயல்களையும் இங்ஙனம் எவன் உள்ளபடி அறிகிறானோ, அவன் இந்த உடலை நீத்தபின் மறுபடியும் பிறப்பு அடைவதில்லை; என்னையே அடைகிறான்.'** IV (9)

அவதாரங்களுக்கும் மகாத்மாக்களுக்கும் வேறுபாடு உண்டு. புத்தர், ஜனகர், வியாசர், திருமூலர், நாயன் மார்கள், ஆழ்வார்கள், காந்தியடிகள் யாவரும் மகா புருஷர்கள்; மகாத்மாக்கள். ஆனால், அவர்களே தெய்வ மல்ல; அவதாரமல்ல.

பரிணாம வளர்ச்சியின்படி ஏறுபாங்கான முறை யிலே அவதாரம் தோன்றுவதில்லை. மாறாக, இறைவன் மக்களுக்காக மனிதன் உருவிலே மனித மேம்பாட்டுக்காக தன்யோக மாயையால் கீழ் இறங்கி வருவதே அவதாரம் ஆகும்.

மக்கள் இனத்தை தெய்வீக வாழ்க்கைக்குக் கூவி அழைத்துக் கொள்வதே அவதாரத்தின் நோக்கம்,

'தன் அடியவர்க்கு மூல பண்டாரம் வழங்குகின்றான்
வந்து முந்து மினே'

என்கிறார் மணிவாசகர்.

அந்தத் தெய்வீக வாழ்விலே ஆன்மீகக் கூட்டுறவிலே உள்நுழையும் ஒருவன் மறுபிறவி அடைவதில்லை.

அவன் விடுதலை அடைந்து விடுகிறான், தன்னுடைய தசை உணர்விலிருந்து விடுதலை அடைகிறான். தன் ஆசை, அச்சம், கோபம் இவைகளிலிருந்து விடுதலை அடைகிறான். அவன் ஞானத் தீயினால் சுத்தமாக்கப்படுகிறான். அவன் இறைமயமாகிறான். உள்ளமெல்லாம் கண்ணன். உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே அவனுக்கு.

இப்படிப்பட்டவன் பிறப்பிறப்புச் சகடையில் சிக்குவதில்லை. மாறாக இறைநிலை எய்துகிறான்.

கண்ணன் கூறுகிறார் :

**'ஆசை, அச்சம், சினம் இவைகள் அற்றவர்களாய் என்னைச் சரணடைந்து உபாசித்து என்மயமானவர்களும் ஞானமாகிய தவத்தினால் பரிசுத்தமானவர்களும் என்னுடைய தன்மை எய்துகின்றனர்.'** IV (10)

(என்னுடைய தன்மை—என் இயல்பு தெய்வீக ஆற்றலாம்—சக்தி வடிவாம் என் தன்மை)

அவதாரத்தின் நோக்கம், அதர்மத்தை அழித்தலும் தருமத்தை நிலைநாட்டல் மட்டுமே அல்ல. மக்கள் இனத்தை படிப்படியாக முன்னேற்றமடையச் செய்து அவர்களுக்கு ஆத்ம விடுதலை அளிப்பதே! அவர்களை ஆத்ம வாழ்வில் நிறைவுறச் செய்வதே!

விடுதலை அடைந்த ஆத்மா உலகிலேயே வானுறையும் தெய்வமாகிறது. விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி

வந்த இறைவனின் அவதார நோக்கம் மண்ணிலிருக்கும் மானுடனை இறை நிலைக்கு உயர்த்துவதே அல்லவா? தர்மத்தின் (அறத்தின்) குறிக்கோளை, குறைபாடுற்ற மனித குலத்தை முழுநிறைவாக்குவதே அல்லவா?

**'பார்த்தா! எவரெவர் என்னை எப்படி எப்படி (எந்த உருவிலே, எந்தப் பெயரிலே) வழிபடுகிறார்களோ, அவரவர் களுக்கு நான் அப்படியே (அந்த உருவம், அப்பெயரிலேயே) அருள் செய்கிறேன். மக்கள் எவ்வகையிலும், எந்நெறி முறை யிலும் என் வழியையே பின்பற்றுகின்றனர்.'** IV (11)

இறைவன் ஒரு நாமம், ஓர் உருவம் ஒன்று மிலான். அவனை ஆயிரம் திருநாமங்களால் வழிபடுகிறோம். அவனை ஆயிரம் திரு உருவங்களாகக் காண்கிறோம்

'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்'

என்கிறது சித்தியார்.

இந்தச் சுலோகம் நம் சமயத்தின் விரிந்த உளப்பாங்குக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைகிறது.

இறைவன் தன் பக்தன் (தன் அடியவன்) முன், அவன் உள்ளத்தில் வேண்டும் வரம் அருள, அவன் தியானிக்கும் (வழிபடும்) வடிவத்தோடு எழுந்தருள்கிறான். அவன் யாருடைய நம்பிக்கையையும் பாழ்படுத்துவதில்லை. ஆனால் அவரவர் இயல்புக்கு ஏற்ற நம்பிக்கையை அவன் வளர்த்து விடுகிறான்.

இந்தியத் தத்துவ ஞானிகள் நாம் பரம்பொருளை அடையத்தக்க வியக்கத்தகு பற்பல வழிமுறைகளை வகுத்துள்ளனர். அவைகளையே இந்தச் சுலோகம் குறிப்பிடு கின்றது.

ஒவ்வொரு மனிதன் இயல்புக்கு ஏற்றபடி அவன் வழி படும் முறை, மதம் வேறுபடுகிறது. யார் யார் எவ்வெக் கொள்கைகளோடு இறைவனை வணங்கினாலும் இறைவன் அவர்கள் அனைவருக்கும் ஊக்கந்தந்து, அவர்கள் தம்மை வந்தடைய அருள் செய்கிறார். எல்லா ஆறுகளும் கடலை நோக்கி ஓடுவதைப் போல எல்லா மத நம்பிக்கைகளும் கொள்கைகளும் ஒரே இறைவனை நோக்கி அவனையே தம் இலக்காகக் கொண்டு போகின்றன.

**'தாம் செய்யும் கருமத்தின் பலனை அடையும் இச்சை உடையவர்கள், இப்பிறப்பிலே தேவதைகளைத் தொழு கின்றனர். ஏனெனில் மானுட லோகத்திலே கரும பலன் விரைவிலே உண்டாகின்றது (அடையப்படுகிறது).'** IV (12)

மக்கள் பலவகைப்பட்ட மன வேறுபாடு உடையவர்கள். அவர்கள் இச்சிக்கின்ற பொருள்களும் அப்படியே பல்வேறு வகைப்பட்டனவே. உலக மாந்தர்கள் அனைவரும் கூர்ந்து வேறுபாடு உணரும் தன்மையற்றவர்கள். ஏனெனில் அனாதிகாலந் தொட்டு அவர்கள் (ஆத்மாக்கள்) இயற்றிய வினைப்பயன்களின் தொகுதியாம் பாவங்கள் அவர்களை விட்டு முழுதுமாக விலகிப் போகவில்லை. எனவே அவர்கள் வினை இயல்புக்குத் தக்க மன இயல்போடு கருமம் ஆற்று கின்றனர்; சிறு தெய்வ வழிபாட்டை மேற்கொள்ளு கின்றனர்; விரைவிலே பயனடையத் தக்க வழிபாட்டு முறை களைப் பின்பற்றுகின்றனர். இந்த வகையிலே, அவர்கள் செய் கின்ற கருமத்துக்கு ஏற்ற கருமபலன்களைக் கட்டாயம் அடைகின்றனர். இவ்வாறு செய்யப்படும் பூசைகளையும் கண்ணன் ஏற்று, அவர்களுக்கும் அந்தந்த தேவதைகளின் வடிவத்திலே அருள் புரிகிறார்.

**'மக்களின் சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் ஆகிய முக்குணங்களின் ஏற்றத் தாழ்வுக்கும், அவரவர்கள் செய்கின்ற தொழில் வேறுபாடுகள், பழக்க வழக்கங்களுக்கும் ஏற்றவாறு நான்கு வகைக் குலத்தை நான் படைத்தேன். அதற்கு நான் கர்த்தா ஆன போதிலும் என்னைப் பற்றுதல்**

அற்றவன் என்றும், அவைகளை உண்டு செய்தவன் நான் என்றும் அறிக.' IV (13)

குண நலன்கள் தொழில் வேறுபாடுகள் இவைக்கு ஏற்ற படிதான் மக்கள் வேறுபட்டுள்ளனர். அக்காலத்திலே சதுர் வர்ணம் எனப் பிரிக்கப்பட்டதே இந்த அடிப்படையிலே தான். ஆனால் பிராமணன் மகன் பிராமணனே என்றும், க்ஷத்திரியன் மகன் க்ஷத்திரியனே என்றும் பிறப்பின்பாற்பட்டு வருணம் ஒதுக்கப்பட்டதை அக்காலத்திலேயே சிந்தனை யாளர்கள் கண்டித்தனர்.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்'

என்றும்,

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக்கல்'

என்றும்,

(பிறப்பு வகையில் ஏற்றத் தாழ்வே கிடையாது எனவும் தாம் தாம் செய்யும் கருமத்துக்கும் அதனால் சமுதாயம் அடையும் நன்மைக்கும் ஏற்பவே அவனவன் சிறப்படை வதும் இழிவடைவதும் உண்டாம் என்றும்) வள்ளுவர் கூறுகிறார்.

வசிட்டன் பௌத்திரனாகிய பராசரனுக்கும் சத்தியவதி எனும் மீன் வாணிச்சிக்கும் பிறந்தவரே வேத வியாசர்; வேதங்களைச் சிக்கறுத்த மாமேதை.

இதைப் போன்ற மேற்கோள்கள் பல உள. மக்கள் தத்தம் கருமத்தால்தான் சிறப்படைகின்றனர். வியாசரும் அப்படியே!

இனி மக்கள் தங்கள் சமூகச் சூழலுக்கும் அதன் பாது காப்பிற்கும் ஏற்பத் தங்கள் தங்கள் தொழிலுக்கு ஏற்ப வகுத்துக் கொண்ட குலமுறைகளைக் கண்ணன் தானே உண்டாக்கித் தந்ததாக சொன்னது ஏனெனில், அது சமுதாயப் பாதுகாப்புக்கு ஒரு வேலியாக. அறநெறி நிலை

குலைந்து போகாமலிருக்க ஒரு பாதுகாப்பாக அமைந் திருந்ததால் என்க. அதைத் தானே படைத்ததாக—'மக்கட் செயலை மகேசன் செயலாக ஏற்றுக்கொண்டான்' கண் ணன். ஆனால் அடுத்த வரியிலேயே இப்படி உண்டு செய்த வன் நான் அன்று என நீ உணர்க என்கிறார். ஏன்? காரணம் என்ன? விடை அடுத்த சுலோகத்திலேயே வருகிறது:

**'கருமங்கள் என்னைத் தீண்ட மாட்டா. எனக்குக் கருமபலன்களிலே இச்சை கிடையாது. இவ்வகையாக என்னை உணர்ந்த ஞானிகள் கருமங்களால் கட்டுப்பட மாட் டார்கள்.** IV (14)

மக்களைப் போல் பலன் கருதி நான் கருமங்களைச் செய்யாமையால்கருமங்களாவது கருமபலனாவது என்னைப் பிணிப்பதில்லை (கட்டுப்படுத்தல் இல்லை). இந்த வகையில் என்னை உள்ளபடி உணர்ந்தவன் என்னைப் போலவே கருமங்களாலும் கரும பலனாலும் கட்டுப்படுவதில்லை.

இறைவன் படைத்த படைப்பாகிய உயிர்களிலும் பல வகை வேறுபாடுகள் உளவே. பலவகை வேறுபாடுகளைக் கொண்ட உயிரினங்களை இறைவன் படைப்பது பாரபட்ச மல்லவோ? என்றால், அவ்வவ் உயிரினங்கள் தாம்தாம் இயற்றிய நற்கருமம் தீக்கருமங்களுக்கு ஏற்ப வினையின் பயனால் படைக்கப் படுவனவே ஒழிய அது இறைவன் திருவுளமன்று.

'வினைப்போகமே ஒரு தேகங்கண்டாய்', என்கிறார் பட்டினத்தடிகள்.

இந்த வகையிலே ஒவ்வொரு ஆத்மாவும் தனது பழ வினைக் கேற்ப உடல்களும் உறுப்புக்களும் பெற்று பிறப் பெய்துகின்றன. இவ்வகையிலும் இறைவன் பார பட்சம் அற்றவனே—கட்டுப்படாதவனே!

என்னைப் பற்றற்றவனாக உண்மையாகவே உணர்ந்து அந்த வகையிலேயே வழி பாடாற்றுகிறவன் பற்றிலிருந்து

உண்மையாகவே விடுபடுகிறவன். மனிதன் தான் நீடு நினைக்கின்ற வண்ணமாகவே மாறுகிறான் என்கிறது மனோதத்துவம்;—வள்ளுவரும்,

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு.
—என்கிறார்.

இருள் சேர்ந்த இருவினைகளாலும் கட்டுப்படாதவன், இறைவனே என நினைத்து வழிபடும் உள்ளத்திலே இருவினைகளும் வினைப்பயன்களும் சென்று அடைவதில்லை.

**'வீடு பேறடைய விழைந்த பண்டைய கால முனிவர்களும் யோகியரும் இது இங்ஙனம் என்றறிந்து, கருமத்தைக் கடைபிடித்து ஒழுகினார்கள். எனவே நீயும் பண்டைய நாளில் முன்னோர் கடைபிடித்தொழுகிய கர்மத்தைச் செய்க!'** IV (15)

பாமரதன் தன் கருமத்தை ஆத்ம சுத்திக்காகச் செய்கிறான். ஆனால் ஞானியோ தன் கருமத்தை உலக நன்மைக்கெனச் செய்கிறான்.

பண்டைய நாளில் ஞானிகள் தத்தம் கருமங்களைச் செய்த முறைப்படி, அம்மரபிலேயே, அருச்சுனனையும் ஒரு போர் வீரன் என்கிற முறையில் தன் கடமையை ஆற்ற உத்தரவிடுகிறார் கண்ணன்.

**'வினை (கர்மம்) எது? வினையற்றது (அகர்மம்) எது? என்பதில் ஞானிகளும், குழப்பமடைகின்றனர். நான் உனக்குக் கர்மம் எது? என்பதைப்போதிக்கிறேன். அதை நீ நன்குணர்ந்து கேட்டிலிருந்து விடுபடுவாயாக!'** IV (16)

அகங்கார மமகாரங்களைத் துறந்துவிட்ட ஞானியும் தன் கருமத்தைப் பிறர் பொருட்டும் உலக நன்மையின் பொருட்டும் பலனில் ஆசையின்றி ஆற்றுகிறான். பண்டைய காலந் தொட்டு, மரபின் வழிவந்தது இம்முறை. இதை நீ கைக்கொள்க என்கிறார் கண்ணன்.

ஆத்மாவுக்குச் செய்வதும் செய்யாமல் இருப்பதுமாகிய, கருமம், அகருமம் இரண்டுமில்லை. உடல், உள்ளம் இந்திரியங்கள் இவைகளின் இயக்கம் அல்லது செய்கையே கருமம் என்றும், உடல் உள்ளம் இந்திரியங்கள் செயல் அல்லது இயக்கம் இவைகளில் ஈடுபடாமல் இருக்கின்றனவோ அவை அகருமம் (செயல் அற்ற தன்மை) என்றும் சொல்லப்படும். பாமரர்கள் கருமம், அகருமத்தை ஆத்மாவின் மேல் ஏற்றி நான் செய்கிறேன்; நான் செய்யவில்லை என்று சொல்லுகிறார்கள்.

எனவே கருமத்தைப் பற்றிக் கண்ணன் விளக்குகிறார்.

**'கருமத்தைப் பற்றியும், அதன் போக்கைப்பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். விலக்கப்பட்ட கருமத்தைப் பற்றியும் (விகர்மம்) எவை எவை விலக்க வேண்டும் என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். கருமமற்ற கருமம் (கருமம் கடந்த நிலையைப்) பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் கருமத்தின் உண்மை உருவம் அறிதற்கரியது.**

IV (17)

எதுதான் சரியான தொழில்—நிலை—போக்கு என்பது பொதுவாக ஐயத்துக்கிடமானதே; தெளிவானதல்ல. நம் காலத்திய நினைவு, கருத்துருவம், நம் மரபின்—மூதாதையரின்—விதியமைப்பு, மனச் சான்றின் உள்ளோலம் (உள்ளொலி) இவையாவும் ஒன்று கலந்து கதம்பமாகி நம்மைக் குழப்புகின்றன. இவை யாவற்றின் இடையிலேயும் ஊடுருவி ஞானிகள், தாம் உணர்ந்த தத்துவங்களின், நுண்ணறிவுத் திறத்தினால், மாற்ற முடியாத நிலையான உண்மையின் சான்றோடு இவைகளில் இருந்து விடுபட வழியை நாடுகின்றனர்; தேடிச் செல்கின்றனர்.

இந்த வகையிலே,

**'கருமத்திலே, அகருமத்தை எவன் அறிகின்றானோ, அகருமத்தில் கருமத்தை எவன் பார்க்கிறானோ அவனே புத்தி**

மான்; அவனே யோகி; அவனே எல்லாக் கருமங்களையும் செய்து முடித்தவன்.' IV (18)

நம் ஆத்மா கருமம் செய்வதுபோல் காணப்பட்டாலும், உண்மையிலே தொழில் செய்வது—இயங்குவது—உடல் உள்ளம், இந்திரியங்களே என்பதையும், ஆத்மா கருமம் செய்வதில்லை என்பதையும் அறிகின்றவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கிறான்.

புகைவண்டியிலே பயணம் செய்கிறவன் நிலத்தில் உள்ள மரங்கள் தன்னை எதிர்த்து ஓடுவதாகக் காண்கிறான். மிக வேகமுடன் செல்வதாக் காணப்படும் மரங்களிலே அதாவது செயலற்றுள்ள மரங்களிலே வேகமாக ஓடும் செய்கையைக் காண்கிறான்.

இத் தன்மையிலேதான், உடல், உள்ளம் இந்திரியங்கள் செய்கின்ற கருமங்களை ஒருவன் ஆத்மா செய்வதாகக்காண் கிறான். இங்ஙனம் காண்பதே அகருமத்தில் கருமமாகும்.

ஒரு பாமரன் உடலையே "தான்" என்னும் ஆத்மாவாகக் கருதி, நான் வேலை செய்கிறேன், நான் சும்மா இருக்கிறேன் என்கிறான். இவன் வேலை செய்தாலும் சும்மா கிடந்தாலும், 'நான்' என்னும் முனைப்பு இருக்கிறது. நான் செய்கிறேன் என்னும் கர்த்தாவாம் தன்மை இருக்கிறது. இவ்விரண்டும் உள்ளவரை, அவன் கர்மம் செய்பவனே, இதுவும் அகருமத்தில் கருமமே! ஏனெனில் நான் என்னும் அகங்காரத்தில் கருமம் பொருந்தி இருப்பதால் என்க.

இந்த முறையிலே ஆத்மாவிடம் எவ்வித கருமமும் கிடையாது. ஆனால் தேகம், உள்ளம், இவைகள், வேலையற்றுச் சும்மா இருப்பதைப் போல காணப்பட்டாலும் அவைகளுக்கு ஓய்வென்பதில்லை; சதா கருமம்தான்.

யாதொரு பற்றுமின்றி நாம் நம் கடமையைச் செய்யும் போது, நம்முடைய உள்ளம் சமநிலையில் இருந்து தவறுவதில்லை; சலனமடைவதில்லை. ஆசையின் வாயிலாக

ஏற்படும் கருமத்தை நாம் செய்யும் காலத்திலே, அச்செயலில் இருந்து நம்மை நாம் விலக்கிக்கொண்டு, நம்மை (ஆத்மாவை) பிரம்மத்திலே இணைத்தபடி, நாம் நம்முடைய கடமைகளை ஆற்ற வேண்டும்.

இந்த வகையிலே அகர்மம் (செயலின்மை) என்பது நம்முடைய அக நிறைவமைதியைப் பாதுகாத்தலும், பற்றிலிருந்து முற்றும் விடுபடுதலுமே ஆகும். பணியாற்றுதலினால் ஏற்படும் பந்தத்திலிருந்து விடுபடுதலே அகர்மம். ஏனெனில் அது பற்றற்ற நிலையிலே செய்யப்படுகிறது. பற்றற்ற நிலையில் பணி செய்வோன் பந்தப்படுதலில்லை.

**'எவனுடைய சகல கருமங்களும், காமம், சங்கல்பம் (விருப்பம்) என்பன அற்றிருக்குமோ அவனை—ஞானத்தீயால்—எரிக்கப்பட்ட கருமத்தை உடைய அவனைத்தான் ஞானிகள் மகா பண்டிதன் எனப் போற்றுகின்றனர்.'** IV (19)

ஒருவனுடைய கருமங்கள் யாவும் ஆசை, விருப்பம் என்னும் அடிப்படை இல்லாமல் இருந்தால், அவன் தன்னலமற்ற சருமங்களை ஆற்றுகிறான் என்பதாம். அவனிடம் 'நான்' என்னும் அகங்காரம் இல்லை. தான் கர்த்தா எனும் நினைவும் இல்லை.

தன்னிடம் வந்தடைந்த அனைத்துக் கருமங்களையும் அவன் இறைவன் என்னும் அக்கினியிலே ஆகுதியாகப் பெய்துவிடுகிறான். ஆகையினால் அவன் எக்காலத்தும் ஓயாது கருமங்களை ஆற்றினாலும் அவன் கருமத் தளையால் பிணிபடுவதில்லை. அவன் செயலாற்றினாலும் "சும்மா" இருப்பவனே.

**'கரும பலனிலே ஆசையைத் துறந்துவிட்டவனாய், எக்காலத்தும் மனநிறைவுடையவனாய்; எதையும், எவரையும் சாராதவனாய் இருப்பவன் எவனோ அவனே கருமத்தில் ஈடுபட்டிருந்த போதிலும் எக்கருமமும் இயற்றுபவன் அல்லன்.'** IV (20)

கருமத்திலே இச்சையையும் கரும பலனிலே அடைகின்ற ஆசையையும் துறந்து விடுதல் வேண்டும். அப்படிப்பட்டவன் பற்றற்ற காரணத்தால் எக்காலத்தும் மனம் நிறைவுடையவனாகவே இருப்பான். அவனுக்குக் கர்ம பலனிலே ஆசை இல்லை. பொருள், போகம், புகழ் அடைய வேண்டிய குறிக்கோள் இல்லை. எனவே அவன் எதையும் யாரையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியமும் இல்லை. இப்படிப்பட்டவனே கர்மம் செய்யுங்காலத்தும் அகர்மத்தில் நிலை பெற்றிருப்பவன். இப்படிப்பட்டவனே, தன் ஆத்மாவிலே நிலைத்து அதிலே திருப்தி அடைபவன். இப்படிப்பட்டவனே தன் முழுமனதோடு கர்மங்களில் ஈடுபட்டு இருப்பினும் எக்கருமமும் செய்கின்றவனல்லன்.

கருமயோகம்; கருமம். நாம் பணியாற்றும் செயலல்ல. நாம் எப்படி அதைக் கருதுகிறோம் ஏற்றுக் கொள்கிறோம் என்பதுதான்.

Karma Yoga is not Yoga of action it is the attitude with reference to your action and its results how you look at it.)

**'அவாவைத் துறந்தவன், (யத சித்தாத்மா) உள்ளத்தையும் உடலையும் அடக்கினவன், எனது எனச் சொல்லப்படும் எல்லாப் பொருள்களையும் துறந்து விட்டவன்; இப்படிப்பட்ட ஒருவன் தன்னுடைய வெறும் உடலால் மட்டுமே கர்மம் செய்கிறவன் ஆவான். அவன் பாவத்தை அடைவதே இல்லை.'** IV (21)

இந்த சுலோகத்திலே 'யத சித்தாத்மா' எனச் சொல்லப்படுவதின் பொருள், தன் புத்தியையும் (அறிவையும்) தன் உள்ளத்தையும் தன்னுடைய கட்டுப்பாட்டிலே அடக்கி வைத்திருப்பவன் என்பதாம்.

தன்னுடைய ஆத்மாவை மட்டுமே 'தான்' 'தனது' எனக் காண்பவனே, உலகத்தின் பிற பொருள்கள் அனைத்தையும் தனதல்ல எனக் கருதக்கூடும். உலகத்திலே இருந்து

அடையும் எதுவுமே, அவனுக்குத் தன் பொருள் அல்ல. அதன் சொந்தக்காரன்தான் அல்லன்.

இந்தக் குணநலன்களை உடையவன் தன் உடலால் மட்டும் ஓயாமல் எப்படிப்பட்ட தொழில் செய்யினும், அதனால், அவன் பந்தப்படுவதில்லை. எனவே எந்தப் பாவமும் அவனை அணுகுவதில்லை.

மனிதனின் புறச் செயல்களில் அறமும், மறமும் கிடையாது. தன்னிடமிருந்து எவனொருவன் தன் அவா (காமத்தையும்)வையும், தான் என்னும் அகந்தையையும் அறுத்து எறிந்து விடுகிறானோ, அவன் தெய்வீக ஆற்றலை பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடி போன்றவனாகிறான். அவனுடைய ஆத்மாவோ, தெய்வீக ஆற்றலின் வாய்க்காலாக மாறிவிடுகிறது.

**'நல்ல வாய்ப்புக்களால் கிடைக்கும் பொருள்களால், மன நிறைவடைபவன், நன்மை, தீமை, மகிழ்ச்சி, துக்கம் எனும் இருமைகள் அனைத்தையும் கடந்தவன்; பொறாமை இல்லாதவன், வெற்றியிலும், தோல்வியிலும் மனம் சலனமில்லாதவன்; எக்கர்மங்களைச் செய்த போதிலும், கருமங்களால் கட்டுப் படுவதில்லை.'** I✓ (22)

தன்னை அறிந்தவன், தனக்கென வாழாதவன், செய்யும் கருமங்களுக்குத் தான் 'கர்த்தா' ஆவதில்லை. தன் வாழ்க்கைப் பாதையிலே தானாக தனக்கு வந்தெய்தும் பொருள்களை அவன் இறைவனது பிரசாதமாகக் கொண்டு வாழ்கிறான். தான் என்னும் மயக்கத்தோடு தனக்கென வாழும் வாழ்க்கையிலே தான் இயற்றும் செயல்களால் நன்மை, தீமை, சுகம், துக்கம் ஆகிய இருமைகளை அடைகிறான் மனிதன். வெற்றியும் தோல்வியும் அவன் உள்ளத்தை பாதிக்கின்றன.

தனக்கென வாழாதவன், ஆத்மாவே தான் எனத் தன்னை உணர்ந்தவன், உலகிலே பலர் வாழ்கின்ற பகட்டு

வாழ்க்கையைக் கண்டு பொறாமைப் படுவதில்லை. ஏனெனில் அவன் யாக்கை, இளமை, செல்வம் முதலிய யாவும் நிலையற்றவை என்பதை உணர்ந்தவன். அவன் தன் செயல் என எதையும் கருதுவதில்லை. 'என் செயலால் ஆவது யாதொன்றும் இல்லை; இனி தெய்வமே உன் செயலே என்று உணரப் பெற்றேன்' என்று உணர்ந்தவனுக்குத் தான் பற்றற்று செய்யும் கருமங்களால் உண்டாகும் வெற்றியும் தோல்வியும் ஒரே தன்மைத்து. அவன் வெற்றியில் களிக்காமல் தோல்வியில் துவளாமல் சமநிலையில் இருப்பான்; கர்மம் அவனைப் பந்தப் படுத்தாது.

அடுத்து வரும் 23-ஆம் சுலோகத்திலிருந்து 33-ஆம் சுலோகம் முடிய வேதங்களிலே விவரிக்கப்பட்டுள்ள கர்மத்தால் ஆகும் பல வகை வேள்விகளைப் பற்றிப் பகவான் கண்ணன், பார்த்தனுக்கு விளக்குகிறார்.

**'தனக்கென ஒரு பற்றுமற்றவனுடைய, முத்திநிலை எய்தியவனுடைய, தன் உள்ளத்தினை ஞானத்திலே உறுதியாக ஊன்றியவனுடைய, வேள்வியாக—வேள்விக்கெனச் செய்யப்படும் கருமங்கள் அனைத்தும் (நீரில் இட்ட உப்பென) கரைந்து போகின்றன.'** IV (23)

இந்தச் சுலோகத்திலே முத்திநிலை என்பதை ஸ்ரீசங்கரர் தம் பாஷியத்திலே தர்மம் அதர்மம் எனும் இருமையில் இருந்து விடுபட்ட தன்மை என்பதாகப் பொருள் கொள்ளுகிறார்.

பந்தமும், பந்த நீக்கமும் உள்ளத்தின் செயல்கள். தன் கருமங்கள் அனைத்துமே வேள்வியாக இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்படும் கருமமாகக் கருதும் ஒருவனுடைய கருமங்கள் அனைத்தும் கரைந்து போகின்றன.

அதைப் போலவே, எவனுடைய உள்ளம் ஞானத்திலே உறுதியாக நிலைத்துள்ளதோ, எவன் பற்றற்றவனோ, எவன் இருமையில் (நன்மை தீமை, தர்மம் அதர்மம்)

இவைகளில் இருந்து விடுபட்டவனோ அவன், வேள்விக் கெனச் செய்யும் எல்லாக் கருமங்களும் நிச்சயமாகக் கரைந்து போகும்.

**'காணிக்கையாகச் சமர்ப்பித்தலும் பிரம்மமே! பிரம்மமாகிய வேள்வித்தீயிலே சொரிகின்ற நெய் முதலிய அவிசுப் பொருள்களும் பிரம்மமே! எனவே வேள்வி என்பது பிரம்மமாகிய அக்னியிலே, பிரம்மத்தால் (வேள்வி செய்வோனால்) பிரம்மம் (அவிசுகள் நெய் முதலியன) கொடுக்கப்படுகிறது. செய்யப்படும் (வேள்வி எனும்) பிரம்மமாகிய கர்மத்தால் மனம் குவிந்துள்ள (சலனமற்ற) அவனால், அடையப்படுவதும் பிரம்மமே ஆகும்.'** IV (24)

*எரியும் வேள்வித் தீயிலே இறைவனைக் காண்கின்றான் அவன். சொரியும் நெய், தானியங்கள் முதலிய அவிசுகளிலே இறைவனைக் காண்கின்றான் அவன். அப்படிப்பட்டவன் வேள்வி இயற்றும் தானும் (தானல்லன்) பிரம்மமே எனவும் காண்கிறான். அர்ப்பணம் செய்யப்படும் அனைத்தும் பிரம்மத்தால் பிரம்மத்திற்குச் சமர்ப்பணம் என்னும், குவிந்த உள்ளத்தோடு, அவன் இயற்றும் வேள்விப்பயனாக, அவனால் அடையப்படுவதும் பிரம்மமே ஆகும்.*

*'உண்ணும் சோறும் பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' என்னும் மகான்கள் உரை இங்கு கருதத்தக்கது.*

*காக்கைச் சிறகிலும் பார்க்கும் மரத்திலும் கண்ணன் நிறத்தையும்; கேட்கும் ஒலியிலே அவன் கீதத்தையும் கண்டதாகக், கேட்டதாகப் பாடிய பாரதியின் பாட்டையும் இச்சுலோகத்தோடு இணைத்து சிந்திக்கத் தக்கது.*

*எனவே, எவன் உலகத்தில், தான் காண்கின்ற ஒவ்வொரு பொருளிலும் இறைவனே ஊடுருவி உள்ளதாக —நிறைந்திருப்பதாக நினைத்துத் தான் செய்யும் ஒவ்வொரு*

செயலும் இறைவனே (ஈசுவரார்ப்பணம்) என்று கருது கின்றானோ அவனே பிரம்மமாகின்றான்.

இந்தச் சுலோகத்திலே, வேள்வித்தீ, அவிசுகள், வேள்வி செய்பவன், சமர்ப்பணம் செய்யப்படும் செயல் யாவுமே பிரம்மமாகக் காண்கிறவன் அடைகின்றது பிரம்மம் ஒன்றையே, என்பதிலே நாம் அறிவது யாதெனில் அடையப் படும் பிரம்மம் ஒன்றே நித்தியமானது, பாவனையால் பிரம்மமாகக் கருதப்படும் பிற யாவும் அநித்தியமானவை என்பதும், நெய்யானது வேள்வித்தீயில் எவ்வாறு சேர்க்கப்படுகிறதோ அவ்வாறே உபாதி உடைய ஆத்மாவும் உபாநியற்ற பரமாத்மாவில் சேர்க்கப்படுகிறது என்பதுவுமே ஆகும்.

**‘ஒரு சில யோகிகள் (இந்திரன் முதலிய தேவர்கட்கு) வேள்வி செய்கிறார்கள். மற்றும் சிலர் தங்கள் ஆத்மாவைக் கொண்டு பிரம்மமாகிய அக்னியிலே, (உபாதியுடைய) ஆத்மாவையே ஆகுதியாக்கி, யாகம் (வேள்வி) இயற்று கின்றனர்.’** IV (25)

ஒருவகை யாகம் இது.

இறைவனைப் பல ரூபங்களாகக் காண்பவர்கள், பல பெயரிட்டழைப்பவர்கள், தங்கள் வேள்வி மூலமாகத் தேவர் களது அருளைப் பெற வேள்வி இயற்றுகின்றனர். இது பிரவிருத்தி மார்க்கம். இவர்கள் கர்ம யோகிகள்.

அடுத்து சொல்லப்படுபவர்கள், தாங்கள் தங்கள் ஆத்மா விலே வாழ்பவர்கள், தங்களையே அறிந்தவர்கள், அவர்களது ஆகுதியோ, உருவகமானது. தங்களது செயல்கள் மட்டு மல்ல, தங்களையே வேள்வித்தீயிலே இறைவனுக்கு ஆகுதி யாக அர்ப்பணிப்பவர்கள் ஆவார்கள். இது நிவர்த்தி மார்க்கம். இவர்கள் ஞான யோகிகள்.

மற்றொரு வகை வேள்வி இது.

**‘சிலர் செவி முதலாகிய இந்திரியங்களைப் (ஐம்பொறி களையும்) பொருளின்பங்களில் (விஷயாதிகளில்) செலுத்தா**

**மல் அடக்குவதாகிய அக்னியில் ஹோமம் செய்கின்றனர். வேறு சிலர் சப்தம் முதலிய விஷயங்களை இந்திரியங்கள் எனும் தீயிலே ஹோமம் செய்கின்றனர்.'** IV (26)

*இச்சுலோகத்திலும் இரண்டு விதமான ஆகுதிகள் சொல்லப்படுகின்றன. ஒன்று பொறிவாயில் ஐந்து வகைப் பட்ட புலன் நுகர்ச்சிகளை விஷயங்களில் செல்லாமல் அடக்குதல்.*

*மற்றொன்று மேற்சொல்லப்பட்ட ஐவகைப் புலன் நுகர்ச்சிகளை இறைவன் விஷயங்களில் பொருந்தும்படிச் செய்தல்.*

*இவை ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாகக் காணப் பட்டாலும் முரண்பட்டனவல்ல.*

*அடக்கப்பட்ட புலன் நுகர்ச்சிகள் செயல்பாடற்று விடுவ தால் மனம் தெளிவடைகிறது. இது ஒருவகை யக்ஞம் (வேள்வி) இங்குப் புலன் நுகர்ச்சிகள் போகப் பொருள் களிடம் சென்று பற்றாமல் தடை செய்யப்படுகின்றன.*

*மற்றொன்று, ஐவகைப் புலன் நுகர்வுகளும், இறைவன் தொடர்பானவற்றையே சென்று பொருந்தி நிற்குமானால் மனம் தெளிவடைகின்றது.*

*ஐம்புலன்களும், இங்கு போகப் பொருள்களைச் சென்று பற்றாமல் இறைவனிடமே சென்று பற்றி நிற்பதால் புலன் களின் கண்மூடித்தனமான, பயங்கரமான போக்கு மாற்றப் படுகிறது. இந்நிலையில் கண்கள் கண்ணனையே காணவும், செவிகள் அவன் குழலிசையையே—அவன் புகழையே கேட்க வும், வாய் அவன் புகழையே பாடவும் நெஞ்சம் அவனையே நினைக்கவும், புலன்கள் உதவி செய்கின்றன; இதுவும் வேள்வியே—ஞான யக்ஞமே.*

*வேறொரு வகை யக்ஞம் இங்குச் சொல்லப்படுகிறது.*

'மற்றும் சிலர், பொறிகளால் (ஞான, கர்ம இந்திரியங்களால்) இயற்றப்படும் எல்லாக் கருமங்களையும், பிராணன், அபானன் எனும் தசவாயுக்களால் இயற்றப்படும் எல்லா வினைகளையும், உள்ளத்தை ஆத்மாவிலே ஒடுக்குதல் என்னும் ஞான ஒளி வீசும் யோக அக்னியில் ஆகுதியாக (அவிசாக)த் தருகின்றனர்.' IV (27)

இந்திரிய கர்மங்கள் எனக் குறிப்பிடப்படுவது, ஞானேந்திரிய கர்மேந்திரிய கர்மங்களையே. பார்த்தல், கேட்டல், முகர்தல் ஆகிய ஐம்புலன் நுகர்ச்சிகளையும், பேசுதல் நடத்தல், செய்தல் முதலிய செயல்களைச் செய்யும் கர்மேந்திரியச் செயல்களையும் உடலிலே இயங்கும் பிராணன், அபானன் எனும் தச வாயுக்களின் செய்கைகளையும், உள்ளத்தை ஆத்மாவினிடத்திலே அடக்கிக் கொள்ளல் எனும் ஞானத்தீயிலே இங்கு அவிசாகக் கொடுக்கபபடுகிறது. ஞான கர்மேந்திரியங்களின் செயல்பாடுகளிலிருந்தும், உடலிலே வியாபித்துள்ள உயிர்ச் சக்தி (பிராணன் யின் செயல்பாட்டிலிருந்தும் தன் மனத்தினை, ஈடுபடுத்தும் கெட்ட பழக்கத்திலிருந்து தடுத்து நிறுத்தும் கடும் போராட்டத்தினையே இச்சுலோகம் குறிப்பிடுகிறது.

'அங்ஙனமே, சிலர் திரவிய (பொருள்) யாகம் செய்வார்கள். வேறு சிலர், தவத்தையே, யாகமாகச் செய்வார்கள். மற்றும் சிலர், யோகத்தையே யாகமாகக் கொள்வார்கள். கடுமையான விரதமும் தன்னடக்கமும் உடைய வேறு சிலர் ஞான நூல்களைக் கற்றல் கேட்டலாம் ஞானம் அடைதலையே யாகமாகக் கொள்வார்கள்.' IV (28)

இங்குச் சொல்லப்பட்டுள்ளவைகள் அனைத்தும் ஒவ்வொரு வகையில் வேள்விகளே! தாம் நல்வழியில் ஈட்டிய பொருளைக் கொண்டு மக்களின் பசிப்பிணியைப் போக்குதலும், இல்லார்க்கு ஈந்து உதவுதலும், பொருளைக்கொண்டு கோயில் கைங்கரியம் செய்தலும், குளம், கேணிகள் அமைத்தலும் ஆகிய இவை யாவும் திரவிய யக்ஞத்திலேதான்

அடங்கும். இவைகளுக்கும் அடிப்படையாகத் தேவைப் படுவது தான் தன் ஆத்மாவில் வாழ்தலும், தன்னலமற்ற, பலனை எதிர்பாராது செயலாற்றும் தன்மையுமேயாம்.

அடுத்து தவத்தையே வேள்வியாகக் கொள்வார்கள் சிலர். விரதம் காத்து, உடலை வருந்தி, காய்கனிகளையே புசித்து, ஊண் உறக்கம் நீத்து, கண்மூடி மௌனியாகி, தன் வழிபடு கடவுளை நோக்கிச் சிந்தையை ஒருமுகப்படுத் தித் தவத்திலே ஈடுபடுதலும் ஒருவகை யாகமே.

மூன்றாவதாகச் சொல்லப்படுவது : வேறு சிலர் யோகத் தையே யாகமாகக் கொள்கின்றனர் என்பதுதான்.

கரும யோகத்தையும் ஞான யோகத்தையும் சொல்லி விளக்கிக் கொண்டு வந்த பகவான், இங்கே 'யோகத்தையே யாகமாகக் கொள்கின்றனர்' என்பது, இவை இரண்டு மல்லாத யோகம் என்ற சொல்லால் மட்டுமே குறிக்கப்படுவ தான ராஜயோகத்தையே என்பது விளங்கும்.

இதையே 'அஷ்டாங்க யோகம்' என்றும் கூறுவர். பதஞ்சலி முனிவர் இயற்றிய யோக சூத்திரங்களில் இந்த அஷ்டாங்க யோகம் விளக்கப்பெறுகிறது. அஷ்ட அங்கம் என்பது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தி யாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டு அங்கங்களே.

இந்த முறையிலே சித்த விருத்திகளை அடக்கி, மனதை ஒருமுகப்படுத்தி மூலாதாரத்திலே உறங்கிக் கிடக்கும் குண்டலி சக்தியை எழச்செய்து, அதை ஆறு ஆதாரங் களிலே செலுத்தி ஆக்ஞா சக்கரத்திலே அதை அடையும் படிச் செய்து, சமாதி நிலையை அடைதலே இந்த ராஜயோக முறையாகும்.

இதையே ராஜ யோகம், அஷ்டாங்க யோகம், குண்டலினி யோகம் எனப் பலபடக் கூறுவர்; இது வரை யறை செய்யப்பட்டுப் படிப்படியாகப் பழகிச் சென்று, மேல்

நிலையை அடைய அக்கால யோகிகள் வழிவகுத்துச் சென்றுள்ள காரணத்தால் இதை ராஜயோகம் என்று கூறுவர் ஆன்றோர்.

அடுத்துச் சொல்லப்படுபவர்கள் கடுமையான விரதமும், தன்னடக்கமும் உடையவர்கள். கடுமையான விரதங்களை மேற்கொள்வதாலும் தன்னடக்கம் உடைமையாலும் சித்த சுத்தி அடைந்த இவர்கள், ஞான நூல்களைக் கற்றல், கேட்டல், அதையே சிந்தித்தல், அவ்வழியே ஒழுகுதல், பிறருக்குப் போதித்தல், உபதேசித்தல், இவைகளையே வேள்வி (யக்ஞம்) யாகக் கொண்டவர்கள் ஆவார்கள்.

**'இவ்வண்ணமாகவே அபான வாயுவில் பிராண வாயுவையும், பிராண வாயுவிலே அபான வாயுவையும், ஹோமம் (ஆகுதி) செய்கின்றனர் சிலர். இவர்கள் பிராண அபான வாயுக்களின் போக்கைத் தடுத்து, பிராணாயாமத்திலே ஈடுபட்டிருப்பவர்கள்.** IV (29)

நாம் சுவாசிக்கும் உயிர்ப்புக்கும் நம் உள்ளத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆழ்ந்து சிந்திக்கும் போது மூச்சு ஒடுங்கி நிற்கிறது. கோபம் மேலோங்கும்போது மூச்சு வேகமாகிறது. பயம், கோபம் இவைகளால் மனம் ஆட்கொள்ளப்படும்போது மூச்சு சிறிது நேரம் நின்று விடுகிறது. பின் பெருமூச்சாகி வெளிப்படுகிறது. இவ்வண்ணம் மனம் ஒடுங்கும் காலத்துப் பிராணன் ஒடுங்குகின்றது என்பதை ஆன்றோர்கள் கண்டனர். அதையே மாற்றிப் பிராணனை ஒடுக்கினால் மனம் ஒடுங்கும் என முடிவு செய்து பிராணனை அபானனிலும் அபானனைப் பிராணனிலும் ஆகுதிசெய்வதன் மூலம் தாம் உயிர்க்கும் வாயுக்களின் போக்கைத் தடுத்து உள்ளத்தை ஒருநிலைப் படுத்தும் யாகத்திலே ஈடுபட்டுள்ளனர் ஒரு சிலர்.

பிராண ஆயம் என்பதே பிராணாயாமம் ஆகிறது. ஆயம் எனும் சொல் அடக்குதல் என்னும் பொருளை

உடையது. இம்முறையிலே உயிர்ச் சத்தியை ஒழுங்குபடுத்துவது பிராணாயாமம்.

இப்பிராணாயாமம் மூன்று பகுதிகளை உடையது. உள்வாங்கும் மூச்சை பூரகம் என்றும் உள்ளே, மூச்சை தம்பனம் (அடக்குதல்) செய்து, வெளிவிடாமல் இருப்பது கும்பகம் என்றும் பின் வெளிவிடும் மூச்சை ரேசகம் என்றும் கூறுவர். இதைப் பழகுங்கால் பன்னிரண்டு மாத்திரைகள் என்றும் இருபத்துநான்கு மாத்திரைகள் என்றும் முப்பத்தாறு மாத்திரைகள் என்றும் பழகுவதுண்டு. இம்மூன்றும் 1. எளிய முறை, 2. இடைத்தர முறை 3. தலையாய முறை என்று சொல்லப்படும்.

இதை நன்கு பயின்ற ஆசிரியர் மூலமாகப் பயில்வதே முறை. சிறிது தவறினும் உடல் நலம் கெடும்.

> ''ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்,
> காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாறில்லை,
> காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாளர்க்கு,
> கூற்றை உதைக்கும் குறியது வாமே."

என்றும்

> ''புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
> நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
> உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
> புறப்பட்டுப் போகான் புரிசடையோனே''

என்றும்

> ''பன்னிரண்டானைக்குப் பகலிரவுள்ளது
> பன்னிரண்டானையைப் பாகன் அறிகிலன்
> பன்னிரண்டானையைப் பாகன் அறிந்தபின்
> பன்னிரண்டானைக்குப் பகலிரவில் லையே!''

என்று சொல்லப்படத் திருமூலர் திருமந்திரக் கருத்துக்கள் இங்குக் கருதத் தக்கன.

**'சிலர் முறையாக உண்பவர்களாய் தம்முடைய பிராண னிலே, தம் பிராணனையே ஆகுதியாகத் தருகின்றனர். (இது மேற்சொன்ன சுலோகத்தின் எஞ்சிய பகுதி) இவ்விதமாகச் சொல்லப்பட்ட இவர்கள் அனைவருமே யாகத்தால் தத்தம் பாவத்தைப் போக்கிக் கொண்டவர்களாவார்கள்.'** IV (30)

*இந்த தேகம் உணவின் பயன். உணவின் தன்மைகளாம் சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் இவ்வுடலிலே உலவி மனத்தைப் பலவழியிலே அலைக்கழிக்கின்றன. அதனால் தான் இவ்வுடலை அன்னமய கோசம் என்கிறோம். சுவைத்த உணவை உண்பதற்கே பிறந்தவனாய் கொழுப்புச் சத்து நிறைந்த, கிளர்ச்சி செய்யும் உணவு வகைகளை அளவுக் கதிகமாக உண்பவன் மிருகமாக உலவுகிறான். ஆனால் உயிர் வாழ மட்டும் (Eat to live) தேவைப்படும் அளவு உணவை—மாறுபாடில்லாத உணவை—முறையோடு உண் பவர்ளே யோகியர்கள். அவர்கள்*

**''உண்டி சுருங்கில் உபாயம் பல உள**
**கண்டம் கருத்த கபாலியுமாமே''**

*என்னும் திருமந்திர நெறி நின்றவர்கள்.*

*முன் சூத்திரத்தின் தொடர்ச்சி இச்சூத்திரத்தின் முதலடி. அதாவது பிராணாயாமமாகிய பிராணனில், பிராணனை ஆகுதி செய்கிறவர்களாம். அவர்கள் தம் பிராண யாமமாகிய வேள்வி இயற்ற அளவான உணவையே அருந்துகின்றனர். பிராணாயாமத்தினை முறையாகப் பயிலும் ஒவ்வொரு சாதகனும் உணவு விஷயத்திலே மிகமிகக் கட்டுப்பாட்டுடன் இருந்து சாதனை செய்தல்வேண்டும் என இது வலியுறுத்துகிறது.*

*இதுவரை, 25 சுலோகம் முதலாக 29 சுலோகம் வரை யிலும் வேதத்திலே கூறப்பட்ட விதவிதமாக யாகங்கள் (வேள்விகள்) விளக்கப்பட்டன. மக்களின் உடல்நிலை, மன நிலை, சூழ்நிலைகளுக்கேற்ப, நாடு, தட்ப, வெப்ப மாறு*

பாடுகள், வாழ்க்கைமுறை இவைகளுக்கேற்ப, ஒவ்வொரு வரும், இவ்வகைப்பட்ட ஏதாவது ஒரு வேள்வியினை ஆற்ற கடமைப் பட்டுள்ளனர். இப்படி இங்குக் கூறிய எந்த ஒரு வேள்வியையேனும் ஒருவன் உளமாற, ஆற்றினாலும், அவன் தன் பாவத்திலிருந்து விடுபடுகிறான்.

**'குருகுலத்தின் உயர்ந்தவனே! மேற்கூறிய வேள்வியிலே எஞ்சி நிற்கும், எச்சத்தை உட்கொள்ளும் ஒருவன்தான் நித்திய பொருளாம் பிரம்மத்தை அடைகிறான். வேள்வியே செய்யாத ஒருவனுக்கு இவ்வுலகமே இல்லை என்றால் அவ்வுலகு ஏது? (எவ்வண்ணம் சித்திக்கும்)'** IV (31)

மேற்கூறிய வேள்விகள் யாவினுக்குமே அடிப்படை யானது தன்னலமற்ற கருமங்களே, தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் உலக நலத்துக்கு உரியது போக எஞ்சி நிற்பதையேதான் அனுபவிக்கிறான். மற்றையவனோ தானே தனக்கென அனைத்தையும் அனுபவிக்கிறான்.

**''அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையர்**
**என்பும் உரியர் பிறர்க்கு''**

என்ற குறள் நெறிப்பட்டவன் துய்ப்பது வேள்வியின் எச்சமே. அவனே புருஷார்த்தத்திலே (உறுதிப் பொருளிலே) மேலான வீட்டின்பத்தை அடைகிறான். மற்றையானோ உறுதிப் பொருளின் பிறவான, அறம், பொருள், இன்பங் களைக்கூட அடைவதில்லை.

**'இதுவரை, (நான்) சொன்ன பலவகைப்பட்ட வேள்விகள் (யாகங்கள்) யாவும் பிரம்மத்தை அடையும் மார்க்கமென வேதத்தின்கண் (பிரஹ்மண முகே) விவரிக்கப் பட்டுள்ளன. இவை யாவுமே கர்மத்திலிருந்து உதித்தவைகளே என்றும், நித்திய கர்மங்களென்றும் நீ அறிக. அப்படி அறிவதன் மூலம் நீ கர்ம பந்தத்தில் இருந்து விடுதலை அடைவாய்'** IV (32)

இச்சூத்திரத்திலே 'பிரஹ்மண : முகே' எனும் சொல்லுக்கு ஸ்ரீ இராமானுசர், பிரம்மத்தை அடைவதற்காக (for attainment of the development எனப் பொருள் கொள்கிறார். ஆனால், அச்சொல்லுக்கு 'வேதத்தினிடமிருந்தும்" என்றும் பொருள் கொள்ளலாம். 'பிரஹ்மண என்பதற்கு வேதம் என்றும் பொருள் உண்டு' என்கிறார் சுவாமி சித்பாவானந்தர் தம் உரையில்.

பலவகைப்பட்ட வேள்விகள் (கரும யோகங்கள்) பரிசுத்தமான ஆத்ம சொரூபத்திலே மேலே விவரித்தும், சொல்லப் பட்டுள்ளன... இவை யாவுமே நித்திய நைமித்திக கருமங்களினால் உண்டானவை என அறிக.

இவ்வாறு அறிவதால்—உணர்வதால், நீ கரும பந்தத்திலிருந்து விடுபடுவாய்; அதோடு மேற்கூறிய கேள்விகள் யாவும் ஆத்மாவைச் சார்ந்தவை அல்ல; மனோ வாக்கு காயங்களின் (உள்ளம், சொல், செயல்) இவைகளின் செய்கை என்றறிவாய். அதன் மூலம் ஆத்ம ஞான நிஷ்டையில் நீ பொருந்தி 'டு பேறெய்தலாம்.

வாய்ந்த, பலனை எதிர்பார்க்கும் கர்மம் ஒருவனைப் பந்தப்படுத்துகிறது. ஆனால், கர்மத்தையே வேள்வியாக மாற்றும் தன்னலமற்ற கர்மம் பந்த நீக்கம் செய்கிறது.

**'எதிரிகளை வெல்பவனே! செல்வத்தின் துணையால் இயற்றப்படும் கரும யக்ஞத்தைவிட ஞான யக்ஞம் ஞான வேள்வி மிக மேலானது. பார்த்த! கருமங்கள் யாவுமே, பிரம்ம ஞானத்திலே முற்றுப் பெறுகின்றன.'** IV (33)

ஜீவ யாத்திரையின் எல்லை ஆத்ம விடுதலை அல்லது மோட்சம். அதற்கு இன்றியமையாத் தேவை, ஆத்மாவை அறியும் ஞானம். அந்தஞானமே நமக்குக் கரும விடுதலையும் கரும பந்த நீக்கமும் தருகிறது.

இந்தச் சுலோகத்திலே, முன்னர்ச் சொல்லப்பட்ட கரும யோகங்களை எல்லாம் திரட்டி திரவியத்தால் செய்யப்படும் திரவிய யக்ஞம் என்றும் அதைக் காட்டிலும் ஞான யக்ஞம் மேலானது என்றும் கண்ணன் வகைப்படுத்திக் கூறுகிறார்.

ஏனெனில், திரவிய யக்ஞம் என வகைப்படுத்திக் கூறிய மேற்கூறிய அனைத்தினும், செய்யப்படும் விரதம், சடங்குகள் முதலிய பிறவற்றினும் மிக உயர்ந்த உச்ச நிலை ஞான நிலை எய்துதலே.

சைவ சித்தாந்த சாத்திரத்திலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகைகள் கூறப்பட்டுள்ளன.

இதிலே, 'சரியையும் கிரியையும் கரும காண்ட வகைகளையும், யோகம் என்பது இராஜயோகம், பிராணாயாமம் என மேற்கூறியவையும் உள்ளடக்கி நிற்க, அம்மூன்றின் பயனாய முதிர்ந்த நிலையே ஞானம் எனப்படும், என்றும் கூறப்படுகிறது. தாயுமானாரும்,

''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே''

என்கிறார். இந்த முறையிலேயும் எல்லாக் கருமங்களும் அரும்பு, மலர், காய்போல் பக்குவப்படாமல் இருந்து ஞானத்தைப் பூரணமாக எய்தும் போதுதான் கனிபோல் பழுத்துப் பயன் தருகிறது என்றாகிறது.

**'எனவே அர்ஜுனா! நீ ஆத்ம தத்துவத்தை உணர்ந்த ஞானிகளிடம் பணிந்தும், அவர்கள் உபதேசிப்பதைச் செவி மடுத்தும் அவர்களுக்கு அடங்கி ஒடுங்கிப் பணிவிடை செய்தும் அந்த அரிய ஞானத்தை அடைக. ஆத்ம தத்துவத்தை நன்குணர்ந்த ஞானிகள் உனக்குத் தம்முடைய அந்த ஞானத்தினை உபதேசிப்பார்கள்.'** IV (34)

ஞானத்தை அடைய ஆத்ம ஞானம் கைவரப் பெற்ற குருவருள் தேவை. குருவைச் சென்றடைந்து வணங்கி

வழிபட்டுப் பணிவிடைகள் செய்து அவர்கள் உன்பால் கருணையோடு அருள் பாலிப்பவராக நடக்கும்படி சேவை செய்து ஞானத்தை அடைய வேண்டும்.

செல்வமற்ற ஏழை செல்வ வளமிக்கவனிடம் எப்படி அடங்கி ஒடுங்கி நடந்து அவன் குறிப்பறிந்து சேவைச் செய்து ஏங்கித் தாழ்ந்து நின்று, அவன் செல்வத்திலே ஒரு சிறிதேனும் ஏழையாகிய தான் பெற்று மகிழ்வதைப் போல ஞானி முன் ஏங்கித் தாழ்ந்து ஞானம் அடையப் பெற்றவனே ஆத்ம ஞானியாக முடியும்.

> ''உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
> கடையரே கல்லா தவர்'' எனக்கல்விக்குத் திருவள்ளுவர்

சொன்னது ஞானம் அடைதலுக்கும் பொருந்தும்.

தாகம் கொண்டவன் தண்ணீரைத் தேடி ஓடுவதைப் போல ஞான வேட்கை உடையவன் தம் வேட்கை தீரும் வகையை நாடி ஓடுவான். அவனுடைய ஞான வேட்கையை நன்கு அறிந்த பின்னரே குருவின் உபதேசம் ஒருவன் அடையக் கூடும். ஒருவருடைய நீர் வேட்கை தண்ணீரால் அன்றி வேறு எதனாலும் தணியாது. அதைப் போலவே ஞானத்தின்பால் நாட்டங்கொண்டு, ஞான தாகத்தினால் உள்ளம் வரண்டு கிடக்கும் ஒருவன், நல்லாசிரியரின் ஞான உபதேசத்தால் மட்டுமே தன் வேட்கையைத் தணித்துக் கொள்ள முடியும். ஆனால், சீடன் குருவை பரிசுத்தமான உள்ளத்தோடும் சிரத்தையோடும்தான் அணுக வேண்டும்.

நாம் நம் உள்ளத்திலே இறைவனை உணரும் வரையிலும்—ஆத்ம தரிசனம் நாம் அடையுமட்டும்—கடவுள் தன்மை அடைந்த ஆத்ம ஞானிகளின் உபதேசத்தைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டும். இங்கே ஞானம் என்று சொல்லப்படுவது ஆத்ம ஞானத்தையே! இதையே கிருஷ்ணன் அத். 2 சுலோகம் 17ல் 'உலகெலாம் பரவிய பொருள் அழிவற்றதென உணர்க' எனத் தொடங்கியும்,

அத். II (39)ஆம் சுலோகத்திலே 'ஆத்ம தத்துவத்தைப் பற்றிய அறிவு உனக்குப் புகட்டப்பட்ட' தென விளக்கமாகக் கூறியுள்ளார்.

இதை நன்கு விளங்க வைக்க ஏற்றவரே குரு. இந்த ஆத்ம தத்துவ விளக்கம் கேட்க வேண்டிய அதிகாரி, முன் சொன்னபடி ஞான வேட்கை உடையவனாய் இருப்பதோடு ஸ்திர புத்தி உள்ளவனாகவும் அமைதல் வேண்டும். தன் உள்ளத்திலே எழும் ஐயங்களுக்கு எல்லாம் தேவைப்படும் விளக்கங்களை வெட்கப்படாமல் கேட்டுணர வேண்டும். ஆத்மா, அனாத்மா, பந்தம், மோட்சம், முதலியவற்றைப் பற்றியும், சாதன சதுஷ்டயங்களைப் பற்றியும் (முன்னமே விளக்கப்பட்டது) துருவித் துருவிக் கேட்டுச் சிந்தித்துத் தன் ஆத்ம ஞானத்தை விருத்தி செய்து கொள்ள வேண்டும்.

எனவே, ஞானத்தைத் தேடு. ஞானிகளும் தத்துவ தரிசனிகளும் ஞானத்தை உபதேசிக்கத் தக்கவர்கள். அவர்களே ஆத்ம தரிசனம் பெற்றவர்கள். அவர்களை அடுத்து ஞானத்தை அடைக.

**'பாண்டவா! மேற்கூறிய ஞானத்தை நீ அடைந்த பின்னர் நீ மறுபடியும் இப்படி குழப்பம் அடைய மாட்டாய். ஏனெனில், இந்த ஞானத்தினால் உலக உயிர்கள் அனைத்தையும் உன்னிலும் (உன் ஆத்மாவில்) என்னிலும் காண்பாய்.'**
IV (35)

இந்த ஞானமே ஆத்ம அறிவு. இது ஆன்ம நேய ஒருமைப்பாட்டை வெளிப்படுத்துகிறது. அண்டத்துக்குரிய மிக நுட்பமான உட்பொருளே இதன் உண்மை. இந்த ஞானம் அடைந்தவன், எல்லாப் பொருள்களையும் தன்னிலே (தன் ஆத்மாவிலே) காண்கிறான்; இறைவனிலேயும் காண்கிறான்.

**'உலகத்திலே உள்ள பொருள்களிலே உள்ள வேறுபாட்டுணர்வை அழித்து விட்டால் எக்கருமமும் ஒருவனைப் பற்**

படுத்துவதில்லை. இவ்வகையில் பந்தத்திற்குக் காரணமாக இருப்பதுமயக்க அறிவே (அறியாமையே). ஆத்மா ஞானத்தை அடைந்த உடனே மயக்க அறிவு அழிகிறது. ஆங்கே பந்தம் நீங்குகிறது. எனவே, எப்பொருளையும் ஞானி தன்னிலே காண்கிறான். கல்லாப் பாவிகளிலும் நீ பெரும் பாவியாகவே இருந்த போதிலும், இந்த ஞானமாகிய தெப்பத்தினால் (நீ) அந்தப் பாவக்கடலை கடந்து விடுவாய்.' VI (36)

*ஞானம் என்பது ஒரு மிதவை (தெப்பம்-ஓடம்). அதைக் கொண்டு பாவக்கடலை உன்னால் கடக்க முடியும். பாவம் என்பதின் அடிப்படை என்ன? ஒருமைப் பாடற்ற தன்மை தானே? தன்னிலே பிற உயிர்களைக் காணாதவன் தன்னலத் தால், (தான்) எனும் அகங்காரத்தால் பாவம் செய்கிறான். அதைக்கடந்து மேனிலைக்குச் சென்றவன் எவ்வுயிரையும் தன் உயிராகப் பார்ப்பதால், தன்னிலே எவ்வுயிரையும் காண்பதால் பாவம் செய்வதில்லை; பாவக்கடலைக் கடந்து விடுகிறான்.*

*'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவனடி சேரா தார்'* —குறள்

'அர்ச்சுனா! நன்றாகக் கொழுந்து விட்டு எரியும் பெருந்தீ எப்படி தன்னிலே வீசிய விறகுகளை எல்லாம் சாம்பலாக்கு கின்றதோ, அப்படியே, ஆத்ம ஞானம் என்னும் பெரு நெருப்பு, கருமங்கள் யாவற்றையும் சுட்டுச் சாம்பலாக்கி விடுகிறது.' IV (37)

*இந்த ஞானம் என்பது அணையாது கொழுந்துவிட்டு எரிகின்ற பெருஞ்சுவாலை வாய்ந்த அக்கினிக்குண்டம். இது கருமங்கள் அனைத்தையும் சாம்பலாக்கி அக்கரும கர்த்தாவைத் தூய்மைப்படுத்துகிறது. தூய்மைப்பட்டவன் தன் இந்திரியங்களை வென்றவனாகிறான்; சிரத்தை மேலோங்கத் தன்னை அறிகிறான்.*

"மடங்க என் வல்வினைக் காட்டை
நின் மன் அருள் தீக்கொளுவும்;
விடங்க என்தன்னை விடுதி" ........... என்றார்,

மாணிக்க வாசகர். வல்வினைக் காட்டையே, இறைவன் அருளாம் ஞானாக்கினித் தீ அழித்து விடுகிறது.

இதுவரையிலும் பல பிறவியிலே ஜென்ம ஜென்மங்களாகச் செய்து வந்த 'ஆகாமிய', 'சஞ்சித' கருமங்களின் அனைத்துப் பாவங்களையும் ஞானாக்கினி எரித்துச் சாம்பலாகிவிடுகின்றது. எனவேதான், மாணிக்க வாசகர் வல்வினையைக் 'காடு' என்கிறார். இறையருளைத் 'தீ' என்கிறார்.

**'இவ்வுலகிலே, ஞானத்தை ஒத்த தூய்மையானதும் தூய்மைப்படுத்துவதும் வேறு எதுவுமே இல்லை. யோக சித்தியை எவன் ஒருவன் அடைந்து விட்டானோ, அவன் நாளடைவிலே (காலக்கிரமத்தில்) தன் உள்ளத்திலே இந்த ஞானத்தை அடைகிறான்.'** IV (38)

அதாவது ஆத்ம ஞானம் போன்ற தூய்மையானதும் தூய்மைப்படுத்துவதும் இவ்வுலகிலே ஒன்றுமே இல்லை. ஞானம்தான் ஒருவனை அஞ்ஞான மலத்திலிருந்து விடுவித்து நீக்கிப் பரிசுத்தப் படுத்துகிறது.

யோக சித்தி அடைந்தவன் என இங்கு குறிப்பிடப் படுபவன், யாக யக்கியாதி கேள்விகளைத் தன்முனைப்பற்றுச் செய்பவனையும், யோகப் பிராணாயமங்களைப் பயில்பவனையும் குறிக்கும். இந்த வகையிலே, கர்ம யோகத்திலே ஈடுபட்டுள்ளவர்களும் நாளடைவிலே ஞானத்தை அடைகின்றனர். அந்தக் காலவரையறையானது எத்தனை நாள், மாதம் அல்லது ஆண்டு என்பதை அடுத்த சுலோகத்திலே விளக்குகிறார் கண்ணன்.

**'எவன் ஞானமார்க்கத்தில் சிரத்தை உள்ளவனோ எவன் ஞானம் அடைவதிலே கண்ணும் கருத்துமாக இருப்பவனோ**

**எவன் இந்திரியங்களை அடக்கியவனோ அவனே ஞானத்தை அடைகிறான். ஞானம் அடைந்த பின்னர், அதிவிரைவிலே மேலான சாந்தியை அடைகிறான்.'** IV (39)

மேற்சொன்ன மூன்றனுள்ளும் தீவிரமாக உள்ளவர்கள் அவர்களின் தீவிரத்திற்கேற்ப ஞானத்தை விரைவிலே அடைகின்றனர். ஞானத்தினை அடைபவர்கள் சாந்தியை அடைவது உறுதி.

ஆத்ம ஞானம் பெற்ற குருவிடம் ஞான உபதேசம் பெற்ற பின்னர்—தன்னுடைய ஞான வழியில் ஏற்படும் ஐயங்கள் எல்லாம் அகன்று உள்ளம் ஞான மார்க்கத்திலே தெளிவடைந்த பின்னர்—தனக்கு உபதேசித்த ஞானத்தினை மேலும், மேலும் விருத்தி செய்ய வேண்டிய ஆர்வ முனைப்பு மேலோங்க முனைகிறான் சாதகன். அந்த ஞானத்திலேயே அவன் உள்ளம் ஆழ்ந்துவிடுகிறது. அதைத் தவிர வேறு எதன்மீதும் அவன் புலன் உணர்வு செல்வதில்லை. இப்படிப் பட்ட அவன், தன் சிரத்தைக்கேற்ப வெகு விரைவிலேயே ஞானத்தின் முதிர்ந்த நிலையை அடைகிறான். ஞானத்தின் முதிர்ந்த நிலையை அவன் அடைந்த உடனே அவனுக்கு சாந்தி நிலை வந்தடைகிறது.

சிரத்தை உள்ளவன்தான் இந்தச் சுலோகத்திலே முதலில் அறிமுகப்படுத்தப்படுகிறான். சிரத்தை என்பது நம்பிக்கையோடு கூடிய விடாமுயற்சி. இந்த நம்பிக்கை குருட்டு நம்பிக்கை அல்ல; இந்த ஆத்மா, ஞானமடைய முடியும் என்னும் ஆழ்ந்த நம்பிக்கை (திடசித்தம்). இந்தச் சிரத்தை மட்டும் உறுதியாக அமைந்திருக்குமானால், அதுவே ஞானத்தை உணரும் தன்மைக்கு நம்மை உய்த்துவிடும்—ஞானம் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டது. ஆனால் உலகியல் அறிவோ புலன் உணர்வினைச் சார்ந்தது. தர்க்க ரீதியான யூகங்கள், சந்தேகங்கள், ஐயுறவுகளைச் சார்ந்தது. ஆனால் ஞானம் இப்படிப்பட்ட வகையை சார்ந்நதன்று. நாம் அதை நம் உள்ளுக்குள்ளேயே, உண்மையாகவே, வளர்த்து வருதல் வேண்டும். அதை நாம்அடையும் வழி சிரத்தையும் தன்னடக்கமுமே ஆகும்.

**'அறிவில்லாதவன் (ஞானமற்றவன்), நம்பிக்கையோடு கூடிய திடசித்தம் இல்லாதவன், சந்தேகம் உடையவன், எனும் இவர்கள் அழிவெய்துகிறார்கள். சந்தேகப் பிராணிக்கு இவ்வுலகும் இல்லை, அவ்வுலக இன்பமும் கிடையாது!**
**IV (40)**

*குரு உபதேசத்தைப் புரிந்து கொள்ள இயலாதவனே அறிவிலியாவான். குரு உபதேசித்த விஷயங்களிலே நம்பிக்கையும் திடசித்தமும் இல்லாதவனே நம்பிக்கை அற்றவன். அவர் உபதேசித்த ஞானமொழிகளிலே பலனுண்டோ, இல்லையோ, எனச்சந்தேகப் படுபவனே— ஐயுறவுடையவன் இவர்கள் ஞானியாவதற்கு பதிலாக அழிவை நோக்கிப் போகிறார்கள். அதிலும் சந்தேகப் பிராணிக்கோ இருமை (இம்மை மறுமை இரண்டும் இல்லை.)*

**'தனஞ்செய! யோகத்தால் கர்மத்தைவிட்டு விலகின ஒருவனை, ஞானத்தினாலே சந்தேகத்திலிருந்து நீங்கின ஒருவனை. தன்னுடைய ஆத்ம சொருபத்திலே திளைத்திருக்கும் ஒருவனை, கருமங்கள் (பந்தம்) தளைப்படுத்துவதில்லை.'**
**IV (41)**

*பந்தத்திற்குக் காரணமாக அமையும் எண்ணற்ற பிறவிகளின் கர்மங்கள், முன்னர் உரைக்கப்பட்ட (4-18ல்) யோகத்தின்படி நடந்து தம் கருமங்களைக் கைவிட்டவர்களைக் பந்தப்படுத்தா. அவன் கருமங்களே, அவனுக்கு (யோகத்தால்) ஞான சொருபமாகிறது.*

*அடுத்து தன்னுடைய (தன்னையறியும்) ஆத்ம ஞானம் எனும் வாளினாலே, ஞான மார்க்கத்திலே எழும் ஐயப்பாடுகளை எல்லாம் வெட்டி எறிந்துவிடுபவன் தன்னலமற்றவனாய், தன் கருமம் அனைத்தையும் கிருஷ்ணார்ப்பணம் எனச் செய்வதால் அவன் கர்மத்தினால் பந்தப்படுதலில்லை.*

*இறுதியாக தன்னுடைய ஆத்ம சொருபத்திலே திளைத்திருக்கும் ஒருவன் உலகம் அனைத்தையுமே தன்னுள் காண்கிறான். மனத்துளே அவனுக்கு பேத அபேத உணர்வு*

இல்லை. எனவே, அவன் கருமத்தால் பந்திக்கப்படுதல் இல்லை.

**'எனவே பாரதா! அஞ்ஞானத்தால்—மயக்க அறிவால் உண்டானதும், உள்ளத்திலே குடி கொண்டுள்ளதுமான, ஆத்மாவைப் பற்றிய இந்த சந்தேகத்தை ஞானம் என்னும் வாளால் வெட்டி, யோகத்தைக் கைக்கொள்க, பாரதா! எழுந்திரு!'** IV (42)

*இந்த இடத்திலே கிருஷ்ணன் அர்ஜுனனிடம் ஞானத்தின் துணை கொண்டு தீர்க்கமான உள்ளத்தோடு தன்னுடைய கடமையையாற்றத் தூண்டுகிறார். அவன் உள்ளத்திலே, கிளர்ந்தெழுந்த சந்தேகம், போர் செய்வது நல்லதா? போர் செய்யாமை நல்லதா? என்னும் ஐயமே. அறியாமையால் ஏற்பட்ட அவன் மனக்குழப்பத்தை வெட்டி வீழ்த்தத் தேவை ஞானம். அந்த ஞானம்தான்அதை வெட்டி வீழ்த்தும் வாள். அப்படி வீழ்த்திய பிறகுதான், அவன், அறிவு, தெளிவு அடையும். அவன் தன் கருமத்தை நன்கு இயற்ற முடியும். பின் தான் செய்யவேண்டிய சரியான செயல் எது எனத் தெளிவான். அதைக் கடைப்பிடிப்பான்.*



## அத்தியாயம்—5

# சந்நியாச யோகம்

நான்காம் அத்தியாயம் கடைசி சுலோகத்திலே அர்ஜீனனை நோக்கி கண்ணன்! அர்ஜுனா! அஞ்ஞானத்திலே உதித்து இதயத்தை இருப்பிடமாகக் கொண்டுள்ள ஆத்மாவை பற்றிய சந்தேகத்தினை ஞானமாகிய வாளால் வெட்டி யோகத்தைக் கையாளுக. எனவே (உன்கடமையை ஆற்ற) எழு என்கிறார்.

இதைக் கேட்ட பார்த்தனுக்கு ஐயம் உண்டாகிறது, கண்ணன் ஞானத்தால் உள்ளத்தெழும் சந்தேகத்தை வெட்டு என்கிறார். உன் கடமையை ஆற்று; கரும யோகத்தைக் கைக்கொள்; எழு, என்கிறார். ஞானம். கருமம் எதை மேற்கொள்வது? நியாயமான ஐயப்பாடே!

இதுவரை, கிருஷ்ணன், சந்நியாச யோகத்தைப் பற்றியும் கர்ம யோகத்தைப் பற்றியும் சொல்லி வந்தார். கர்ம யோகம் என்பது கருமத்தையே யோகமாக்கி விடுவதாம். அதாவது சமர்ப்பணம் செய்யப்பட்ட கருமங்கள் யாவும் யோகமாகி விடுகின்றன. சந்நியாச யோகம் சந்நியாசத்தால் (துறந்து விடுவதால்) அடைகின்ற ஞானம். எனவே அர்ஜுனனுக்கு சந்தேகம் உண்டாகின்றது. இதைத் தன் குருவிடம் வினவுகிறான் அர்ஜுனன்.

இரண்டு முதல் நான்கு அத்தியாயங்கள் முடிய, கண்ணன் சாங்கியம் என்னும் ஞானம் பற்றியும் கருமமாகிய யோகம் பற்றியும் விளக்கினார். இவ்விரண்டின் இடையே, கடத்தற்கரிய மாறுபாடுகள் உள்ளன எனக் காண்கிறான் அர்ஜுனன்.

ஏனெனில், ஞானத்தை உணர்த்தும் சாங்கிய தத்துவம், கர்மத்தைத் (கர்மபலனை) துறந்து விடுதலைப் பற்றிக் கூறுகிறது. ஆனால் கர்ம யோகமோ, கருமத்தை நல்ல முறையிலே அனுஷ்டிக்கும்படி கட்டளை இடுகிறது. ஆயினும் கண்ணன் இரண்டும் நல்லனவே என்று கூறுகிறார். ஞானம், கர்மம் இரண்டும், மனிதனை உன்னத நிலைக்குக் கொண்டு செல்வனவே என்று கூறுகிறார்.

அர்ஜுனனுக்கு இதனால் மனத்திருப்தி ஏற்படவில்லை. தான் செய்ய வேண்டிய பணி யாது என்று கண்ணன் தனக்கு வழிகாட்ட வேண்டும் என விரும்புகிறான் அர்ஜுனன். போர் வீரனுக்கு உரிய செயலாகிய தன் கருமத்திலிருந்து விலகி, சாங்கிய யோகத்திலே சொல்லப்பட்ட சந்நியாச மார்க்கத்தைப் பின்பற்ற வேண்டுமா? அல்லது யோக மார்க்கத்தின்படி ஒரு க்ஷத்திரியன் செய்ய வேண்டிய கரும மான தன் கடமையை ஆற்றத் தான் போரில் ஈடுபடத்தான் வேண்டுமா? இவைகளுள் எந்த ஒன்று—துறவு அல்லது கடமை, எதைத்தான் மேற்கொள்ள வேண்டும்?

இந்து சமயத்தில் உள்ள பலருக்கு, சந்நியாச மார்க்கமே (துறவறமே) விந்தலையை (மோட்சத்தை)த் தருகிறது எனும் நம்பிக்கை உண்டு. அவ்வகையிலே, அர்ஜுனனுக்குத் தன் கடமையாகிய க்ஷத்திரிய தருமமே தான் மோட்சமடை வதற்குத் தடைகல்லாக இருக்கிறது. எனவே, அர்ஜுனன் தன் கருமத்தைத் துறந்து சந்நியாசியாகி துறவறம் மேற் கொள்ளத் தயாராக இருக்கிறான். இந்நிலையிலே, தான் செய்ய வேண்டியது என்ன எனத் தெளிவுபட விளக்குமாறு கண்ணனை வேண்டுகிறான்.

அர்ஜுனன் கேட்கிறான் :

**'கிருஷ்ணா! கருமங்களைத் துறந்து விடுமாறும் சொல் கிறீர். மறுபடியும் தன்னலமற்ற கருமங்களை இயற்றுமாறும் சொல்கிறீர். இவ்விரண்டினுள் எது சிறந்ததோ? நிச்சயிக்கப் பட்டுள்ள அந்த ஒன்றை மட்டுமே எனக்குச் சொல்வீராக'** V (1)

இங்கு அர்ஜுனன் கேட்ட கேள்வி தனக்கு விளக்க முறாத ஒன்றாகும். IIIவது அத்தியாயம் சுலோகம் 17-ல் "எவன் ஆத்மாவில் மட்டுமே இன்பம் அடைகிறானோ, எவன் ஆத்மாவில் மட்டுமே திருப்தி அடைகிறானோ, எவன் ஆத்மாவில் மகிழ்ந்திருக்கிறானோ அவனுக்கு வினை ஆற்றும்' (கருமம் செய்யும்) கடமை இல்லை, என்கிறார் கண்ணன்.

இதற்கு முந்தைய நான்காம் அதிகாரத்திலே, பலவகைப் பட்ட கரும யோகங்களும், அவைகளால் ஏற்படுகின்ற ஞானத்தின் தன்மையும், அந்த ஞானத்தின் மூலக் கூறுபாடு களின் தலைமைச் சிறப்புக்களும் கூறப்பட்டன. (அத்தியாயம் 4—சுலோகங்கள் 18,19,21,22,24,32,33,37, 41-ல்) கர்ம சந்நியாசத்தில் இருந்து விடுபடுதலை வற்புறுத்திய பகவான் 42-ல் கர்மம் கைக்கொள்க என்கிறார்.

மூன்றாம் அத்தியாயத்திலேயே, ஒரு ஞானியும் கருமம் இயற்ற வேண்டியவனே. கருமயோகமும், ஞானயோகிக்கு மிக இன்றியமையாததே! ஏனெனில் கரும யோகத்திலே, தன்னை அறியும் தன்மை பொருந்தி உள்ளது; சட்ட திட்டங் களின் குறுக்கீடுகளிலிருந்து, அது விலகி நிற்பது; எளிதாக இயற்றக் கூடியது; தனித்தன்மை வாய்ந்தது என விளக்கிச் சொல்லப்பட்டது.

இவ்வகையிலே நான்காம் அதிகாரத்தின் இறுதி சுலோகத்திலே, 'ஆத்மாவைப் பற்றிய ஐயத்தை ஞான வாளால் வெட்டு, யோகத்தைக் கைக்கொண்டு எழு', என்று கூறியதால் அர்ஜுனனுக்குக் குழப்பமே உண்டாகிறது.

ஞானமாகிய வாளைக் கையிலே ஏந்த வேண்டும், ஏன்? சந்தேகத்தை வெட்டி வீழ்த்த. மேலெழ வேண்டும், ஏன்? கர்ம யோகத்தை மேற்கொண்டு போர் செய்ய.

இந்த சுலோகத்தின்படி அவன் (அர்ஜுனன்) எதைக் கைக்கொள்ள வேண்டும். ஞானத்தையா? கர்ம யோகத் தையா? எனக் குழப்பமடைகிறான்.

பகவான் கண்ணன் பதில் கூறுகிறார் :

**'கருமத்தைத் துறந்து விடுதலும் (கர்ம சந்நியாசம்) கருமத்தை (இறை அர்ப்பணத்தோடு) செய்தலும் ஆகிய இரண்டுமே, சிறப்பினைத் தருவனவே, ஆயினும் கருமத்தைத் துறந்து விடுவதைக் காட்டிலும் கரும யோகமே மேலானது.'**
V (2)

எந்த ஒரு கருத்தையும் கண்ணை மூடிக் கொண்டு நம்பும் படிக் கண்ணன், அர்ஜுனனுக்குச் சொல்லவில்லை. உலகிலே துறவு (சந்நியாச) மார்க்கமாகிய ஞானமார்க்கமே சிறந்ததாக நம்புகின்ற பல்லோருள்ளே அர்ஜுனனும் ஒருவன் என்பதைக் கண்ணன் அறிவார். எனவே, உண்மையான துறவு ஞானம் என்பது என்ன என்பதை அர்ஜுனனுக்கு விளக்க வேண்டியது அவசியம் எனக் கருதுகிறார், கண்ணன்.

எனவேதான் இங்குக் கண்ணன் இதை விளக்க வேண்டியதாகிறது.

அர்ஜுனா! இதை அறிந்து கொள். கரும யோகமும் ஞான யோகமும் தம்முள் மாறுபாடு கொண்டவை அல்ல; வெவ்வேறு இலக்குகளை உடையனவுமல்ல. கருமம், (தன்னலமற்றுப் பணியாற்றுதல்), சாங்கியமாகிய ஞான யோகம், இரண்டுமே விடுதலைக்கு வழி வகுப்பனவே!

சாங்கிய முறை (ஞானம்) கருமத்திலிருந்து விடுபடுதலை உள்ளடக்கியது. ஆனால் கரும யோகம், கருமத்தைச் சரியான மனப்பாங்கோடு செய்வதையே வற்புறுத்துகின்றது. கருமத்தின் உள்ளார்ந்த தகவு அதனுடைய பலனோடு (கரும பலனோடு) பொருந்தியதல்ல. எந்த வகையான மனப் பாங்கோடு செய்கிறோம் என்பதிலே தான் அது பொருந்தி யுள்ளது.

சரியான மனப்பாங்கு என்பதென்ன? அது, நம் கடமைகளை எல்லாம் பரம்பொருள் முன்னர்—பரம்பொருளுக்கு

நறுமண தூபம் போடுவதைப் போல, அர்ப்பணம் செய்து விடுவதைப் போன்றதாகும். அப்படிச் செய்யும் கருமம் மட்டுமே, கருமம் செய்யும் கர்த்தாவைத் தூய்மைப் படுத்தும். அவனைத் தன்னடக்கமுள்ளவனாக்கும். தன்னையே உணர்த்தும்.

ஆத்ம உணர்வைத் தான் ஆத்மாவில் வாழ்வதை வெளிப் படுத்திக் காட்டுவதே உண்மையான கருமத்தின் தன்மை. அப்படிப்பட்ட தன்னலமற்ற, பலன் கருதாத ஆத்ம உணர்வை வெளிப்படுத்தும் கருமமே உண்மைத் துறவு. ஏனெனில் தன்னுடைய கருமத்தால் அடையும் பலனில் எவ்வித பற்றுமின்றி அனைத்தையும் அடியோடு துறந்து விடுகிறான் இந்தக் கரும யோகி. கருமபலனுடைய நினைவும் அற்றவன் அவன்.

இவ்வகையிலே கரும யோகமும், சாங்கிய (ஞான) யோகமும் ஆத்மாவில் வாழும் அடிப்படையிலே ஒன்றா யினும், சாங்கியத்திலே (ஞான மார்க்கத்திற்கு) உள்முகப் பார்வை வற்புறுத்தப்படுகிறது. கருமத்திற்கு பற்றற்ற கருமத் துணிவு வற்புறுத்தப்படுகிறது.

கரும யோகம் முக்திக்கு மூல காரணமாகாவிட்டாலும், அது ஞானம் எய்தக் காரணமாகிறது. ஆனால் ஞானியும் தனி நித்திய நைமித்திக கருமத்தைச் செய்ய வேண்டிய அவசியத்திலேயே வாழ்கிறான். இவ்வகையிலே கருமத்தைத் துறந்து விடுவதைக் காட்டிலும் கரும யோகமே மேலானதா கிறது.

**'பெருந்தோளுடையவனே! எவன் யாரிடமும் எதனிடமும் துவேஷமில்லாமல் இருக்கிறானோ; எவன் எதையும் யாரையும் விரும்புகிறதில்லையோ, அதாவது வாழ்வில் வெறுப்பு விருப்பு அற்றவனோ, அவனே நித்திய சந்நியாசி என்று உணரத் தகுந்தவன். ஏனெனில் விருப்பு வெறுப்பு, சுகம் துக்கம், நன்மை தீமைகளாம் இருமைகளைக் கடந்தவன் பந்தங்களி லிருந்து எளிதில் விடுபடுகிறான்.'** V (3)

இந்தச் சுலோகத்திலே முதல் வரியிலேயே வரும் நித்ய சந்நியாசி என்பவன் விருப்பு வெறுப்பு இல்லாதவன்; துறவு மனப்பான்மையை ஒரு கணமும் துறவாதவன்.

கரும யோகத்தை உண்மையாக ஆற்றுபவனும் உண்மையிலேயே நித்திய சந்நியாசியே. ஏனெனில் அவனும் தன்னுடைய கருமங்கள் அனைத்தையும் சிறிதும் பற்றற்ற தன்மையிலேயே செய்து முடிக்கிறான். அதாவது அவன் பலன் கருதாமல், தன்னலமின்றி ஆத்ம தரிசனத்தோடு செய்து முடிக்கிறான். தன் கருமத்தை ஆற்றலில் விருப்பு வெறுப்பற்ற யோகியின் சித்தம் சலனப்படுவதில்லை. சித்த விருத்தி அற்றவன் அவன். எனவே அவன் எக்கருமம் ஆற்றுகினும் கர்மத்தால் தளைப்படாதவனே, ஆத்ம தரிசனம் உள்ளவன், ஆத்மாவிலே நிலை பெற்றவன் அவன். ஆதலால், விருப்பு வெறுப்பற்றவன். எனவே அவன் மேற் கூறிய காரணங்களால் நித்திய சந்நியாசியே!

**'சாங்கியம் (ஞானயோகம்), யோகம் (கருமயோகம். இவை இரண்டையும் வெவ்வேறென்று அறிவற்ற குழந்தைகள் பேசுவார்கள்; அறிவுடையோர்கள் அங்ஙனம் பேசமாட்டார் கள். இவற்றுள் ஏதாவதொன்றைச் செவ்வனே அனுஷ்டிப் பவன், இரண்டினுடைய பலனையுமே அடைகிறான்.'** V (4)

இந்த அதிகாரம் முழுவதிலும் யோகம் என்பது கரும யோகமே, சாங்கியம் என்பது ஞானயோகமே எனக் கொள்க.

ஞானயோகம், கருமயோகம் இவைகளின் பலன்கள் வெவ்வேறாக இருப்பதால் வெவ்வேறென்று எவர்கள் சொல்கிறார்களோ அவர்கள் குழந்தைகள் (அறிவற்ற வர்கள்). அதாவது ஞானத்தை முற்றுணர்ந்தவர்கள் அல்லர். கருமயோகம் ஞானத்தை அடைவிக்கிறது ஞானமோ ஆத்ம தரிசனத்தைத் தருகிறது என்பது அவர்கள் முடிவு. ஆனால் கருமமும், ஞானமும் இரண்டுமே ஆத்ம தரிசனத்தையே பலனாகத் தருகிறது. எனவே, இரண்டில்

ஒன்றைக் கடைப்பிடிக்கும் எவனுமே ஆத்மாவில் நிலை பெறுகிறான்.

யோக மனப்பான்மையோடு செய்யப்படும் எல்லாக் கருமங்களும் பற்றற்றவைகளே! அதைப் போலவே சந்நியாசம் என்பதும் பற்றற்றிருத்தலே. அதாவது விருப்பு, வெறுப்பு, அற்ற தன்னலமும் பகையும் இல்லாத நிலையே ஆகும்.

ஓர் உண்மையான கருமயோகி, இருமைகளைக் கடந்து மேனிலையில் இருப்பவன். எதையும் அவன் தேடுவது மில்லை; வெறுத்து ஒதுக்குவதுமில்லை. எனவே கர்மம் அவனைப் பிணித்தலும் இல்லை.

ஆனால் யோக மனப்பான்மையோடு செய்யாத கருமம், மற்றுமொரு கருமம் செய்வதற்குக் காரணமாகி விடுகிறது. இவ்வகையிலே காரண காரியத் தொடர்போடு கருமம் மற்றொரு கருமத்தோடு சார, அது பிறிதொன்றன் தொடர் பாகி, அவை ஒரு சங்கிலித் தொடர் போல அமைந்து அச்செயல்களின் விளைவால், இவ்வகைக் கருமம் செய்யும் வினைவிளைவு பிறப்பிறப்பு எனும் கடலுள் செய்யும் ஒருவனைத் தள்ளுகிறது.

ஆனால் இங்கே, கருமமே (கருமம். தான் மட்டுமாகவே) காரண காரியத் தொடர்பான சங்கிலியை உண்டாக்குவ தில்லை. கருமம் இயற்றுபவனின் ராகத்துவேஷங்களே (விருப்பு வெறுப்புகளே) உண்மையில் அந்தச் சங்கிலியை உண்டு பண்ணுகின்றன.

கருமம் மட்டுமே தளையை (பந்தத்தை) உண்டு பண்ணுவதில்லை. பலாபேக்ஷை (கரும பலனில் பற்று வைத்தலே) பந்தத்தின் காரணம். தன் செயலைப் பற்றின்றி ஆற்றுபவன் காரண காரியத் தொடர்புக்குக் காரணமாவ தில்லை. அதோடு பற்றின்றி கருமம் செய்பவன் தன்னையும் அறிகிறான்; ஆத்ம தரிசனமும் அடைகிறான்.

**'ஞானியர் எப்பேற்றை அடைகின்றனரோ, அப்பேற்றையே கர்ம யோகியரும் அடைகின்றனர். சாங்கியத்தையும் (ஞானம்) யோகத்தையும் (கருமம்) ஒன்றாகக் காண்கின்றவனே உண்மையைக் காண்கிறான்.'** V (5)

*ஆத்ம தரிசனம் என்னும் கனியைச் சாங்கியம் எனப்படும் ஞான மார்க்கத்தினன் அடைகிறான். அதையே தான் கர்ம யோகத்திலே கரும மாற்றுகின்றவனும் அடைகிறான். எனவே ஞானம் கருமம் எனும் இரண்டையும் ஒரே நோக்கில் பார்ப்பவனே உண்மையைக் காண்கிறான்.*

*மற்றும் கரும யோகம் ஞானத்தை உண்டாக்கி முடிவில் மோட்சத்தை அளிக்கிறது. ஞான யோகமும் மோட்சத்தையேதான் அளிக்கிறது. இந்த வகையிலும் முடிவான பலன் இரண்டுக்கும் ஒன்றே. ஆதலால் இரண்டையும் ஒன்றாகக் காண்பவனே அறிந்தவன் ஆகிறான.*

**'தோள் வலிமை உள்ளவனே! கரும யோகத்தினைச் செய்யாமலேயே கரும சந்நியாசத்தை மேற்கொள்வது அரிது. ஆனால் யோக யுக்தன் (கரும யோகம் செய்கிற முனிவன்) விரைவிலே பரப் பிரம்மத்தை அடைகிறான்!** VI (6)

*யோக யுக்தன் என்பவன் யோகத்தால் பண்பட்டவன் (நேர்பட்டவன்); உள்ளம் தூய்மையானவன்; உடலையும் உள்ளத்தையும் தன் கட்டுப்பாட்டிலே வைத்திருப்பவன்; அடக்கப்பட்ட புலன் உணர்வுடையவன். அவனுடைய ஆத்மா என்பது அனைத் துயிர்களின் ஆத்மாவே! அப்படிப் பட்டவன் கருமத்தால் பாதிக்கப்படுவதில்லை.*

*வாழ்க்கை வசதிகள், செல்வம் முதலிய அனைத்தும் இருந்தும், அவைகளைத் துறந்து போதலே உண்மைத் துறவு. அதைப் போலவே கருமங்கள் அனைத்தும் (தன்னல மற்று ஆத்மாவில் லயித்துச்) செய்து, பின், அதை விட்டு நீங்குவதே கரும சந்நியாசம். கருமத்தில் பிரவேசிக்காம*

லேயே கரும சந்நியாசம் அடைவது எப்படி? அடையவே முடியாது.

கருமயோகப் பயிற்சி இல்லாமல் உண்மைத் துறவை—சந்நியாசத்தை,—ஞானத்தை அடையவே முடியாது. ஆத்மாவை உணர்ந்த கரும யோகி தனக்குள்ளே தான் ஒரு முனிவன். அவன் ஆத்ம தியானம் செய்கிறான். அதன் மூலம் அவனுடைய கரும யோகப் பயிற்சி எளிதாகிறது. எளிதாகவே, அவன் பிரம்மத்தை அடைய முடிகிறது. அதாவது வெகு எளிதில் வெகு விரைவில் அவனுக்கு ஆத்ம தரிசனம் கிட்டுகிறது. ஆனால் ஞான யோகியோ தன் பயிற்சியிலே கடு நடை போடுகிறான். அவன் பாதை கரடு முரடானது. ஆத்ம தரிசனம் அவனுக்கு தீவிர முயற்சியா லேயே கிடைக்கிறது.

**'கரும யோகத்தை நியமத்தோடு ஆற்றும் யோகயுக்தன் தூய மனத்தை உடையவன்; உடலை வென்றவன்; இந்திரியங் களை ஜெயித்தவன். அனைத்து உயிர்களின் ஆத்மாவையும் தன் ஆத்மாவாகக் காண்பவன். அவன் கருமம் ஆற்றினும் அதில் ஒட்டுவதில்லை. (கட்டுப்படாதவன்)** V (7)

அவன் ஏன் கருமத்தால் பந்தப்படுவதில்லை? ஏனெனில் அவன் தனக்காக கருமம் செய்வதில்லை, அவன ஆத்மா தன் உள்ளே உள்ள ஆத்மாவாகிய கிருஷ்ணனே. அவன் மூலமே தான் காரியம் ஆற்றுகிறதாகக் கருதுகிறான் அவன். தன் விருப்பாற்றலைச் சார்ந்த எல்லாக் கருமங்களையும் அந்தத் தனி மனிதன் (கரும யோகி) துறந்து விடுகிறான். இவன் தன்னுடைய தியானத்தாலும் ஞானத்தாலும், புலன் உணர்வுகளை (உடல் உணர்வுகளை) வெட்டி வீழ்த்தி விடு கிறான். கருமத்தின் செயலாற்றலைக்கூட அவன் தன் உள்ளேயே அழித்துக் கொள்ளுகிறான். அவன் உடல், உள்ளம், புத்தி அனைத்துமே அவனால் இயக்கப்படுவன வல்ல; அவனுள் உள்ள 'கண்ணன்', எனும் சக்தியாலே அவை இயக்கப்படுகின்றன எனும் உண்மையை உண்மை யாக உணர்பவன் அவன்.

'ஆத்ம சொருபத்தில் நிலைத்துள்ள கரும யோகியாம் தத்துவஞானி, உண்மையை நன்குணர்ந்தவனாய் நான் ஒன்றும் செய்கிறேனில்லை எதுவும் என் செயலன்று, என நினைக்கிறான். ஏனெனில் பார்த்தல், கேட்டல், தீண்டல், முகர்தல், அருந்துதல், நடத்தல், உறங்கல், சுவாசித்தல், பேசல் (மலஜலம்) கழித்தல், பிடித்தல், கண்விழித்தல், மூடல் ஆகிய இவை யாவுமே தன் இந்திரியங்கள் இந்திரிய விஷயங்களில் பொருந்தி இயங்குகின்ற காரணத்தால்தான் என்று உறுதிப் படுத்தியவனாக உள்ளதால், தான் எதையும் செய்யவில்லை என அறிகிறான். V (8,9)

மேலே சொல்லப்பட்ட செயல்களனைத்தையும் தன் ஆத்மாவிலே உள்ள கண்ணன் செயலாகவே அவன் காண்கிறான். ஏனெனில் அவன் எதையுமே தானாகச் செய்யவில்லை எனும் பரஞானத்தை உணர்ந்தவன்.

தன்னிடம் நிகழும் தன் வாழ்வுக்கான மேற்கூறிய செயல்கள், ஞானேந்திரியம் கர்மேந்திரியங்களின் இயக்கமே, அவைகள் தத்தமக்குரிய விஷயங்களின் தூண்டுதலால் ஈர்க்கப்பட்டு இயங்குகின்றன என்பதனை நன்குணர்ந்தவன் அவன். அவனுக்கு எல்லாம் கிருஷ்ணன் செயல்; அவன் செயல்கள் யாவும் கிருஷ்ணார்ப்பணம்.

இச்செயல்கள் யாவுமே உடல் தொடர்புடையவை. ஆத்மாவுக்குச் செயல் கிடையாது. இந்த உண்மையை நன்குணர்ந்தவனே கர்மயோகி.

இந்த வகையிலே ஆத்ம தத்துவத்தை நற்குணர்ந்தவன் செவி முதலிய ஞானேந்திரியங்களும் வாய் முதலிய கர்மேந்தியங்களும் பிராணன் முதலான வாயுக்களும் தத்தம் தொழிலைச் செய்கின்றன, என நினைத்து, நான் ஒன்றும் செய்யவில்லை; நான் கருமத்துக்குக் கர்த்தா அல்லன்; என நினைப்பான்.

அப்படிப்பட்டவன் உலக வாழ்க்கையில் எப்படி இருப்பான் எனில்,

**'பிரம்மத்திலே அடைக்கலம் புகுந்து, அகப்பற்று, புறப் பற்றுக்களைத் துறந்து கருமங்களைச் செய்பவன் தண்ணீரும் தாமரை இலையும் போலத் தான் வாழ்வதால் தன் பாவத்தி னால் பந்தப்படுவதில்லை.'** V (10)

*மனிதன் அடையும் பாவங்களுக்குக் காரணம் கர்ம பந்தமே. பந்தம் உண்டாவதற்குக் காரணம் தான் எனும் பற்றும், முக்குணமும், கரும பலனில் விருப்பமுமே. இவை இன்றி மேற்கூறிய இரண்டு சுலோகங்களில் கூறியது போல உள்ளம் அமைந்தவன், உலக வாழ்க்கையில் தாமரை இலை யும், தண்ணீரையும் போல வாழ்பவன்.*

*இப்படிப்பட்டவன் பிரகிருதியிலே, தொடர்புள்ளவனாயி னும் உலகப் பற்றின் காரணமாக ஏற்படும் பாவத்தின் கறை அவனைத் தீண்டாது.*

**'எனவே, கருமயோகிகள் பற்றைத் துறந்து, ஆத்ம (சித்த) சுத்திக்காக உடலாலும், உள்ளத்தாலும், புத்தியாலும், (அபிமானமற்ற) இந்திரியங்களாலுமே கருமங்களைச் செய் கிறார்கள்.'** V (11)

*உடலால் செய்யப்படுபவை நீராடல் முதலியன. மனத்தால் செய்யப்படுபவை தியானம் முதலியன. புத்தி யால் செய்யப்படுபவை தத்துவ ஆராய்ச்சி, கற்றல், கேட்டல், முதலியன. இவைகளை ஆத்ம (உள்ளத்) தூய்மைக்காகவே கருமயோகி, தன்னலமற்றுப் பயன் கருதாது செய்கிறான்.*

*அவன் உள்ளத் தூய்மை உடையவன். அவன் தன் உடலால் மட்டுமே கருமம் ஆற்றுகிறான். அவன் உள்ளம், அவன் உலக அறிவு யாவும் முழுமையாக அவனால் புறக்கணிக்கப்படும்.*

*எவ்விதமான உள்ளெண்ணமோ, தன்னலமோ, அவாவோ தன்னிடம் கடுகளவும் இல்லாமல் அவன் இருப்பான்.*

அவன் கருமங்கள் மிகத் தூய தன்மை வாய்ந்தவை; அவை முழுமையானவை; குறைபாடற்றவை. ஏனெனில் அவன் தன் உள்ளே அமைந்திருக்கும் சக்தியின் கருவியே "தான்" என அறிவான். அதுவே அவனை இயக்குவதும் தூண்டி ஏவுவதும் ஆகும் என்பதை அவன் தெளிந்தவன்.

**'(கர்ம) யோகி கர்ம பலனிலே பற்றில்லாதவனாய், நிஷ்டையினால் (தியானத்தால்) ஏற்படும் சாந்தியை அடைகிறான். கரும யோகம் செய்யாதவனோ ஆசையினால் தூண்டப்பட்டவனாய் பலனிலே பற்றுடையவனாய்க் கருமத்திலே பந்தப்படுகிறான்.'** V (12)

ஆத்மா நீங்கலாகப் பிற பலன்களில் விருப்பமில்லாதவனாய் ஆத்மா ஒன்றிலே மட்டும் ஆசை உள்ளவனாய், கரும பலன்களிலே ஆசையின்றி, ஆத்ம சுத்தி அடைவதற்காக மட்டுமே, கருமங்களை இயற்றிக் கொண்டு வரும் ஒருவன் ஆத்மாவை அனுபவித்துச் சாந்தியை அடைகிறான். ஏனெனில் இவன் செயல்கள் யாவும் தனக்கானவை அல்ல.

ஆனால் ஆத்மாவைத் தவிர, மற்றைய பலன்களில் ஆசையுள்ளவனாய், ஆத்ம தரிசனத்திலே விருப்பமற்றவனாய், கரும விகார பலன்களிலே இச்சை உள்ளவனாய்க் கருமங்களை ஆற்றுபவன், கர்ம பந்தத்திலே சிக்கிக் கொண்டு தவிக்கிறான். ஏனெனில் இவன் தன் செயலைத் தனக்காகவென்றே செய்கிறான்.

**'பொறி புலன்கள், உள்ளம் இவைகளைத் தன் வசப்படுத்திய தேகி (உடலை உடையவன்) எல்லாக் கருமங்களையும் தன் அறிவால் நிவர்த்தி செய்து, தான் ஒன்றுமே செய்யாதவனாக, 'ஒரு செயலுக்கும் கர்த்தாவாக இன்றி' ஒன்றையும் செய்விக்காதவனாக, ஏவுதல் கர்த்தாவாகக்கூட இல்லாமல் அமைந்து, ஒன்பது துளைகளை உடைய இவ்வுடலிலே சுகமாக இருக்கிறான்.'** V (13)

இப்படிப்பட்டவனே உண்மையான சன்னியாசி. மகத்தான செயல்கள் பொருள்களிலிருந்து, அற்பமான

பொருள்கள், செயல்கள் வரை, அவன் கடவுளை நம்பு கிறான். அவரைச் சார்ந்திருக்கிறான். அவன் எல்லாக் கருமங்களையும் கடவுளிடம் ஒப்படைப்பதால் அவன் இகலோக பரலோக பதவிகளைப் பற்றி நினைப்பதே இல்லை. முக்தியைப் பற்றியும் அவன் கவலைப்படுவதில்லை. 'இறைவன் தவறு செய்யாத அறிவுமயமானவர், மறத்தலில் லாத அன்புருவாளர். எனவே அனைவருக்கும் முக்தி உண்டு' என அவன் அறிவான். இப்படிப்பட்ட யோகி தன் தெளிந்த அறிவால் கருமங்கள் அனைத்தையும் விலக்கி விடுகிறான். அவன் செய்வது யாதும் இல்லை; செய்விப்பதும் யாதும் இல்லை. நவத்துவாரம்; இரண்டு கண், இரண்டு காது, மூக்குத்துளை இரண்டு, வாய் ஒன்று, எருவாய் ஒன்று, கருவாய் ஒன்று ஆகிய ஒன்பது. இவைகளை உடைய உடல் என்னும் நாட்டை அவன் (ஆத்மா) இன்பத்தோடு அரசனாக இருந்து, கருமம் ஏதும் இன்றி, ஆண்டு கொண்டிருக்கிறான். ஐம்புலன்களும், கரும இந்திரியங்களும், மனம் புத்தி, சித்தம், அகங்காரமும் தொழில் புரிகின்றன. ஆத்மா எனும் அரசன் தன்னைப் பொறுத்தவரை வெறும் சாட்சியே.

**'இறைவன், உலகத்துக்குத் 'தானே வினையாற்றுபவன்' என்பதையும் 'தான் கர்த்தா' எனும் வினைத் தலைமையையும் உண்டாக்கவில்லை; கருமங்களையும் அவன் உண்டாக்கா வில்லை; கரும பலனிலே பற்றுதலையும் உண்டாக்கவில்லை. இவை யாவும் (இயற்கை) சுபாவம் எனப்படும் உலக மாயையே உண்டாக்குகிறது.'** V (14)

இறைவன் வினைத்தலைமையையோ கருமங்களையோ பற்றுதலையோ உண்டாக்கவில்லை. இவை யாவும் உலக மாயையின் செயல்களே. ஆனால் இவைகளை ஆத்மாவின் செயலாகக் காண்பது அறியாமையால்தான். இந்த மாயை (அறியாமை) வயப்பட்ட ஆத்மா உலகப்பற்றுதலால் கருமங் களைச் செய்து தானே கர்த்தாவெனக் கருதுகிறது. தானே கர்த்தா எனும் முனைப்போடு செய்யும் காரியங்களால் கர்ம பலனும் அவ் வாத்மாவைச் சென்றடைகிறது.

இந்த அறியாமை ஆத்மாவைப் பற்றி நிற்பது ஏன்? ஆத்மாவுக்கு அழிவில்லை என முன்னரே சொல்லப்பட்டது. அனாதி காலம் தொட்டு, இந்த உலகிலே பிறந்து இறந்த அப்பிறவிகளிலெல்லாம் செய்த கரும பலன்கள் ஆத்மாவைத் தொடர்ந்து வருவதால், பிரகிருதியின் தொடர்பால் ஏற்பட்ட இத்தேகமே ஆத்மா எனும் அபிமானம் உயிருக்கு மேலோங்குகிறது. அந்த அபிமானமாம் அறியாமையால் மூடப்பட்டு ஆத்மா 'தானே கர்த்தா' என எண்ணுகிறது. அதனால் கர்மபலனை அடைகிறது.

கருமங்களோ, மாயை அல்லது சுபாவம் எனும் இயற்கையின் வெளிப்பாடு அல்லது பயன் எனலாம். அந்த மாயையின் சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் முக்குணங்களிலிருந்து கருமங்கள் அனைத்தும் கிளைத்தெழுகின்றன. எனவே, இறைவன் கருமங்களையோ கரும பலன்களையோ படைக்கவில்லை. கர்த்தாவையும் படைக்கவில்லை. தானே கர்த்தா என்று 'தான்' எனும் அகங்காரம் கொண்ட ஆத்மா நினைத்து கருமமாற்றிக் கருமபலனை அடைகிறது.

ஓர் உண்மையான (கரும) யோகிதான், உண்மையான சந்நியாசி. அவன் தன் செயல்கள் அனைத்தையும் துறந்து விட்டவன். அவன் முக்குணங்களைக் கடந்து மேல் நிலைக்குப் போனவன். அவன், சுபாவம் அல்லது மாயை அல்லது இயற்கையை வென்று மேலே நிற்பவன். அவன் தன்னையே பரமாத்மாவுக்கு அர்ப்பணம் செய்து விட்டவன்.

**'எங்கும் நிறைந்துள்ள ஆத்மா (பரமாத்மா) ஒருவனின் பாவத்தையோ, புண்ணியத்தையோ உறிஞ்சித்தானே எடுத்துக் கொண்டு விடுவதில்லை. (அந்த ஜீவ ஆத்மாவை அந்த வகையிலே தூய்மைப்படுத்துவதில்லை) அஞ்ஞானத்தாலே ஞானம் கவ்வி மூடப்பட்டுள்ளது. எனவேதான் உயிர்கள் மருட்சி அடைகின்றன.'** V (15)

பரமாத்மா விண்வெளியைப் போல் எங்கும் நிறைந் தவர். அவரை ஒரு குறிப்பிட்ட இடத்தில் சந்திக்க இயலாது. அவருக்கு நண்பும் இல்லை; பகையும் இல்லை. எனவே அவர் யாருடைய துக்கத்தையும் சுகத்தையும் நிவர்த்தி செய்தலில்லை. மகனுக்குத் தந்தை போல அனுக்கிரகம் செய்வதுமில்லை. தனக்கு விரோதியை ஒருவன் துன்புறுத்துவது போல் இறைவன் எவருக்கும் துன்பத்தை உண்டு பண்ணுவதும் இல்லை.

ஆனால் மக்கள், கடவுள் அவனுக்கு அனுக்கிரகம் செய் கிறார்; அவன் தன் வாழ்வில் வளம் மிகப் பெறுகிறான்; இவனுக்கோ கடவுளின் கடைக்கண் பார்வை கிடைக்க வில்லை; துன்புறுகிறான்; மற்றொருவனைக் கடவுள் தண்டித்தே விட்டார்; என்றெல்லாம் கூவுகின்றனர். உண்மையில் அவை அவனவன் கர்ம பலனே. இந்தக் கர்ம பலனை ஊட்டுவிப்பது பிரகிருதியே (மாயையின் செயலே). பிரகிருதியின் செயலைக் கடவுள் செயலாகக் காண்பது அஞ்ஞானமே (அறியாமையே). இயல்பாக ஆத்மாவின்கண் உள்ள ஞானம் அஞ்ஞானத்தால் மூடப்பட்டுள்ளது. ஏன்?

தாம் தாம் முன் செய்த கர்ம பலனை அனுபவிக்கும் யோக்கியதையை உண்டாக்குவதற்காக, மக்களுடைய ஞானமானது அஞ்ஞானத்தால் மூடப்பட்டுள்ளது (மறைக்கப் பட்டுள்ளது). ஞானம் மறைக்கப்படவே, இந்தத் தேகமே ஆத்மாவென்னும் உணர்வு அஞ்ஞானத்தால் உண்டா கின்றது. இந்த உணர்வால் இயற்றப்படும் கருமங்களும் மேலும், மேலும் கரும பலன்களை உண்டாக்கி விடுகின்றன. இந்த வகையிலே அவர்கள் மருண்டு வழி தவறிப் போய் தீமை, நன்மை எனும் இருமைகளின் வலையிலே சிக்கித் தவிக்கின்றனர்.

**'ஆனால் ஆத்மாவைப் பற்றிய ஞானத்தினால் எவர் களுடைய அஞ்ஞானம் (அழிக்கப்பட்டு) நசிக்கப்பட்டிருக் கிறதோ, அவர்களுக்கு, மேற்கூறிய ஆத்ம ஞானம் சூரியனைப் போல் பரப்பிரம்மத்தை விளக்கமுறச் செய்கிறது.'** V (16)

ஆத்மாவை உணர்ந்த ஞானம் ஆத்ம ஞானம்; ஆத்ம ஞானியே பிரம்ம ஞானி. சூரியனால் உலக இருள் விலகு வதைப் போல ஆத்ம ஞானத்தால் அஞ்ஞான இருள் விலகி விடுகிறது. சூரியன் உலகப் பொருள்களை நமக்கு விளக்கு வதைப் போல ஆத்ம ஞானம் பரம்பொருளை ஆத்ம ஞானிக்கு விளக்குகின்றது.

மேற்கூறிய சுலோகத்திலே, அஞ்ஞானத்தாலே ஞானம் மூடப்பட்டு (கவ்வப்பட்டு) உள்ளது. ஆகையினாலேதான் மக்கள் மருட்சி அடைகின்றனர் என்றாரல்லவா? அந்த மருட்சியை உண்டாக்கிய அஞ்ஞானம், ஞானம் என்னும் கதிரவனால் விலக்கிவிடப்படுகிறது.

அதாவது ஞானமானது அஞ்ஞானத்தைப் போக் கடித்துப் பிரம்மத்தை உணர்த்தும். ஞான சூரியனை மேக அஞ்ஞானம் மூடி நிற்கும். மேகம் விலகச் சூரியன் விளங்கும். அதுபோல் அஞ்ஞானம் விலக ஞானம் விளங்கும்.

"இன்றெனக்கருளி இருள் கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின் தன்மை நினைப்பற நினைந்தேன்
(திருவாசகம்)

என்கிறார் மாணிக்கவாசகர்.

இந்த வகையில் மிகத் தூய ஞானத்தினால், அனாதி காலமாக ஞானத்தைக் கவ்வி உள்ள அஞ்ஞானமாம் கூட்டம் நசிக்கப்படுகிறது. இப்படி அஞ்ஞானம் நீங்கினர்வகளின் பரிபூரணமான ஞானமானது, கதிரவன் ஒளியைப் போல பிரகாசித்து பிரம்மத்தை உணர்த்தும்.

இச்சுலோகத்திலே 'எவர்களுடைய' அஞ்ஞானம் நாச மடைந்ததோ 'அவர்களுக்கு' என்ற பன்மைச் சொற்கள் ஆத்மாக்கள் அனேகம் என்பதைத் திட்டமாக விளக்கிச் சொல்லவே கூறப்பட்டது. அவித்தையால் வெவ்வேறாகப் புலப்படுகிறதேயன்றி உண்மையில் ஒன்றுதான் என்னும்

வாதம் சரியல்ல. ஏனெனில் அஞ்ஞானம் நாசமடைந்த பிறகும் 'அவர்களெனும்' பன்மைச்சொல் இச்சுலோகத்தில் ஆளப்பட்டிருப்பதால் ஜீவன்கள் பலவென்பதும் பெறப்படு கிறது. (இக்கருத்து ஸ்ரீ ராமானுஜருக்கும், சிவஞான போதம், திரு மெய்கண்டாருக்கும் உடன்பாடாகும் என்ப.)

**'அதிலேயே (பிரம்ம ஞானத்திலேயே) புத்தியை வைத் திருப்பவர்கள் அதையே தங்கள் ஆத்ம சொரூபமாகக் கொண்டவர்கள்; அதிலேயே உறுதியாக இருப்பவர்கள்' அதையே புகலிடமாகக் கொண்டவர்கள் ஆவர். ஞானத்தாலே தங்கள் சகல பாவங்களையும் போக்கடித்துக் கொண்டவர் களான இவர்கள் பிறவாமையாம் மேனிலையை அடை கின்றனர்.** V (17)

எனவே நீ ஞானத்தை அடைக. அதிலேயே உன் புத்தியை நிலை நிறுத்துக. உள்ளத்தை அதிலேயே செலுத்துக. எவ்வாற்றானும் ஞானத்தையே அடைய வேண்டுமென்று விழைக. அதுதான் பாதுகாப்பு என எண்ணுக. இவ்வாறு செய்யின் ஞானமுண்டாகும். இப்படி இருந்தால் பாவம் விலகும்; வீட்டின்பம் கிட்டும்; திரும்பவும் பிறவி என்பது இல்லை.

உண்மையான யோகியர், உண்மையான சந்நியாசிகள், ஒளியின் புதல்வர்கள், பரஞ்சோதி முனிவர்கள், தத்பரத்தி லேயே இயங்குகின்றனர்; வாழ்கின்றனர். அவர்கள் அப்பரத் தையே, பர ஞானத்தையே, அதற்கே தங்களை அர்ப்பணித்து விடுகின்றனர். பூத உடலை அவர்கள் விட்டு நீங்கியபின் இவ்வுலகத்திலே அவர்கள் திரும்பவும் பிறப்பதில்லை. இப்படிப்பட்ட பிரம்ம ஞானத்தை அடைந்த யோகி உள்ளும் புறமும் எங்கும் பிரம்மத்தையே காண்கிறான்.

**'கல்வியும் வணக்கமுமுள்ள ஒருவனிடத்தும், அந்தண னிடத்தும், பசுவினிடத்தும், யானையினிடத்தும், நாயி னிடத்தும், அதைக் கொன்று தின்னும் சண்டாளனிடத்தும்**

ஞானிகள் சமதிருஷ்டி உடையவர்களாவார்கள் (யாவற்றையும் சமமாகவே காண்பார்கள்). V (18)

இந்தச் சுலோகத்திற்கு கல்வியும், விநயமுமுள்ள அந்தணர்கள் என்றும் பொருள் கொள்வார்கள் சிலர்.

மேற்கூறிய குணமுள்ள ஞானிகள், விருப்பங்கள், வெறுப்புகள், ஒருதலைப் பட்சம் இவைகளிலிருந்து முற்றும் விலகியவர்களாவார்கள். அவர்கள் யானையினிடத்தும் நாயினிடத்தும் ஒரே ஆத்மாவைக் காண்கின்றனர் அந்தணனிடத்தும் சண்டாளனிடத்தும் கண்ணனையே காண்கின்றனர். சமன் செய்யப்பட்ட துலாக்கோல் போன்ற உள்ளம் அமைந்தவர்கள் அவர்கள். அவர்கள் சமநிலை அடைந்தவர்கள். நித்ய பிரம்மத்திலே நிலை பெற்றவர்கள்.

இப்படிப்பட்ட (ஞானிகள்) கரும யோகிகள் தங்கள் உள்ளத்தின் பிரியத்தினாலோ பிரியமின்மையாலோ இன்பமோ, துன்பமோ அடைதல் இலர். அவர்கள் வாழ்தல் இனிதென மகிழ்தலும் இலர். அதை வெறுத்து இன்னாதது என்று சொல்லுதலும் அவர்களிடம் இல்லை. அவர்களின் ஆனந்தம் ஆத்மாவில் உள்ளது. அந்த ஆத்மாவோ பரமாத்மாவான கண்ணனுடன் ஐக்கியமானது.

அவர்கள் இந்த உலக இன்பங்கள் யாவும் துக்கத்தின் பிறப்பிடமே என்பதை அறிவார்கள்; அந்த இன்பங்களோ முதலும் முடிவும் உடையன. அந்த இன்பங்களின் முதலும் முடிவும் துன்ப மயமே. இன்பத்துக்கோர் எல்லை காணில் துன்பம் என்கிறார் பாரதி. அவர்கள் காமக் குரோதங்களை ஆத்ம சமர்ப்பணத்தால் வென்றவர்கள். முக்குணங்களென்னும் மூன்று குதிரைகளின் கடிவாளங்களைக் கண்ணன்பால் ஈந்து விட்டவர்கள் அவர்கள். தங்கள் அந்தராத்மாவிலே இன்பம் (பேரானந்தம்) காண்பவர்கள். இந்த உலகிலே பூத உடலோடு வாழ்கின்ற காலமெல்லாம் உலக க்ஷேமத்தையே நாடி நிற்பவர்கள் அவர்கள்.

**'யாருடைய உள்ளம் (மேல் சுலோகத்தில் கூறியபடி) பிரம்மத்தை யாவற்றிலும் காணும் சமநிலையில் உறுதியாக இருக்கிறதோ, அவர்கள் இம்மையிலேயே, இந்த உடல் உள்ள போதே, பிறப்பு இறப்பு எனும் இருமையை வென்றவர்கள். உண்மையிலேயே பிரம்மம் என்பது சமநிலை உடையது; தோஷமற்றது (பரிசுத்தமானது). ஆகவேதான் அவர்கள் பிரம்மத்திலே நிலைத்திருக்கிறார்கள்.'** V (19)

*பிரம்மம் நிர்விகாரி. எந்த வகையிலும் அது அதிகப் படுதலோ குறைந்துவிடுதலோ மாறுவதோ இல்லை. சுத்த சைதன்யமான மெய்ப்பொருளுக்கு மாறுதல் உண்டா காது. அது சமநிலையிலிருந்து விலகுவதில்லை. இப்படிப் பட்ட பிரம்மத்திலே நிலைபெற்றிருப்பவர்கள், பிரம்மத்தை எப்பொருளிலும் காண்பவர்கள்; பிறப்பு இறப்பென்னும் சம்சாரக் கடலை நீந்திக் கடந்தவர்கள். ஏனெனில் இந்த ஆத்மா என்று சொல்லப்படும் அப்பொருள் பிரகிருதியின் பந்தத்தில் இருந்து விடுபட்டவுடனே தன்னுடைய மலங்களி லிருந்து விடுதலை அடைந்துவிட, எங்கும் நிறைந்த பரப் பிரம்மத்தையே ஒத்து விடுகிறது. இந்த வகையிலே அது இம்மையிலேயே விடுதலை பெற்று வீடுபேறடை கிறது.*

*'வீடு பேற்று நிலை (விடுதலை) என்பது இங்கே (இந்த உலகிலேயே), நாம் அடையக் கூடிய ஒன்றே— பிருகதாரண்ய உபநிஷத் II.23.1*

**'பிரம்மத்தைஅறிந்தவன் பிரம்மத்திலே நிலை பெற்றவன், ஸ்திர புத்தி (உறுதியான அறிவை) உடையவன், மனக் குழப்பமற்ற, தெளிவான உள்ளம் உடையவன்; தனக்குப் பிரியமானதை அடைந்தாலும் இன்பம் அடையான். பிரிய மில்லாததைப் பெற்ற போதிலும் துன்பம் அடைதலிலன்.'** V (20)

*இச்சுலோகத்திலே முதலிலே சொல்லப்பட்ட இலக் கணங்கள் பூரணமாக அமைந்த பிரம்ம நிஷ்டனுக்கு (பிரம்மத்தில் நிலைத்தவன்) விருப்பு வெறுப்பு கிடையாது.*

ஏனெனில் அவன் இந்த உடலை நான் (ஆத்மா) எனக் கருதுவதில்லை. ஆகையால் அவன் மனக்குழப்பமில்லாதவன் விருப்பம், வெறுப்பு, இன்பம், துன்பம் யாவும் உடலைப் பற்றியனவே அல்லவா? விருப்பு வெறுப்பு இல்லாமையால் இன்ப துன்பங்களால் அவன் பீடிக்கப்படுவதில்லை. ஆனால் அவன் அவைகளை அனுபவிப்பது போல் பிறருக்குத் தோன்றும்.

சுலோகத்தில் இரண்டாம் அடியில் உள்ள 'ப்ரமணிஸ்திர' என்பது பிரம்மத்தில் நிலை பெற்றவன் எனப்படுபவன். அவன் பிரம்மத்தை அடைகிறான்; பிடித்துக் கொள்ளு கிறான். அதில் பிரவேசிக்கிறான்; அதிலேயே நிலைத்து வாழ்கிறான்.

**'(உலகிலுள்ள) வெளி விஷய சுகங்களில் ஆசையற்ற மனம் உடையவன், தன்னுடைய ஆத்மாவிலே அந்த இன்ப சுகத்தை அடைகிறான். பிரம்ம தியானத்திலே உள்ளம் நிலைத்துள்ள அவனே அழியாத சுகத்தை, (வீட்டின்பத்தை) அடைகிறான்.'** V-(21)

பொறிபுலன்களால் அடையும் சுகங்களுக்கு (உலக வெளி விஷய சுகங்கள்) முதலும் முடிவும் உண்டு. அவை உடலைப் பற்றியவை, அவைகளின் தோற்றமும் முடிவும் துன்பங்களே. ஆனால் அவைகளிலே ஆசையற்ற மனம் உடையவனோ, தன் அந்தக்கரணங்கள் மூலமாக ஆத்ம சுகத்தை அடைகிறான்; அந்தச் சுகம் அழியாதது. முதலும் முடிவும் அற்றது; அதை பிரம்ம ஞானி மட்டுமே அடைய முடியும்.

**'குந்தியின் மைந்தனே! விஷயங்களால் (இந்திரியங்க ளால்) உண்டாகும் போகங்கள் எவையோ, அவையே துக்கத் துக்குக் காரணமானவை. அவைகளுக்குத் தோற்றமும் உண்டு; இறுதியும் உண்டு. எனவே ஞானி இவைகளால் இன்புறுவதில்லை.'** VI-(22)

விஷய இன்பத்தின் தொடக்கமும் துன்பம். அந்த இன்பத்தின் எல்லையும் துன்பம். துன்பங்கள் இடையே

தோன்றும் விஷய இன்பம் நீர்க்குமிழி போன்றது; மின்னல் கீற்றுப் போன்று தோன்றி மறைவது. நிலையற்ற அந்த இன்பத்தின் பயனோ துக்கமானது. அவைகளின் உண்மைத் தன்மையை அறிந்தவன் அவைகளிலே நாட்டம் உறுவதில்லை; இன்பங் காண்பதில்லை;

**'எவனொருவன் தன் உடலை விடுவதற்கு முன்னமே, காமம் (பேரவா) குரோதம் (இடையறாச் சினம்) இவைகளால் உண்டாகும் (மனத்துடிப்பை) வேகத்தைத் தடுத்து நிறுத்த வல்லவனோ அவனே யோகி; அவனே ஆனந்தத்தை அடைந்த மனிதன்.'** V-(23)

உயிர் நீங்கியபின் எஞ்சி உள்ள உடலின்மீது வீழ்ந்து அழும் மனைவியின் கண்ணீராலும் மகன் மகள்களின் கதறலாலும் எப்படி உயிருக்கு எவ்வித மனோவிகாரமும் உண்டாவதில்லையோ, அப்படியே உடலில் உயிர் பொருந்தியுள்ள காலத்திலும் தன் உடல் விஷயமாக உண்டாகும் இன்ப துன்பங்களில் மனோவிகார மடையா திருத்தல் வேண்டும். அவனே யோகி, அவனே ஆனந்தத்தை உடையவன். இந்நிலையையே 'செத்தாரைப் போலத் திரி' என்கிறார் பட்டினத்தார்.

காமத்தால் உண்டாகும் மனத்துடிப்பென்பது தனக்கு இன்பந்தரும், பிரியமானவற்றைப் பார்த்தல், கேட்டல், நினைத்தலால் உண்டாகும் மனத்துடிப்பாம். இது உடல் மெய்ப்பாடுகளை உண்டாக்கும்!

குரோதத்தால் உண்டாகும் மனத்துடிப்பு: தனக்குத் துன்பம் விளைவிக்கும் பொருள்களைக் காண்டல், கேட்டல், நினைத்தலால் உண்டாகும் மனத்துடிப்பு, இதுவும் உடல் வேறுபாடுகளை உண்டாக்கும்.

இந்தக் காம குரோதாதிகளால் உண்டாகும் உள்ளத்தின் வேறுபாட்டையும் உடல் வேறுபாட்டையும் தன் விவேகத்தால், ஆத்ம ஞானத்தால்—தடுத்து நிறுத்த வல்லவனே யோகி; ஞானி. அவனே ஆனந்தத்தை அடைகிறான்.

**'எவன் தன்னுள்ளே (தன் ஆத்மாவிலே) இன்பத்தைக் காண்கின்றானோ? தன் உள்ளேயே களியாட்டத்தைக் காண்கிறானோ? தன் ஆத்மாவிலே உள்ளொளியைக் காண்கின்றானோ? அவன், தானே பிரம்மமாகி, பிரம்ம நிர்வாண (வீடு பேற்று) நிலையை அடைகிறான்.'** V-(24)

*அந்த யோகி, தான் தன் ஆத்ம உணர்விலே ஒருங்கிணைந்துள்ள காரணத்தினால், தன்னுள்ளே உள்ள ஆத்ம ஜோதியிலே உறைகிறான். எனவே தன் யதாஸ்தானமான ஆத்மாவில் கிடைக்கின்ற ஆனந்தத்தை வெளியுலக விஷயங்களில் அவன் அடைவதில்லை. ஆத்மாவின் ஜோதியைக் காணும் தன்மையை அவன் அடைந்துள்ளதால், அவனுக்கு வெளியுலக ஒளி வெள்ளங்கள் ஒரு பொருட்டல்ல.*

*தன் ஆத்மாவை உணர்ந்த ஒவ்வொருவனுக்கும், பிரம்ம நிர்வாண (வீட்டின்ப) அமைதியின் பேரின்ப நிலை கிட்டுகிறது. ஏனெனில் இதுவே ஞானம். இது காமக் குரோதாதிகளை விரட்டியடிக்கிறது. இதை உடையவனே இயற்கையை (மாயையை) அடக்கி ஆள்பவன். இவனே தன் எண்ணங்களை அடிமைப்படுத்தியவன்.*

**'பாவங்களைத் தம்மிடமிருந்து அகற்றிவிட்டவர்கள்; இருமைகளின் ஐயப்பாடுகளைக் களைந்து விட்டவர்கள்; இந்திரியங்களை (பொறிபுலன்களை) வெற்றி கொண்டவர்கள், அனைத்து உயிர்களின் நன்மையிலும் நாட்டம் கொண்டு மகிழ்பவர்கள், ஆகிய ரிஷிகள், பிரம்ம நிர்வாணத்தை அடைகிறார்கள்.'** V (25)

*இச் சுலோகத்திலே வரும், 'சர்வபூதஹிதேரத' என்னும் சொல்லால் நாம் அறிவது, ரிஷிகள் எல்லா உயிர்களின் க்ஷேமத்திலும் கருத்தூன்றி மகிழ்கின்றனர் என்பதாகும். எந்த ஆத்மா, ஞானத்தையும் சாந்தியையும் அடைந்துள்ளதோ, அந்த ஆத்மாவே அன்பையும், கருணையையும் தன்னிடம் அமையப் பெற்றதாகும்.*

அனைத்து உயிர்களிடத்திலும் ஆண்டவனைக் காணும் ஒருவன் வழுக்கி விழுந்தவர்களிடமும் குற்றவாளிகளிடமும் இறைவனையே காண்கிறான். எனவே அவன் அவர்களிடமும் ஆழ்ந்த அனுதாபத்தோடும் அன்போடும் அணுகி அவர்களது க்ஷேமத்திற்கு வழி வகுக்கிறான்.

பிறருக்கு நன்மை செய்வதென்பது, அவர்கட்குப் பொருள் உதவி செய்து லௌகீக உயர்வளிப்பது மட்டுமே அல்ல. அவர்கள் தாம் யார் என்று அறிய, தம்முடைய உண்மையான தன்மை இன்னதென உணர, நிலையான ஆனந்தம் அவர்கள் அடைய உதவுவதும் நன்மை செய்தலேயாம்.

ரிஷிகள் (முனிகள்) என்று சொல்லப்படுபவர்கள் தன்னை அறிந்து தன் ஆத்மாவிலே வாழும் ஞானிகள்; இருமைகளின் (நன்மை, தீமை, புண்ணிய பாவம், இன்ப துன்பம்) குழப்பங்களிலிருந்து விடுபட்டவர்கள், சிந்தை தெளிவுள்ளவர்கள், இந்திரியங்களை வென்ற தீரர்கள் என்பவர்களே. இப்படிப்பட்டவர்கள், உலக உயிர்களின்க்ஷேமத்தையே கருதுவார்கள், இப்படிப்பட்டவர்களே சகல பாவங்களிலிருந்தும் விடுபட்டவர்கள், இவர்களே பிரம்ம நிர்வாணத்தை எளிதில் அடைவார்கள்.

**'காமம், குரோதம், (ஆசை, ஆறாத சினம்) இவைகளிலிருந்து விடுபட்டவர்களாய்த் தன் மனம் அடங்கப் பெற்று ஆத்ம ஞானத்தை அடைந்த சந்நியாசிகளுக்கு, இம்மை மறுமை எனும் இருமையிலும் மோட்சம் உளது.'** V (26)

இங்கு சொல்லப்பட்ட இவர்கள் ஆத்மாவின் உணர்வு நிலையிலே வசிப்பவர்கள். இவர்கள் உடலோடு பொருந்தி வாழும் காலத்திலேயே, பக்குவப்பட்டவர்கள், ஜீவன் முத்தர்கள், யதிகள், இவர்கட்கு எப்பக்கமும் (இம்மையிலும் மறுமையிலும்) மோட்சம் உளது.

**'எனவே (உடலுக்குப் புறம்பான) விஷய சுகங்களை வெளியே விலக்கியும் இரு கண்களின் பார்வையைப் புருவ**

மத்தியிலே நிறுத்தியும், மூக்கின் வழியாக இயங்குகின்ற பிராண, அபான வாயுக்களைச் சமனப்படுத்தியும், இந்திரியங்கள், மனம் புத்தி இவைகளை அடக்கியும், ஆசை, பயம், கோபம் இவைகளை விட்டொழித்தும், முக்தி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, மௌனத்தைக் கைக்கொண்ட யோகி எவனோ அவனே முக்தன் ஆவான்.' V (27&28)

இவ்விரு சுலோகங்களிலும் தியானம் செய்யும் முறை விளக்கப்படுகிறது. தியானத்தில் அமரும் போது வெளி விவகாரங்கள் வெளியிலேயே விலக்கப்பட வேண்டும். இருக்கையிலே (ஆசனம்) நீண்ட நேரம் அமரும் பழக்கத்தையும் கைக்கொள்ள வேண்டும். மூச்சை ஒழுங்கு செய்து, கண்களின் பார்வையைப் புருவ மத்தியிலே நிலை நிறுத்த வேண்டும். இவைகளின் விளக்கமே அடுத்து வரும் ஆறாம் அத்தியாயம்.

புருவ மத்தியிலே பார்வையை நிறுத்தி மூச்சை ஒழுங்கு செய்வதின் மூலம், உள்ளத்தை ஒருமுகப்படுத்தித் தைல தாரையைப் போலத் தன் சிந்தனைக் கதிரை, ஆத்மாவிலே லயிக்கச் செய்பவன்தான் முக்தன் எனப்படுவான். அவனிடமிருந்து ஆசை, பயம், கோபம் அகன்றுவிடும். இந்திரியங்கள், மனம், புத்தி ஆகிய அனைத்தும் அவனிடம் செயலற்றுப் போம். அவன் மோன சாம்ராஜ்ஜியத்திலே முடிசூடா மன்னன். அவனே யோகி. அவனே ஜீவன் முக்தன்.

'வேள்வி, தவம் இவைகளை அனுபவிக்கும் கர்த்தா நானே எனவும், உலகு அனைத்துக்கும் சர்வேஸ்வரனாய் இருப்பவன் நானே எனவும், எல்லா உயிர்களுக்கும் நண்பன் நானே எனவும், என என்னை அறிந்தவன் எவனோ அவன் சாந்தியை அடைகிறான்.' V (29)

எல்லையற்ற தத்துவங்கடந்த பரம்பொருளே, உலகில் உள்ள அனைத்துயிர்களுக்கும் இறைவனாகிறான்; உயிர்களுக்கு நண்பனாகிறான். எவ்விதமான கைம்மாறும் கருதாமல் உதவும் (நன்மை செய்யும்) கருணாமூர்த்தி ஆகிறான். அவனை உள்ளவாறு உணர்ந்தவன் எவனோ அவன் சித்த சலனமின்றி சாந்தியை அடைகிறான்.

## ஐந்தாம் அத்தியாயம் முற்றும்



## அத்தியாயம்—6

# தியான யோகம்

*கண்ணன் மேலும் கூறுகிறார் :*

**'எவன் ஒருவன் கருமபலனை இச்சிக்காமல் தான் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்கிறானோ அவனே சந்நியாசியும் யோகியும் ஆகிறான். வேள்வித் தீயைத் துறந்து விட்டவன் சந்நியாசி அல்லன். தன் கருமத்தைச் செய்யாதவனும் யோகி அல்லன்.'** VI (1)

*ஒரு சந்நியாசி (துறவி) தான் இயற்றுகின்ற அக்கினி ஹோத்திரம் எனப்படும் வேள்வித்தீயைத் துறந்து விடுவதால் மட்டுமே 'சந்நியாசி' ஆவதில்லை. தான் இயற்ற வேண்டிய கருமங்களை எல்லாம் துறந்து விடுவதாலேயே 'யோகி' ஆகி விட முடியாது, ஆனால் வேள்வியோ, கருமமோ எதுவாயினும் தான் செய்து கொண்டே அந்தச் செயல்களின் பலனை ஒரு சிறிதுகூட இச்சிக்காமல் இருப்பதே உண்மையான துறவு—சந்நியாசம் ஆகும்.*

*அதோடு தன் சங்கல்பங்களைத் துறந்து விடுவதும் சந்நியாசமே! எதிர் காலத்தைப் பற்றிய மனக்கோட்டையாம் சங்கல்பங்களை எல்லாம் உண்மையான துறவி மேற்கொள்ள மாட்டான்; தன்னிடம் அண்ட விட மாட்டான்.*

*இந்தச் சந்நியாசம் கருமபலனிலே சிறிதும் பற்றற்ற நிலையோடு கருமம் செய்யும் படிக் கூறுகிறது. இந்த வகை யோகத்திலே நிலைத்திருப்பவனுக்குச் சாந்தம் (சமம்) கை வரப் பெறுகிறது. இது, சங்கல்பத்தைத் துறந்து விடுவதால்*

உண்டாவது. மனக் கோட்டையாம் சங்கல்பத்தால் நம் உள்ளத்தின் சம நிலை பாதிக்கப்படுகிறது.

**'பாண்டவா! எதைச் சந்நியாசம் என்கிறார்களோ; அதையே யோகம் என்று அறிக. ஏனெனில் சகல சங்கல்பங்களையும் (ஆசை அலைகள்) துறவாத எவனும் யோகியாவதில்லை!'** VI (2)

தான் செய்யும் கருமங்களுக்கான பலனைப்பற்றி உள்ளத்தில் எழும் அவாவின் அலைகளே சங்கற்பங்கள். ஒன்றன்பின் ஒன்றாகச் சங்கிலித் தொடர்போல, பலப்பல எண்ணங்கள் உள்ளத்தில் உதிப்பதே சங்கல்பம். இந்த சங்கல்பத்தை அடியோடு துறப்பதே சந்நியாசம்.

நான்காம் அதிகாரம் 19ஆம் சுலோகத்திலே சொல்லப் பட்டவை இங்கு நினைவுகூறத் தக்கன.

எவனுடைய கருமங்கள் யாவும் ஆசையும் சங்கற்பங்களும் அற்றனவோ, எவனது கருமங்கள் ஞானத்தால் எரிக்கப்பட்டனவோ அவனையே ஞானிகள் பண்டிதன் என்கின்றனர்.

யோகம் எனப்படும் அரியணையில் வீற்றிருக்கும் ஒருவனே யோகாரூடன் எனப்படுகிறான். அவன் எல்லா சங்கல்பங்களையும் துறந்துவிட்டுத் தியானத்திலே ஆழ்ந்திருப்பான்.

மெய்யாகவே, உண்மையான துறவுதான் யோகம் எனப்படும். எனவே சங்கல்பங்களை முற்றும் துறந்துவிடாதவன் உண்மையான யோகி ஆகிவிட முடியாது.

மற்றும், எவன் ஒருவன் தன்னுடைய குழப்பமான தன்மையை முற்றும் துறந்து விடவில்லையோ, அவன் யோகி ஆகிவிட முடியாது. இங்கு குழப்பமான தன்மைவற்ற என்பது'தான் யார்?' என்று நன்கு உணராத ஆத்ம தெளி குழப்பமே. இந்த ஆத்ம தெளிவு முற்றும் அமைந்தவன் சங்கல்பங்களை முற்றுந் துறந்து விடுகிறான். அவனே யோகி, ஞானி எனப்படுவான்.

**'இந்தத் தியான யோகத்திலே முன்னேற்றமடைய விரும்புகின்ற முனிவனுக்குக் கருமமே சாதனம் என்று சொல்லப்படுகிறது. யோகாருடன் எனப்படும் தியான யோகத்தினை நன்கடைந்தவனுக்கு உள்ளம் சிறிதும் செயலற்ற நிலையாம் சாந்தியே (சமமே) சாதனம் என்று சொல்லப்படுகிறது' VI (3)**

*நாம் (மோட்சத்தை) விடுதலையை விழைகின்ற காலத்திலே, நாம் நம் உள்ளத் துறவோடும் நல்ல உணர்வோடும் செய்கின்ற நற்கருமங்கள் யாவும் நமக்குத் துணை நிற்கும். நம் ஆத்மா தன் ஆட்சியின்கீழ் வந்த பிறகு நாம் எந்தப் பலனை எதிர்நோக்கியும் செயலாற்றுவதில்லை. அக்கால் நம் உள்ளமானது இறை உணர்விலே நங்கூரம் பாய்ச்சி நிற்கிறது. ஆத்ம ஞானம் உள்ளத்தின் சலனம் அற்ற நிலை அடைய நாம் அரும்பாடு படுகிறோம். அந்த நிலை அடைந்தபிறகு நாம் அடைவதுதான் சாந்தி. அதாவது சமம் என்பதாகும்.*

*ஆத்ம தரிசனம் தான் அடையும் வரையிலும் ஒவ்வொருவனும் தான் தன் கருமங்களைக் கட்டாயமாக நிஷ்காமியமாகச் செய்ய வேண்டியவனே என்பதுதான் இதன் பொருளாகும். இந்தப் பற்றற்ற கருமத்தை ஊக்கத்துடன் செய்பவனுக்குத் தியானம் கைகூடும். அதனால் சித்த சுத்தி உண்டாம்; மனம் தெளிவடையும். அதனால் அடைவதோ சமம் எனப்படும் சாந்தி ஆகும்.*

**'எவன் ஒருவன் எக்காலத்தும் இந்திரிய விஷயங்களில் விருப்பம் வைத்தல் இல்லையோ, கருமங்களை ஆற்றுவதில் இச்சை வைத்தல் இல்லையோ, எவன் ஒருவன் எல்லா எண்ணங்களையும் எண்ணத் தளைகளையும் அறுத்து எறிந்து விடுகிறானோ அவனையே யோகாருடன் என்று சொல்லப்படும்.' VI (4)**

*முன் சுலோகத்திலே பயன்படுத்தப்பட்ட யோகாருடன் என்பவன் யார் என்பதைச் இச்சுலோகத்தால் விளக்குகிறார். கண்ணன். சர்வ சங்கல்பங்களைத் துறந்து யோகத்திலேயே*

நிலை பெற்ற சந்நியாசிதான் யோகாருடன் என்பது கண்ணனின் வாக்கு. அதாவது எல்லாச் சங்கல்பங்களையும் (எண்ணங்களின் தொடர்ச்சிகளை) அடியோடு துறந்து விடுதலை யோகாருடனின் இலக்கணம்.

அதாவது, சர்வ சங்கல்ப சந்நியாசி என்பவன் தன் விருப்பு வெறுப்புக்களை அடியோடு துறந்தவன்; தன்னையே மறந்தவன்; பயன் நோக்கத்தை உதறித் தள்ளி விட்டவன்; தான என்னும் அகங்காரத்தை ஒறுத்து அடக்கியவன். பரமாத்மாவின் சித்தத்திற்கே தன்னை முழுமையாக ஒப்படைத்து விட்டதால், இந்தச் சாதகன் துறக்க வாழ்வுக்குத் தன்னை மேம்படுத்திக் கொள்ளுகிறான். 'ஓ! ஆசையே! நான் உன்னுடைய மூலகாரணத்தை (வேரை) நன்கறிவேன். நீதான் சங்கல்பத்தால், எண்ணச் சங்கிலியால் என்னைப் பிணிப்பவன். நான் உன்னை நினைக்கவே மாட்டேன். எனவே என்னிடம் நெருங்கவும் நீ நினைக்க வேண்டா; என்னை விட்டு ஒழிந்து போ' என்பதுதான் அவனது திண்ணிய எண்ணம்.

**'ஒவ்வொருவனும் தன்னை (தன் ஆத்மாவை) தன உள்ளத்தினாலே உயர்த்திக்கொள்ள வேண்டும். தன்னுடைய ஆத்மாவைத் தாழ்ச்சியடைய—வீழ்ச்சியுறச் செய்யலாகாது. ஏனெனில் மனமே ஆத்மாவின் நண்பன். மனமே ஆத்மாவின் பகைவன். தானே தனக்குச் சத்துரு; தானே தனக்குப் பகைவனாம்.'** VI (5)

மனிதனுடைய பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் அவனவன் கருமமே கட்டளைக் கல் என்கிறது குறள். எனவே பெருமை, சிறுமை இரண்டுக்கும் அவனவனே பொறுப்பாகிறான்; அவனவன் செயல்களே காரணம். செயல்களுக்கு மூல காரணம் மனம் தன் இஷ்டப்படி முக்குண வசப்பட்டுச் சூழ்நிலைக்கேற்ப மாற்றம் அடைவதால் நல்ல அற வாழ்க்கையோ அல்லது கேடு கெட்ட துன்மார்க்க வாழ்க்கையோ இவ்வகையில் மேற்கொள்ள வேண்டியதாகிறது.

இந்த வகையில் ஒவ்வொருவனுடைய உள்ளமே அவன வன் ஆத்மாவுக்கு நண்பனாக விளங்கி அவனை உயர்த்து கின்றது. அல்லது ஆத்மாவுக்குப் பகைவனாகி அவனை அழித்துவிடுகிறது. ஆத்மாவைக் கரையேற்றுவது அல்லது ஆத்மாவை துக்கப்படும்படிச் செய்வது எனும் இரண்டுக்கும் மனமே காரணம்.

'தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்,
(திருவாசகம்)

'தீதும் நன்றும் பிறர்தர வாரா'
(கணியன் பூங்குன்றனார்)

'நன்னிலைக் கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலை கலக்கிக் கீழ் இடுவானும் தன்னை
மேன் மேல் உயர்த்தி நிற்பானும் தன்னைத்
தலையாசச் செய்வானும் தான்.'

என்கிறது நாலடியார்.

தனக்குத் தன்னைக் காட்டிலும் நண்பனோ பகைவனோ இல்லை என்று எவனொருவன் உணர்கின்றானோ அவனே ஆத்மாவை உணர்ந்தவன்; உண்மையை அறிந்தவன்.

பரம்பொருள் நம் உள்ளத்திலேயே இருக்கிறான். உலகப் போக்கிலே ஈடுபடும் உள்ளத்தின் அடித்தளமே அவன் இருப்பிடம். ஏறத்தாழ முற்றிலுமாக நாம் அவன் கோயில் கொண்டுள்ள அடிமனத்தை நினைப்பதில்லை; தீண்டு வதில்லை. ஏனெனில் நம்முடைய மேல்மனம் லௌகீக விவகாரங்களில் ஈடுபட்டு விருப்பு, வெறுப்புகளுக்கேற்ப சிந்தனை வயப்பட்டுத் திகைக்கிறது; திண்டாடுகிறது. அவை களிலிருந்து விடுபட்டாலொழிய நாம் நம் உள்ளத்தின் உள்ளே கோயில் கொண்டுள்ள பரமாத்மாவை உணர முடியாது. இந்த வகையில் உள்ளமே நமக்குச் சாதகமான நண்பனாகலாம்; அல்லது பாதகமான சத்துரு ஆகலாம்.

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்'

என்கிறார் திருமூலர்.

**'எந்த ஆத்மாவாலே மனமானது வெற்றி கொள்ளப்படுகிறதோ, அந்த ஆத்மாவுக்கு அம்மனமே நண்பன், உறவினன் ஆகும். மாறாகத் தன் மனதை வெல்லாமையால் ஆத்மாவின் கட்டுப்பாட்டில் இல்லாத மனம் உடையவனுக்கு அம்மனமே பகையாகி நின்று பகைமையிலே அவனை ஆழ்த்தி விடும்.'** VI (6)

மனத்தின் சலனங்களை வென்று தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவனே தன்னைத்தான் வென்றவன். அவனுக்கு மனமே உறவாகும், மாறாக மனத்தின் சலனங்களுக்கு அடிமையாகி விடுகின்றவன் தன்னைத்தான் வெல்லாதவன். அவனுக்கு (ஆத்மாவுக்கு) மனமே சத்துருவாகி நின்று அவன் உள்ளதலைத விஷயாதி போகங்களில் புகவிட்டுப் பகைமையிலேயே அவனை ஆழ்த்திவிடும்.

எவன் தன்னுடைய உள்ளத்தை வெற்றி கொண்டு, அதைத் தன் அடிமையாக்கித் தன் ஏவலுக்கு உட்படுத்திக் கொண்டானோ அவனுக்கு அவன் உள்ளம் நண்பனாகிறது. மாறாக எவன் தன்னுடைய உள்ளத்தின் ஏவலுக்குத் தான் அடிமையாகிவிடுகிறானோ அவனுக்கு அவன் மனமே சத்ருருவாகிவிடுகிறது. அவன் மனமே அவனுக்கு உட்பகைவனாகிறது. புறத்தே உலவும் பகைவனைக் காட்டிலும் இந்த அகப் பகைவன் பயங்கரமானவன். இந்த உட்பகை ஒய்வொழிவின்றி அவன் உயிரையே வாட்டி எடுத்துவிடும். எனவே, எல்லா துக்கங்களுக்கும் மூல முதற்காரணமாக விளங்கும் இந்த அகப்பகையை ஒழித்து விட வேண்டும். அதாவது நம் உள்ளத்தை வெற்றி கொண்டு அதை நம் வேலைக்காரனாக்கி ஏவல் செய்யும்படிச் செய்ய வேண்டும்.

**'தன்னை வெற்றி கொண்டவனுக்கு, ஜிதாத்மன் அதனால், மனம் தெளிவடைந்தவனுக்கு குளிரும் வெப்பமும், இன்பமும்**

**துன்பமும், அங்ஙனமே மானமும் அவமானமும் எத்தகைய பாதிப்பையும் உண்டாக்குவதில்லை. இவ்வகைப்பட்ட இருமை நிலைகளிலும் அவன் ஆத்மா பரமாத்ம தரிசனத் திலேயே நிலைத்திருக்கும்.' VI (7)**

*அதாவது மேல் சுலோகத்திலே சொல்லப்பட்டவாறு தன் மனத்தை வெற்றி கொண்டு அதைத்தன் நண்பனாக்கிக் கொண்டு அருளார்ந்த நிலையிலே உள்ளவன் தன் ஆத்மா விலே பரமாத்மாவைக் காண்பவனாகிறான். அவனே இச்சுலோகத்தின் முதலிலே சொல்லப்படும் ஜிதாத்மன். அவனுடைய அமைதியான சாந்த நிலை எவ்வகைப்பட்ட இன்ப, துன்ப, மான, அவமான, குளிர்வெப்ப நிலைகளால் பாதிக்கப்பட மாட்டாது.*

*சாதாரணமாகவே, இவ்வுடலில் உள்ள நம் ஆத்மா இவ்வுலக நடைமுறைகளால், சூழ்நிலைகளால், இன்ப துன்ப மாம் இருமைகளால் ஆட்கொள்ளப்படுகிறது. ஆனால் எப்பொழுது இந்த ஆத்மா தன் இந்திரியங்களை வென்று அந்தக் கரணங்களை ஆட்சி கொண்டு, இந்த உலகத்தையே தனக்கு அடிமையாக்கிக் கொள்கிறதோ, அப்போதே இந்த ஆத்மா விடுதலையடைந்து விடுகிறது. அக்காலத்திலே பரமாத்மாவின் வேறுபட்டதல்லதாய் இந்த ஜீவாத்மா விளங்குகிறது. இவ்வகையிலே இந்த ஆத்மா பரமாத்ம தரிசனத்திலே நிலைத்திருக்கும்.*

*இவ்வகையான ஆத்ம தரிசனத்திலே மூழ்கிக் கிடக்கும் ஒரு யோகியே தன் பொறிபுலன்களை அடக்கி அவைகளை அடிமையாக்கிக் கொண்டவன். அவன் மலையைப் போல அசைவற்றவன். அவனுக்கு குளிரும் வெப்பமும், இன்பமும் துன்பமும், மானமும் அவமானமுமான எதிர் எதிரான இருமைகளும் ஒன்றே; அவனைப் பொருத்தமட்டில் கல்லும் ஓடும் பொன்னும் ஒன்றே. உயர்வு தாழ்வு அற்றவைகளே!*

"ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே"—தாயுமானார்

அவன் அனைவரையும் ஒரே பார்வையால் பார்க்கிறான். நண்பர்கள், விரோதிகள், அயலார்கள், உறவினர்கள், சான்றோர்கள், கொடியவர்கள் ஆகிய அனைவரையும் அவன் சமநோக்கோடு—சம புத்தியோடு காண்கின்றான்.

இப்படிப்பட்ட தன்மைகளை உடையவனே யோகாரூடன் எனப்படுகிறான். இவனையே அடுத்து வரும் இரண்டு சுலோகங்களிலே கண்ணன் விளக்குகிறார்.

**'யார் ஒருவன் ஞானத்திலே (அறிவிலே), விஞ்ஞானத்திலே (ஞானானுபவங்களிலே) நிறைவு அடைந்தவனோ, மனம் சலியாதவனோ, (சலிக்காத மனம் உடையவனே கூடஸ்தன்), புலன்களை வென்றவனோ, மண்ணையும் கல்லையும் பொன்னையும் சமமாகக் கருதுகின்றவனோ, அத்தகைய யோகியானவன் சமாதியிலே நிலை பெற்றவன் என்று சொல்லப்படுகிறான்.'** VI (8)

**'நம் நலம் நாடுபவர்கள், நண்பர்கள், பகைவர்கள், நம்மை உதாசீனம் (அலட்சியம்) செய்பவர்கள், பகையோ நட்போ அற்ற பொதுவானவர்கள், வெறுப்பவர்கள், சுற்றத்தார், சான்றோர்கள், கொடியவர்கள் ஆகிய யாவரிடத்தும் சமதிருஷ்டி—சமபுத்தி உடையவனே மேலோன் ஆவான்.'**
VI (9)

மேற்குறிப்பிட்ட யோகியானவன் (யுக்த; இதி) யோகத்திலே உறுதி பெற்றவன் எனப்படுகிறான். ஏனெனில் கணந்தோறும் மாறுதலுக்கு உட்படும் உலகில் இருந்து கொண்டே ஒரு சிறிதும் மாறுதலற்ற பரமாத்மாவை தன் ஆத்மாவிலே காண அவன் தியானிக்கிறான். இப்படிப் பட்டவன் மாறுதலடையும் உலகத் தோற்றங்களுக்கு அப்பாற்பட்ட மெய்யுணர்வு—மெய்ஞானங்களால்—மன நிறைவடைகிறான். இவ்வுலகில் உள்ள பொருள்களாலோ,

அல்லது நிகழ்ச்சிகளாலோ, அவன் உள்ளம் சலனமடைவதில்லை. மாறுதலற்ற ஆகாயத்தைப் போல அவன் உள்ளம் மாறுதலற்று விளங்குகிறது.

இப்படிப்பட்ட யோகி இதைப் பயில, அதற்குத்தக்க இடத்தையும் சூழ்நிலைகளையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

யோகம் பயில்பவன் பிறர் காணும்படி யோகம் பயிலுதல் ஆகாது. அவனுக்குத் தனிமை தேவை. யோகப் பயிற்சி செய்யுங்கால் பிறர் அவனைக் காணக் கூடாது.

**'எனவே யோகியானவன் பிறர் காணக் கூடாத தன்னந் தனியனாய் (ஸ்திரமாக) உறுதியோடிருந்து அமர்ந்து, தன் உடலையும், உள்ளத்தையும், அந்தக்கரணங்களையும் அடக்கினவனாய், ஆசையற்றவனாய், தனக்கென யாதொரு உடைமையும் இல்லாதவனாய், எக்காலத்தும் உள்ளத்தைக் குவித்து (கூம்பி) ஒருமுகப்படுத்த வேண்டும்.'** VI (10)

இந்தச் சுலோகத்தில் இருந்து (சுலோகம் 10 முதல் 14 வரை) ஐந்து சுலோகங்களில் ராஜ யோகம் பயிலும் முறை விளக்கப்படுகிறது.

இவ்வகையிலே யோகப் பயிற்சியில் ஈடுபடும் சாதகன் ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட நேரத்திலே—இடையிலே எந்த நாளும் பயிற்சியைக் கைவிடாமல்—தன் உள்ளத்தை யோகப் பயிற்சியில் ஈடுபடுத்த வேண்டும். அதாவது தன்னுடைய இப்பயிற்சி மூலம் அவன் தன் ஆத்ம தரிசனத்தை அடைய முழுமூச்சுடன் பாடுபட்டுப் பயிலுதல் வேண்டும். இதற்கென மக்கள் நடமாட்டமோ, சந்தடியோ அற்ற ஏகாந்தமான இடத்தை அவன் தேர்ந்தெடுக்க வேண்டும். அங்கே அவன் தனித்தே இருக்க வேண்டும். வேறு யாரும் துணை இருத்தல் கூடாது. இதைத்தான் வள்ளலாரும் 'தனித்திரு' என்கிறார்.

அவன் தன் சித்தத்தைத் தன்னுடைய கட்டுப்பாட்டிலேயே வைத்திருக்க வேண்டும். அதாவது குதித்துத் தாவித் தாவிச் செல்லும் மனத்தைத் தான் அடக்கி ஆளவேண்டும். அவனுக்கென வேறு எந்த ஆசையும் இருத்தலாகாது. அவனது ஆசை, தன் ஆத்ம தரிசனம் மட்டுமே! 'தான்' 'தன் உரிமை' என்னும் எண்ணமே அவனுள் எழலாகாது. அவன் உடைமை அவன் ஆத்மா மட்டுமே! இங்ஙனம் 'நான்' என்னும் அகப்பற்றும் 'எனது' என்னும் புறப்பற்றும் அற்றவனே யோக சாதகன் ஆக முடியும்.

**'தூய்மையான இடத்திலே, உறுதி வாய்ந்ததும் (ஆடாத அசையாத) அதிக உயரமோ, மிகத் தாழ்வோ (தாழ்ச்சி) இல்லாததும், பருத்தித்துணி அல்லது புலித்தோல், மான் தோல் அல்லது தர்ப்பை இவைகளை மேலே பரப்பப்பட்ட இருக்கையை (ஆசனத்தை) அவன் (யோகி) நன்கமைத்துக் கொண்டு.'** VI (11)

**'அந்த இருக்கையின் மேல் அமர்ந்து, உள்ளத்தை ஒருமுகப்படுத்தி, மனம் முதலிய அந்தக்கரணங்கள், இந்திரியங்களாம் பொறிகள் இவைகளின் இயக்கங்களை (சஞ்சாரங்களை) அடக்கி யோகம் பயில வேண்டும்.'** VI (12)

**'உடல், தலை, கழுத்து இவைகளை (வளையாமல்) நேர்க்கோட்டிலே நிறுத்தி, அசையாமல வைத்து உறுதியாக இருந்தபடி தன்பார்வையை மூக்கு நுனிமேல் நிறுத்திச் சுற்றுப் புறத்தையோ திசைகளையோ பாராதிருத்தல் வேண்டும்.'** VI (13)

**'அமைதியான உள்ளம் உடையவனாய், பயம் முற்றும் நீங்கியவனாய், பிரம்மச்சரிய விரதத்திலே நிலைபெற்றவனாய் தன் உள்ளத்தினை அடக்கினவனாய், தன் சித்தத்தை என்னிடம் வைத்தவனாய், தன் குறிக்கோள் என என்னையே (பரம்பிரம்மத்தையே) கொண்டவனாக, என்னையே தியானித்தபடி யோக முயற்சியைக் கைக்கொண்டவனாக அமர்ந்திருக்க வேண்டும்.'** VI (14)

இந்த நான்கு சுலோகங்களாலும், பகவான் கண்ணன் ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் என்பனவற்றைக் கூறி விளக்குகிறார்.

தியான யோகத்தைக் கைக்கொள்ளும் யோகி பரமாத்மாவிலே லயித்திருக்கிறான்.

எனவே, அவன் எக்காலத்தும் தனிமையை நாடி நிற்கிறான். மிகத் தூய்மையான இடத்திலே அவன் தனக்கெனத் தன் தியானத்திற்கான ஒரு இருக்கையை அமைத்துக் கொள்ளுகிறான்.

அந்த இருக்கையைத் தாழ்வாகவும் இல்லாமல் அதிக உயரமாகவும் இல்லாமல் சமானமானதாக அமைத்துக் கொள்கிறான். அப்பீடத்தின்மீது தர்ப்பைப்புல், மான் அல்லது புலித்தோல், தூய வெண்மையான ஆடை இவைகளை ஒன்றின் மேல் ஒன்றாகப் பரப்பி வைக்கிறான்.

அந்த இருக்கையின் மேல் அந்த யோகி நிமிர்ந்தபடி ஆடாமல் அசையாமல் அமர்ந்து, தன் உள்ளத்தை ஒருமுகப் படுத்துகிறான். தனது தியானத்தின் மூலம் ஆத்ம சுத்தி அடைகிறான்.

தன் உடல், தலை, கழுத்து இவைகளை ஆடாமல் அசையாமல் செங்குத்தாக நேர்க்கோட்டில் அமர்ந்து, தன் பார்வையை மூக்கு நுனியின் மேல் அசையாமல் நிலை நிறுத்துகிறான்.

> ''நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
> வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை.''

> 'நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு,
> உயர்வெழா வாயுவை உள்ளே யடக்கித்
> துயரற நாடியே தூங்க வல்லாரிக்குப்
> பயனிது காயம் பயமில்லை தானே'

என்கிறது திருமந்திரம்.

இங்கே யோகம் என்று சொல்லப்படுவது தியான யோகத்தையே! இந்த யோகத்தின் மூலம் மெய்யுணர்வு அடைகின்ற யோகி தன்னிடம் உள்ள பந்த பாசங்களில் இருந்து விடுதலையடைந்து விடுகிறான். தனக்கென விழை கின்ற உலக இச்சைகள் அவனிடம் ஒன்றுமே இல்லை. அவனுடைய பற்றற்ற தன்மை ஓர் ஒழுங்கு முறையானது. அவன் உலகத்தைப் பார்க்கின்ற பார்வையே வேறு வகை யானது.

பலவகைப்பட்ட போட்டிப் பந்தயங்கள் ஒரு திடலில் நடைபெறுகின்றன. அங்கு பலவகைப்பட்ட மக்கள் கூடு கின்றனர் கடையைப் பரப்பித் தங்கள் பொருள்களை விற்க முற்படுகின்றவர் சிலர். அதை வாங்கி மகிழும் மாந்தர்கள் சிலர். போட்டியிலே கலந்து கொள்ள வந்துள்ளவர்கள் சிலர். வெற்றியடைய வேண்டும், பதக்கம் பெற வேண்டும் எனத் துடிப்பவர்கள் சிலர். மற்றும் சிலர் வேடிக்கை மட்டுமே பார்க்க வந்தவர்கள். அவர்கள் விற்க, வாங்க வரவில்லை. ஜெயிக்க, தோற்க வரவில்லை. மற்ற பிறர் அனைவரையும் வெறுமனே பார்த்து மகிழ்கிறார்கள். அவர்களின் பார்வையைப் போன்றதே ஒரு யோகி உலகத்தைப் பார்க்கும் பார்வை ஆகும்.

இந்த வகையிலே, ஞானத்தைத் தேடுகின்ற ஒரு யோகி, தன்புலனடக்கி, எச்செயல்களிலும் பற்றற்று, கரும பலனிலே விருப்புற்று ஆத்மஞானம் என்னும் ஒன்றையே, பரப்பிரம் மத்தையே தன் ஒரே குறிக்கோளாகக் கொள்கிறான். அவன் தனித்திருக்கிறான்; விழித்திருக்கிறான்; ஆத்ம பசியோ டிருக்கிறான். அவன் அமைதி மயமானவன். 'ஓம்! சாந்தி! சாந்தி! சாந்தி!' என்றே ஜெபிக்கிறான்.

14-ஆம் சுலோகத்திலே, பிரம்மச்சரிய விரதத்திலே நிலை பெற்றவனாய் ஒரு யோகி இருத்தல் வேண்டும் எனச் சொல்லப்படுகிறது. யோகிக்கு இது மிகமிக இன்றியமை யாத பண்பாகும். யோக சாதகன், பிரம்மசரியத்தை மிகமிக

கடுமையாகக் கைக்கொள்ள வேண்டும். 'காமஉட்பகைவன்' என்கிறார் வள்ளலார். வெளிப்பகையை வெல்லக்கூடும். உட்பகையை வெல்லல் கடினம். இதை வெல்லுவதற்கு மனம் வாக்கு காயங்களால் யோகி ப்ரம்மசரியத்தை அனுஷ்டித்தல் அவசியம். இது புலனடக்கத்தால் மட்டுமே வரும்; அமையும்.

ஒருமுகப்பட்ட உள்ளம் உடையவனே மெய்யுணர்வு எய்துகிறான். அவனே உண்மையைக் காண்கிறான். அடைகிறான். இந்த நிலை ஜெபித்தலோ, வேண்டுகோள் விடுதலோ அல்ல. இறைவனிடம் வேண்டிக் கொள்ளுதல் வியாபாரம் செய்தலே. மாறாக, இந்த தியானயோகத்திலே ஒரு யோகி அடைவது பரிபூரணமாக தன்னை முற்றும் இழந்த நிலை. அங்கு ஜீவ ஆத்மாவும் பரமாத்மாவும் இல்லை. "நான் வேறு எனாதிருக்க; நீ வேறு எனாதிருக்க" என்று அருணகிரியார் சொல்வதைப் போன்ற மோனநிலை அது. அங்கே வேண்டிக் கேட்கும் நிலை இல்லை; கேட்டுப் பெறும் நிலையும் இல்லை.

யோகப் பயிற்சிக்கு வேண்டிய மூன்று முக்கிய குணங்கள்: பற்றற்ற. ஏதும் தனக்கென்றில்லாத, ஏழ்மைத்துறவு நிலை 2. தன்னடக்கம் எனும் கட்டுப்பாடு 3. எழுச்சியற்ற பணிவு மிக்க சாந்தம்.

தியானத்தின்போது ஒரு யோகி திசையெட்டும் பறந்து ஓடுகின்ற தன் சிந்தனைச் சிதறல்களை ஒருங்கு திரட்டிக் குவித்து, ஒருமுகமாக்கி, அதைப் பின்னர்ச் சிதறவிடாமல் ஒரே நோக்கில் நிலை நிறுத்துகிறான். இதுதான் ஏகாக்கிர நிலை என்று சொல்லப்படுகிறது.

இந்த யோகி பயம் முற்றிலும் நீங்கியவனாக இருத்தல் வேண்டும். சாந்தம் குடி கொண்டுள்ள இடத்திலே—உள்ளம் தெளிவு அடைந்துள்ள நிலையிலே—அச்சம் உண்டாவதில்லை. தன்னுடைய உள்ளத்தினைத் தன்வசம் ஆக்கிய

வனாக அவன் இருத்தல் வேண்டும். உள்ளம் வசப்படுதல் என்பது இந்திரிய நிக்கிரகமே; இந்திரிய ஜெயமே ஆகும்.

''ஈர்க்கின்ற அஞ்சொடு அச்சம் வினையேனை
இருதலையே''

என்கிறார் மணிவாசகர்.

(அஞ்சொடு அச்சம்—ஐந்து புலன்களும் பயமும்; இருதலையே ஈர்க்கின்ற—என்னை இருபுறமும் இழுக்கின்றன என்பதாம்.)

இவ்வகையிலே ஐந்தடக்கி, பயம் நீக்கி, பிரம்மசரிய விரதம் காத்து, அமைதியோடு உள்ளத்தை இறைவன் பால் இடையறாமல் செலுத்தும் சாதகனே தியான யோகி ஆவான்.

**'இவ்விதமாக, எப்பொழுதும் (இடைவிடாமல்) உள்ளத்தைத்தியானத்திலே நிலைநிறுத்தி உள்ளத்தை (உள்ளச் சலனத்தை) அடக்கிய யோகி என்னிடத்திலே பொருந்தியுள்ள மேலான நிர்வாண நிலையில் முற்றுப் பெறும் சாந்தியை அடைகிறான்.'** VI (15)

தியான யோகத்தினால் ஒரு யோகி அடையப் பெறுவது சாந்தி என்னும் நிலை. அந்தச் சாந்தியோ மேலான (மோட்சம்) நிர்வாண நிலையின் முடிந்த முடிவு. அதுதான் இறைவனிடத்திலே பொருந்தி உள்ளது. எனவே பரமாத்மாவை தியானிப்பவன் மோட்ச சாம்ராஜ்யத்தின் முடிந்த நிலையாம் சாந்தியை அடைகிறான்.

இறைவன் சாந்த சொரூபி. இறைவனை நோக்கி, தியானம் செய்கிறவன் இந்த இறைத் தன்மையை இடைவிடாமல் தியானிப்பதால் இறைவனின் சாந்த சொருபத்தைத் தன்னிடம் எய்தி விடுகிறான். இதுவே முக்தி நிலை, மோனநிலை, சாந்திநிலை; மோட்சம் எனப்படுகிறது.

'அர்ஜுனா! இந்த தியான யோகமானது உணவை அளவுக்கதிகமாக உண்பவனுக்கும் கைகூடுவதில்லை. மாறாக உணவே இன்றிப் பசியோடு உள்ளவனுக்கும் கை கூடாது. அதிகமான உறக்கத்திலேஆழ்ந்து உறங்குபவனுக்கும் உறக்கமின்றி அதிகமாக விழித்துக் கொண்டிருப்பவனுக்கும் கைகூடாது.' VI (16)

'உணவு உண்பதிலும் உடற்பயிற்சியிலும் அளவோடு இருப்பவன், தன் அன்றாட கடமைகளை ஆற்றுவதில் அளவோடு (அவசியம் உள்ளவரை) ஈடுபடுபவன், உறக்கம், விழிப்பு இவைகளில் அளவோடு உள்ளவன் என்றும் இவர் கட்கு தியான யோகம் சித்திக்கும். அது அவன் துக்கத்தைப் போக்கும். VI (17)

*ஒரு தியான யோகிக்கு ஒழுங்கு முறைக்கு உட்பட்ட உள்ளமும் உடலும் வேண்டும். இந்த உள்ளம், உடல் ஒழுங்குமுறையோ, மிதமான வாழ்க்கை முறையிலேதான் அமையும். யோகியின் வாழ்க்கை நெறி மிதமான இடைப் பட்ட நெறியாகும்.*

*தியான யோகி உணவு உண்பதிலும் உபவாசம் இருப்ப திலும் அளவைக் கடைபிடிக்க வேண்டும். அதிக உணவு உண்பதை அறவே நீக்க வேண்டும். அதிகமாக பட்டினி கிடப்பதையும் தவிர்த்தல் வேண்டும். அதிகமான உறக்கம், அதிகமான நித்திரைக் கேடு, இவைகளை அறவே நீக்க வேண்டும். இவ்வகையிலே, தன் அன்றாட வாழ்க்கை நெறி முறையிலே உணவையும் உறக்கத்தையும் உடல் உழைப்பை யும் மிதமானதாக்கிக் கொள்கிறான் அந்த யோகி.*

*அவனுடைய அன்றாட வாழ்க்கையிலே பதட்டமில்லை; பரபரப்பில்லை; மன அமைதி இழத்தலில்லை; வீண் பேச்சு ஆரவாரம் இல்லை; தன்னையே வருத்திக் கொள்ளும் சித்திரவதையும் இல்லை. ஒரு தியான யோகி இந்திரிய ஜெயங்கொண்டு தன் உள்ளத்தைத் தன்னடக்கத்திலே வைத்*

திருப்பதால், பயம் கோபம், துக்கம், தன்னிரக்கம் அதிருப்தி அமைதியின்மை இவைகளால் பிறருக்கு ஏற்படுகின்ற துன்பங்கள் அவனைத் தாக்குவதில்லை.

17ஆவது சுலோகத்திலே தியான யோகி தன் அன்றாட கடமைகளை ஆற்றுவதில் அளவோடு இருக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. கடமைகளைத் துறந்துவிட வேண்டும் என்று சொல்லவில்லை. கடமை ஆற்றுவதிலும் மிதமாக இருத்தல் வேண்டும் என்கிறது சுலோகம்.

நிட்டமிடப்பட்ட நெறியில் ஒழுகும் தியான யோகிக்கு உடல் உணர்ச்சிக்கே இடமில்லை. எனவே அவனுக்கு இன்ப துன்பம் இரண்டும் இல்லை. இப்படியாக அவன் துக்கம் அனைத்தும் துடைத்து விடப்படுகிறது.

**அனைத்துக் காமங்களிலிருந்தும் (விருப்பங்களிலிருந்தும்) ஆசை அற்றவனாய், நன்கு அடக்கப்பட்ட தன் சித்தத்தை ஒருவன் தன் ஆத்மாவிலே எப்பொழுது அசையாமல் நிலை நிறுத்துகிறானோ அப்பொழுதுதான் அவன் யோக சித்தி அடைந்தவன் என்று சொல்லப்படுகிறான்.' \ I (18)**

மெய்யுணர்வுக்கு இன்றியாமையாத் தேவை அகங்காரத்தை முற்றும் முக்காலத்தும் அழித்து விடலே. தன்னைப் பற்றிய சிறு ரேகையையும் மறந்துவிட வேண்டும். உண்மையின் சொரூபத்தை அதன்பின்தான் காணக்கூடும்.

14ஆம் சுலோகத்தில் இருந்து மேலே சொல்லப்பட்ட 18ஆம் சுலோகம் வரை, கண்ணன், ஒரு யோகி தான் தன் ஆத்ம தரிசனத்தை அடைய முயலுங்கால் அனுபவிக்கின்ற அனுபவங்களையும் கைக்கொள்ள வேண்டிய முறைகளையும் அணுகுமுறைகளையும் விளக்குகின்றார்.

இந்த உடலுக்குள்ளே வசிக்கின்ற ஆத்மா, ஆசை வயப்பட்ட புலன் உணர்வுகள் இயற்கைச் சூழ்நிலைகள் ஆகிய பலப்பல முகத்திரைகளால் மறைக்கப்பட்டுள்ளது. இம்

முகத்திரைகள் அனைத்தையும் நாம் கிழித்து எறிய வேண்டும். மனத்திரையில் எழுதப்பட்டுள்ள சித்திரங்கள் ஒவ்வொன்றையும் அழித்து ஒழிக்க வேண்டும். இவ்விதமாக சித்திரம் தீட்டிய முகத்திரைகளை ஒவ்வொன்றாக ஒழித்து விட்டால் அங்கே தூய்மையான சித்த சலனம் ஒன்றுமற்ற ஆத்மாவையே தரிசிக்கலாம்.

இப்படிப்பட்டவனே காமங்கள் ஏதும் இல்லாதவன்; சித்த சலனம் இல்லாதவன். அவனே தன் சித்தத்தை ஆத்மாவில் அசையாமல் நிலை நிறுத்துபவன். அவனே யோக சித்தி அடைந்தவன் ஆவான். சுலோகத்திலே அவன் யுத்தன் எனப்படுகிறான். (யோகத்திற்குத் தகுதி வாய்ந்தவன் அவன்)

**'காற்று வீசாத இடத்தில் வைக்கப்பட்டுள்ள விளக்கு எங்ஙனம் தன் சுடர் சற்றும் அசைவில்லாமல் எரியுமோ, அதைப் போலவே, ஆத்ம தியானத்தைப் பயிலும் தியான யோகியின் உள்ளமும் சிறிதும் அசைவின்றி ஒரே நிலையில் இருக்கும்.'** VI (19)

இந்தத் தியான யோகியானவன் தன் ஆத்மாவிலேயே தன்னை ஒருமுகப் படுத்திக்கொள்ளுகிறான். அவன் தன் ஆசைகளினால் உண்டாகும் தளைகளிலிருந்து தன்னை விலக்கிக் கொள்ளுகிறான். அவன் சாந்தியிலேயே நிலைத்திருக்கிறான். காற்று வீசாத இடத்திலே அசையாமல் ஒளிரும் தீபத்தைப் போன்று அவன் உள்ளம் சலனமடைவதில்லை; நடுங்குவதில்லை; அணைந்து போவதும் இல்லை. அது தடுமாற்றமற்றதாய் ஆடாது அசையாது எரியும் தீபத்தைப் போல ஒரே சீரான நிலையில் உள்ளது. இவ்வகையில் அவன் தன் ஆத்மாவிலே லயித்து விடுகிறான்.

இந்தத் தியான யோகத்தினால் அவன் சாந்தியை அடைகிறான். தன் ஆத்மாவை அவன் பரப்பிரம்மத்திலே கரைத்துக் கொள்ளுகிறான். இந்த வகையிலே, எல்லையற்ற ஒன்றுடன் அவன் ஆனந்தத்திலே லயித்து விடுகிறான்.

இந்த ஆனந்தத்தை எதுவும் கெடுப்பதும் இல்லை; குலைப்பதும் இல்லை. ஏனெனில் எதுவும் அவனை அசைக்க முடியாது. மிகப் பெருந்துயரத்திலும் அவன் உள்ளம் சலித்த தில்லை. இத்தகைய யோகி தன் ஆனந்தம் அனைத்தையும் அழித்துக் கொள்வதில்லை. அவன் எல்லையற்ற தன் ஆனந்தத்தைக்கடவுளிடத்திலே எய்திவிடுகிறான். அவனிலே தன் பரிபூரண ஆனந்தத்தையும் சாந்தியையும் அவன் காண்கிறான்.

தன்னைக் கடந்து செல்லும் பற்பல வகைப்பட்ட காட்சிகள் அவன் உள்ளத்தைச் சலனப்படுத்துவதில்லை. ஏனெனில் தன் ஆத்மாவையே தான் காண்கின்ற உள் நோக்கத்தினாலே, புறப் பார்வைகளிலிருந்து அவன் காப்பாற்றப்படுகிறான்.

**'இங்ஙனமாக, எப்பொழுது யோகப் பயிற்சியால் நன்கு அடக்கப்பட்ட சித்தமானது அமைதி அடைகின்றதோ, எப்பொழுது அந்த யோகி தன் ஆத்மாவால் தன் ஆத்மாவைக் கண்டு தன் ஆத்மாவிலேயே மகிழ்ச்சியடைகிறானோ.'**

VI (20)

**'(நுண்ணிய) புத்தியினால் அறியத்தக்கதும், இந்திரியங்களுக்கு எட்டாததும், புலப்படாததும், எல்லையற்றதுமான, எந்தச் சுகானுபவத்தை அவன் அடைகிறானோ, எந்தச் சுகானுபவத்தில், அவன் நிலைத்த பின் தன் ஆத்ம சொரூபத்திலிருந்து, அவன் அசைவதில்லையோ.'** VI (21)

இந்தப் புருஷன் (பரமாத்மா) எல்லா உயிர்களிலும் மறைத்திருக்கிறார். வெளிப்படத் தோன்றுவதில்லை. ஆனால் நுண்ணறிவுடையவர்களால் ஒருமுகப்பட்ட நம் சூட்சும புத்தியால் பார்க்கப்படுகிறார், என்கிறது கடோபநிஷத் (3.1?)

**'எதை அடைந்த பின்னர் அதைக் காட்டிலும் வேறொன்றை—அதிகமான வேறு லாபத்தை உள்ளத்திலே**

எண்ணுகிறதில்லையோ, எதில் (எந்த யோகத்திலே) நிலைத்திருந்து பெருந்துக்கத்தினாலும் அசைப்படுவதில்லையோ.'
VI (22)

'சகல துக்கங்களுடைய, சம்பந்தத்தைப் போக்கடிக்கின்ற அதையே யோகம் என அறிக. உறுதியுடன் சலிக்காத உள்ளத்துடனே அந்த யோகம் நிச்சயமாகப் பயிலத்தகுந்தது.'
VI (23)

சுகானுபவம் எனும் இன்ப நிலை, தன் ஆத்மாவால் ஆத்மாவைக் கண்டு, ஆத்மாவினாலேயே மகிழ்ச்சி கொள்ளும் ஆனந்த நிலை ஆகும். அது இந்திரியங்களுக்கு எட்டாதது; எல்லையற்றது. (வெளி உலகச் சுகம் இந்திரியங்களுக்கு எட்டும். அதற்கு எல்லை உண்டு). இது ஆத்ம சுகம்; ரியங்களுக்கு எட்டாத எல்லையற்ற ஆனந்தம்.

இந்த ஆனந்தத்தை எய்தியவன் பிறிதொன்றை ஆனந்தமென நினைக்கமாட்டான். உலக இன்பங்கள் ஒன்றுக்கொன்று சிறியதும் பெரியதுமாகக் காணப்படுகின்றன. ஒன்றை அடைந்தவன் அதற்கும் மேலான உலக சுகத்தை அடைய ஓடுகிறான்; உழைக்கிறான்; ஆனால் ஆத்ம இன்பத்தை அடைந்து விட்டவன் அதைக் காட்டிலும் மேலான ஒரு சுகம் இருப்பதாக எண்ண மாட்டான். ஏனெனில் அதற்கு ஒப்பானதும் உயர்வானதும் வேறொன்றுமில்லை.

10ஆவது சுலோகத்திலே இருந்து 22வது சுலோகம் வரை தளையற்ற வீடு பேற்றுக்கு (ஆத்ம தரிசனத்திற்கு) உள்ளத்தை ஒருமுகப்படுத்திய தீவிரமான யோகப் பயிற்சி சொல்லப்பட்டது. தளையறுப்பட்ட ஆத்மாவின் தனித்தன்மை வாய்ந்த அமைதியான சாந்தி நிலையே தியான யோகம். ஆத்மா தன் ஆத்மாவிலே லயித்து ஆனந்திக்கிறது. இதுவே கைவல்யம் எனப்படுகிறது.

23 வது சுலோகத்திலே சகல துக்கங்களுடைய சம்பந்தத்தில் (தொடர்பில்) இருந்து போக்கடிக்கின்றது எதுவோ அதுவே யோகம் என்று சொல்லப்படும் என்கிறார் கண்ணன்.

கனவிலே அனுபவிக்கப்படும் இன்பமும், துன்பமும் நனவு நிலையை நாம் அடைந்தவுடனே பொய் என்பதைக் காண்கிறோம். அதைப் போலவே, நாம் நம் நனவு நிலையிலே அனுபவிக்கும் இன்ப துன்பங்களும் பொய்யானவையே. கனவு நிலையில் இருந்து அனுபவித்தவை நனவு நிலையில் பொய்த்துப் போதலைப் போலவே, நனவு நிலையின் இன்ப துன்பங்களும் தியான நிலையில் நிலை பெற்றவனுக்குப் பொய்யாகவே (மித்தை) காணப்படும். அவன் உள்ளத்திலே எந்தவித சலனத்தையும் அவை உண்டாக்கா. தன் அன்புக்குரிய தாய் இறந்து விட்ட பேரிழப்பாலும் அவன் துக்கமடைதலில்லை.

யோக சாதகனுக்கு வேண்டிய குணங்களை மேலும் விவரிக்கிறார், கண்ணன்.

**'சங்கற்பத்தில் இருந்து மேலெழும் அனைத்து ஆசைகளையும் முற்றிலும்-எவ்வித எச்சமும் (மிச்சமும்) வைக்காமல் துறந்து விட்டு, தன் உள்ளத்தினாலே, அனைத்து இந்திரியங்களைச் சாந்த சலனங்கள் எப்பக்கம் தோன்றிலும், முற்றிலும் அடக்கி அழித்தல் வேண்டும்.' VI (24)**

**'தைரியத்தால் ஆட்கொள்ளப்பட்ட புத்தியால் உள்ளத்தை ஆத்மாவிலே நிலை நிறுத்தி வைத்து, மெல்ல மெல்ல அமைதி நிலையை அடைதல் வேண்டும். அதன் பிறகு பிற ஒன்றையும் அவன் சிந்திக்காமல் இருத்தல் வேண்டும்.' VI (25)**

தைரியம் என்பது மனோ வல்லமை; சங்கல்பம் என்பது, உள்ளத்தால் உத்தேசிக்கும் பகல் கனவுகள். இன்ன இன்ன காரியங்களைச் செய்ய வேண்டும். அதனால் இன்ன இன்ன பயன்களை அடைய வேண்டும் என்று எண்ணும் எண்ணங்களே சங்கல்பங்கள்.

இந்த சங்கல்பங்களில் மிச்சம் மீதி எதுவும் வைக்காமல் உதறித் தள்ளிவிட வேண்டும்; தியாகம் செய்துவிட வேண்டும். சிறிது மிச்சம் விட்டு வைத்தாலும் தீ எச்சம் போலவே (அலட்சியமாக விட்டு வைத்த சிறு தீ எப்படி பெருந்தீயாகி பிறவற்றை அழிக்குமோ, அதைப் போலவே) சங்கல்பங்கள் பல்கிப் பெருகி ஆத்ம சாதனத்தை அடியோடு அழித்துவிடும். அதற்குச் சாதனமாகத்தான் இந்திரியங்களின் கூட்டம் எப்பக்கம் தோன்றினும் அதை முற்றிலும் அடக்கி அவித்துவிட வேண்டும் என்கிறார் கண்ணன்.

புத்தி மனதை ஆட்சி செய்வதற்குப்பதிலாக, பல நேரங்களில் புத்தியை, மனம் தன் இந்திரிய இச்சைகளால் பழைய வாசனை தோஷத்தால் ஆள்கிறது; ஆட்டிப்படைக்கிறது எனவேதான் மேல் சுலோகத்திலே,

'தைரியத்தால் ஆட்கொள்ளப்பட்ட புத்தியால்' எனச் சொல்லப்பட்டுள்ளது. சாதாரண புத்தி சபல மனத்துக்கு இறையாகிவிடும். எனவேதான் இங்கு தைரியத்தால் ஆட்கொள்ளப்பட்ட புத்தியால் உள்ளத்தை ஆத்மாவிலே நிலைநிறுத்த வேண்டும் என்று உரைக்கிறார் கண்ணன்.

புத்தி தைரியத்தால் முற்றும் ஆட்கொள்ளப்பட வேண்டும்.

தைரியம் புத்தியை சுவாதீனம் செய்து கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட புத்தியால் தன் உள்ளத்தை ஆத்மாவிலே நிலைபெறச் செய்தல் வேண்டும். அதன் பின்னர் அந்த யோகி தன் ஆத்மாவைத் தவிர, நண்பன், பகைவன், உற்றார், உறவினர், பிற பொருள்கள் இவைகளுள் எதைப் பற்றியுமே நினைத்தல் ஆகாது.

**'சஞ்சலமானதும் நிலையற்றதுமான மனமானது, எவ்வகையிலே, எங்கெங்கு விஷயங்களில் பிரவேசிக்கின்றதோ, அந்தந்த விஷயங்களிலிருந்து இந்த மனதை மீட்டுத் தன் ஆத்மாவிலே நிறுத்திக் கொண்டு வரவேண்டும்.'** VI (26)

சஞ்சலம் என்பது அலைந்து ஓடும் தன்மை. மனம் இத்தன்மை வாய்ந்தது. மரத்துக்கு மரம் தாவும் குரங்கைப் போல மனம் எப்பொருள் மீதும் நிலையற்று எச்சுகத்திலேயும் நிலையின்றி தாவித் தாவி ஓடும். 'மனமெனும் ஓர் பேய்க் குரங்கு மடப்பயலே' என்கிறார் வள்ளலார். அம்மனம் பலப்பல வகைகளில் பலப்பல விஷய சுகங்களில் ஈடுபட்டு ஓடும் அந்தந்த பொருள்களில் இருந்து விஷய சுகங்களிலிருந்து மீட்க வேண்டும். மீட்டு நம் ஆத்மாவிலே நிறுத்த வேண்டும். இதைச் செய்ய வேண்டிய கடமை தைரியத்தின் ஆளுகைக்குட்பட்ட புத்தியின் செயலாகும்.

**'மிகச் சாந்தமான மனதை உடையவன், இரஜோ குணத்தின் வேகம் தணிந்தவன், பாவமற்றிருக்கின்றவன், தானே பிரம்மம் என்றுணர்ந்தவன், இப்படிப்பட்ட யோகியையே மேலான பேரின்பம் வந்தடைகிறது.'** VI (27)

மனிதன் எக்காலத்தும் முக்குண வசப்படுபவன், சத்துவ குணம் மேலோங்கும்போது மனிதன் அறவழி நிற்கிறான். அவன் மனதைச் சாந்தம் ஆட்கொள்ளுகிறது. ஆனால் சத்துவ குணம் மனிதனிடத்தில் நிலைத்து நிற்பதில்லை. மின்னல் போல அது தோன்றும், மறையும். ஆனால் துக்கங்களுக்குக் காரணமான ஆசைகளையும் பற்றுகளையும் இரஜோ குணமே உண்டாக்குகின்றது. எனவேதான் இந்தச் சுலோகத்திலே முனிவர்களையும் ஆட்டிப் படைக்கும் ரஜோ குணத்தின் வேகத்தைத் தணிக்க வேண்டும் என்கிறார், கண்ணன். இப்படித் தணிக்கப்பட்ட ரஜோ குணத்தின் பயனே மிகச் சாந்தமான மனம். அவன் பாவமற்றவன். ஏனெனில் பாவத்துக் காரணமான ரஜோ குணம் அவனிடம் இல்லை. அவன் பழ வினைகளும் அவனை விட்டு நீங்கி விடுகின்றன. அத்தகைய யோகி தன்னிலே இறைவனைக் காண்கிறான். ஜீவாத்மாவிலே பரமாத்மாவைக் காணும் ஆத்ம தரிசனம் பெற்ற யோகி அவன். இப்படிப்பட்ட யோகியே மேலான பேரின்ப நிலையை அடைகிறான். இதுவே இனிமையோடு கலந்த சாந்தநிலையாகும்.

**'இவ்விதமாக, எக்காலத்தும் தன் உள்ளத்தைத் தன் ஆத்மாவிலே நிலைக்கச் செய்தவனாய், பாவம் நீங்கப் பெற்ற வனாய், அமைந்த அந்த யோகி, பிரயாசை இல்லாமலே பரப் பிரம்மத்தோடு தன் ஆத்மா ஒன்றி இணைந்ததால் (பிரம்ம சம்ஸ்பர்சம்) ஏற்படும் பேரானந்தத்தை அடைகிறான்.**

**VI (28)**

*பிரம்ம சம்ஸ்பர்சம் என்பது எல்லையற்ற ஒன்றாகிய ப்ரம்மத்தோடு இணைந்து நிற்பது என்பதாகும். கடவுள் என்பது வெறும் கற்பனை அன்று. அது கற்பனை கடந்தது. அது தெளிவற்ற பேரார்வமன்று. அது உண்மையானது. தெளிவான, ஒளிமயமான உண்மையானது. உண்மை யாகவே நாம் அதனோடு நம்மை அறியாமலே தொடர்பு கொண்டுள்ளோம்.*

*இறைவன் சத் சித் ஆனந்த சொரூபி. அதாவது உண்மை அறிவு ஆனந்த மயமானவன். அந்த எல்லையற்ற ஒன்றிலே ஒன்றிய உள்ளத்தினை உடையவன் அதன் சொரூபத்தையே அடைகிறான். அவனும் சத் சித் ஆனந்த மயமாகி விடுகிறான்.*

**(தியான) யோகத்தில்—இந்த (தன் ஆத்மாவை நிலை நிறுத்தி) உறுதி பெற்றுள்ள யோகி எல்லாப் பொருள் களிடத்தும் சம நோக்குடையவனாய் இருப்பான். தன்னை எல்லா உயிர்களிடத்தும் காண்கிறான். (அதைப் போலவே) எல்லா உயிர்களையும் தன் ஆத்மாவிலே (தன்னிடத்தே) காண்கிறான்.'**

**VI (29)**

*யோகப் பயிற்சியின் முதிர்ந்த நிலையில் தன் ஆத்ம தரிசனத்தை அடைந்த யோகி எல்லாப் பொருள்களிடத்தும் சம நோக்குடையவனாகிறான். உயிர்களில் உள்ள ஒவ்வொரு ஆத்மாவும் தன் ஆத்மாவை ஒத்ததே. ஆயினும் பிரகிருதியி னால் அவை தன்னில் வேறுபட்டுள்ளதை அவன் அறிகிறான். எனவே அந்த யோகி அனைத்து உயிர்களையும் வேற்றுமை*

யோடு நோக்காமல் சமதிருஷ்டியோடு, பொது நோக்கோடு சமமாகப் பார்க்கிறான். அனைத்துயிர்களையும் தன் ஆத்மாவிலே அவன் காண்கிறான். அது மட்டுமல்ல; தன்னையும் பிற எல்லா உயிர்களிலும் காண்கிறான்.

இதன் பொருளாவது, அவன் தன் ஆத்மாவை காண்பதைப் போலவே ஒவ்வொரு உயிரின் ஆத்மாவையும் காண்கிறான். வேற்றுமை கொண்டு காண்பது புறத் தோற்றமே. அதாவது உடல், அதன் அழகு, சாதி, பதவி பலம், பணம், இவைகளால் அடைந்துள்ள மேல்நிலை, கீழ் நிலை என்று பிரகிருதியால் பகுக்கப்பட்டுள்ள வேறுபட் டுள்ள நிலையையே காண்பதாகும். ஆனால் யோகியின் பார்வை புறத் தோற்றத்தைக் காண்பதல்ல. அவன் ஒவ்வொரு உயிரின் உள்ளே உறையும் ஆத்மாவைக் காண் கிறான். அவன் காணும் காட்சி அது. அவன் பார்வை எங்கும் யாவரிடத்தும் சமநோக்கமான பார்வை ஆகும்.

இந்தச் சமநோக்கு முன்னமே வற்புறுத்தப்பட்டுள்ளது. அந்தணன், பசு, யானை, நாய், அதையும் தின்னும் சண்டாளன் ஆகிய அனைவரிடத்தும் ஞானி சமதிருஷ்டி உடையவனாக இருக்கிறான் என்கிறது சென்ற அத்தியா யத்தின் 18-ஆவது சுலோகம்.

இப்படிப்பட்டச் சமநிலையில் மனதை உறுதிப்படுத்திய வர்களால் மட்டுமே பிரம்மத்தில் நிலைத்திருக்க முடியும் என்கிறது அதற்கு அடுத்த சுலோகம்.

**'எவன் எல்லாப் பொருள்களிடத்தும் என்னைக் காண் கின்றனோ, எவன் என்னிடத்திலே எல்லாப் பொருள்களையும் காண்கின்றானோ, அவன் காட்சியில் இருந்து நான் விலகுவ தில்லை. (அவனுக்கு நான் பிரத்தியட்சம்) என் காட்சியில் இருந்தும் அவன் விலகுவதில்லை. (எனக்கு அவன் பிரத்தி யட்சம்)'** VI (30)

தன்னை அறிந்தவனே தலைவனை அறிய முடியும். ஆத்மாவை அறிந்தவன் பரமாத்மாவை அறிந்து பரமாத்மா

சொரூபமாகிறான். அவன் கண்களுக்குச் சர்வம் கிருஷ்ண மயம் ஜெகத்.

'யோக மார்க்கத்தின் முதிர்ந்த நிலையடைந்தவனே அனைத்து ஆந்மாவின் ஒத்த தன்மைகளை உணர்ந்தவன். எனவே என்னை எல்லா ஆத்மாவிலும் அவனால் காண முடிகிறது. அவன் தன் ஆத்மாவிலேயே என்னைக் காண்கின்ற தன்மையினால், என்னிலே எல்லாப் பொருள்களையும் அவனால் காண முடிகிறது' என்கிறார் கண்ணன்.

**'எவன் எல்லா உயிர்களிலும் உறையும் என்னை 'பிரம்மம் ஒன்றே' என்னும் எண்ணத்தோடு கூடிய நிலைத்த உள்ளத்தோடு தியானிக்கிறானோ, அந்த யோகி எந்த அவஸ்த்தையிலே (தியானம், உலகியல் ஓய்வு) ஈடுபட்டிருப்பினும் என்னிடத்திலேயே லயித்திருக்கிறான்.** VI (41)

'எல்லா உயிர்களுள்ளும் உள்ள ஒற்றுமையைக் காண்கிறான் அவன். கண்ணனை எல்லா உயிர்களிலும், எல்லா உயிர்களையும் கண்ணனிலும் காண்கிறான். கண்ணனிலே அவன் வாழ்கிறான். பரமாத்ம ஜோதியை ஒவ்வொரு ஆத்மாவிலும் காண்கிறான். 'உண்ணும் உணவும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'

இறைவன் எல்லா உயிர்களின் உள்ளும் உள்ளவன். அப்படி எல்லா உயிர்கள் உள்ளும் உறைகின்ற அவனை பிரம்மம் ஒருவனே என்னும் எண்ணத்தோடு தியானிக்கிறான் தியான யோகி. அவன் பார்வையிலே அனைத்துயிர்களும் இறைவனாகவே உள்ளன. அதாவது எல்லா பிராணிகளையும் இறைவன் உருவத்துக்குச் சமமான ரூபமுடையவர்களாகப் பார்க்கிறான் அந்த யோகி. அவன் எந்த அவஸ்தையில் ஈடுபட்டிருப்பினும், என்பது 'தியான காலத்தில் மட்டுமல்ல; பிற நேரங்களிலும் என்பது பொருளாகும்.

'அர்ஜுனா! எவனொருவன் தன்னுடைய ஆத்மாவின் பிரதிபிம்பமாகவே, என்னிடத்தும் (எவ்வுயிரிடத்தும் சுகத்தையும் துக்கத்தையும் சமமாகக் கருதிக் காண்கின்றானோ அந்த யோகியே மிக உயர்ந்தவன் என்று கருதப்படுகிறான். VI (32)

இதுவரை, இறைவனை எல்லாப்பொருள்களிலும் காண்க எனவும், எல்லாப் பொருள்களையும் இறைவனிலே காண்க எனவும் உபதேசித்த கண்ணன், இங்கே தன் ஆத்மாவின் பிரதிபிம்பமாகவே பிற எல்லா உயிர்களையும் காணும்படிப் பணிக்கிறார்.

'யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்கிறார் திருமூலர். 'என்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே' என்கிறார் அருட்பிரகாச வள்ளலார்.

பரம யோகி பிறருடைய இன்ப துன்பங்களில் பங்கு கொள்வதில்லை. மாறாக, பிறர்ஆத்மாவைத் தன்ஆத்மாவாகவே கருதி விடுகிறான். பிற உயிர்களின் இன்ப துன்பங்களை தானேற்றுக் கொள்வது மட்டும் இவன் செயலன்று. அவைகளைச் சமமாக பாவிப்பதும் இந்த யோகியின்செயலாகிறது. இந்த வகையில் இவனே உலகம்; உலகமே இவன், என்னும் நிலையை அடைந்து விடுகிறார் இந்த யோகி. தன் ஆத்ம நலனையே உலக நலனாகக் கருதுகிறான். தனக்குத் துயரம், துன்பம் அணுகாமல் காப்பதை ஒப்பவே உலகையும் துன்பத்திலிருந்து காப்பாற்றுகிறான்.

இந்த யோகி தன்னையே (கண்ணனிடம்) பரப்பிரம்மத்திடம் கரைத்துக் கொண்டதால், அவனிடம் அன்பு, சாந்தம், சகிப்புத் தன்மை முதலிய எல்லா நற்குணங்களும், முதிர்ந்து அமைந்துள்ளன. அவனுக்கு இன்பமும் துன்பமும் ஒன்றே. அதாவது அவை அவனைஅசைத்தலில்லை. அவைகளால் அவன் சலித்தல் கிடையாது. அவைகளை அப்படியே அவன் ஏற்றுக் கொள்ளுகிறான். சுகத்திலும் துக்கத்திலும் அவன் நிலை சமநிலையே.

கண்ணன் வடித்தெடுத்துத் தந்த தியான யோகியின் சொற்சித்திரம் அர்ச்சுனனுக்கு மலைப்பைத் தருகிறது. அந்த யோகி (தியான யோகி) எவ்வளவு அமைதியான சாந்தம் தவழுபவனாக, முழுமை வாய்ந்தவனாக, இருக்கிறான்; சுகத்தையும் துக்கத்தையும் சமமாகக் காண்கிறான்; எவ்வளவு தன்னடக்கம் மிக்கவன்; எந்த வகைப்பட்ட துன்பத்திலும் தன்னுணர்வே இல்லாதவனாக உள்ளவன். அவனிடம் வெறுப்பு, கோபம், பேரவா, அமைதியின்மை எனும் சராசரி மனிதனிடம் உள்ள எந்த குணங்களும் அமையவில்லை. அவனோ உலகமே தானாக, தானே உலகமாகி உள்ளும் புறமும் இறைவனைக் காண்கிறான். இந்த நிலையைத்தான் அடைய முடியாதெதன அர்ச்சுனன் நினைக்கிறான். அடுத்த இரண்டு சுலோகங்களால் அர்ச்சுனன் தன் மன நிலையை விளக்கமாகக் கண்ணனிடம் கூறுகிறான்.

**'மதுசூதனா! சமமாகப் பார்த்தல் என்று உம்மால் உபதேசிக்கப்பட்ட இந்த யோகத்தின் நிலையாக (ஸ்திரமான) உறுதியான நிலை (இருப்பை) அலைபாயும் மனதை உடைய என்னால் அறிய முடியவில்லை.'**

**'கிருஷ்ணா மனம் சஞ்சலமுள்ளதாயும், கலங்கச் செய்கின்ற தாயும், அடங்காததாயும், விஷயங்களிலே விசேஷப் பற்றுதல் உள்ளதாயும் இருக்கின்றது. இந்த மனதை அடக்குவதானது காற்றைச் சஞ்சரிக்கவொட்டாது அடக்குவது போல மிகவும் கடினமானதென நான் நினைக்கிறேன். VI (34)**

'கிருஷ்ணா! நீர் உபதேசித்த இந்த தியான யோகமானது, சமதிருஷ்டி உடையதென எனக்கு நீர் விளக்கினீர். இந்த யோக நிலையை நான் அடைய முடியாதெனவே நான் நினைக்கிறேன். ஏனெனில் என் மனது ஓய்வின்றி இங்கும் அங்கும் அலை பாய்ந்து ஓடுகின்றதை நான் உணர்கிறேன். அது கொந்தளிப்புள்ளது. அடக்க இயலாத வலிவானது.

மூர்க்கத்தனம் மிக்கது. குழப்பமிக்கது. வீசுகின்ற காற்றை நம் கையால் அடக்க முடியாததைப் போல் இது மிக அசாத்தியமானது. இந்த யோகம் சமநிலை வாய்ந்தது என விளக்கினீர். அமைதியற்ற மனம் பெற்றுள்ள என்னால் இதனுடைய உறுதியான அடிப்படையை அறியக்கூட வில்லை' என்று முறையிடுகிறான் அர்ச்சுனன்.

கண்ணன் இதற்குப் பதில் உரைக்கின்றார்.

**'நீண்ட கைகளை உடைய அர்ச்சுனா! கட்டுப்படாத மனதை, அலையும் தன்மை வாய்ந்த மனதைஅடக்குவதானது. மிகவும் கடினமே. ஆயினும் குந்தியின் மைந்தனே! இடை விடாத பயிற்சியாலும் வைராக்கியத்தாலும் (மனத்திண்மை) யாலும்) அம்மனம் அடக்கப்படுகிறது. VI (35)**

**'அடக்கப்படாத மனம் உடையவனாலே இந்த யோகம் அடையக் கூடியதன்று. உள்ளத்தை ஒடுக்கி உபாயத்தால் முயலும் ஒருவருக்கே இதை அடைய இயலும். VI (36)**

*இங்கே கண்ணன், 'அமைதியற்ற அலைபாயும் உள்ளம், 'அடக்கி ஒடுக்கக் கடினமான ஒன்றே' என்பதையும், எப் பொழுதும் அது அமைதியற்றுச் சலித்துக் கொண்டே இருக்கும் என்பதையும், தன் பதிலால் ஒத்துக் கொள்ளு கிறார். ஆனாலும், ஒரு சாதகன் இப்படிப்பட்ட உள்ளத் தினையும் கட்டுப்படுத்தி தியான யோகத்தை அடைய முடியும். அதற்குத் தேவை 1. அப்பியாசம் (இடைவிடாத பயிற்சி) 2. வைராக்கியம் (ஆசையற்று, புலன்களில் பற்றற்று சாந்தி நிலையில் நீங்காமல் நிற்பது)*

*மனம் சுற்றுப்புறச்சூழலால் திடீரென எழும் மனவெழுச்சி யால் துள்ளி எழுந்து செயலாற்றும் பழக்கமுடையது.*

*''மலங்கள் ஐந்தால் சுழல்வன் தயிரில்*
*பொருமத்து உறவே''*
*—திருவாசகம்*

*இத்தகைய மனம் வைராக்கியத்தாலும் அப்பியாசத்தாலுமே அடங்கும்; ஒடுங்கும்.*

படுத்துறங்க நிலம் (பூமி) நமக்குள்ளபோது ஏன் பஞ்சணைக்கு ஏங்குதல்? தலைக்கு வைத்து உறங்க ஒரு கை நமக்குள்ளபோது ஏன் தலையணைக்கு ஏங்க வேண்டும்? உள்ளங்கை நமக்குள்ளபோது உண்கலத்துக்கு ஏங்குவதேன்? இந்த வகையான பற்றற்ற நிலையால்தான் ஒருவனுக்கு வைராக்கியம் உதிக்கும்.

அவன் ஒரு வைராக்கிய புருஷன் என்கிறோம். வைராக்கியம் என்பது என்ன? மனத்திட்பமே வைராக்கியம். ஆசையற்ற நிலையில் உள்ளச் சமநிலையில் சலிப்பின்றி அசையாமல் நிலைத்து நிற்பதுவே வைராக்கியம். 'நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது, என்கிறார் வள்ளுவர். இந்த வகையில் அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலுமே மனம் அடக்கப்படுகிறது.

அப்படித் தன் மனதை அடக்கக்கூடாதவனுக்கு இந்த தியான யோகம் கைக்கூடாது. உள்ளத்தை ஒடுக்க வேண்டும். உபாயத்தால் முயல வேண்டும். அப்படிச் செய்தால்தான இந்த யோகம் கைக்கூடும்.

சித்தத்தில் ஏற்படும் விருத்தியினை—சலனங்களை-கவனமாகக் கண்காணிப்பதின் மூலமாகவே நாம் நம் உள்ளத்தை ஒடுக்கலாம். ஓடும் மனதை ஓடவிட்டு அது எங்கெங்கு ஓடுகின்றதென நாம் நன்கு கவனிப்பதின் மூலமாக நம் சித்த விருத்தி, சிறிது சிறிதாக ஒடுங்கி நிற்கும். இதற்கு இடைவிடாத பயிற்சி தேவை.

கண்ணன் வாக்கு 'உபாயத்தால் முயல வேண்டும்' என்பதே. முரட்டுத்தனமான முயற்சியால் பலன் உண்டாகாது. மெல்ல மெல்ல, உபாயமாக, ஆனால் இடைவிடாது வைராக்கியத்தோடு முயல வேண்டும். இந்த வகையிலே இதைப் பயில்பவன் யோகி ஆகிறான்.

இந்தச் சுலோகங்களைக் கேட்டவுடன் பார்த்தனுக்குச் சந்தேகம் எழுகிறது. அவன் கண்ணனை நோக்கிக் கேட்கிறான்;

'கிருஷ்ணா! நம்பிக்கையுடனே (சிரத்தை) யோகத்திலே பிரவேசித்து, தன் முயற்சிக் குறைவாலே யோகத்திலிருந்து நழுவிய (விஷயங்களில் பிரவேசி) மனமுடையவன் யோகத்தினாலே உண்டாகும் பயனை அடையாமல் எக்கதியை அடைகிறான்?' VI (37)

பெருந்தோள்களை உடையவனே! பிரம்மத்தை யடையும் பெருநெறியிலே மோகவயப்பட்டவன் ஆதரவில்லாமல் கர்ம, யோக, மார்க்கங்கள் இரண்டும் கெட்டு (வழுவி) பற்றுக் கோடில்லாமல் சிதறிய மேகத்தைப் போல நாசமடைவான் அல்லவா?' VI (38)

'கிருஷ்ணா! எனக்குண்டான இச்சந்தேகத்தை அடியோடு களையத்தக்கவர் நீரே ஆவீர். உம்மையன்றி என் ஐயத்தைப் போக்கத்தக்கவர் வேறொருவரும் இலர்.' VI (39)

*அர்ஜுனனுக்கு இங்கே ஒரு சந்தேகம் எழுகிறது. ஒருவன் யோகம் செய்ய ஆசைப்படுகிறான். தொடங்குகிறான்; தன் புலன்களை வெல்ல முயல்கிறான்; தியானம் செய்கிறான். இடை இடையே பயிற்சி தடைபடுகிறது. ஆயினும் சிரத்தையோடு முயல்கிறான். அவன் தன் யோகத்திலே முழு வெற்றியடையுமுன்னே இறந்து விடுகிறான். இந்தப் பிறவியிலே அவன் யோக நெறியிலே முழுமை காண முடியவில்லை. அவன் நிலை என்ன?*

*நம்பிக்கை முழுமையாக இருந்தும் சிரத்தையோடு யோக முயற்சி செய்தும் கைவல்யம் அடையாதவன் கதி என்ன? முற்றும் தன் வயப்படுத்தப்படாத உள்ளம் சிறிது சிறிதாக நழுவி வெளியே அலைந்து, யோக சமாதி அடைய வொட்டாமல் தடுப்பதால், யோக சாதனையை அரை குறையாகப் பயில்பவன் நிலை என்ன?*

*அவன் சிதறிய மேகத்தைப் போல ஒரு பயனுமில்லாமல் போய்விடுவானா? அவனுக்கு யோக மார்க்கத்திலே சிரத்தை நம்பிக்கை உள்ளது. ஆனால் அடிக்கடி தடுமாறி இருமைப்*

படுகுழியிலே வழுக்கி விழுகிறான்; இப்படிப்பட்ட இரண்டுங் கெட்டான் நிலையில் இறந்து போகின்றவன் விமோசனமே இல்லாமல் அழிய வேண்டியவன்தானா?' என்று வினவுகிறான் பார்த்தன்.

கண்ணன் பார்த்தனுக்குச் சொல்லும் பதிலிலே மக்கள் யாவருக்குமே நம்பிக்கை பிறக்கிறது. கண்ணன் கூறுகிறார்.

**'பார்த்தா! யோகப் பிரஷ்டனுக்கு (யோகத்தை இடையிலே விட்டவனுக்கு) இம்மையிலும் அழிவில்லை; மறுமையிலும் அழிவில்லை. நற்செயல் (சத்காரியம்) செய்பவன் எவனும் கெடுதியை அடைவதே இல்லை.'** VI (40)

**யோகம் செய்தும் பூரணமாய்ச் செய்யாமல் விட்டுவிட்ட யோகப் பிரஷ்டன் புண்ணியம் செய்தவர்களின் உலகமாகிய சுவர்க்கத்தை அடைந்து நீண்ட காலம் வாழ்ந்து நன்னெறியாளராம் செல்வச் சான்றோர் இல்லத்திலே பிறக்கிறான்.** VI (41)

**அல்லது ஞானமிக்கவர்களின் (யோகியர்களின்) குடும்பத்திலே பிறக்கிறான். இவ்வுலகத்திலே இதற்கொப்பான பிறவி மிகவும் அரிதாகும்.** VI (42)

நேர்மையான யோகப் பயிற்சியாளனுக்கு எவ்வித துக்கமும் கிடையாது. நல்லவனுக்குத் தீமையான முடிவு ஏற்படாது. கடவுள் நம்முடைய ஆற்றல் குறைவான சோர்வினை அறிவார். அந்தச் சோர்வினை நாம் வெல்ல மேற்கொள்ளும் முயற்சிகளையும் அவர் நன்கறிவார். எனவே நாம் நம்பிக்கை இழந்து மனந்தளரலாகாது. இவ்வுலகிலே தோல்விகள் கூட வெற்றியே எந்தவிதமான நன்முயற்சியும் பயனின்றி வீண் போதலில்லை. நீ உன் குறிக்கோளிலே தோல்வியுறாமல், உன் செயலாற்றலிலே,

தோல்வி அடைந்தால், நீ பரம்பொருள் முன்னிலையில் உன்னால் இயன்ற யாவும் செய்தவனாகவே கருதப்படுவாய்.

இந்த முறையிலே, ஒரு யோகப் பிரஷ்டன் யோக நெறி நிறைவுறாமல் இறந்து பட்டவன் தன் யோக நற்பலனுக்காகச் சுவர்க்காதி போகங்களைப் பலகாலம் துய்த்து, செல்வச் சான்றோர்கள் இல்லத்திலோ அல்லது ஞான மிக்க யோகியர் குடும்பத்திலோ பிறக்கிறான். 'நண்ணும் மறுமைக் கணிகலம் கல்வி' என்பதைப்போல இப்பிறவியிலே அவன் போன ஜென்ம வாசனையாகிய யோக ஞானங்களை அடைகிறான். சென்ற ஜென்ம யோக சாதனை இந்தப் பிறவியிலே தூண்டி விடப்படுகிறது.

எனவே இப்பிறவியிலே, ஒரு யோகப் பிரஷ்டன் எந்தெந்த சாதனைகளைச் செய்து எவ்வளவு தூரம் அந்நெறியில் முன்னேற்ற மடைந்தானோ அவை அத்தனையும் மறு பிறவியிலே அவனைச் சென்றடையும். அவன் இழப்பது ஒன்றுமே இல்லை. இதைத்தான் இந்தச் சுலோகம் சொல்கிறது.

**குருநந்தனா! முற்பிறவியிலே, அந்த உடலோடு தொடர்புடைய யோகசாதன பர தத்துவ அறிவை, அவன் மீண்டும் பெறுகிறான். அதைக் கொண்டு அவன் மேலும் மேலும் அதிகமாகப் பரிபூரணத்தை அடைய முயல்கிறான். VI (43)**

பரிபூரணத்தை நோக்கி நாம் செய்யும் பயணம் மிகவும் மந்த கதியை உடையது. எனவே அதைச் சென்று அடைவதற்கு அவனுக்குப் பலபிறவிகள் தேவைப்படுகின்றன. இதற்கெனச் செலவிடப்படும் எந்த முயற்சியும் வீணாகிறதில்லை. நாம் உருவாக்கிய தொடர்புகள், நாம் ஈட்டிய சக்திகள் எவையுமே நாம் இறந்தவுடன் அழிந்து விடுவதில்லை. இந்த முடிவே அடுத்து வரும் பிறவியிலே, யோக முன்னேற்றத்தின் தொடக்கமாக அமைந்து விடும்.

தூக்கத்தில் இருந்து விழித்தெழுந்தவன் எப்படி தான் விட்ட இடத்தில் இருந்து தன் பணியைத் தொடங்குகின்றானோ, அதைப் போலவே தான் முன்ஜென்மத்திலே விட்ட குறை தொட்ட குறையை, ஒரு தியான யோகி விட்ட இடத்தில் இருந்து தொடங்கி அந்தப் பாதையிலே வேகமாக முன்னேறுகிறான். அதாவது ஒரு யோகப் ப்ரஷ்டனுக்கு அவனுடைய இப்பிறவியின் யோக சாதனை அடுத்தப் பிறவியிலே கைகொடுத்து அவனது யோக சாதனையை எளிதாக்கி விடுகிறது.

**இந்த யோகப் பிரஷ்டன் தன் அடுத்த பிறவியிலே முயற்சி செய்யா விட்டாலும், தன் முற்பிறவியின் விட்ட குறையால் (பூர்வ ஜென்ம வாசனையால்) யோக சாதனத்திலே ஈர்க்கப் படுகிறான். வெறும் யோகத்தைப் பற்றிய ஆராய்ச்சி யாளனும் (யோகஸ்ய ஜிக்ஞாசு) வேதம் சொல்லும் கர்ம பலனைக் கடந்தவனாகிறான்.** VI (44)

'நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர் முறைவழிப் படூஉம்' என்கிறது புறநானூறு. அதாவது வேகமாகச் செல்லும் ஆற்று நீரிலே சிக்கிய மரத்தெப்பம் எப்படி அதன் வேகததால் அடித்துச் செல்லப்படுகிறதோ, அதைப்போலவே நம் ஆத்மாவும் தன்னுடைய பூர்வஜென்ம கர்ம பலன்களால் ஈர்த்துச் செல்லப்படுகிறது. இவ்வகையில் முற்பிறப்பில் செய்துவைத்த யோக பலன்கள் யாவும் இப்பிறவியிலே அவனுக்குத் துணை நின்று அவனை யோகநிலையில் மேன்மேல் உயர்த்துகிறது.

இந்தச் சுலோகத்திலே யோகஸ்ய ஜிக்ஞாசு' என்று ஒரு சொற்றொடர் வருகிறது. யோக முயற்சி ஏதுமின்றி யோகத்தைப் பற்றிய ஆராய்ச்சி செய்பவன் என்பது இதன் பொருளாகும்.

வெறும் யோக ஆராய்ச்சி செய்பவனே கர்ம காண்டத்திலே ஈடுபடுபவர்களைக் காட்டிலும் மேலானவன்.

இவனைக் காட்டிலும் யோகப் பிரஷ்டன் (யோகத்தைத் தொடங்கி, இடையிலே விட்டு மீண்டும் தொடங்கி பயில் பவன்) மேலானவன். ஏனெனில் யோக முயற்சியிலே இடை விட்ட போதிலும் அதில் கருத்துள்ளவர்கள் இந்த யோக பிரஷ்டர்கள். இவர்'ள் தம் அடுத்த பிறவியிலே விடுபட்ட யோகத்தைத் தொடர்ந்து யோகாரூடர்கள்? (முக்தர்கள்) ஆவார்கள்.

**பெருமுயற்சியாலே யோக சாதனம் செய்கின்ற யோகி பாவங்களிலிருந்து விடுபட்டவனாய்த்—தூய்மையானவனாய் பற்பல பிறவிகளிலே ஏற்பட்ட பரிபக்குவநிலை அடைந்தவ னாய்ப் பின்னர் பரகதியை அடைகிறான்.** VI (45)

*எனவே, யோக சாதகன் இப்பிறவியிலேயே பரிபக்குவ நிலை அடையா விட்டாலும் அடுத்து வரும் பிறவிகளில் பரிபக்குவநிலை அடைந்து பரகதி எய்துவான் என்க. இதற்குத தேவை இடையறாத பெருமுயற்சி. முயற்சியால் உந்தப்பட்ட யோக சாதகனே பாவங்களில் இருந்து விடுபட்டு பரிசுத்தமாக முடியும்; அவனே பரகதி அடைய முடியும்.*

**(இப்படிப்பட்ட) யோகியானவன் தவசிகளைக் காட்டிலும் மேலானவன்; ஞானிகளைக் காட்டிலும் உயர்ந்தவன். காமிய கர்மம் செய்பவர்களைக் காட்டிலும் சிறந்தவனாக எண்ணப் படுகிறான். எனவே அர்ஜுனா! நீ யோகி யாவாயாக!** VI (46)

*இந்தச் சுலோகத்திலே கண்ணன் காட்டுக்குப் போய் சீலத்தோடு கடும் விரதம் காத்து, உபவாசமிருந்து, தவம் செய்பவனைக் காட்டிலும் கல்வி கேள்விகளில் உயர்ந்து, ஞானநூல்களை ஆராய்ந்து, தன் ஆத்ம விடுதலைக்காக கர்மபலனைத் துறந்து ஞான மேம்பாடடைந்த ஞானிகளைக் காட்டிலும் வேதங்களில் வகுக்கப்பட்ட யாக யக்ஞாதி களை கர்மபலனின் இச்சை வைத்து காம்ய கர்மம் செய்யும்*

கர்மயோகியைக் காட்டிலும், தியான யோகியே சிறந்தவன் என்பதனை உணர்த்துகிறார். 'பயன்பணி கேட்பது பற்றது வாமே' (திருமூலர்). ஏனெனில் தவத்தைக் காட்டிலும் ஞானத்தைக் காட்டிலும், கரும யோகத்தைக் காட்டிலும், சிறந்ததாகச் சொல்லப்படும் இந்தத் தியான யோகம் மேற் சொன்ன மூன்றையும் தன்னுள் அடக்கியது. அதோடு அது தன்னிலே பக்தியையும் உள்ளடக்கியதாகும்.

இந்தத் தியான யோகி தன்னுள்ளேயும், அனைத்து உயிர்கள் உள்ளேயும் அந்தர்யாமியாக உள்ள பரமாத் மாவிலே தைல தாரை போல இடையறாது ஒழுகும் கூர்ந்த, முனைப்புள்ள, தியானமான வழிபாட்டிலே, தன்னையே தான் அர்ப்பணித்து விடுகிறான். இந்த வகையிலே அவன் வாழ்க்கைதான் தெய்வீக ஒளியால் வழிகாட்டப் பெற்ற வழியிலே, தன்னை மறந்த நிலையில், உலகுக்குச் செய்யும் தொண்டாக அமைகிறது.

**முழு நம்பிக்கையோடும் கருத்தோடும், என்னிடத்திலே இடையறாது நிலை நிறுத்தப்பட்ட உள்ளத்தினால் என்னையே எவன் வழிபடுகிறானோ, அவனே எல்லா யோகி களிலும் சிறந்தவன் என என்னால் கருதப்படுகிறான். VI (47)**

இந்தச் சூத்திரத்தின் மூலம் தியான யோகத்தையும் பக்தி யோகத்தையும் உணர்த்துகிறார் கண்ணன்.

தியானம் செய்பவன் இடையறாது தியானிக்க வேண்டும். அவனால் தியானிக்கப்படும் பொருள் இறைவ னாக, பரம்பொருளாக இருத்தல் இன்றியமையாதது. இந்த பரம்பொருளின்மேல் இடையறாது செய்யப்படும் தியானமே வழிபாடு; அதுவே பக்தி.

எவன் எதை இடையறாது தியானிக்கிறானோ, அவன் அதுவாகவே மாறிவிடுகிறான், இது மனோதத்துவ நியதி,

இந்த நிலையில், தன் நிலையிலே கெடாமல், இறைவன்மேல் தன் உள்ளத்தைப் பூரணமாக நிலைக்கச் செய்கிறவன் அவனையே அடைகிறான். அவனுக்கு அதைக் காட்டிலும் மேலான எல்லை இல்லை. இந்த வகையிலே மாபெரும் யோகி மிகச் சிறந்த பக்திமான் ஆகிறான். அவன் பிற யோகிகள் யாவரையும்விட மேலானவனே!

(ஆறாம் அத்தியாயம் முற்றும்)



அத்தியாயம்—7

# ஞான விஞ்ஞான யோகம்

## (கடவுளும் உலகமும்)

பகவத் கீதையின் இந்த இரண்டாவது ஷட்கமான (பிரிவான) இந்த ஆறு அத்தியாயங்களில், பரப்பிரம்மமான பரமபுருஷ ஸ்வரூபத்தையும், அதனை வழிபடுவதற்கான உபாயத்தையும், ஞானமானது பக்தியாய்த் திரிந்தால் மட்டுமே பரமபுருஷனை அடையலாமென்கிற பக்திநெறியையும் விளக்கிக் கூறுகிறார் கண்ணன்.

இந்த ஏழாவது அத்தியாயம் ஞான விஞ்ஞான யோகம் எனப்படுகிறது.

ஞானத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன?

நிர்குண, நிராகார பரமாத்மாவைப் பற்றிய தத்துவத்தை அறிவதே ஞானம்,

சகுண பிரம்மத்தின் லீலைகளை அறிவதே விஞ்ஞானம்'

நிர்குண பரமாத்மாவைப் பிரம்மம் என்று அழைக்கிறோம். சகுண பிரம்மத்தைப் பகவான் என்று அழைக்கிறோம். பிரம்மத்தை அறியும் அறிவை ஞானம் என்கிறோம். சகுண பிரம்மமாம் பகவானது சொரூபத்தையும், பிரபாவத்தையும் (சக்தியையும்) அறிவதையே விஞ்ஞானம் என்கிறோம்.

இந்த ஏழாவது அத்தியாயத்தில் உபாசிக்க (வழிபட) வேண்டிய பரம புருஷ சொரூபத்தின் உண்மையும் அது பிரகிருதியால் மறைக்கப்பட்டிருக்கும் தன்மையும் அம்மறைவு

நீங்கும் பொருட்டு இறைவனிடம் பண்ணும் பக்தியும் உபாசிப்பவர்களின் உட்பிரிவும், அவர்களுள் ஞானிகளின் சிறப்பும் சொல்லப்படுகின்றன.

கண்ணன் சொல்கிறார்.

**பார்த்தா! என்னிடம் நிலைபெற்ற உள்ளத்தினை உடையவனாய், (கர்மபலன், கீர்த்தி முதலியவைகளை நாடாது) என்னையே அடைக்கலமாய்ப் பற்றியவனாய், யோகத்தைப் பயின்று எண் குணங்களை உடைய (சமக்கிரம் உள்ளவன்) என்னையே முற்றிலும் ஐயமற அறிவது எங்ஙன மென்று சொல்லுகிறேன். கேட்பாயாக! VII (1)**

இறைவனுடைய அருள்திறம் சௌலப்பியம் (சௌலப் பியம், என்பது அடியவர்க்கெளியனாம் தன்மை), விபூதி (குணநலன்), சக்தி முதலிய சகலவற்றையும் உள்ளடக்கிய சொல்லே இச்சுலோகத்திலே சொல்லப்பட்டுள்ள சமக்ரம் என்னும் சொல்லாகும்.

இறைவன் உயிர்களின் ஆத்மாவிலே உறைவதை மட்டு மின்றி இவ்வுலகெலாம் அவன் எவ்வண்ணம் ஊடுருவி உள்ளான் என்பதையும் இவ்வதிகாரத்திலே விளக்குகிறார், கண்ணன்.

செல்வம், புகழ், கருமபலன்கள், பொன், பெண் முதலிய ஒன்றையுமே நாடாமல் என்மீதே அசையாத நிலைபெற்ற உள்ளம் உடையவனாய் என்னையே அடைக்கலமாகக் கொள்பவனும், யோகத்தைப் பயின்றவனும் என்னை முற்றிலுமாக அறியமாட்டான்.

ஏனெனில் மனவாக்குக்கெட்டாத தூரமுமாய் நின்றவன் இறைவன். அவன் அளத்தற்கரியவன்; அவன் கல்யாண குணங்கள், சௌரியம், சக்தி அருள்திறம் சௌலப்பியம் அடியவர்களுக்கு எளியனாகும் தன்மை, இவைகளை யாரும் பூரணமாக அறிய இயலாது.

எனவேதான் கண்ணன் இச்சுலோகத்திலே, அப்படிப் பட்ட யோகியும் என்னை முற்றுமாக அறிவது எங்ஙனம்

என வினவி, விரிவாக அடுத்தச் சுலோகத்திலிருந்து அதை விளக்கிச் சொல்லத் தொடங்குகிறார்.

**நான் உனக்கு விஞ்ஞானத்தோடு கூடிய இந்த ஞானத்தை யாதொரு குறைவுமின்றி முழுமையாக உபதேசிக்கிறேன். இதை முற்றுமாக நீ அறிந்த பின்னர், மேலும் அறிந்து கொள்ள வேண்டியதாக, எஞ்சி நிற்பது, யாதுமே இல்லை!**
VII (2)

கீதையின் 3வது அத்தியாயம் 41வது சுலோகத்திலே நீ முதலில் இந்திரியங்களை அடக்கி, ஞான விஞ்ஞானத்தை அழிக்கின்ற பாவ வடிவாம் ஆசையை அறவே ஒழித்துவிடு. எனக் கூறியபோது அங்கே முதலில் ஞான, விஞ்ஞானம் என்னும் இரு சொற்கள் கையாளப்படுகின்றன. அங்கே ஞானம் என்பதைத் தத்துவ அறிவு என்றும், விஞ்ஞானம் என்பதை அனுபவ அறிவு என்றும் கண்டோம்.

அந்த வகையிலே ஞானம் என்பது சிந்தனைக்கு உரிய தத்துவ அறிவு. அது நேரான ஆத்மீகப் பேரொளி.

விஞ்ஞானமோ அனுபவத்தைப் பற்றிய தர்க்க ரீதியான விவரமான, அறிவு சார்ந்த உலகியல் உண்மைகளைப் பற்றியது. எனவே ஞானம் சிந்தனைக்குரிய ஆத்மதத்துவ அறிவும், விஞ்ஞானம் யோக பயிற்சிக்குரிய அறிவுமாகும்.

மனிதன் பந்தமற்ற பரமாத்மாவினைப் பற்றிய ஞானத்தை மட்டும் அடைந்திருந்தால் போதாது. அவன் அந்த எல்லையற்ற பரம்பொருளின் பலவகை நாமரூபமாக வியாபித்துள்ள, சர்வ வியாபகத் தன்மையும் (விஞ்ஞானத்தையும்) அறிந்திருத்தல் இன்றியமையாததாகும். ஒப்புயர் வற்ற இறைவன் மனிதன் ஆத்மாவிலே மட்டும் உறைந்திருக்கவில்லை. அவன் இயற்கையாம் எல்லா பொருள்களுடும் எல்லையே இன்றி விரவிப் பரந்துள்ளான்.

இறைவனுடைய உருவெளிப்பாடே (Manifestation) இயற்கை, உலகம், உயிர் அனைத்தும்.

இதைத்தான் வரும் சூத்திரங்களிலே கண்ணன் விளக்க மாகக் கூறுகிறார். இதுதான் பரமார்த்த இறையறிவு; ஞானம். இந்த ஞானம் வந்தால் பின் ஒருவனுக்கு ஏதும் தேவையே இல்லை.

'என்னை முற்றிலும் அறியும் அறிவு எங்ஙனமெனச் சொல்வேன், கேள்.' என முதற் சுலோகத்திலே சொன்ன படி அதை முற்றிலுமாக அறிந்தவன் கண்ணனை அறிந்த ஞானி. அவனுக்குப் பிற ஞானம் தேவைப்படாது.

எல்லா மனிதர்களுமே இந்த ஞானத்தை அடையக் கூடும். அதாவது அவர்கள் இந்த நெறியை (தெய்வ நெறியை) விட்டு விலகாமல் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டால் இந்த ஞானத்தை அடையலாம். ஆனால் அந்தோ! மனிதர்கள் ஆசாபாச இன்ப கேளிக்கை யாம் புறவழியில் அன்றோ சென்று இந்த நெறியை மறந்து விடுகின்றனர்.

**மனிதர்களுள் ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே தன் மனபரிபாகத்தின் பொருட்டு, அதற்கான கடுமுயற்சியில் ஈடுபடுகிறான். அப்படி முயல்பவர்களான ஆயிரக்கணக்கான நல்லியல்புள்ளோருள்ளும் யாரோ ஒருவனே என்னை—என் தன்மையை உள்ளபடி அறிகிறான்.** VII (3)

நம்மிலே பல ஆயிரக்கணக்கானவர்கள் பூரணத்துவமாம் ஆத்ம நிவேதனத்தைப் பற்றிச் சிறிதளவும் கவலைப்படுவ தில்லை. எண்ணிக்கூடப் பார்ப்பதில்லை. நாம் நம்முடைய மரபு வழி, வம்சாவளி வழி, பழக்க வழக்கங்களின் வழி யிலேயே, எதிர் மாறான நெறியிலே, உரத்த குரலோடு பிறருக்கு ஆணை இட்டு நடை பயில்கிறோம். ஆனால் உண்மையை மெய்யுணர்வாம் தெய்வீக ஒளியைக் காணவோ ஞானத்தை அறியவோ, நம் எல்லையாம் பூரணத்தையடையவோ, நாம் முயல்வதில்லை. அப்படி முயலும் ஆயிரக் கணக்கானவர்களிலே ஒரு சிலரே வெற்றி பெறுகின்றனர். வெற்றி பெற்று, அருள் ஒளியை அடைந்த

பின்னரும். ஒருவன் கூட, அந்த ஒளிவெள்ளத்திலே நீந்தி கைவல்யமாம் கரையை அடைய முயல்வதில்லை.

மேலும் கண்ணன் இறைவனது இருவகைப்பட்ட தன்மையை அடுத்தச் சுலோகத்திலே விளக்குகிறார்.

**மண், நீர், தீ, காற்று, விண்வெளி, மனம், புத்தி, அகங்காரம் என இவ்வண்ணம் எட்டு விதமாக என் பிரகிருதி பின்னப்பட்டுள்ளது. VII (4)**

*சக்தி அல்லது மாயையோடு ஒன்றே என— அன்றென—பிரித்தறிய முடியாத—இயற்கையே பிரகிருதி. புறவுலகுக்குரிய அடிப்படையானதே பிரகிருதி.*

இவ்வுலகத்திலே நாம் அனுபவிக்கும் பொருள்களாக வும், பண்டங்களாகவும் அனுபவிக்கத்தக்க இடங்களாவும் இன்னும் பிற பிறவாகவும்: விசித்திரமாகவும் எண்ணிறந்த வைகளாகவும் உள்ள — இவ்வுலகத்தின் முதற்காரணமாய் உள்ள—இந்தப் பிரகிருதி, சப்த, ஸ்பரிச, ரூப, ரச கந்தம் என்னும் குணங்களைத் தன்னிடத்தே அடக்கியுள்ள பஞ்ச பூதங்களாம் மண், நீர், தீ, காற்று, விண்வெளி என்பவை களோடு, மனம், புத்தி, அகங்காரம் என எட்டு வகையாகப் பின்னப்பட்டு நமக்கு ஆதினமாக உள்ளது.

*சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின்*
*வகை தெரிவான் கட்டே உலகு குறள் 27.*

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனும் இவைகளே பஞ்ச பூதங்களாம் மண், நீர், தீ, காற்று, விண் என்பவை தோன்ற மூலாதாரம். இனி மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் (அறிகருவிகள்) ஐந்தும் கரும இந்திரி யங்களாம் வாய், கை, கால், குதம் ஆண்குறி ஆம் ஐந்தும் ஆக இருபதும் அவைகளின் கூறுகளாம். இவைகளை அறிகின்ற புருஷனும், அவன் தெரிதற்குக் கருவியாகும் மனம், புத்தி அகங்காரமும் இவை யாவற்றுக்கும் முதலாகிய

மூலப்பகுதி எனும் இவைகளே இந்திரிய தத்துவ தர்சனப்படி பிரிவு படுத்தப்பட்டுள்ள 25 தத்துவங்களாகும்.

சுலோகத்திலே, பஞ்சபூதங்கள், மனம், புத்தி அகங்காரம் எனும் எட்டே சொல்லப்பட்டிருப்பினும் பஞ்ச பூதங்களின் விரிவே மேற் சொல்லிய இருபத்தைந்துமாகும்.

இந்த உலகை உள்ளபடி அறிவதற்குக் கருவியாக அமைந்துள்ளவை மேற்சொன்ன 25 தத்துவங்களே. பஞ்ச பூத தன்மைகளை, வேறுபாடுகளை, செயல்களை உணர்வதற்கும் துய்ப்பதற்கும் நமக்கு அறிகருவிகளும் செயற் கருவிகளுமேயன்றோ துணை நிற்பன. மனம் உணர்கின்றது. புத்தி பாகுபடுத்துகிறது. அகங்காரம் தன்னை கர்த்தா எனக் கருதுகிறது.

இந்த இந்திரியங்கள், மனம் புத்தி இவை யாவுமே தாழ் மட்டத்தைச் சார்ந்தவை; புற உலகத்தன்மை வாய்ந்தவை. இவற்றுள்ளே, அறிதற் தன்மை வாய்ந்த புருடன் அவற்றினூடே அமைய, அறிவு கொளுத்தினால் தான் உலகம் ஆத்மாவுக்கு உணரும் தன்மை வாய்ந்ததாகிறது. சுலோகத்திலே சொல்லப்பட்ட எட்டுவகையும் அழியக் கூடியனவே. ஒவ்வொரு மனிதனிடத்தும் இந்த எண்வகை பிரகிருதிகளும் உள்ளன. இவையாவும் அழியக் கூடியனவே.

இந்த வகைப்பட்ட பிரகிருதி இழிவானது. உலகை மட்டுமே உணரக் கூடியது.

கண்ணன் மேலும் கூறுகிறார்.

**ஆனால் இது (இந்தப் பிரகிருதி) எனது கீழான பிரகிருதி ஆகும். இதனின்று வேறானதும், ஆன்மா ஆவதுமான எனது மேலான பிரகிருதியைச் சொல்கிறேன் அறிவாயாக! தோள் வலி வாய்ந்தவனே! இந்த உலகமே இதனால்தான் தாங்கப் படுகிறது.** VII (5)

அர்ச்சுனா! நமக்கு இரண்டு பிரகிருதிகள் உள. மேல் சுலோகத்திலே சொன்ன பிரகிருதி மிகவும் இழிவானது

அதைக்காட்டிலும் வேறான, (ஜீவன்) ஆத்மா, என்னும் மற்றொரு பிரகிருதியானது மேற்சொன்னதைப் புசிப்பதாகையால், அதைக் காட்டிலும் இப்பொழுது உரைக்கப்படுவது சிறந்தது; ஞான வடிவமானது. இதுதான் அசேதனமான இவ்வுலகங்கள் யாவற்றையும் தாங்குகின்றது.

இறைவனே மேலான பொருள்—பரப்பிரம்மம்—பரம் பொருள். உலகமாகிய உடலுக்கு அவன் உயிர். ஆதி பகவன் முதற்றே உலகு. சிற்றறிவுடைய உணரும் தன்மை வாய்ந்த உயிர்களும் (க்ஷேத்ரக்ஞன்) ஜடப்பொருளாகிய இயற்கையும் (க்ஷேத்ரன்) அவனுள்ளேதான் அடக்கம். இவ்விரண்டுமே அவனது மேலான நிலை (பரம்) என்றும் கீழான நிலை (அபரம்) என்றும் சொல்லப்படுகின்றன. ஒவ்வொன்றின் ஆத்மாவும் உருவுமாக அவன் இருக்கிறான்.

நமது ஆத்மாவின் உடம்போடு கூடிய தன்மை, இதன் வாழ்க்கை, அறிவுணர்வு, மனம், புத்தி ஆகிய இவை நமக்கு அகங்காரத்தை உண்டாக்குகின்றன. இந்த அகங்காரம் நம் உடல் சார்ந்த — பருப்பொருளைச் சார்ந்த — சூழலைத் தன்னுடைய செயற்பாட்டுக்குக் கண்ணாக அமைத்துக் கொள்ளுகிறது.

ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு பக்கங்கள் உள. ஒன்று ஆத்மா; இரண்டாவது உயிர் சார்ந்த உடல். (க்ஷேத்திரக்ஞன்—க்ஷேத்திரன் என்பன). இவ்விரண்டினும் மேலான இறைவனுக்கும் இரண்டு பக்கங்கள் உள. அதைத்தான் கண்ணன் இந்தச் சுலோகத்திலே கீழான பிரகிருதி என்றும் மேலான பிரகிருதி என்றும் ஆரம்பத்திலேயே கூறி இருக்கிறார்.

இந்தக் கீழான பிரகிருதிதான் அபர பிரகிருதி எனப்படுகிறது. இது ஜடப்பிரகிருதி, இதுதான் (க்ஷேத்ரம்) களம். இது பிரம்மத்தின் அவ்யக்தமானது (விளக்கமுறாத நிலை. அதாவது பிரம்மத்தின் நுண்ணுடல் இது. முக்குண ரூபமான

மாயை இது. இதுதான் சுலோகத்திலே சொல்லப்பட்ட எட்டு வகைப்பட்டவைகளால் பின்னப்பட்டுள்ளது.

மேலான பிரகிருதியோ பரப்பிரகிருதி (தெய்வப்பிரகிருதி) என்றும், சைதன்ய பிரகிருதி என்றும் அழைக்கப்படுகிறது. இதுதான் ஜீவன், ஆத்மா, ஆத்மசக்தி, க்ஷேத்ரக்ஞன். இது எல்லா உயிர்களின், பூதங்களின் ஜீவனாகும். இது ஒருங்கிணைக்கிறது; உலகைத் தாங்கி நிற்கிறது. சைதன்யம் இல்லையேல் உலகமே இல்லை. இதுவே சகல உலகத் திற்கும் ஆணிவேர்; உலகைத் தாங்கிநிற்கும் ஆதாரம், கடைக்கால். இதுவே உயிர்களின் உயிர்ப்பு; எல்லா உயிர் களின் கருப்பை.

**அனைத்து உயிர்களும் சேதனமாயும், அசேதனமாயும் உள்ள இந்த இருவகைப்பட்ட பிரகிருதிகளைப் பிறப்பிடமாகக் கொண்டவைகளே என்று அறிவாயாக. நானே (இறைவனே) இந்த உலகம் அனைத்தின் தோற்றத்திற்கும் காரணம்; மற்றும் ஒடுக்கத்திற்கும் நானே காரணமாகிறேன்.** VII(6)

எனவே எல்லா உயிர்களின் பிறப்பும் இயக்கமும் மறைவும் என்னுடையவே! எல்லா உயிர்களும் இருவகைப் பிரகிருதியினின்றும் தோன்றியவையே! புல் பூண்டுகள் முதல் மனிதன் வகை யாவும் இருவகைப்பிரகிருதியின் தோற்றங்களே என்பதை நாம் அறியலாம். அறியும் தன்மை வாய்ந்த (சைதன்யம்) உயிரும், அறியாத் தன்மை உள்ள ஜடமும் ஒருங்கிணைந்ததே இவ்வுலகம். எனவே என் னுடைய இரு பிரகிருதியிலிருந்து தோன்றிய யாவும் என்னுடையவே என்கிறார் கண்ணன்.

இவ்வண்ணமாக, இவ்வுலகனைத்தின் கருவும் என் னுடைய இருவகைப் பிரகிருதியே. ஆகையினால், உலகம் அனைத்தும் என்னில் இருந்து உற்பவித்தனவே ஆகும். இவ் வகையிலே உலகத்தின் தோற்றம் இயக்கம் ஒடுக்கம் யாவும் என்னுடையவே என்கிறார் கண்ணன்.

தைத்ரியேய உபநிஷத் சொல்கிறது : இறைவன் இந்த உலகத்தைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறான். அதன் உருவினை வடிவமைத்து இயக்குகிறான். திரும்பவும் தனக்குள்ளேயே அதை ஒடுக்கிக் கொள்கிறான்.

**தனஞ்செய! என்னைக் காட்டிலும் மேலான ஒன்று வேறு எதுவுமே கிடையாது. நூலிலே கோக்கப்பட்டுள்ள மணிக் கோர்வையைப் போல, இந்த உலகம், உயிரினங்கள் யாவும் என்னிலே கோக்கப்பட்டுள்ளன.** VII (7)

எல்லாமாக இருப்பதும், எல்லாவற்றையும் இயக்குவது மான இறைவனைக் காட்டிலும் மேலான பொருள் வேறு ஒன்றுமே இல்லை. அவன் பேராற்றல் உடையவன். பேரருள் உடையவன், முற்றுமுணர்ந்தவன் (சர்வக்ஞன்), இயற்கை அறிவினன். ஞானம், பலம், அருள் முதலிய எவ் வகையினா லும் இறைவனைப் பார்க்கிலும் உயர்ந்த மேலான பொருள் ஒன்றுமே இல்லை. சேதன, அசேதன (அறிவு, அறிவின்மை) ரூபமான இப்பொருள்கள் யாவுமே காரியமான நிலையிலும், காரணமான நிலையிலும், எக்காலத்தும் எனக்கு உடலைப் போன்று அமைந்துள்ளன. ஒரு நூலிலே கோக்கப்பட்ட முத்து, பவளம் முதலிய ரத்தினங்களைப் போல அந்தராத் மாவாக உள்ள நம்மிடம் உலகமனைத்தும் கோக்கப் பட்டுள்ளன.

**குந்தியின் மைந்தனே! நான் நீரிலே சுவையாக இருக் கிறேன். சந்திர சூரியர்களில் ஜோதியாக இருக்கிறேன். சகல வேதங்களிலும் பிரணவமாக இருக்கிறேன். வானிலே ஒலியும், புருஷர்களில் ஆண்மையும் நானாக இருக்கிறேன்.** VII (8)

இறைவன் நீரிலே சுவையாக உள்ளவன். நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் என்கிறது திருவாசகம் திருவண்டப்பகுதி. நீரில்லாமல் நாம் எச்சுவையையும் அறிய முடியாது. நீர் சுவையானது மட்டுமல்ல; சுவை அறிகருவியுமாகும்.

கதிரவனாலும், மதியாலும் நாம் காண முடிகிறது. அந்த இருசுடர்களின் ஜோதி நமக்கு விளக்கமளிக்கிறது. அந்த ஜோதியே இறைவன். எல்லா வேதங்களுக்கும் மூல மந்திரமாகி நிற்பது 'ஓம்' என்னும் பிரணவம்! அந்தப் பிரணவமில்லையேல் வேதங்களே இல்லை. அந்த அனைத்து வேதங்களுக்கும் ஆதார சுருதியாக இருக்கின்ற பிரணவமாக நான் இருக்கிறேன். ஒலிக்கு முதற் காரணமாக இருப்பது விண்வெளி. அந்த விண்வெளியிலே 'ஓம் ஓம்' என்னும் பிரணவம் ஒலிக்கின்றது. அந்தப் பிரணவ சொரூபவாகவும் ஆண்களிலே ஆண்மையாகவும் நான் இருக்கிறேன்.

பௌரஷம் இல்லாதவன் புருஷன் அல்லன். ஆண்மை இல்லாதவன் ஆணே அல்லன்; பேடி. ஆண்மை மிக்கவனே செயற்கரிய செய்வான். யோக மார்க்கத்திற்கு ஆண்மை யற்றவன் தகுதியானவன் அல்லன். ஏனெனில் ஆண்மை இல்லையேல் திட சித்தம் இல்லை; வீர வைராக்கியம் இல்லை. புருஷர் வடிவமானவனே அல்லாமல் புருஷார்த்தம் ஏதும் அறியாதவன் ஆண்மையற்றவன். அதனாலேயே புருஷர்களில் நான் ஆண்மையாக இருக்கிறேன் என்கிறார் கண்ணன்.

'புருஷேஷு விஷ்ணு' என்கிறார் பாரவி என்னும் வட மொழி கவிஞர்.

**மண்ணிலே நறுமணமாக விளங்குவது நான்...தீயிலே சுடராக நான் இருக்கிறேன். எல்லா உயிர்களிலும் உயிர்ப் பாகவும், தவசிகளிலே அவர்கள் இயற்றும் தவமாகவும் நான் இருக்கிறேன்.** VII (9)

எல்லாப் பொருள்களும் எல்லா உயிர்களும் இறைவனிட மிருந்தே பரிணமிக்கின்றன. அவன் அன்றி எதுவுமே இல்லை. இவ்வுலகத் தோற்றத்திற்கு மாயையே தாய். இறைவனே தந்தை. எனவே அடுத்த சுலோகத்திலே,

**பார்த்தா! அனைத்து உயிர்களின் நிலைபேறுடைய வித்தாக நான் உள்ளேன் என அறிக. அறிவாளர்களின்**

**அறிவாகவும் பொலிவு மிக்கவர்களுக்குப் (தேஜஸ்வி) பொலிவாகவும் (தேஜஸாகவும்) நான் இருக்கிறேன்!** VII (10)

*தேஜஸ் என்பது பொலிவு, ஒளி, வீரியம். அது தவம் ஆற்றல் முதலியவைகளினால் ஏற்படும் பிறங்கொளி. அந்த ஜோதியே (பிறங்கொளியே) இறைவன் சொரூபம். இறைவன் சித்சொரூபம்; அறிவு வடிவானவன். எனவே யாரிடம் அறிவு மேலோங்கிப் பிரகாசிக்கின்றதோ அங்கே பிரகாசிக்கும் அறிவே இறைவன் என்க.*

**பாரதத் தலைவ! பலவான்களுடைய காமமும் (இச்சை), ராகமும் (பற்றும்) நீங்கப் பெற்றப் பலமாக (வல்லமையாக) நான் இருக்கிறேன். உயிர்களிடத்து அறநெறிக்கு மாறாத காமமாக (இச்சையாக) நான் இருக்கிறேன்.** VII (11)

*பலமிக்கவர்கள், சாமர்த்தியசாலிகள் ஆகிய இவர்களிடத்திலே இயல்பாகவே காமமும் (சிற்றின்ப வேட்கையும்) ராகமும் (கடும்பற்றுள்ளமும்) பொருந்தி இருக்கும். இந்தக் காம, ராகங்களையே நாம் ஆசாபாசங்கள் என்கிறோம். ஆசை நீங்கப் பெற்ற, பாசம் அகலப் பெற்ற வல்லமையே இறைவன்; பலமிகப் பெற்றவன். அந்தப் பலம் உடல் வலிமை, மனவலிமை, புத்தி வலிமை எதுவாக இருப்பினும் ஆசாபாசங்கள் பொருந்தியதாக இருந்தால் தன்னலத்துக்கே பயன்படும். புனிதமற்ற அந்தப் பலத்தில் இறைவன் இல்லை. ஆசாபாசங்கள் அற்ற (பலமாகவே) வல்லமையாகவே இறைவன் விளங்குகிறான்.*

*அடுத்து, உயிர்களிடத்து அறநெறிக்கு மாறாத காமமாக (இச்சையாக) நான் இருக்கிறேன் என்கிறார் கண்ணன்.*

*காமம் கடியக் கூடிய ஒன்று என்று சொல்லும் போது சிற்றின்பத்தையே நாம் குறிக்கிறோம். அதுவும் அதர்ம நெறியிலே அடையும் சிற்றின்பத்தையும் தர்ம நெறியிலே ஆயினும் அனுபவிக்கும் அளவிறந்த காமத்தையும் நாம் விலக்க வேண்டுமெனக் கூறுகிறோம்.*

இங்கே கண்ணன் தர்ம நெறிக்கு முரண்படாத காம மாகத் தான் இருப்பதாக உரைக்கிறார்.

அதென்ன தர்மத்துக்கு முரண்படாத காமம்?

காமம் என்பது வேட்கை. மன எழுச்சி இயற்கையின் தூண்டுதலால் உண்டாகும் அவா.

பசிக்கும் போது ஏற்படும் உணவு வேட்கையும், நாக்கு வரண்டு போனவிடத்து ஏற்படும் நீர் வேட்கையும் காமமே, இவைகள் தர்மத்திற்கு முரண்பட்டவை அல்ல. மனைவி யிடம் அன்பு காட்டுகிறோம். மகன் மேனிலை அடைய அவாவுகின்றோம். இவைகளும் காமமே. இவை தன்னல முள்ளவை. ஆயினும், தர்மத்துக்கு முரணானவை அல்ல; தர்மத்துக்கு உடன்பாடானவை; பிறருக்குத் துன்பம் நல்காதவை. பிற உயிரினங்களின் சகஜ வாழ்க்கையிலே குறுக்கிடாத காமம் தர்மத்திற்கு முரண்படாத காமம். இந்தக் காமமாகத்தான் இறைவன் உள்ளான். ஏனெனில் உயிரின் முன்னேற்றத்திற்கு இது தேவை. இறைவன்பால் கொள்ளும் பக்தியும் இந்த வகைப்பட்ட காமமே.

**மற்றும் சத்துவ குணம், ரஜோகுணம், தமோ குணம்; முதலிய மூன்று குணங்களைச் சார்ந்த—மூன்று குணங்களால் ஆன எல்லாப் பொருள்களும்] என்னிடத்திலே தோன்றியனவே என அறிக. ஆனால் நான் அவைகளிலே (பொருந்தி) இல்லை. மாறாக அவைகள் என்னைச் சார்ந்துள்ளன! VII(12)**

சத்துவ குணங்களின் தன்மைகளான—ரூபங்களான— ஜப தபாதிகள், ரஜோகுண தன்மை ரூபங்களான கருமங்கள். மகிழ்ச்சி, அதிகாரம் முதலியனவைகள், தமோகுண ரூபமான சோக, மோகாதிகள் எனப் பலவாறாய் உள்ளவைகள் யாவும் என்னிடத்திலிருந்து உண்டாகி, எனக்குச் சரீரமாய் என்னிடத்திலேயே இருக்கின்றன. ஆனால் நான் அவை களைச் சார்ந்திருப்பதில்லை.

அதாவது நம் உடல் இயங்க உயிர் இன்றியமையாதது. ஆனால் உலகிலே நம் உயிர் செயற்பாடற்ற உடலைச் சார்ந்திருக்கிறது. உடலின்றி நம் உயிர் தனித்தியங்காது. உடலின் துணை உயிர்க்குத் தேவைப்படுகிறது.

இறைவன் தன்மை இப்படிப்பட்டதல்ல என்கிறார், கண்ணன். உயிர் போன்று இறைவன் இருக்கிறான்; நாம் அனைவரும், அண்டங்கள் அனைத்தும் அவன் உடலே. நாமும் அனைத்து உயிர்களும் அவன் உடலாகி அவனைச் சார்ந்துள்ளோம். உடலாகிய நம் இயக்கத்திற்கு அவன் (உயிராகிய அவன்) துணை இன்றியமையாதது. ஆனால் உடலாகிய நமது அல்லது சகல அண்டங்களின் துணை அவனுடைய இயக்கத்திற்கு தேவைப்படுதல் இல்லை. நம் உயிர் நம் உடலன்றி இயங்காது. ஆனால் அவன் இயங்குவதற்கு, அவன் நிலவ நாமும் இவ்வண்டங்களும் தேவை இல்லை. இவ்வகையில் 'நான் அவைகளிலே இல்லை' என்கிறார் கண்ணன். அவன் யாருக்கும், எதற்கும் உடைமையல்லன். ஆனால் யாவும் எப்பொருளும் எல்லா உயிர்களும் அவன் உடைமையே.

இந்தச் சுலோகத்தின் மூலம் சாங்கியர்களின் 'பிரகிருதி சுதந்திரமாக இயங்கவல்லது' என்னும் தத்துவம் முறியடிக்கப் படுகிறது.

அர்ச்சுனா! சத்துவ குணத்தால் உண்டானவைகளும், ரஜோ குணத்தால் உண்டானவைகளும், தமோ குணத்தால் உண்டானவைகளும், இந்த உலகத்திலே உடலாகவும், பொறி புலன்களாகவும், துய்க்கும் பொருள்களாகவும், அவைகளுக்குக் காரணங்களாகவும், எவ்வெப் பொருள்கள் உள்ளனவோ அவை யாவும் என்னிடத்திலிருந்தே உண்டாகின்றன என்பதை அறிக. அவைகள் எனக்குச் சரீரங்கள் ஆகையால் என்னிடத்திலேயே இருக்கின்றன. நானோ அவைகளுக்கு ஒரு பொழுதும் வசப்பட்ட நிலை உடையவன அல்லன்.

பிற எல்லா உயிர்களிடத்தும் சரீரம் ஆத்மாவுக்கு வசப்பட்டிருந்த போதிலும் ஆத்மாவின் இருப்புக்கு சரீரத்தி னாலும் உபகாரம் உள்ளது. எனக்கோ, அனைத்து அண்டங்கள் அனைத்து உயிர்கள் யாவும் என் உடலாக அமைந்திருப்பினும் அவைகளால் அவ்வாறு எனக்கு எந்த விதமான உபகாரமும் இல்லை.

**இந்த மூவகைப்பட்ட குணங்களால் ஆகிய பொருள் களால் விஷய சுகங்களால் இவ்வுலகம் அனைத்தும் மயங்கிக் கிடப்பதால் இவை யாவற்றினுக்கும் மேலான அழிவே இல்லாத என்னை உலகம் அறிகிறதே இல்லை.** VII 13.

இந்த உலகம் என்னை அறிகிறதே இல்லை என்று கவலைப்படுகிறார் கண்ணன். பரம் பொருளாகிய இறைவன் இயற்கையாகவே அழிவற்றவன்; மாறுதலற்றவன் தூய்மை யானவன், ஞானப்பிழம்பானவன், எதற்கும் கட்டுப்படாத சுதந்தரமானவன், எல்லா உயிர்க்கும் உயிரானவன். எவனை அறிந்தால் நம்முடைய (சம்ஸாரம்) பிறவிகள் அனைத்தின் விதைகளும் அழிந்து போகுமோ அவனை மனித இனம் அறிய முயல்வதே இல்லை.

நாம் மாறிக் கொண்டே வரும் பொருள்களை மட்டுமே பார்க்கிறோம். எந்த நிலையான சக்தியால்—பரம் பொருளால்—இந்த உலகின் நிலையற்ற பொருள்களெல் லாம் மாறி வருகின்றதோ அந்தப் பொருளை நாம் உணரத் தவறி விட்டோம். நாம் நிழல்களை மட்டுமே காண்கிறோம். நிழலுக்குக் காரணமான சூரியனை மறந்து விட்டோம்.

**இந்த முக்குணங்களால் ஆன, என்னுடைய தேவமாயை யானது உண்மையிலேயே கடக்க முடியாதது, ஆனால் யார் என்னையே அடைக்கலமாய்ச் சரணடைகின்றனரோ அவர் களால் மட்டுமே இந்த மாயையை கடக்க முடியும். அவர்களே கடக்க வல்லவர்கள்.** VII (14)

மாயை முக்குணங்களால் ஆனது. குணவிகாரங்களால் இயங்குவது. இது தேவமாயை. ஜால வித்தை செய்பவன்

காட்டும் மாயை அன்று இது. அல்லது இதிகாசங்களிலே காணப்படும் அவுணர்கள், அரக்கர்கள் செய்யும் மாயையும் அன்று இது. சத்துவ ரஜோ தமோ குணங்களால் இறைவனே இயக்கும்—அவன் லீலையாக விளையாட்டாக உண்டாக்கும்—மாயையே இது.

இறைவனுக்கே மாயன் என்றொரு பெயர் உண்டு. 'மாயவா, கேசவா, கோவிந்தா' என்று அவனை அழைப்பதுண்டல்லவா? மாயனே மறிகடல் விடமுண்ட வானவா என்று இறைவனை விளிக்கிறார் மணிவாசக பெருமான். இந்த வகையில் இறைவன் மாயையைக் கையாளுதலில் வல்லவன் என்பதாகிறது. அவனே மாயா ரூபி. அவன் உருவம் மேற்கூறிய தேவ மாயையால் மூடப் பட்டுள்ளது. அவனைச் சரணடைந்தவர்கள் மட்டுமே அந்தத் தேவமாயையைக் கடந்து அவனைத் தரிசிக்கமுடியும்.

ஜால வித்தை, கண்கட்டு வித்தைகளால் செய்யும் மாயையைப் போல் அபத்தமான மாயை அன்றிது. இது உண்மையான மாயை. இது முன் சொன்னபடி முக்குணங் களால் ஆனது. இந்த மாயையை நீ பிரகிருதி என்று அறிக. இந்த மாயையை ஆள்பவனே மாயாபதி எனும் இறைவன் என அறிக.

இந்த மாயையின் தன்மை என்ன? இறைவனுடைய, பண்பு, உயர் நலன், தன்மைகள் அனைத்தையும் மறைத்து நின்று, கேளிக்கைகளிலே ஈடுபட்டு, பொய் இன்பம் காண விழையும் தன்மை வாய்ந்த மனதை அந்தச் சிற்றின்பங் களோடு ஈடுபட வைப்பதே ஆகும்! இந்த வகையிலே இவ்வுல கம் யாவுமே மாயையால் மயக்கப்பட்டு, பேரின்ப மயமான இறைவனை மெய்யுணர்வுடன் காண இயலாமல் தவிக்கிறது.

**'மக்களினத்திலே, பாவச் செயல்களைச் செய்பவர்கள், மூடர்கள், கீழ் மக்கள், மாயையால் தம் அறிவனைத்தும்**

**இழந்தவர்கள், அசுரத் தன்மை வாய்ந்தவர்கள்—ஆகிய இவர்களே என்னை அடைக்கலமாகிச் சரணடைவதில்லை.'**

**VII.(15)**

அறச் செயல் அல்லன—மக்கள் சமுதாயத்தினால் செய்யத் தகாததாக விலக்கப்பட்டவை அனைத்துமே—பாவச்செயல்களே. பொய், கொலை, களவு, சள், காமம் இவை விலக்க வேண்டியவை. இவைகளே பஞ்சமா பாதகங்கள். இவைகளை விலக்கித் தவிர்த்து, நீக்கி, வாழும் முறையையே பஞ்சசீலம் என பௌத்தம் பகரும்.

அறிவின்மையே மூடத்தன்மையாகும். தனக்கென ஒன்றும் அறியாத விவேகிகள் பிறர் கைப்பொம்மையாகி அறிவற்ற—அறம் அற்ற செயல்களிலே, சிந்தனையைச் செலுத்துவார்கள். மூடர்கள் உள்ளம் இருளால் மண்டிக் கிடக்கும்; அதிலே இறைவன் உள் நுழைய மாட்டான் 'கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' என்கிறார் திருமூலர். மூடர்கள் தம் மூடத்தன்மையை முதலிலே நீக்க வேண்டும். அறிவு என்னும் சுடரால் தம் மன இருளை ஓட்ட முயல வேண்டும். அதன் பின்னர்தான் மனத்தில் இறைவன் வீற்றிருப்பான். தாயுமானவரும் என் சித்த மிசை குடிகொண்ட அறிவான தெய்வமே' என்கிறார்.

மக்களினத்திலே, கடை நிலையில் உள்ளவர்களே கீழ் மக்கள். இவர்களிடம் ஒழுங்குமுறையோ, பண்பாடோ, நல்ல குணங்களில் ஏதோ ஒன்றோ சிறிதும் கிடையாது. இவர்கள் மக்கள் பிறப்பிலே பிறந்து விட்டாலும், விலங்குப் பிறவியிலே சிறிது மேம்பட்டவர்களே ஒழிய மனிதர்களோடு ஒப்ப வைத்து எண்ணத் தகாதவர்கள். புருஷர் வடிவானதே அல்லாது புருஷார்த்தம் (அறம், பொருள், இன்பம், வீடு எனும் உறுதிப் பொருள்கள்) என்பதைச் சிறிதும் உணராதவர்கள்.

அடுத்துச் சொல்லப்பட்டவர்கள் மாயையால் தம் அறிவனைத்தையும் இழந்தவர்கள். அதாவது இவர்கள் கல்வி கேள்விகளால் அறிவு நிரம்பப் பெற்றவர்களே—

ஆயினும், மாயையால் அதை இழந்தவர்கள். இவர்கட்கு இருமை வகை தெரியாது. 'நான்', 'எனது' என்னும் அகந்தையால் இந்த உடலையே நான் என உணர்பவர்கள்; கோணல் புத்தி கொண்டவர்கள்.

இவர்கள் அனைவருமே இறைவனிடம் அடைக்கலமாவதில்லை—சரணடைவதில்லை. ஏனெனில் இவர்கள் உள்ளம் புத்தி இரண்டுமே அகங்காரத்தினால் ஆட்டுவிக்கப்படுபவை. இவர்கள் தங்கள் கரடுமுரடான— செப்பமற்ற— மனக் கிளர்ச்சிகளை அடக்கி ஆளமாட்டாமல் தம்மிடத்துள்ள ரஜோ, தமோ குணங்களுக்கு அடிமையானவர்கள்.

இந்த ரஜோ, தமோ குணங்களை ஒருவன் தன் சத்துவ குணங்களால் வென்று விடுவானானால், அவன் மனிதப்பண்பு மிக்க, நல்லொழுக்க நெறியிலே நடப்பவனாகிறான். அதன் பின் அவன் தத்துவ நெறியிலும் பக்தி நெறியிலும் செல்வது எளிது.

இந்தப் பக்தி நெறிதான் சரணாகதி நெறி. இதனை அடைந்தவர்களே மனக் குழப்பமற்றவர்களாய் ஞானச் சுடர் ஒளி கொளுவும் நெறியிலே சக்தியோடு தம் இலக்கினை நோக்கி நடை பயில்வார்கள்.

கண்ணன் மேலும் கூறுகிறார்:

**'பரதகுலப் பெருமகனே! அர்ஜுனா! நான்கு வகைப்பட்டவர்கள் என்னை வழிபடுகின்றனர். அவர்கள் 1. துன்பத்திலே உழல்பவன் (ஆர்த) 2. ஞான வேட்கை உடையவன்(ஜிக்ஞாசு) 3. பொருள், இன்ப வேட்கை உடையவன் 4. ஞானி எனும் இவர்களே ஆவார்கள். இவர்கள் யாவருமே அறநெறிப்பட்டவர்களே.'** VII (16)

பேரிடர், பெருந் துன்பம் அல்லது நோய் வந்துற்றபோது மக்களினம் இறைவனை நாடுகிறது. அதை நீக்கக் கோரி அவனிடம் முறையிடுகிறது. பேரம் பேசி வியாபாரமும் செய்கிறது. (இந்த இடர் நீங்கினால் உனக்கு இதைத்

தருவேன் என்று அவன் உடைமையாம் உலகிலே உள்ளதை, அவனுக்குத் தருவதாக வேண்டுதல் விடுக்கிறது) இந்த வகையிலே முதல் வகையினர் என்னை வழிபடுகின்றனர்.

அடுத்த வகையினர் ஞான வேட்கை உடையவர்கள். இவர்கள் மெய்ப் பொருளை நாடுபவர்கள். யாக்கை நிலையாமை இளமை நிலையாமை, செல்வ நிலையாமை, உலக நிலையாமை முதலிய நிலையற்ற பொருள்களைக் கண்டு, நிலையுள்ள பொருளான—மெய்ப் பொருளான—இறை உண்மையை உள்ளபடியே அறிந்து கொள்ளும் வேட்கை மிக்கவர்கள். நீர் வேட்கை மிக்கவன் (தாகம் மிக்கவன்) தண்ணீருக்கு அலைந்து ஓடுவதைப் போல ஞான வேட்கையால் சற்குருவை அடையவும், சன்மார்க்கம் சேரவும் இறைவனை வழிபடுபவர்கள் இவர்கள்.

*கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்றீண்டு வாறா நெறி.* குறள் (356)

என்பதே இவர்கள் இலக்கணமாகும். இவர்கள் சரியான நெறியிலே அடி எடுத்து வைத்து சரியான இலக்கோடு மருள் இன்றி மாசற்ற காட்சியுடன் தங்கள் அடியை உறுதியாக வைத்து முன்னேறுபவர்கள்.

சுலோகத்திலே மூன்றாவதாகச் சொல்லப்படுபவன் பொருள், இன்ப வேட்கை உடையவன்.

இவன் முன்னே சொல்லப்பட்ட ஞான வேட்கை உடையவனுக்கு மாறானவன்; உலக இன்பம், இளமை, யாக்கைப் பயன் முதலியவை நன்கு துய்க்கத் துடிப்பவன். அதற்குத் தேவை மண், பணம், பெண் என்று நம்புகிறவன்; மண், பொன், பெண் என்னும் மூவாசைகளைச் சிக்கென்று பற்றியுள்ளவன். முன் சொன்ன நிலையாமைகள் இவன் கண்களுக்குப் புலப்படுவதில்லை. எனவே இவன் உலக இன்பத்துக்காகவும் அதற்குக் காரணமான பொன், பொருள் போகத்துக்காகவும் இறைவனை ஓயாது வழிபடுவான்.

பூசனை, அபிசேக ஆராதனை, அர்ச்சனை, விழா, சாந்தி, ஓமம் முதலியன இவன் கைக் கொள்ளும் பூசை முறைகள் இப்படிப்பட்ட தன்னலக் காமிகளாம் இவர்களும் இறைவ னிடம் தனத்துக்காக, உலக இன்பம் நுகர, பக்தி உள்ளவர் களே.

இறுதியிலே சொல்லப்பட்டவர்கள் ஞானிகள்; ஞான பக்தர்கள். ஞானம் என்பதுஎன்ன? அது மெய்யுணர்வு; இறை உணர்வு. இறை உணர்வு பெற்ற இந்த ஞானிக்கு உலகிலே எதுவும் தேவை இல்லை. இவன் தன்னையே இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகிறான். அவனைத் தன்னிலே ஏற்றுக் கொள்ளுகிறான்.

'தந்ததுஉன் தன்னை கொண்டது என் தன்னை' என்னும் நிலையினை அடைந்தவன் ஞானி. எல்லாப் பொருள்களிலும் எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும், எல்லாச் சூழலிலும், எங்கும் இறைவனை அவன் காண்கிறான்; உணர்கிறான். அவன் ஏக பக்தியிலே திளைத்திருப்பவன். அவன் உலகை, உலக அவாக்களை, தன்னை, தான் என்னும் அகங்காரத்தை அடியோடு மறந்தவன்; துறந்தவன்.

இந்த நால்வரும் பக்தர்களே, இவர்களின் வேட்கையிலே கோரிக்கையிலே வேறுபாடு—ஏற்றத் தாழ்வுகள் இருப்பினும் இவர்கள் தங்களுக்குத் தேவையானவற்றை இறைவனிடம் முழுமனதோடு வேண்டிக் கொள்கின்றனர்.

முதலில் சொல்லப்பட்டவர்கள் துக்கம், துன்பத்துள் மூழ்கியவர்கள் தங்களது துக்க நிவர்த்திக்கு ஆண்டவன் அருளை நாடும் தன்மைக்கு, உதாரணமாக விளங்குபவள் திரௌபதையாவாள். ஆழங் காண முடியாத ஆற்றொணா துக்ககாலத்திலேதான் தன் துக்கத்திலிருந்து விடுபட தன் இரு கைகளையும் தலை மேல் கூப்பி கோவிந்தா! என்று கூவின தால் அவள் தன் துக்கத்தில் இருந்து விடுபட்டதாக இதிகாசம் இயம்பும். இதுவே சுலோகத்திலே முதலிலே சொல்லப்பட்ட ஆர்த பக்தி ஆகும்.

அடுத்துச் சொல்லப்படுவது ஜிக்ஞாசு பக்தி. அதாவது ஞான வேட்கை உடையவனது பக்தி என்பது. அதற்கு உதாரணமாக விளங்குபவர்கள் மாணிக்க வாசகர், விவேகானந்தர் முதலியவர்கள்.

மூன்றாவதாகச் சொல்லப்பட்டவர்கள் இகலோக பரலோக இன்பங்களை அனுபவிக்க இறைவன்பால் பக்தி செலுத்தியவர்கள். சுந்தரமூர்த்தி நாயனாரும். துருவனும் இதற்குச் சான்றாவார்கள்.

நான்காவதாகச் சொல்லப்பட்ட ஞானிகள் இறையருளிலே திளைத்து—பக்தி மார்க்கத்திலிருந்து சிறிதும் விலகாத பண்பாளர்கள். இவ்வுலகத்தையே இறைவனாகக் கருதுபவர்கள், உண்ணும் உணவும் பருகும் நீரும் பரந்தாமன் எனக் கருதுபவர்கள். தண்ணீரிலே உள்ள சுவையும், தீக்கதிர் ஞாயிறு, திங்கள் இவைகளில் உள்ள சோதியையும் கடவுளாகவே காண்பவர்கள்.

இந்த நால்வருமே என் பக்திமான்கள் என்கிறார் கண்ணன். இவர்கள் யாவருமே அறநெறிப்பட்டவர்கள். பிறவிகள்தோறும் படிப்படியாக அறநெறியிலே வாழ்ந்து, பக்தியிலே திளைத்து, ஞானத்தினை உணர்ந்தவர்கள்.

கண்ணன் மேலும் கூறுகிறார்.

**'நால்வகைப்பட்ட இவர்களுள், இடையறாமல் யோகத்திலே நிலைத்து நின்று, மாறாத பக்தி செய்கின்ற ஞானியே மேலானவன். ஏனெனில் நான் அத்தகைய ஞானிக்கு மிகவும் பிரியமானவன். அவனும் எனக்கு மிகவும் பிரியமானவன்.'** VII (17)

இந்த நால்வருள்ளே ஞானியாம் பக்தனே எனக்குப்பிரியமானவன் என்கிறார் கண்ணன். ஏனெனில் பிற மூவரும் ஆசைகளால் அலைக்கழிக்கப்பட்டவர்கள்; பொருள்களின் கவர்ச்சிகளால் ஈர்க்கப்படுபவர்கள். ஆனால் ஞானியாம்

பக்தனோ தத்துவ ஞானத்திலே திளைப்பவன்; தான் யார் என்பதை அறிந்தவன்.

ஞானத்தினாலே, ஒருவன் உணர்ச்சிகளிலிருந்து விடுதலையடைந்து விடுகிறான். தன் அறிவு, தன் தருக்கத் திறன், உலக நடைமுறைகள் இவைகளில் இருந்து விடுபட்டு மேலேழுகிறான்.

இத்தகு ஞானியின் பால்தான் இறைவன் அளத்தற்கரிய அன்பு காட்டுகிறான். அவனும் இறையருளுக்குப் பாத்திரன் ஆகிவிடுகிறான். ஏன்?

பிற மூவரும் இறைவனிடம் செலுத்தும் பக்தி தாங்கள் தங்கள் குறிக்கோளை யடையும் வரைதான்நீடிக்கும். அவர்கள் எதற்காக இறைவனிடம் பக்தி செலுத்தினார்களோ, அந்தகுறிக்கோளை அடைந்தபின் அவர்கள் பக்தியின் தீவிரம் குறையும்; முடிந்தும் போகும். ஆனால் ஞானியின் பக்தி அப்படிப்பட்டதல்ல; மிகச் சிறந்த மேலானது; மாறாதது. ஏனெனில் அவன் தன் ஆத்மாவைப் பிற எல்லா உயிர்களின் ஆத்மாவிலும் காண்கிறான். அவன் குழப்பமற்ற சாந்தி நிலையிலே, பரமாத்மாவிலே பக்தியால் தன்னை இணைத்துக் கொள்ளுகிறான்.

**'இவர்கள் யாவருமே (நால்வகையினரும்) நல்லவர்களே. ஆயினும் ஞானியானவன் மட்டும் என் ஆத்ம சொரூபமே என்பது என் கருத்தாகும். ஏனெனில் யோகத்திலே நிலை பெற்றிருப்பவனாகிய அவன் மிக மேலான கதி என்றும், தன் ஆத்மாவின் குறிக்கோள் என்றும் என்னையே பற்றுக் கோடாகக் கொண்டுள்ளான்!** VI (18)

இந்த நால்வகையினரும் எனக்குச் சிலாக்கியமானவர்களே. அதாவது என்னிடத்திலே யாவராயினும் சிறிதளவேனும் பக்தி செலுத்தினால் அவர்களை நான் தம்முடைய எல்லாச் செல்வத்தையும் எனக்கு வழங்கிய பெருங்கொடையாளிகளாக நினைக்கிறேன். ஆனால் ஞானியோ என்

சுயரூபத்தைத் தரிக்கின்ற ஆத்மா என்பதே என் கோட்பாடு. அது எதனால் என்றால் அவன் என்னைவிட்டுப் பிரிந்தால் தரிக்க மாட்டான். அதைப் போலவே நானும் அவனை விட்டுப் பிரிந்தால் தரிக்க மாட்டேன். ஆகையால் அவன் எனக்கு ஆத்மாவே.

ஞானியின் பக்தி அனன்ய பக்தி. அதாவது எதையுமே அவன் கை நீட்டி இரக்காத பக்தி. ஆனால் முன் சுலோகத்திலே சொன்ன மூவர்கள் பக்தி தன் துக்க நிவர்த்தி தனக்கு ஞானம் பாலிக்க வேண்டும் என்னும் வேண்டுகோள்; தான் இவ்வுலகிலே இன்பமாகச் செழிப்போடு புகழோடு வாழ வேண்டும் என்னும் ஆசை; இவைகளைக் கூட கண்ணன் அங்கீகரிக்கிறார். ஞானியோ இவர்களின் வேறானவன்; மாறுபட்டவன். தனக்கு எது தேவையோ அதை இறைவன் அறிவான் என்பதை அறிந்தவன். இறைவன் சங்கற்ப மாத்திரத்தாலேயே யாவும் நடைபெறும் என்னும் திட்பமான உள்ளம் அவனுக்குண்டு (Thy Will be done on earth)

இப்படிப்பட்ட ஞானி—ஆத்ம ஞானி,—தத்துவ ஞானியே மகாத்மா. இவன் பல பிறவிகளிலே ஏற்பட்ட, அடைந்த யோக, ஞான பயிற்சியின் பலனால், கனிந்த கனி; பழுத்த பழம். இவனே இறைவனது சொரூபம். எனவேதான் கண்ணன் ஞானிதான் என் சொரூபத்தைத் தரிக்கின்ற ஆத்மா என்கிறார். அவன் உள்ளும் புறமும் ஞான ஒளி நிரம்பியவன். அவன் வாழ்க்கை தெய்வீக வாழ்க்கை. அவன் இறைவனை உள்ளபடி உணர்ந்தவன்.

இதையே கண்ணன் விளக்கமாக உரைக்கிறார்.

**'பற்பல பிறவிகளின் இறுதியிலே ஒரு ஞானி யாவும், வாசுதேவ சொரூபமே' என்று தன் உள்ளத்திலே ஒரு முடிவுக்கு வந்து என்னையே பற்றுக் கோடாய் வணங்கி வந்தடைகிறான். அத்தகைய மகாத்மா காணற்கு, கிடைத்தற்கு மிக அரியவன்.'** VII (19)

மெய்யுணர்வு அடைதல் ஒரு பிறவியிலேயே அடையும் பயன் அன்று. பற்பல பிறவிகளின் அனுபவத்தால், பயிற்சியால், சாதனைகளால் அடையும் பயனே மெய்யுணர்வு. அது யுக யுகாந்திர பயிற்சியின் பலன். ஒருவன் இப்பொழுதே இப்பிறவியிலேயே அதை எய்தி விடுவேன் என நினைப்பது மடத்தனம்.

ஒவ்வொன்றும் வளர வேண்டிய பருவ காலத்தை இறைவன் வகுத்து வைத்திருக்கிறான். குழவி பத்து மாதங்கள் கருவிலே வளர்கிறது. பிறந்து பூரண வளர்ச்சியடைய இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. இதைப் போலவே நம் ஆத்மா தத்துவ விசாரத்திலே மூழ்கி, யோக ஞான பயிற்சி மூலமாக மெய்யுணர்வு எய்தி ஞானியாக அவன் காலக்கெடுவை ஏற்படுத்திக் கொடுத்துள்ளான். அதை நாம் அறியோம் அக்கால எல்லைவும் அவனவன் பயிற்சி, முயற்சி, சிரத்தை இவைகளின் அடிப்படையிலேதான் அமையும். அது ஒரு நீண்ட நெடுந்தொலைவுப் பயணம்.

வாசுதேவனே எல்லாம் எனக் கருதும் உயரிய மனோ பாவம் பல பிறவிகளிலே ஏற்பட்ட பக்திப் பயிற்சியின் பலனே. வாசுதேவன் ஒவ்வோர் உயிர்க்கும் உயிராக அமைந்திருப்பவன். அவனன்றி அகிலமே இல்லை என்பதை அந்த ஞானி நன்கு அறிந்தவன். இவனே நடமாடும் தெய்வம். இப்படிப்பட்ட மகாத்மா மிக மிக அரிதானவன்.

இந்த அதிகாரத்தில் மூன்றாவது சுலோகத்திலே சொல்லப்பட்டுள்ளதின் விளக்கமே இது.

மூன்றாவது சுலோகம்.

"அனேக ஆயிரம் மனிதர்களிலே ஒருவன் தன் மனபரிபாகத்தின் பொருட்டு என்னை அறிந்து கொள்ள முயலுகிறான். அங்ஙனம் முயன்ற அனேக ஆயிரம் மனிதர்களுள் ஒருவனே என்னை உள்ளபடியே அறிகிறான்."

இங்ஙனம் உள்ளபடி அறிந்தவனே மேலே சொன்ன ஆத்ம ஞானி-மகாத்மா. இவனே காணற்கு, கிடைத்ததற்கு அரியவன்.

**'பலர் தாம் தாம் அடைய எண்ணும் பற்பல இச்சைகளால் தம்மிடம் உள்ள சிறிதளவு ஞானமும் அபகரிக்கப்பட்டவர் களாய், (பூர்வ ஜென்ம வாசனைக்குத் தக்கபடி) எக்காலத்தும் சப்தாதி விஷய சுகங்களில் ஆசை கொண்டு தாம் ஆசைப் பட்டவைகளைப் பெற வேண்டித் தத்தம் இயல்பினால் தூண்டப்பட்டு, பிற தேவர்களை அடுத்து அத்தேவர்களுக்கு பிரீதியான நியமங்களை அனுஷ்டித்து வழிபடுகின்றார்கள்.'**
**VII (20)**

உலகத்திலே வாழ்கின்ற பெரும்பாலான மக்கள்(யாரோ ஒரு சிலர் தவிர)தத்தம் தன்மைக்குத் தக்கபடி, எக்காலத்தும் முக்குண வசப்பட்டவர்களாய் தத்தம் முந்தைய வினைப் பயனால் பிணிக்கப்பட்டுள்ளனர். என்னுடைய நித்திய கல்யாண குணங்களைப் பற்றிய அறிவும் அவர்களிடமிருந்து, பல்வகைப்பட்ட அவர்களின் இச்சைகளால் அபகரிக்கப்பட்டு விடுகிறது. அதுவும் அவர்கள் சூழல்கள் முக்குணங்களுக்கு ஏற்பவே அமைகிறது.

தங்களுடைய பல்வகைப்பட்ட இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காக அவர்கள் பல்வகைப்பட்ட சிறு தெய்வ வழிபாட்டிலே இறங்கி விடுகின்றனர். அதற்காக சிறு தெய்வ வழிபாடல்களுக்கேற்ற பூசைகளையும் ஆசார அனுஷ்டானங்களையும் விரதாதிகளையும் கைக்கொண்டு தம்முடைய இச்சைகளை அடைய முழுமூச்சாக அதே நோக் கோடு பற்பல சிறு தெய்வங்களை வழிபடுகின்றனர்.

இப்படிப்பட்டவர்களின் இச்சை மிகவும் அற்பமானது; மகத்தானது அல்ல. மிக மிக அற்பமான இச்சைகளை அடைய மக்கள் சிறு சிறு தெய்வவழிபாடுகளைக் கைக்

கொள்ளுகின்றனர். ஆனால் மகத்தான வீடுபேறு, யோக ஞான நெறி, ஞானமுதிர்ச்சி இவைகளை அடைய மகத்தான பரம் பிரம்மத்தையே ஞானிகள், யோகியர் நாடுவர். சிறு தெய்வத்தை அவர்கள் திரும்பியும் பார்ப்பதில்லை.

**'எந்தெந்த பக்தன் எந்தெந்த தெய்வ வடிவத்தை பயபக்தி சிரத்தையோடு வழிபட (பூசிக்க) இச்சிக்கிறானோ அந்தந்த பக்தனுடைய அதே சிரத்தையை பக்தியை நான் அசையாததாகச் செய்கிறேன்.' VII (21)**

இறைவன் ஒருவனே. 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்கிறது திருமந்திரம். அவன் உருவமும் நாமமும் அற்றவன். 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி' என்கிறார் மாணிக்க வாசகர். நாமரூபமற்ற இறைவனை மனிதன் பற்பல வடிவங்களில், பற்பல பேரிட்டு அழைத்து வழிபடுகிறான். கல்விக்கு வாணி, செல்வத்துக்கு இலக்குமி, ஞானத்துக்கு உமா என்று ஒவ்வொரு பொருளையும் அடைய ஒவ்வொரு தேவதையை வழிபடுகிறான்.

இதுவேயுமன்றி ஆறுவகைப்பட்ட சமயத்தினர் ஆறு வகைப்பட்ட தெய்வங்களை வழிபடுகின்றனர். சாக்தர் சக்தியை வழிபடுகின்றனர்; காணாபத்தியர் கணபதியையும், சைவர்கள் சிவனையும், வைணவர்கள் திருமாலையும் வழிபடுகின்றார்கள். முருகனை வழிபடுபவர்கள் கௌமார மதத்தினர். சூரியனை வழிபடுபவர்கள் சௌர மதத்தினர்.

இவர்களில் யார் யார் எந்தெந்த தெய்வத்தை எதற்காக வழிபட்டாலும் அவை யாவும் பரம்பொருளையே சென்றடையும். 'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்' என்கிறது சிவஞான சித்தி. யார் என்னை எப்படி வழிபடுகின்றார்களோ அவர்க்கு நான் அப்படியே அருள் புரிகிறேன். இதை கீதை 4-11ல் காண்க.

எனவே எப்பெயருடனேயும் எவ்வுருவுடனேயும் எதற்காகப் பக்தன் இறைவனைச் சிரத்தையுடன் பூசிக்கிறானோ அவன் விரும்பிய வடிவிலே, அவன் கோரியதை அளிக்க இறைவன் முற்படுகிறான்; முன் வருகிறான். எனவே இச்சுலோகத்திலே, கண்ணன் அந்தந்த பக்தனுடைய பக்தி சிரத்தையை நான் அசையாததாகச் செய்கிறேன் என்கிறார்.

ஏனெனில் இறைவனுக்கு தேவை பக்தன் உள்ளம்; அவன் உள்ளங் கசிந்த பக்தி. அவன் பக்தி செலுத்திதன்னை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தால், அவனை நோக்கி இறைவன் பத்து அடி நடந்து ஓடி வருகிறான். இந்தச் சிறு தெய்வ வழிபாடும் முதிர்ச்சியடைந்து ஒரு காலத்தில் ஞான பக்திக்கு வழிவகுக்கும்.

நாம் எதைப் போற்றி வழிபடுகிறோம் என்பது பொருட்டல்ல. நாம் அதிலே பக்தி சிரத்தை உடையவர்களாக இருந்தால் போதும். அதுகூட நம் ஆத்ம முன்னேற்றத்திற்கு வழி கோலி விடும்.

**'அந்த பக்தனும் பக்தி சிரத்தையோடு கூடியவனாய் அந்தச் சிறு தெய்வத்தின் ஆராதனையைச் செய்கிறான். அந்தத் தெய்வத்தின் மூலமாகவே தான் இச்சித்த ஆசைகளை எல்லாம் என்னால் வகுக்கப்பட்டபடி நிச்சயமாக அடைகிறான்.'**
VII (22)

இந்த பக்தன் தன் அசைக்க முடியாத நம்பிக்கையோடும், தீவிர பக்தி சிரத்தையோடும், தன்னுடைய வழிபடு கடவுளை வணங்குகிறான். அவனுடைய அந்த வழிபாடும் பரம்பிரம்மத்தையே சென்றடைகிறது. ஏனெனில் அவன் எப்பொருளிலும் கலந்துள்ளவன். எங்கும்;நிறைந்திருப்பவன். எவ்வுருவில் எப்பெயரில் அர்ச்சனை (பூசை) செய்யினும் யாவும் அவனையே சென்றடைகின்றன. அவனே அந்தந்த பக்தனுக்குத் தேவைப் படுபவைகளை—இச்சித்த ஆசை-

களைத் தான் வகுத்த வகைப்படி; அந்த பக்தர்களுக்கு அருள் செய்கிறான்.

> ''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
> தொகுத்துத்தார்க்கும் துய்த்தல் அரிது'' —குறள்

கண்ணன் தொடர்கிறார் :

**'ஆனால் அற்ப புத்தி படைத்தவர்கள் வழிபாடு செய்து, கோரிய தங்கள் கோரிக்கைகள் நிலையற்றவை; குறை பாடுடையவை-தேவர்களை வழிபடுகின்றவர்கள் தேவர்களை அடைகின்றனர். ஆனால் என் அடியவர்களோ என்னையே அடைகின்றனர்.'** VII (23)

சிற்றின்பம்; பேரின்பம்; ஒன்று நிலையற்றது; ஒன்று நிலைத்து நிற்பது. இன்பத்தை அடைய நினைக்கும் மனிதன் சிற்றின்பத்தையே நாடுகிறான். அது கணப்பொழுது தோன்றி மறைந்த பிறகு, அதைப் போன்ற மற்றொருவகை இன்பத்தை நாடி மனிதன் ஓடுகிறான். அவனுக்கு நிலைத்துள்ள இன்பம் எது என்று உணர நேரமில்லை. இப்படிப் பட்டவனே அற்ப மதி படைத்தவன். இந்தச் சிற்றின்பமோ முடிவுள்ளது; அற்பமானது.

எங்கும் பரந்துள்ள பரம்பொருள் நம் மனவாக்குகளுக்கு எட்டாதவன். ஆகையினால் சிற்றறிவுடைய மனித இனம் தன்னால் காணக் கூடிய, கருதக் கூடிய, பக்தி பண்ணி உணரக் கூடிய ஏதோ ஒரு தெய்வ வழிபாட்டைக் கைக்) கொள்ளுகிறது. அதன் மூலமாகவும் நாம் வேண்டியதை அடைகிறோம். ஏனெனில் சர்வ வியாபியாகிய இறைவன் அவனை நாம் காண முடியாத ஞானக் கண்ணின் குறை பாட்டை நன்கறிவார்.

அவர் நமது பக்தியை, பூசனைகளை ஏற்றுக் கொள்ளுகிறார். நம் வேண்டுதலை, நாம் எந்த நிலையில் அவரை அணுகுகின்றேமோ அந்த நிலைக்கேற்ப அருள் செய்கிறார்.

இந்த வகையிலே எந்தவித பக்தியும் பயனற்றதன்று. இப்படிப்பட்ட பக்தியிலே படிப்படியாக முன்னேறும் ஒரு பாமரனும் தெய்வ சாந்நித்தியப் பேரொளியின் நலனை எய்த முடியும்.

இந்த வகையிலே சிறு தெய்வங்களை அடைய முற்படுபவர்கள், அச் சிறுதெய்வ அருளுக்கே பாத்திரமாகி தற்காலிகமான இன்பத்தை அனுபவிப்பார்கள். ஆனால் என்னை (பரப்பிரம்மத்தை) வழிபடுபவர்களோ, எல்லையற்ற பேரின்ப மோட்ச சாம்ராஜ்யத்திலே புகுந்து என்னையே அடைவார்கள்.

**என்னுடைய அழிவற்ற ஒப்பற்ற பர சொரூபத்தினை உணராத அறிவிலிகள், பொறிபுலன், மனம் அந்தக்கரணங்களுக்குப் புலப்படாத என்னை—எட்டாத என்னை—புலன்களால் உணரத்தக்க இயல்பை உடையவனாக எண்ணுகின்றனர்.** VII (24)

நான் எல்லா கருமங்களாலும் ஆராதிக்கப்படுபவன்; சர்வேஸ்வரன், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவன். 'மனவாக்கெட்டாத் தூரமுமாய் நின்றது' என்கிறார் தாயுமானார்.

"அரியுமல்ல அயனுமல்ல அரனுமல்ல அப்புறம்
கருமை வெண்மை செம்மையும் கடந்து நின்றகாரணன்
பெரியனல்லன் சிறியனல்லன் பெண்ணும் ஆணும்
அல்லவே;
தூரியமும் கடந்து நின்றதூரம் தூரம்தூரமே"

என்கிறார் சிவவாக்கியர். எனக்குத் தோற்றம் என்பதோ அழிவென்பதோ இல்லை. எனக்கு உவமை சொல்ல இயலாது. தானே தனக்கு நிகராய தன்மையன். இறைவன் என்பவன் பலருள்ளே ஒருவனல்லன். எனக்கென ஓர் உருவமில்லை. நான் உருவங்களைக் கடந்தவன்; பரசொரூபி.

உருவமற்ற அவனை நாம் உருவத்திலே கண்டு வழிபடுவது, நம்முடைய எல்லைக்குட்பட்ட அறிவு உணர்வு களாலேயேயாம். சுத்த பரிபூரண, அகண்டாகார உண்மை வடிவை நாம் தியானிக்காமல் அதனின்றும் விலகி நம் கற்பனைக்குட்பட்ட ஒரு வடிவத்தின்மீது பக்தி செலுத்து கிறோம். அந்த எல்லையற்ற பரபிரம்மத்தின் பரசொரூ பத்தையும் அவனுடைய கல்யாண குணங்களையும் நம் கற்பனை வடிவத்திலே காண்கிறோம்.

யோகமாயையால் மூடப்பட்டுள்ள என்னை, உலகம்—உலகத்து உயிர்கள்—குழப்பத்தினால் இருமையால் மயக்க முற்று அறிகின்றிலர். எனவேதான் புலன்களால் உணரத் தக்க இயல்பை உடையவனாக என்னைக் கருதுகின்றார் கள். (யதுகுலத்தில்) இடைச்சாதியில் பிறந்த ஒருவனாக, பிறப்பு இறப்புக்குட்பட்டவனாக, என்னைக்கருதுகின்றனர். ஆனால் நான் காலங் கடந்தவன். இறப்பு, நிகழ்வு, எதிர்வு, எதிலும் கட்டுப்படாதவன். இதை இந்த உலகம் உணர்வ தில்லை.

இதையே கண்ணன் தன் வாக்கினால் உணர்த்துகிறார்.

**யோக மாயையால் நன்கு மறைக்கப்பட்டுள்ள நான் எல்லாருடைய அறிவுக்கும் புலப்படுவதில்லை. இந்த மூட உலகமோ, பிறவாத அழியாத என்னை—உள்ளபடி அறிகிறதே இல்லை.** VII (25)

யோகமாயை என்பது, சத்துவ, ரஜோ, தமோ குணங் களாம் முக்குணங்களின் சங்கமித்தலையே. இங்கு யோகம் எனக் குறிப்பிடப்படுவது (யோகம் என்பது இணைப்பு—சங்கமம்) முக்குணச் சங்கமத்தையே. இந்த மாயையோ யோக மாயை; இதனால் உலகத்தவர் கண்களுக்கு அவன் திரையிடப்பட்டுள்ளான். இந்த யோக மாயையோ இறைவ னுடைய சங்கல்ப லீலை. இது உலகத்தவர்கள் கண்களைத் திரையிட்டு இறைவனை மறைத்து விடுகிறது.

அழியக்கூடிய தன்மை வாய்ந்த பொறிபுலன் அந்தக் கரணங்களைக் கொண்டு இவ்வுலகத்திலே அழியும் தன்மை வாய்ந்தவைகளை மட்டுமே நாம் காண முடியும். அழிவே இல்லா ஆண்டவனை நாம் காண இயலாது.

'ஊனக்கண் ஞானம் உணராப்பதியை ஞானக்கண்ணி னில் சிந்தை நாடி' என்கிறது சிவஞான போதம்.

இந்த வகையில் பிறப்பு இறப்பற்ற பரம்பொருளை நாம் காண வேண்டுமெனில் நமக்குத் தேவை ஞானமாகிய கண்ணே. நம் ஊனக்கண்களால் அவனை உணரமுடியாது. ஆகையினால் இந்த மூட உலகினர், பிறவாத—அழியாத— இறைவனை, உள்ளபடியே அறிந்து கொள்ள முடிவதில்லை.

கண்ணன் மேலும் கூறுகிறான் :

**அர்ஜுனா! இதுவரை பிறந்து வாழ்ந்து இறந்தனவும்; இப்பொழுது நிகழ்காலத்திலே பிறந்து வாழ்வனவும் இனிமேல் பிறப்பெடுதது வருவனவுமாகிய அனைத்து உயிர்களையும் நான் அறிவேன். ஆனால் ஒருவருமே என்னை அறிகிலர்.'**
VII (26)

இறைவன் காலத்தாற் கட்டுப்படாதவன். இறப்பு, நிகழ்வு, எதிர்வு எதுவுமே அவனை பாதிப்பதில்லை. அவன் என்றுமுளன். கடந்த காலத்திய உயிர்கள் நிகழ்காலத்திய உயிர்கள், வருங்காலத்திய உயிர்கள் யாவும் மாயையின் காரியம். காலமோ மாயையின்சொரூபம். இந்த மாயையோ தேவமாயை. இறைவனோ மாயையின் அதிபதி-மாயாபதி.

இவ்வகையில் அனைத்துயிர்களையும் நன்கறிந்தவன் மாயாபதியாகிய காலங் கடந்து நிற்கும் சர்வேஸ்வரன். அவன் அனைவரையும் அறிந்தவன். ஆனால் அவனை அறிந்தவர் ஒருவருமே இலர். கிருஷ்ணன் கூறுகிறார்!

**'பாரத! பகைவரை வாட்டுபவனே! விருப்பு வெறுப்பின் அடிப்படையிலே உண்டாகும் (நன்மை தீமை, இன்ப துன்பம்,**

பெறுதல் இழத்தல்) முதலிய இருமை மயக்கத்தால் பீடிக்கும் பொழுதே எல்லா உயிர்களும் குழப்பமடைகின்றன.' VII (27)

எல்லா உயிர்களும், பிறக்கும் பொழுதே, அதாவது இவ்வுலகத்திலே, தாம் தம் முதல் மூச்சை சுவாசிக்கும் அக் கணத்தில் இருந்தே குழப்பத்திலே மூழ்கி விடுகின்றன. அதாவது குழப்பத்திற்குக் காரணமான இருமையை அப்பொழுதே (குழவிப் பருவத்தே) உணரத் தொடங்கி விடுகின்றன. சீதம், உஷ்ணம், நோய், பசி, துன்பம் அவை களின் நீக்கங்கள் ஆகிய இவைகளால் பிறவியில் ஆரம்பித்த இருமையால் வரும் குழப்பம் இடையறாது மக்களினத்துக்கு உண்டாகிறது.

இன்பம், துன்பம் என்று சொல்லப்படும் எதிர் எதிரான இருமைகளால், மனிதன் எவ்விதமான குணங்களுக்கு உட்பட்டிருந்த போதிலும் அவன் விருப்புக்கும் வெறுப்புக் கும் ஆளாகி விடுகிறான். இந்த விருப்புகளுக்கும் வெறுப்பு களுக்கும் இவன் முற்பிறவியிலேயே பழக்கத்தால் அடிமை யானவன். அவை இப்பிறவியிலும் தொடர்ந்து வருகின்றன. இந்த துவந்தங்கள் (இருமைகள்) அவை, காரணமாக வரும் மனக்குழப்பம், கிலேசம், கோபம் முதலியன, பிறந்த காலத் தில் இருந்து நாம் இறக்கும் வரை தொடர்கின்றன.

இந்த வேண்டுதல். வேண்டாமை (விருப்பு, வெறுப்பு) நமக்கு எக்காலத்தும் உண்டு. இவை நம்மிடமிருந்து அடியோடு அகல வேண்டுமெனில் நாம் வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்தல் வேண்டும். அவன் அடி சேர்வதால் நாமும் வேண்டுதல் வேண்டாமை இல்லாத பண்பினை அடைவோம். பின்னர் எக்காலத்தும் துன்பமே இல்லை. 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை. (அப்பர்).

'வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.' —குறள்

'எவர்கள் தத்தம் பற்பல பிறவிகளில் அளவிறந்த புண்ணிய நற் கருமங்களை இயற்றி அனாதி காலமாய்த்

**தொடர்ந்து வரும் தம்முடைய பாவங்களில் இருந்து விடுதலை யடைகிறார்களோ, அவர்கள் தத்தம் துவந்த மோகத்திலிருந்து (இருமைப் பற்றொழித்து) விடுதலை அடைந்தவர்களாய்க் குழப்பமற்றவர்களாய் — உறுதியான விரதமுடையவர்களாய் என்னையே சரணடைகின்றனர்; உபாசிக்கின்றனர். VII (28)**

*நான் என்னும் அகந்தையோடு தான், தனது என்பதை மையமாகக் கொண்டு இயற்றும் செயல்கள் யாவுமே பாவச் செயல்களே. பாவம் என்பது வைதீக நெறிமுறைகளைமீறுவ தல்ல, மரபுகளைக் கைவிடுவதுமல்ல. ஆனால் பாவம்என்பது என்ன? பாவம் என்பது நான் என்னும் அகங்காரத்தின் முனைப்பு; அறியாமையின் உட்கரு, பிறருடைய உழைப் பால் தான் வாழவேண்டும் என்னும் தன்னலச் செருக்கு. இந்தப் பாவத்தை நாம் துறந்துவிட்டால் நான் என்னும் அகந்தை அழிந்தால், அதன் மூலம் ஆசையின் காரணமான அறியாமை என்னும் காரிருளை நாம் கடந்து விட்டால், நம்முடைய வாழ்வின் சேவை, எல்லார் உள்ளும் உறையும் இறைவனுக்காகி விடுகிறது.*

*இந்த முறையிலே பக்தி ஆழமாகி விடுகிறது, கடவுளைப் பற்றிய ஞானம் மேம்பாடெய்துகிறது. இப்படிப்பட்ட வனுக்குத் தன் ஆத்மாவை எவ்விடத்தும் எங்ஙனும் காணு கின்ற மாசற்ற காட்சி கிட்டுகிறது. இவனே உறுதியான விரதத்துடன் அவனை வழிபடுகின்றான்.*

*மகாத்மா துகாரம் பாடுகிறார்.*

*'என் உள்ளே உறையும் நான் அழிந்துவிட்டது,*
*அதற்குப் பதிலாக நீ அங்கே அரசாள்கிறாய்*
*இதையே துகாரம் சொல்கிறான்.*
*இனிமேல் இங்கு 'நானுமில்லை; எனதுமில்லை.'*

*கண்ணன் மேலும் கூறுகிறார் :*

**மூப்பு (கிழத்தன்மை) இறப்பு எனும் இவைகளில் இருந்து தான் விடுதலையடைய (கைவல்லியமடைய) என்னிடம்**

அடைக்கலம் புகுந்து யார் முயல்கின்றார்களோ, அவர்களே என்னையும் (பரம்பிரம்மத்தை) அத்யாத்மம் முழுமையும் கருமங்கள் அனைத்தையும் அறிகின்றனர்.

அத்யாத்மம் என்பது

ஆத்மாவின் அடிப்படையான மெய்யுணர்வு (ஆத்ம நிஜஸ்வரூபம்)

நம்மையறியாமலேயே நாம் வளர்ந்து யுக்த வயதடைந்து (இளைஞனாகி,) அதுவும் கழியக் கிழப்பருவம், அடைகிறோம். இதற்கிடையிலே பிணிகள் பல, நாள் தோறும் பசித்துன்பம், இன்மை இயலாமையாம் துன்பங்கள் பல அனுபவிக்கிறோம். 'பிணி பசி மூப்பு துன்பம் ஆதலால் பிறவி வேண்டேன்' என்கிறார் ஆழ்வார்.

மூப்பு (கிழப்பருவம்) ஒரு கொடிய நரகம். அது மிகவும் பயங்கரமானது; யாரும் விரும்பத்தகாத ஒன்று.

மகாபாரதத்திலே, யயாதி மன்னன் தன் கிழப் பருவத்தைப் பெற்றுக்கொண்டு இளமையைத்தரும்படித்தன் பிள்ளைகளைக் கேட்டபோது அவர்கள் நால்வரும் கிழப் பருவத்தின் சங்கடங்களை, இயலாமைகளை, துன்பங்களை பிறரால் எள்ளி நகையாடப்படும் இகழ்ச்சிகளை, எல்லாம் சொல்லி மறுத்துவிடுகின்றனர். எனவே தான் கிழப்பருவத்தினை இங்கு முதற்கண் கூறுகிறார் கண்ணன்.

அடுத்தது மரணம். யாருமே மரணத்தை விரும்புவதில்லை. 'தேகம் நீங்குமென எண்ணிலோ, நெஞ்சம் துடித்தலறுவேன்' என்கிறார் தாயுமானார். எல்லாவற்றையும் வென்றவனாலும் கூட மரணத்தை வெல்ல முடியவில்லை; வெல்ல முடியாது.

இந்த மூப்பும், மரணமும் மனிதன் விரும்பாதவை; வெறுப்பவை, இத்தனை ஆண்டுகள் வாழ்ந்து என்ன புண்ணியம்? நான் ஏன் இந்தப் பூமிக்கு பாரமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறான் கிழவன்,

இறந்த பின்னர் அக்கம்பக்கத்தார், உறவினர் யாவருமே 'என்ன வாழ்ந்து என்ன பயன்? ஓகோ என்று வாழ்ந்தான், இறந்து விட்டான். இந்த வாழ்க்கையின் பொருள் இது தானா?' என்று பேசுகின்றனர்.

எனவே இந்த மூப்பும் சாக்காடும், எப்படிப்பட்டவை என எவன் உள்ளபடியே சரிவர ஆராய்கிறானோ, அவனே (ஆத்ம விடுதலை) கைவல்யத்தை அடைய முயல்பவன் ஆகிறான். இவைகளின் உண்மையான வெற்றியை உணர்ந் தவனே பரம்பொருளிடம் அடைக்கலம் புகுந்து தான் விடுதலையடைய முயல்பவனாவான்.

அந்த முயற்சி எவனிடம் அமைகிறதோ, அவனால் மட்டுமே இறைவனையும், ஆத்ம சொரூபத்தையும் கருமங்கள் அனைத்தையும் அறிந்து கொள்ள முடியும்.

இதோ இந்த மனிதன், நின்றான் இருந்தான் கிடந்தான் தன் கேள் அலறச் சென்றான் என்று சொல்லப் படும் காரணத்தால், பிறகு பார்த்துக் கொள்ளுவோம்என்று தள்ளிப் போடாமல் இப்போதே நல்வினைகளாம் யோக ஞான முயற்சிகளைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்கிறது நாலடியார்.

**'எவர்கள் என்னை அதிபூதத்துடனும், அதி தெய்வத்துட னும், கூடியவனாக அறிகின்றார்களோ, அவர்கள் யோகத் திலே நிலைபெற்று நின்ற உள்ளத்தை உடையவர்கள். மரண காலத்திலும் என்னைப்பற்றிய நினைவிலேயே இருப்பார்கள்.**

**VII (30)**

மேற்கூறிய 29வது சுலோகத்திலே சொல்லப்பட்ட அதி ஆத்மம் என்னும் சொல்லுக்கும் இச்சுலோகத்திலே சொல்லப்பட்ட அதிபூதம், அதிதெய்வம், அதியக்ஞம் என்னும் சொற்களுக்கும் உரிய விளக்கங்கள் அடுத்த அத்தியாயத்திலே உள்ளன.

சராசரி மனிதன், தன் வாழ் நாளெல்லாம் ஈட்டிய செல்வத்தைப் பற்றி, தன் நிலபுலன்களைப் பற்றி, தன் பொன் பூமிகளைப் பற்றி, மனைவி மக்களைப் பற்றி, தன் அந்திமகாலத்தில் (உடலைவிட்டு உயிர் பிரியும் காலத்திலே) சிந்திக்கிறான். இவைகளை விட்டுதான் வெறுங்கையனாய் போகிறோமே என்று வருந்துகிறான். இறைவனைப் பற்றி, தன் ஆத்மாவைப்பற்றி அவன் நினைப்பதில்லை.

எய்ப்பென்னை வந்து நலியும்போது
யாதும் நான் உன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத்தரவணைப் பள்ளியானே

என்று ஆழ்வாரும்,

''ஐயும் திரண்டு விழியும் செருகி அறிவிழந்து
மெய்யும் பொய்யாகி விடுகின்றபோது...

கையும் தொழப்பண்ணி
அஞ்செழுத்தோவும் கற்பியுமே''

என்று பட்டினத்தடிகளும் இறைவனை வேண்டுகின்றனர்.

மரண காலம் ஒரு பயங்கரமான காலம். நாம் இவ் வுலகை விட்டு, இந்த உடம்பை விட்டு, அன்புக்கினியவர் களைப் பிரிந்து, காலமெல்லாம் ஈட்டிய ஒண்பொருளை விட்டு, ஒரேயடியாக போய்விடும் காலம். தன் வாழ்நாளெல் லாம் ஒருவன் எதை ஓயாமல் சிந்திக்கின்றானோ, வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கின்றானோ, அதுதான் அவன் மரண காலத்தில் அவன் முன்னே தோன்றும். மனைவியோ, மகனோ, மகளோ, தன் உயிருக்குயிராக நேசித்த பிற எதுவோ, அவன் மனக்கண்முன் தோன்ற, அவன் வாய் அவர்கள் பெயரைச் சொன்னபடியே அவன் இறந்துபடுவான்.

குண்டு பாய்ந்து உயிர் போகும் தருவாயிலும் இராம இராமா என எப்படி காந்தியடிகளால் உச்சரிக்க முடிந்தது?

அவர் காலமெல்லாம் உயிருக்குயிராய்க் கருதிய இந்தியத் திருநாட்டைக் காட்டிலும் இந்தியத் திருமக்களைக் காட்டிலும், மிக அதிகமாக ஒவ்வொரு வினாடியும் இடையறாது உள்ளத்துள்ளே ஜெபித்திருந்த நாமம் இராம நாமம். எனவேதான் அவர் இறுதிக் காலத்திலே இந்திய நாடே என்று கூவாமல் இந்திய மக்களே என்று கதறாமல் 'இராம இராமா' என்று சாந்தம் நிலவிய நிலையில் உச்சரித்தார்.

அவர் மகாத்மா. அவர் அடைந்த நிலை யோகத்திலே நிலை பெற்று நின்ற உள்ளத்தினை உடையவர்களே அடைய முடியும். யோகத்திலே, அசையாது நிற்பவன் தைலதாரையைப்போல பரமாத்மாவில் தன் உள்ளத்தை லயிக்கச் செய்து விடுகிறான். அவன் உள்ளம் அவனாகி விடுகிறது. உதடுகள் அவனையே பூஜிக்கின்றன. எனவே, அவன் தன் மரண காலத்திலும் அவனைப் பற்றிய நினைவிலேயே இருப்பான். அவனே என்னை அதிபூதத்துடனும், அதி தெய்வத்துடனும் அதியக்ஞத்துடனும் கூடியவனாக அறிந்தவன் ஆனான்.

(ஏழாம் அத்தியாயம் முற்றும்)

எட்டாம் அதிகாரம்

# அட்சரப் பரப்பிரம்ம யோகம்

## (ஒளி நெறி)

*சென்ற அத்தியாயத்திலே சொல்லப்பட்ட கீழ்க்கண்ட சொற்களுக்கான விளக்கங்களை இந்த அத்தியாயத்திலே நாம் காணலாம்.*

1. *பிரம்மம்* 2. *அதியாத்மன்* 3. *கர்மம்* 4. *அதியக்ஞம்* 5. *அதிபூதம்* 6. *அதி தெய்வம்* 7. *அப்பியாச யோகம்; எனும் இவைகளே அச்சொற்கள்.*

*அர்ஜுனனுக்கு ஏழாம் அதிகாரத்தைக் கேட்ட பின் மேலே குறிப்பிட்ட சொற்களின் பொருள் புலப்படவில்லை. (நமக்கு மட்டும் புலப்படுகிறதா என்ன?) எனவே அர்ஜுனன் கண்ணனை நோக்கிக் கேட்கிறான்.*

**"புருஷோத்தமனே! அந்தப் பிரம்மம் என்பது யாது? அதியாத்மம் என்பது எது? கர்மம் என்பது என்ன? அதிபூதம் என்று எது சொல்லப்படுகிறது? மேலும் அதிதெய்வம் என எது அழைக்கப்படுகிறது?"** VIII (1)

**'மதுசூதனா! இங்கே; இந்த உடலினிடத்தே, யார் எப்படி அதியக்ஞனா இருக்கிறார்? மரண காலத்திலும், தன்னடக்கம் பயின்றவர்களால் எங்ஙனம்நீர் நினைக்கப்படுகின்றீர் ஞாபகத்தோடு அறியப்படுகின்றீர்?"** VIII(2)

*இவ்விரண்டு சுலோகங்கள் மூலம்; அர்ஜுனன் கிருஷ்ணன் மூலமாகத் தான் கேட்ட கடின சொற்களுக்கு விளக்கம் தேவை என விண்ணப்பிக்கிறான்.*

*அதற்குக் கண்ணன் விடையளிக்கிறார்.*

**அழிவற்றதாயும் யாவற்றுக்கும் மேலானதாயும் இருப்பது பிரம்மம். அதன் சுபாவம் அதியாத்மம் என்று சொல்லப்படு கிறது. உயிர்களைஉண்டாக்கி நிலைத்திருக்கச் செய்தலாகிய வேள்வியே கர்மம் எனப்படுகிறது.'** VIII(3)

**'மனிதர்களுள் உயர்ந்தவனே! அழிவுக்குட்படும் பொருள் கள் யாவும் அதிபூதம் எனச் சொல்லப்படுகின்றது. புருஷனே அதிதெய்வம் எனப்படுகிறான். புருஷேஷ— விஷ்ணு—புருஷன் என்று சொல்லப்படுபவன் இறைவனே) மற்றும் ஈண்டு நானே தேகத்திலுள்ளே அதியக்ஞமாகிறேன்.'** VIII (4)

*மூன்றாவது சுலோகத்திலே பிரம்மம் என்பது பரம அட்சரம் என்று சொல்லப்படுகிறது. பரம் என்றால் மேலா னது. அட்சரம் என்றால் பகுக்கப்படாதது. இந்த வகையில் பிரம்மம் (பிரமம்+அட்சரம்) மேலான பகுக்கப் படாத ஒன்றாகும். அழிவே இல்லாத நித்தியமான மூலா தார வஸ்து.*

*பிரம்மம் என்பது வெறும் 'அது' என்பதல்ல. பிரம்மம் சச்சிதானந்த சொரூபம். பிரம்மமே பரமாத்மா, பிரம்மம் வேதங்களையும், பிரகிருதியையும் கடந்து நிற்பது. பிரம்மம் எல்லாப் பொருள்களுக்கும் அப்பாற்பட்டது.*

*பிரம்மம் என்பது மாறுதலற்ற, நிலையான ஆத்ம வியாபகம். அதன் மீது அனைத்தும் வாழ்கின்றன. நடக் கின்றன; அசைகின்றன; உறங்குகின்றன. மனிதனின் இயற்கை இவற்றின் அகநிலை உயிர்ப்பாக இருப்பது. (அதாவது ஆத்மா)*

*பிரம்மத்தை ஒருவன் எங்கு காணக்கூடும்? அவனை உனக்குள்ளே பார்; உன் இதயத்துள்ளே உணர். அவன் அங்கே குடிபுகுந்திருக்கிறான். நமக்குள்ளே குடிகொண்டுள்ள ஆத்மா, இதயத்தின் உள்ளே அரியணையிலே அமர்ந்துள்ள ஜீவாத்மாவே. இதையே அதிஆத்மன் என்கிறோம். இதுவே*

உள்ளே உறையும் கடவுள்.—அந்தராத்மா—ஆத்மாவின் ஆத்மா ஆகும்.

பிரமன் அண்டம் அனைத்துக்கும் இறைவன்; தந்தை ஆவான். அதிஆத்மனோ உள்ளே உறையும் இறைவன் ஆவான்.

பழி உணர்ந்து மனமழுந்துகின்ற தாழ்வுற்ற இதயத்திலே மிக மேலுயர்ந்து தூய்மையுற்ற உள்ளமாம், நம் ஜீவாத்மாவிலே, அவன் (இறைவன்) சுபாவம் எனும் ஒளிக்கற்றை உள்ளது. இந்த அதி ஆத்மாவே இறைவனது சொரூபம். இதுவே மனிதனின் கடவுள் தன்மை, இறைவனுடைய கோயிலாக மனிதனை மாற்றுவது அதி ஆத்மாவே.

கருமம் என்பது படைப்பாற்றலின் இயக்க சக்தி. (முன்னர்க் கூறப்பட்ட, மக்கள்தத்தம் வாழ்க்கைமுறையிலே அன்றாடம் செயலாற்றும் செயல்பாடன்று இது) இந்த இயக்க சக்தியாம் கருமத்தால் வாழ்க்கை (ஆத்மா) செயல் முடிவு, வடிவம் கொள்ளுகிறது.

இந்த அண்ட கோளங்களின் தோற்றமும் வளர்ச்சியும் உயிர் மலர்ச்சியும் ஆகிய இவை யாவும் கருமமே.

பரம்பொருளின் புற வெளிப்பாடுதான் கருமம். இறைவனிடமிருந்து அவன் சங்கற்பத்தால் வெளிப்படுகின்ற படைப்பாற்றல் சக்தியே கர்மம் இந்த கருமத்தால்தான் அண்ட கோளமும் மனிதனும் பிற உயிர்களும் இயங்குகின்றன.

இந்த சங்கல்பத்தால்—அதிசங்கல்பத்தால் உண்டாவதே தைலதாரை போன்ற—இடையறாத நீரோட்டம் போன்ற ஓர் ஒழுங்குமுறை. இதுவே அகண்ட தாரையாகிப் பின் கரும தாரையாகி, அகில கர்ம தாரையாக மாற்றமடைகிறது.

இவ்வகையில் இறைவனிடமிருந்துதான் எல்லா ஆத்மாக்களும் நிலைத்து வாழ்வதற்குரிய வாழ்க்கையே (உயிர்ப்பே, வெளிப்படுகின்றது.

**தைலதாரை :** (Viscosity) எண்ணெயை மேலிருந்து கீழே வார்த்தால் இடையறாது ஒழுங்காக விழும் வீழ்ச்சியே தைலதாரை,

எனவே கர்மம் என்பது (சங்கல்ப) நீரோட்டநியதியின் ஒழுங்கு முறை; காரண காரியத் தொடர்பின் விதி; அவதாரத்தின் இயக்கம். இந்த உலகத்திலே, உயிரினங்களின் தொடர்ந்த வாழ்க்கை ஒழுங்குகளையும் (நியதிகளையும்) அவைகளின் செயல்நிலை போக்குகளையும் ஒரே சீரான ஒழுங்கு முறையில் அமைவுறச் செய்வது இக்கருமமே.

கர்மம் என்பது சக்தியின் பரிணாமம். உயிர்களின் தோற்றத்திற்கும் அவைகளின் பரிணாம வளர்ச்சிக்கும் காரணமாவது கருமமே. வேதனை துன்பங்களிடையே உள்ள நம் துயரற நம்மை மேனிலைக்கு உயர்த்துவது கருமமே. இந்த மேனிலைக்கு உயர்தல் அந்தராத்மாவின் வளர்பிறை போன்ற வெளிப்பாட்டின் வளர்ச்சியே. இந்த வகையில் மனிதன் படிப்படியாக பரிபூரண நிலைக்குச் செலுத்தப்படுகிறான். இந்தப் பரிபூரண நிலையோ, சோதனைகளாலும் வேதனைகளாலும், தியாகத்தினாலுமே (இவை யாவும் கலந்த யக்ஞத்தாலுமே) அடையப்படுகிறது.

சரித்திரத்தின் ரகசியமே, தியாக சீலர்களின் யக்ஞ வாழ்க்கையின் அடிப்படையிலே அமைந்ததாகும். அவர்கள் அனைவரையும் தெய்வீக அணுக்கத்தில் தூண்டியது அதியக்ஞன் எனப்படும் தியாக உருவமான பரம்பொருளே ஆகும். வாழ்க்கையை நீ வாழ. வாழ்வை யக்ஞமயமாக்கு; தியாகமாக்கு. இதுதான் அதியக்ஞம்.

அதியக்ஞனோ தியாகத்தின் நாயகன். தன்னையே அர்ப்பணிக்கும் யக்ஞத்தை ஏற்றுக் கொள்ளும் நாயகன்.

அவன் உடம்போ, அகில அண்டத்தின் தியாகம். அவனில் இருந்துதான் எல்லா உயிர்களும் முகிழ்த்து எழுகின்றன. பரம்பொருள் எல்லா உடல்களிலும் உறைகிறான். ஒவ்வொரு உடலிலேயும் வசிக்கிறான். அங்கே அவன் திவ்ய புருஷனாக—பார்க்க இயலாத—கண்களுக்குப் புலப்படாத—அழிவற்ற பரிபூரணமாகவும் தெய்வீக ஆத்மாவாகவும், யக்ஞத்தின் உயிர்ப்பாகவும், யக்ஞத்தை ஏற்றுக் கொள்ளும் நாயகனாகவும் இருக்கிறான்.

**அதிபூதம் :** அழியும் பொருள்கள்—பஞ்சபூதம், உலகம் முதலியன. அதிபூதம என்பதுஅழியும்பொருள்களின் அதிபதி, அதாவது பரம்பொருள் (பூதம்—பஞ்சபூதங்கள்— மூலப் பொருள்கள்—தனிமங்கள்) இவை அழியும் பொருள்கள். இவைகளின் அதிபதியே இறைவன் (அதிபூதன்)

'ஈசாவாசியம் இதம் சர்வம்' என்கிறது ஈசாவாஸ்யோப நிடதம். இவ்வுலகம் அனைத்துமே இறைவனது மேல் போர்வையே. இயற்கையோ தெய்வீக புனிதத்தன்மை வாய்ந்தது. இந்த உலகமோ இறைவனின் உன்னதமான உண்மையான பெருங்கோயில்.

**அதிதெய்வம் :** இது இறைசக்தி—மேலானசக்தி—பராசக்தி ஆகும். பரம்பொருளின் சக்திவடிவே அதிதெய்வமாகிறது. தேவ தேவன் எனும் போது கூறப்படுகின்ற பல்வேறு வகைப் பட்ட தேவர்களின் மேலான, ஒளிமயமான, சக்தி வடிவ மானவன் அவன் என்பதை நாம் அறிகிறோம். அவன் பரம புருஷன்—இரண்யகர்பன். யாவுமே அவனது அங்கம். அவனே படைப்பாற்றலின் சக்தி—தெய்வீக ஆற்றல். எனவே அழிக்க முடியாத அழிவற்றபரம்பொருளேபிரம்மம்.

ஒருவன் உடலிலே உறைகின்ற சுபாவமான தான் என்பதே ஜீவாத்மா, இந்த ஜீவாத்மாவின் உள்ளே உறை கின்ற ஒன்றுதான் அதிஆத்மன். எல்லா உயிரினங்களையும் உலகையும் படைத்து நிலைத்து நிற்க வேண்டி வெளிப் படுத்தப்படும் சக்தியே கர்மம் (செயல்சக்தி).

*அழியும் எல்லாப் பொருள்களுமே அதிபூதம். தேவர்களின் அதிபதியாம் புருஷனே அதிதெய்வம்.*

**'எனவே அர்ஜுனா இந்த உடலிலே, சாட்சி பூதமாக உள்ளே உறைகின்ற நானே அதியக்ஞும், சர்வ யக்ஞங்களை யும் ஏற்றிக் கொள்ளும் யக்ஞ புருஷனாம் அதியக்ஞன். எவன் ஒருவன் தன் மரண காலத்திலும் என்னையே, நினைத்த வண்ணம் தன் உடலை நீத்துப் போகிறானோ அவன் என் சொரூபத்தையே அடைகிறான், இதற்குச் சந்தேகமே இல்லை.** VIII(5)

*ஏழாம் அதிகாரம் இறுதி சுலோகத்திலே சொல்லப்பட்ட பொருள்கள் இங்கு விளக்கப்படுகிறது. மரண காலத்திலே அந்தக் கணத்திலே, நம் மனம் எந்த நிலையில் அமைந் திருக்க வேண்டும் என்பதை இச்சுலோகம் வற்புறுத்துகிறது. எவன் ஒருவன் தன் வாழ்நாள் முழுமையும் இறைவன் நினைவிலே ஆழ்ந்திருக்கிறானோ அவனுக்கே இறுதிக்காலத் திலும் இறைவன் நினைவு அகலாதிருக்கும்.*

*மரண காலத்திலும் என்று சொன்ன உம்மையால் வாழ்நாள் முழுமையும் அவனை நினைத்திருத்தல் பெறப் படுகிறது. உடலைவிட்டு உயிர் நீங்கும்போது, அந்த உயிர் பரமாத்மாவையே நினைத்துக்கொண்டிருக்க வல்லதானால் அந்த ஆத்மாவுக்கு மீண்டும் பிறவாமை வாய்க்கும்.*

**'குந்தியின் மைந்தனே! ஒருவன் தன் அந்திம காலத்தில் எந்த எந்தப் பொருளின் எண்ணத்திலே மூழ்கியவனாய் தன் உடலைத் துறக்கிறானோ, எக்காலத்திலும் (சதா) தன் வாழ் நாள் முழுதும் அப்பொருளையே நினைத்து பாவிக்கும் (தத்பாவ பாவிதா) அவன், மறுபிறவியிலும் அப்பொருளையே சென்றடைகிறான்.'** VIII(6)

*தன் வாழ்நாள் முழுவதும் ஆழ்ந்து நீள நினைந்து, உணரப்பட்ட ஒன்றே தன் மரண காலத்தும் மனத்திலே தோன்றும். இது மனப்பழக்கம். வாழ்நாள் முழுவதும் பழக்கப் படுத்திக் கொள்ளாத ஒன்று, அந்த நேரத்தில் மட்டும் எப்படி வந்து தோன்ற முடியும்,*

இந்த முறையிலே, எதை ஒருவன் தன் மனதில், தன் மரண காலத்தில், நினைத்து உணர்கிறானோ அங்கே அவன் சென்றடைவது திண்ணம். இது ஆத்மாவின் 'விதி'. ஆத்மா இந்த வகையில் அமைக்கப்பட்டுள்ளது. மரணத்துக்குப் பின்னர் ஒருவனது ஆத்மாவின் கதியை நிர்ணயிப்பது மனிதனுடைய இறுதிக்கணத்திலே அவன் உள்ளம் நினைக்கின்ற அந்த நினைவே ஆகும். இச் சுலோகத்திலே 'சதா தத்பாவ பாவிதா' என்று சொல்லப்படும் தொடர் எக்காலத்தும்'தன் வாழ்நாள் முழுவதும் அந்த நினைவிலேயே மூழ்கிக் கிடத்தல் என்னும் பொருளது. அதாவது ஒருவன் இறக்கும் காலத்திலே தோன்றுகின்ற நினைவுதான் அவன் வாழ்நாள் முழுவதும் சதா நினைத்துக் கொண்டிருந்த நினைப்பாகும். ஆதலால் அந்த நினைவுதான் இறுதிக் காலத்திலும் அவனுக்குத் தோன்றும். அதுவே அடுத்த பிறவியிலும் அவன் பாவித்த அப்பொருளையே அவன் அடையும்படிச் செய்யும்.

நாம் எதை நினைக்கிறோமோ அதுவாக நாம் ஆகிறோம். நம்முடைய பழைய முற்பிறப்பின் எண்ணங்கள் நம்முடைய இப்பிறப்பினை உருவாக்கிவிட, நம்முடைய இப் பிறப்பின் எண்ணங்களோ நம்முடைய அடுத்த பிறவியை உண்டாக்குகின்றன. எனவே நம் வாழ்நாளிலே இறைவனையே இடையறாது சிந்திப்பதன் மூலம்மரண காலத்திலே நமக்கு அவன் நினைவே உண்டாகும். அதன் மூலம் நாம் நம் பிறவியையே மாற்றி அமைத்துக் கொள்ள முடியும்.

**'ஆகையினாலே, சதா சர்வ காலமும், என்னையே நினை. (உன் கடமையாகிய) இந்தப் போரையும் செய். இப்படி உன் மனதையும் புத்தியையும் என்னிடத்திலே அர்ப்பணம் செய்து விடுவதால், நிச்சயமாக நீ என்னையே அடைவாய்!** VIII (7)

சதா சர்வகாலமும் இறைவனையே நினைத்துக் கொண்டிருப்பவனால் தான், இறுதிக் காலத்திலே இறைவனை நினைக்க முடியும். எனவேதான் சதா சர்வ காலமும் என்

கிறார் கண்ணன். என்னையே நினைத்துப் போர் செய். குருக்ஷேத்திரப் போர் எக்காலமும் நடைபெறும் போர் அல்ல. அது 18 நாள் போர். கண்ணன், 'போர் செய், 'போர் செய்யும் போதும் என்னையே நினை' என்கிறார், கண்ணன் அர்ஜுனனுக்குக் கீதாபதேசம் செய்தது போர்க் களத்திலே தான். அர்ஜுனன் பின் வாங்கியபோது அவனுக்கு அவன் கடமையை உணர்த்திப் போர் செய் என்கிறார்.

ஆனால் உலக மக்கள் யாவரும் ஒருவகைப்பட்ட போரை இடைவிடாது செய்ய வேண்டி உள்ளது. அதுதான் அஞ்ஞான இருளை நம்மிடமிருந்து அகற்ற நாம் இடையறாது நடத்தும் கடும்போர். இது வாழ்க்கையிலே நடைபெறும் போர். நம் கடமையைச் செய்யும் போது குறுக்கிடும் இன்னல்களை விலக்க நாம் நடத்தும் போர். இந்தப் போரில் ஈடுபடும்போதும் இறைவனை நாம் மறக்கலாகாது. என்னை நினை: உன் கடமையைச் செய்; அக்கால் அஞ்ஞானத்தை விரட்டியடிக்கும் போரிலும் ஈடுபடு.

என்னை நினைத்துக் கொண்டே கடமையைச் செய், இந்த இரண்டும் ஒன்றாக ஒரே நேரத்திலே செய்ய இயலுமா? இயலும். இது யோக சாதனையல்ல; கண்கட்டு வித்தையல்ல. ஒருத்தி தண்ணீர்க் குடத்திலே தண்ணீரை முகந்து தலையிலே வைத்தபடி, நடந்து, தன் தோழியருடன் கேலியாகச் சிரித்துப்பேசி கைவீசி வந்த போதும் அவள் மனம் நீர்க் குடம் சாயாமல் அதிலுள்ள நீர் சிந்தாமல் இருக்கும் படியான மனத்திட்பத்தோடுதான் இருக்கும்.

'காதி விளையாடி இரு கைவீசி வந்தாலும்
தாதி மனம் நீர்க்குடத்தேதான்.

இந்த வகையிலே எக்காலத்தும் உன் மனதையும் புத்தியையும் என்னிடமே வைத்து என்னை நினைத்தபடி லௌகீக உலகப் போரில் ஈடுபடு. அதாவது உடலால் கடமையைச் செய். உள்ளத்தில் என்னை நினை. அப்படி நீ நடந்தால் நிச்சயமாக நீ என்னையே அடைவாய்.

**'பார்த்தா! எவன் ஒருவன் தன் மனதை வேறு விஷயங்களில் செலுத்தாமல் அடக்கும், அப்பியாச யோகம் (பயிற்சி என்னும் யோகத்தோடு) கூடிய உள்ளத்தினால் திவ்ய ஒளிமயமான பரம புருஷனை தியானிக்கிறானோ அவர் அவனையே அடைகிறான்.** (VIII8)

*நம்முடைய இறுதி நேரத்திலே மரணப்படுக்கையிலே நாம் நம்முடைய அடாத செயல்களுக்காக வருந்தி கழிவிரக்கத்தோடு கொள்ளும் சுய பச்சாதாபம் நம்மைக் காப்பாற்றாது. தன் சிந்தனையை ஓடவிடாத இடைவிடாத பழக்கம். இறைவனிடத்தே தன்னையே அர்ப்பணிக்கும் சலனமற்ற தியானம், இவைகளே தேவை. இவைகளே நம்மைக் காப்பாற்றும்.*

*இறைவனை இடைவிடாது தியானித்தலையே இங்கு அப்பியாச யோகம் எனச் சொல்லப்படுகிறது. உள்ளத்திற்கு இடைவிடாது தியானிக்க பயிற்சிப்அளிப்பதால் (அப்பியாசிப்பதால்) பயிற்சி யோகம் எனப்படுகிறது. தியானம், பக்தி, ஞானம் அனைத்துக்குமே பயிற்சி அவசியமாகிறது. சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம் அல்லவா? பயிற்சி இல்லையேல் எந்த ஒன்றும் பாழ்! பாழே!*

*இந்த வகையிலே இடைவிடாத தியானம் பயில்பவன் பரமபுருஷனாகிய இறைவனிடத்திலே உள்ளத்தினைச் செலுத்துவதால் அவன் மனம் கட்டுப்பாட்டில் அமைகிறது; அலைவதில்லை புத்தி உறுதியாக அமைகின்றது. அவனுக்கு வேறு எதுவும் தேவையில்லை.*

*இப்படி தேஜோ மயமான ஒளிப்பிழம்பான அவனை இடையறாது தியானிப்பதன் மூலம் இவனும் ஒளிப்பிழம்பாகிறான். அவன் முகத்திலே தேஜஸ் படர்கிறது (பொலிவு உண்டாகிறது) அவன் தன் உயிர் விடும் காலத்திலே கடவுளின் பிரதிபிம்பமாகவே மாறி விடுகிறான். அவ்வகையில் அவன் அவனையே அடைகிறான்.*

**'முற்றும் உணர்ந்தவனை; முன்னைப் பழம் பொருட்கும் பழம் பொருளானவனை; எல்லாவற்றையும் ஆள்கின்றவனை**

அணுவிலும் நுண்மையானவனை, அனைத்தையும் தாங்கு கின்றவனை, சிந்தனைக் கெட்டாத வடிவம் உடையவனை சூரியனைப் போன்று ஒளிர்கின்றவனை, இருளுக்கு அப்பாற் பட்டவனை, எவன் ஒருவன் தன் மரண காலத்திலே, பக்தி யோடும், உறுதியான உள்ளத்தோடும், யோகபலத்தோடும், தன் புருவத்திடையிலே தன் பிராணனை முற்றும் நிலை பெறச் செய்து நினைக்கிறானோ அவனே, அந்த திவ்யபரம புருஷனை அடைகிறான். VIII (9&10)

*இறைவனின் எண்வகைப்பட்ட குணங்கள் இங்கு நன்கு விளக்கப்படுகின்றன. 'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை' என்கிறது குறள்.*

*எண்குணங்களாவன:- தன்வயத்தனாதல், தூய உடம் பினனாதல், இயற்கை உணர்வினாதல், முற்றுமுணர்தல், இயல் பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில்லா ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பமுடைமை என இவைகளே ஆகும்.*

*மேலே சொல்லப்பட்ட அனைத்தும் இந்த எண் வகை யிலே அடங்குதல் காண்க.*

*இங்கே இறைவனது சகல கல்யாண குணங்களும், இயம்பப்படுகின்றன. தியானம் செய்வதற்கு நினைவில் நிறுத்தத்தக்க குண நலன்கள் இவை.*

*பரம்பொருள் குணங்களைக் கடந்தவன், நிர்குணன், குணாதீதன் என்பதே. அவன்பெயர்கள். அவனை குணங்கள் உடையவனாக பாவித்தலே நம் உபாசனைக்கு ஏற்றது. அவனை குணமுடையவனாக, சகுணமாக, ஏற்று பக்தி செய்கிறோம்; தியானிக்கிறோம்.*

*இங்கு சொல்லப்பட்டிருப்பது பந்தமற்ற பகுப்பதற்கரிய ஒப்பற்ற, தனி முதலாம் நிர்குண பரப்பிரம்மத்தைப் பற்றி யன்று. மக்களினம் தியானிக்கத்தக்க, வழிபடும்படியான சகுண பிரம்மத்தைப் பற்றியதே!*

இங்கு சொல்லப்பட்ட குணங்களைக் காணலாம்.

1. கவி—அவன் கவி, அதாவது ஞானமயமானவன். சர்வக்ஞன். அனைத்தையும் அறிந்தவன்.

2. புராதனன் : மிகப் பழம்பொருள்—அவனே ஆதி, அனைத்தின் தொடக்கம். முன்னைப் பழம்பொருட்கும்.—முன்னைப் பழம்பொருள் (திருவாசகம்)

3. சுவாமி : அனைத்தையும் ஆள்பவன் (அனுசாகிதாரம் சர்வசக்திமான். உலகியல் அவன் ஆணையின் படியே நடக்கிறது.

4. நுண்ணியன் : நுட்பமானவற்றுள்ளும் மிகவும் நுட்பமானவன். 'அணுத்தரும் தன்மையில் ஐயோன்' என்கிறார் மணிமொழியார்.

5. யாவற்றுக்கும் ஆதாரமானவன் : அண்டங்கள் அனைத்துக்கும் ஆதாரமானவன். பக்க பலமாகித் தாங்கி நிற்பவன். அவன் தோற்றுவித்த உலகுக்கு அவனே ஆதாரம்.

6. அசிந்திய ரூபம் : சிந்தனைக்கு எட்டாத வடிவத்தை உடையவன். 'சிந்தனைக்கும் அரியாய்' (திருவாசகம்) உணர்வாற்றலைக் கடந்து நிற்பவன். நம் அறிவுக்கு எட்டாதவன். மனம், புத்தி இவைகளால் எட்டக் கூடாதவன்.

7. ஆதித்தியவண்ணம் : கதிரவன் ஒளியை ஒப்ப ஒளிர்பவன். பல கோடி சூரிய பிரகாசம் அவனுடையது. எக்காலமும் பொன்னொளிர் கதிரவன் ஒளியினும் மின்னுபவன். 'சோதியனே' என்றும், 'தேசனே' என்றும் 'பரஞ்சோதி' என்றும் பலவாறாக விளக்குகிறார் மணிவாசகர்.

8. இருளுக்கு அப்பாற்பட்டவன் : இறைவன் எல்லா இருளையும் கடந்து நிற்பவன். ஜோதி வடிவு

இருள் கடந்ததல்லவா? அறியாமை, அவித்தைப் முதலிய இருளைக் கடந்து நிற்பவன்,

இப்படிப்பட்ட குணங்களுடைய (சகுண) பிரம்மத்தைப் பக்தியோடும், அசைவிலாத உறுதியான மனதோடும், யோக பலத்தோடும் மரண காலத்தில் நினைத்தல் வேண்டும்.

நெஞ்சம் நெக்குருகி நிற்கும் பக்தி தன்னை மறந்த நிலையை உண்டாக்கி, ஈசனிடத்திலே சரணாகதி அடைவிக்கிறது. எந்த நிலையிலும், வாழ்விலும், தாழ்விலும் வெற்றியிலும், தோல்வியிலும், அசையாத மலை போன்ற உறுதியான உள்ளமே ஆன்மீக பலம்; ஆன்மீக பலத்தோடு இடையறாத பயிற்சி உள்ள யோகபலமும் சேர்ந்தால் அவன் நிலை பெயராதவன் ஆகிறான். அவன் தன் சித்தத்தை அடக்கி ஆள வல்லவனாகிறான்.

உடல் பலம் உள்ளவனால், பல செயல்களை எளிதில் செய்ய முடிகிறது. மனோபலம் உள்ளவனால் பல செயல்களைப் பிறரைக் கொண்டு செய்விக்க முடிகிறது. இந்த இரண்டு பலங்களைக் காட்டிலும் பக்தி நிறைந்த ஆத்மீக பலமும் யோக பலமும் சேர்ந்த பலம் ஆத்மாவை பரிபூரண நிலைக்குக் கொண்டு சேர்க்கும் வல்லமை வாய்ந்தது.

இந்த யோகி தன் பிராணனைப் புருவமத்தியிலே நிறுத்தி, தான் இடையறாது செய்து வந்த அந்தப் பயிற்சிப் பழக்கத்தால் தான் சாகும் காலத்திலே, அப்பரம்பொருளை நினைக்கும் தன்மை பெறுகிறான். அப்படிப்பட்டவனே அப்பரம்பொருளின் சொரூபத்தை அடைந்து அப்பரம் பொருளையே அடைகிறான்.

**'வேதங்களை அறிந்தவர்கள் எதனை நாசம் அற்றது என நவில்கின்றனரோ, பற்று (காமக் குரோதாதிகள்) நீங்கிய முனிவர்கள் எதை அடைகின்றார்களோ, எதை உணர விரும்புவோர் பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப்பிடிக்கின்றார்களோ அந்த நிலையை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள்.'**

**VIII (11)**

கடோபநிஷத்; இதையே இப்படிக் கூறுகிறது:— 'வேதங்கள் எல்லாம் எந்தப் பொருளைப் போற்றுகின்றனவோ- தவங்கள் எல்லாம் எதை நாடுகின்றனவோ, எதை விரும்பி, பிரம்மசரியத்தை யோகிகள் அனுஷ்டிக்கிறார்களோ, அந்தப் பதத்தை உனக்குச் சுருக்கிக் கூறுவேன். அது 'ஓம்' என்பதே ஆகும்.

இந்த அக்ஷரமே (அபர) பிரம்மம். இந்த அக்ஷரமே பரப்பிரம்மம். இந்த அக்ஷரத்தை அறிந்தால், ஒருவன் எதை விரும்புகின்றானோ, அது அவனுடையதாகிறது.'

கடோப 15-2-16

க்ஷரம் : அழியக்கூடியது (பகுக்கக்கூடியது)

அக்ஷரம் : அழிவற்றது (பகுக்கமுடியாதயது) உலகம்:க்ஷரம்
இறைவன் :அக்ஷரம்

வேதத்தை ஆய்ந்த தத்துவ ஞானிகள், உலகையும், இளமையும் நிலையாதன எனக் கண்டு நிலையான பொருளை ஆய்ந்து, உணர்ந்து, அறிந்து அதையே அக்ஷரம் (பரப்பிரம்மம்) என்றனர். அதுவே குணங்கள் அனைத்தையும் கடந்த நிர்க்குணப் பிரம்மம். அகப்பற்று புறப்பற்றற்ற காமக் குரோதாதிகளை வென்ற முனிவர்கள் இதையே தம் இலக்காக எய்துகின்றனர். இதை உணர வேண்டியே தவசிகள் பிரம்மசரிய விரதத்தைக் கடைப்பிடிக்கின்றனர்.

**'அறிகருவிகளாம் பொறிகள் (நவத்துவாரக் கதவுகள்) யாவற்றையும் அடைத்துவிட்டவனாய், தன் உள்ளத்தை முற்றும் இதயத்திலே நிறுத்தியவனாய், தன் பிராணனை உச்சந்தலையிலே நிலைநிறுத்தியவனாய், யோக தாரணையிலே நிலை பெற்று, 'ஓம்' என்னும் ஏகாட்சரமாகிய பிரம்ம மந்திரத்தை உச்சரித்தபடி, அதற்குப் பொருளான என்னையே தியானித்தவனாய் எவனொருவன் தன் உடலை நீத்துப் போகிறானோ அவனே பரகதியை அடைகிறான்! VIII (12&13)**

வேதத்தை ஆய்ந்து அறிந்தவர்கள், அக்ஷரத்தைப் பற்றி பூரணமான, நித்தியமான, பரப்பிரம்மத்தைப் பற்றி பேசுகின்றனர். இதிலேதான் ரிஷிகளும் முனிவர்களும் அடைக்கலம் புகுகின்றனர். இந்த வழியூடு ஏகியே அவர்கள் நிர்குண பிரம்மத்தை அடைகின்றனர்.

ஐந்து ஞான இந்திரியங்கள், ஐந்து கர்ம இந்திரியங்கள் ஆகிய அனைத்து வாயில்களையும் அவர்கள் அடைத்து விடுகிறார்கள். அதன் மூலமாக உணர்ச்சிகள்-வாயில்கள் அடைபட்டுப் போகின்றன. அவர்கள் தங்கள் உணர்வலைகளை உள்ளுக்குள்ளே இழுத்து கூம்பச்செய்கின்றனர். இதன் மூலம் பிரத்தியாகாரம் செய்யப்படுகிறது.

உள்ளத்தை—கள்ள மனதை—அவர்கள் தாழ்க்கோல் போட்டுப் பூட்டிவைத்து விடுகிறார்கள். இதயத்தில் இருந்து (இதய கமலத்திலிருந்து) ஆசை அறவே விலக்கப்பட்டு விடுகிறது. மனம் இதயத்திலே ஒடுங்கி விடுகிறது.

பிராணனை—உயிரின் உட்கருவை—அவர்கள் தம் தலையிலே, தலைஉச்சியிலே நிறுத்துகிறார்கள். இது தாரணை.

இந்த நிலையிலே இடையறாது, நிலை மாறாமல். ஆடாது அசையாது தியானத்திலே ஈடுபடுகிறார்கள்.

அவர்கள் அப்போது மனதால் உச்சரிப்பது ஒரே மந்திரம் பிரணவம்—'ஓம்' என்பதுதான் அது. ஏகாட்சரம்.

அவர்கள் அக்காலத்திலே என்னையே நினைக்கிறார்கள் தியானிக்கிறார்கள்.

அவர்களும் தங்கள் உடலை நீத்த பின்னர் உயர்ந்த—உன்னத பரிபூரணத்தையே அடைகிறார்கள்.

**'பார்த்தா! வேறு நினைவுகள் ஏதுமின்றி, எவன் என்னை எக்காலத்தும் ஆரம்பித்த நாளில் இருந்து நீண்டநெடு நாட்களாக இடையறாமல் சிந்திக்கிறானோ, தன்னிலை மாறாத அந்த யோகியால், நான் மிக எளிதில் அடையப் பெறுகிறேன்.'**
VIII (14)

பலப்பல எண்ணக் குவியல்களிடையே இறைவனது நினைவும் வரலாம். அது பக்தியல்ல. அது சித்தத்தைச் சிவன் பாலே வைப்பதாகாது. நம் முழு மனதையும்—ஒரு பகுதியை மட்டுமல்ல—அவனிடம் செலுத்த வேண்டும். அப்படிச் செலுத்துவதும் ஒரு நாளைக்கு இரு நாட்களுக்கல்ல தொடங்கிய காலம் தொட்டு மிக மிக நீண்ட காலமாக, தொடர்ந்து எண்ணற்ற நாட்களாக—வேறு வகைப்பட்ட சிந்தனைகள் இடையே புகுந்து விடாமல், இடையறாமல் சிந்திக்க வேண்டும். இப்படிப்பட்ட யோகியே நிலைமாறாதவன். அவனுக்கு இறைவன் எளிமையானவன். இறைவன் அவன் கைக்கெட்டும் தூரத்திலே வந்து அவனிடம் சிக்கி விடுகிறான். அவனால் இறைவன் அடையப் பெறுகிறான்.

**'மேலான பக்குவப்பட்ட மகாத்மாக்கள் இவ்வகையிலே என்னை வந்தடைந்து துன்பங்களுக்கெல்லாம் இருப்பிடமும் நிலையற்றதுமான மறு பிறவியை அடைவதில்லை.** VIII (15)

மேற்சொன்ன மகாத்மாக்களுக்குத் தேவை இறைவனே! இறைவன் மட்டுமே; எனவே அவர்கட்குத் தேவையான இறைவனை அடைகின்றனர். பிறரோ, இறைவனையே, அடைய நினையாமல் இறைவனிடம் ஏதேதோ வேண்டிக் கொள்கின்றனர். அவர்கள் நிலையற்ற துன்பங்களுக்குக் காரணமான பொன் பொருள்—மாதர்களைக் கோருவதால் அவைகளுக்குக் காரணமான துன்பங்களின் இருப்பிடமான நிலையற்ற பிறவி வசப்படுகிறார்கள்.

இறைவனையே அடையத் தாம், தம்மைப் பக்குவப் படுத்திக் கொண்ட மகாத்மாக்களே, இறைவனை எய்து கின்றார்கள். மற்றவர் பிறவிப்பிணி வயப்பட்டுத் துன்பப் படுகின்றனர்.

**குந்தியின் மைந்தனே! பிரம்மாண்டத்திற்கு உட்பட்ட சகல லோகங்களும்; ஆத்மாக்களுக்கு மீண்டும் பிறவிகளை நல்குவனவே. ஆனால் என்னை அடைந்தாலோ மறுபிறப் பென்பதே கிடையாது!** VIII (16)

பிரம்ம லோகம் வரையிலுள்ள எல்லா உலகங்களும்— தோற்றமும் மறைவும் உடையனவே. அதாவது மாறுத லுக்குட் பட்டனவே. ஆதலால் அதனுள் சென்றடைந்த உயிர்களும் பிறவிக்குட்படுபவைகளே.

அதாவது பிரம்மாண்டத்திற்குட்பட்ட போக ஐஸ்வரிய ஸ்தானமான, சகல லோகங்களும், மறைவும் தோற்றமும் உடையனவே. ஆகையால் ஐஸ்வரிய கதியை அடைந்த வருக்குப் பேறான, அந்த ஸ்தானங்கள், அழியும்போது, அவர்களுக்கும் நாசமுண்டாகாமல் போகாது. ஆனால் என்னை அடைந்தவர்களுக்கோ, நாசம் என்கிற வார்த் தையே இல்லை. மறு ஜென்மமும் கிடையாது.

**ஆயிரம் சதுர்யுகங்கள் பிரம்மாக்கு ஒரு பகலாகும். அடுத்துவரும ஆயிரம் சதுர் யுகங்கள் அவருக்கு ஓர் இரவாகும். இதை அறிகின்றவர்கள் யாரோ, அவரே இராப் பகலின் தத்துவத்தை அறிபவர்களாவர்.'** VIII (17)

**'பிரம்மாவின் பகற்காலம் வரும்போது தோன்று நிலையில் இருந்து எல்லா தோற்றங்களும் வெளிப்படுகின்றன. (தோன்று கின்றன). இரவுக் காலம் வரும் காலத்திலே தோன்றியவை யாவும் ஒடுக்கம் என்று சொல்லப்படும் அதனுள் மறைகின்றன'** VIII (18)

**'பார்த்தனே! கர்ம வயப்பட்ட இந்த உயிர்த்தொகை (ஆன்ம கூட்டங்கள்) பகற்காலத்திலே பிறந்தது. பிறந்து, இரவு வரும்பொழுது, தன் வசமின்றி ஒடுங்கிப் பின் பகல் வந்தால் வெளிப்படுகிறது!** VIII (19)

பகலையும், இரவையும் அறிந்தவர்கள் யார்? இந்தக் கேள்விக்குப் பதில் இதுதான்.

ஆயிரம் சதுர்யுகம் பிரம்மாவின் ஒரு பகல். பிரம்மன் சிருட்டித் தொழில் செய்பவன். பகற்காலத்திலே அவன் செயலாற்றுகிறான். இரவில்ஓய்வெடுத்துக் கொள்ளுகிறான்,

அவன் பகற்காலம் ஆயிரம் சதுர்யுகங்கள் சதுர்யுகமாவன; கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகம் என்பனவாம்.

| | | |
|---|---|---|
| கிரேதாயுகம் | — 17,28,000 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | —92,96,000 | |
| துவாபரயுகம் | — 3,64,000 | |
| கலியுகம் | — 4,32,000 | |
| மொத்தம் | — 1,18,20,000 | ஆண்டுகள் |

ஒரு சதுர்யுகத்தின் மொத்த ஆண்டுகள் 1.18,20,000. இப்படி 1000 சதுர் யுகங்கள் கொண்டது ப்ரம்மாவின் ஒரு பகற்காலம். (118,20,00,000) அதாவது ஆயிரம் நூற்று பதினெட்டு கோடியே இருபது லட்சம் ஆண்டுகள். இந்தக் கால வரையறையே பிரம்ம தேவனின் ஒரு பகற்பொழுது, இதை அற்ப ஆயுள் கொண்ட மக்கள் உயிரால் எண்ணிப் பார்க்கக்கூட முடியாது. கற்பனை செய்யவும் இயலாது.

பிரம தேவனது இரவு நேரமும் அதாவதுஆயிரம் 11,8,20,00 000 ஆண்டுகளே, இதை நன்கு உணர்ந்தவர்களே இரவு பகல் தத்துவத்தை நன்கு உணர்ந்த வர்களாவார்.

பன்னிரண்டு மணி நேரம் பகலையும் பன்னிரண்டு மணி நேர இரவையும் நாம் அறிவோம். இப்படி அமைந்த ஏழு நாட்களின் கட்டமே ஒரு வாரம். 30 நாள்களின் தொகுதி ஒரு திங்கள். பன்னிரண்டு திங்கள் கொண்டது ஓர் ஆண்டு என்னும் நம்காலக் கணக்கை நாம் அறிவோம்.

இந்த ப்ரம்மாவின் ஒரு பகலான ஆயிரம் 1,18,20,00,000 ஆண்டுகளை நூறு ஆண்டுகள் கூட வாழ முடியாத மனிதன் எவ்விதம் கற்பனை செய்து பார்க்க முடியும். எனவே தான் காலம் எல்லையில் அடங்காதது எனப்படுகிறது. காலாந்

தரத்தில் சுழன்றோடுகிறது. அதைப் போலவே வெளியும் (space) எல்லையில் அடங்காதது. காலத்துக்கும், அகண்ட பரவெளிக்கும் எல்லையே இல்லை.

பிரம்மனது பகலாகிய அந்த கால கட்டத்திலே அதாவது ஆயிரம் 1,18,20,00,000 ஆண்டுகளிலே பிரமன் தன் சுழுத்தி நிலையில் இருந்து விழித்தெழ அக்கணமே அவ்வியக்கத்திலிருந்து (from abstract) காணத்தக்கன தோன்றுகின்றன. உலகம் பிரகிருதியால் தோன்றுகிறது. பலவகைப்பட்ட உலக உயிரினங்களும், உயிரற்றவையும் உலகிலே தோன்ற, வாழ்க்கைச் சகடம் சுழல்கின்றது. பரிணாம வளர்ச்சி முறை உயிர்த் துடிப்புடன் இயங்கு கின்றது. இந்த முறையில் திரும்பத் திரும்ப இவ்வுலகம் உலக உயிர்கள், இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள் கள், யாவுமே தோற்றுவிக்கப்பட்டு, பிரத்தியட்சமாக்கி, பின்னர் திரும்பத் திரும்ப பிரம்மனின் இரவுக் காலத்திலே அவை அவனிலே கரைந்து மறைந்து ஒடுங்கி விடுகின்றன. இதுவே பிரளய காலம், மகாப் பிரளயம் என்பர்.

பருப் பொருள்கள் அனைத்துமே வியக்திகள் எனப்படும். உயிர்கள் யாவுமே பிரமனின் இரவு கழிந்த பின்—பொழுது புலர்ந்ததும்—தத்தம் கருமங்களுக்கும் குணங்களுக்கும் ஏற்ற —பொருந்திய, வடிவத்தில் உடல்களில் புகுந்து பரிணாம வளர்ச்சியாம் நீரோட்டத்திலே கலந்து தோன்றுகின்றன. இந்த முறையில் அவை தோன்றித் தோன்றி மறைந்து பிரமனின் இரவு வந்ததும் ஆயிரம் 1,18,20,00,000 ஆண்டு கட்குப் பின் பிரளய காலத்தில் அவனிடத்திலே ஒடுங்கி விடுகின்றன.

தன் சுதந்திரமற்ற (தற்சுதந்திரமில்லாத) ஆனால் கர்மத்தின் வசப்பட்ட, உயிர்கள் யாவும் (ஆன்மத்திரள்கள் யாவும்) இவ்வண்ணமாகப் பிறந்து பிறந்தபின் இறந்து இறந்து மாப்பேரூழியில் ஒடுங்கி நிற்கின்றன,

'தோற்றமும் இறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பேர் ஊழியும் நீக்கமும் நிலையும்'

என்கிறது திருவாசகம்—திருவண்டப் பகுதி.

**'ஆனால் இந்த அவ்வியக்தத்தைக் காட்டிலும் மேலான எக்காலும் அழிவற்ற நிலைத்துள்ள மற்றொரு அவ்வியக்தம் உளது. உலகத்துள்ள அனைத்து உயிர்களும் பிறவும், அழியுங் காலத்தும் அந்தப் பொருள் அழிகிறதில்லை!** VIII (20)

மேலே சொல்லப்பட்ட தோற்றங்கள் அனைத்தும் பிரம்மனின் இரவு நேரத்திய ஒடுக்க நிலையிலே தோன்றா நிலையில் ஒடுக்கம் அடைகின்றன. அப்படி அனைத்தும் தோன்றா நிலையிலே ஒடுங்கி நிற்கும் காலத்திலும், எக்காலத்தும் அழிவின்றி நிலைத்து நிற்கும் சத்தாகிய அவ்வியக்கமான பொருள் ஒன்று உண்டு. அதுவே பரப் பிரம்மம்.

அது, அண்டங்கள் அனைத்தையும் கடந்ததாகி எக்காலத்தும் நித்தியமாகி நிற்பது. எல்லாவிதமான தோற்றங்கள் மாறுதல்கள் இவைகளுக்கு இடையே, தோற்ற ஒடுக்கமின்றி சுயம்புவாய் மாறுதலற்று விளங்குவது.

இரண்டு வகைப்பட்ட, அவ்வியக்தங்கள் உள. ஓர் அவ்வியக்தத்திலே, (தோன்றா நிலையிலே) வினை- கர்ம வயப்பட்ட, தடுத்தாட்கொள்ளப் பெறாத ஆன்மாக்கள் சென்றடையும். ஆனால் மற்றொன்றிலோ, கர்மபந்த வினையின் நீங்கப்பெற்ற, இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற, ஆன்மாக்கள் சென்றடைந்து பரிபூரணானந்த நிலை எய்துகிறது.

முதல் அவ்வியக்தம் பிரகிரதியினுடையது; பிரம்மனது சூக்ஷ்ம சரீரத்தது; சடப்பொருள் தொடர்பானது; அழியத்தக்கது.

மற்றொன்றோ ஞானமயமானது; அழிவற்றது. அது சர்வத்தையும் காணும், சர்வத்தையும் அறியும், சர்வக்ஞன். அண்ட கோளங்கள் அனைத்தும் பிரம்மனுள் அடங்கும். பிரளய காலத்திலும் இந்த உலக நாயகனாகிய பரம்பொருள் தன் திவ்ய ஜோதியிலே நிலைத்து நின்று அருள் பாலிக்கிறான். இந்த அவ்வியக்தம போக்குவரவு அற்றது, தன்மயமானது. இதில் சென்றடைந்த உயிர்கள் திரும்பி வருவது இல்லை.

**'இந்த அவ்வியக்தமே தோற்றமற்றது. அக்ஷரம் என்று சொல்லப்படும் இதையே பரமகதி எனச் சொல்வார்கள். இதை அடைந்த பிறகு உயிர்கள் திரும்பி வருவதில்லை. இதுவே என்னுடைய பரமபதமாகும்.'** VIII (21)

அவ்வியக்தம் என்பது கட்புலனுக்கும், பிற இந்திரியங்களுக்கும், மனதுக்கும் புலனாகாதது.

அக்ஷரம் என்பது அழிவிலாதது; பிளக்க முடியாதது; கூறு செய்ய இயலாதது.

முதலில் சொல்லப்பட்ட அவ்வியத்தம் (க்ஷரம்) அழிவுள்ளது. இது (அக்ஷரம்) அழிவற்றது. அது பிரகிருதி. இது பிரம்மம் அதில் ஒடுங்கி கட்புலனாகாதவை திரும்பவும் தோன்றும். இதில் ஒடுங்குபவை திரும்பி வருவதில்லை. அது பிரகிருதியில் ஒடுங்கும். இது பிரம்மத்தில் ஒடுங்கும். இதில் சென்று ஒடுங்கும் உயிர்கள் மீண்டும் வாரா வழியாம் பரமபதத்திலே ஒடுங்குபவை.

**'அர்ஜுனா! எந்தப் பரப்பிரம்மத்திடம் சகல பூதங்களும் எல்லா உயிர்களும் லயமடைகின்றனவோ, எந்தஇறைவனாலே இவையாவும் வியாபகமாகி உள்ளனவோ அந்தப் பரம் புருஷன் அனன்ய பக்தியால் (வேறுவகைப்பட்ட பற்றும் நீங்கிய பக்தி) அடையப்படுகிறான்.'** VIII (22)

எல்லாப் பொருள்களும், பூதங்களும், உயிர்களும் என்னிடம் லயமடைகின்றன (ஒடுங்குகின்றன). நானே,

எல்லா உயிர்களோடும் ஊடுருவிப் பாய்ந்து விண்ணிலே உள்ள அண்டகோளங்களிலே வியாபித்துள்ளோம். என்னை (பரப் பிரம்மத்தை) அன்பும் திடநம்பிக்கையும் பொருந்திய, வேறு எவ்வகைப் பற்றுமற்ற, பக்தியால்மட்டுமே அடையமுடியும். அவர்கள் என்னை அடைந்து சாந்தி எய்துகின்றனர். எனவே பக்தி ஒன்றால் மட்டுமே பரமனை அடைய முடியும். ''பக்தி வலையில் படுவோன் காண்க'' என்கிறார் மணிமொழியார்.

**'பரத குலப் பெருமகனே! எந்தெந்த காலங்களில் உடலை விட்டு உயிர் நீத்த யோகிகள் முக்தியடைவார்கள்; எவ்வெக் காலங்களில் உயிர் நீத்த யோகிகள் மறுபிறவி எய்துகிறார்கள் என்னும் அவ்வக்காலங்களை நான் உனக்குக் கூறுகிறேன்.'**

VIII (23)

**'தீ ஒளி, பகல், வளர்பிறைக் காலம், உத்திராயனம் (ஆறு திங்கள்கள்) எனும் இவைகளிலே உடலை விட்டு உயிர்நீத்த யோகியர்கள் பிரம்ம ஞானிகள் பிரம்மத்தை அடைகின்றனர்.'**

VIII (24)

**'புகை, இரவு, தேய்பிறைக்காலம், தக்ஷணாயனம் (ஆறு திங்கள்கள்) எனும் இக்கால கட்டங்களிலே உடலைவிட்டு உயிர் நீத்த யோகியர்கள் சந்திரன் ஒளியை அடைந்து மறு பிறவி எய்துவார்கள்'**

VIII (25)

**'நிச்சயமாக உலகத்தினுடைய ஒளியும் இருளும் ஆகிய இருவழிகளும் இயற்கையிலே என்றென்றும் சாசுவத மானவை எனக் கருதப்படுகின்றன. ஒன்றால் ஒரு யோகி பிறவாமை எய்துகிறான்; மற்றொன்றால் மறுபடியும் பிறவி எய்துகிறான்!**

VIII (26)

வாழ்க்கை என்பது இருளுக்கும் ஒளிக்கும் இடையே ஓயாமல் நடைபெறுகின்ற ஒரு போராட்டம். ஒளி ஆத்மாவைவிடுதலை—வீடுபேறு—அடைவிக்க, இருள் மறு பிறப்புக்கு வழிவகுக்கின்றது.

அறியாமை எனும் இருளிலே வழி தடுமாறி நெறியல்லா நெறி தன்னை நெறியாக நினைத்துப் பண்டைய குருட்டு நம்பிக்கைகள் சடங்குகள், ஆசாரங்கள் இவைகளையே பற்றுக் கோடாகக் கொண்டு செல்லும் யோகியர்கள் கூட, மறுபிறவி அடைவார்கள். ஆனால் ஒளி நிறைந்த பகற் பொழுதிலே ஞான மார்க்கத்திலே தன்னை அறிந்து நடக்கும் பக்திமான்கள், யோகியர், ஞானியர் வீடு பேற்றையே அடைவார்கள்.

இதுவே மேற்கூறிய நான்கு சுலோகங்களின் திரண்ட பொருளாகும். சுலோகங்களின் உட்பொருளை நன்கு கூர்ந்து உணராமல் மேற்போக்காக அவைகளைக் கொண்டால் தேய்பிறைக்காலமாகிய 15 நாட்கள், தட்சணாயனகால மாகிய ஆறு திங்கள்கள். இவைகளில் மரணம் எய்தும் யாவரும் மறுபிறவி எய்துவார்கள் என்றும் வளர்பிறை காலமாகிய 15 நாட்கள் உத்திராயண காலமாகிய ஆறு திங்கங்கள் இவைகளில் மரணமடைபவர்கள் வீடுபேறு எய்துவார்கள் என்றும் பொருள் பட்டு நம்மைக் குழப்பும்.

அதுவுமின்றி தட்சணாயன வளர்பிறைகளிலும் உத்திராயண தேய்பிறைகளிலும் இறப்பவர்களை எந்த பகுதியில் சேர்த்து நாம் கொள்ளக்கூடும்.

எனவேதான் இருபத்தி ஆறாம் சுலோகத்திலே இரு வழிகள் உள என்றும், ஒன்று ஒளிவழி என்றும், மற்றொன்று இருள்வழி என்றும் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஒளி வழியிலே போகும் யோகி பிறவாமை எய்துகிறான். இருள் வழியிலே ஏகும் யோகி மறுபிறப்பை அடைகிறான்.

பேரொளியைச் சுட்டும் காலம் இடம், இருளைச் சுட்டும் காலம் இடம் என இருவகையாக ஆத்மா போகும் வழிகள் வகுக்கப்படுகின்றன. படிப்படியாக ஒளிவழியிலே செல்லும் ஆத்மா ஆத்மப் பிரகாசம் அடைகின்றது. மாறாக முன்னேற்றத்தில் நாட்டமில்லா ஜீவனும் கீழ்நோக்கிச் செல்லும் ஜீவனும் அறியாமை இருளிலே ஆழ்ந்து விடு கின்றன. இவை இரண்டுமே அழிவற்றவைகளே, ஒன்று

பிறவாமைக்கு ஏதுவானது; மற்றொன்று பிறவிக்கு வித்தாவது.

**எனவே பார்த்தா! மேற்கூறிய இருவகையான நெறிகளையும் உள்ளபடி உணர்ந்த யோகி மோகத்தை அடைய மாட்டான். ஆகையினாலே அர்ச்சுனா! நீ எப்பொழுதும் யோகத்திலேயே நிலைத்தவனாக இரு. VIII (27)**

"எத்தொழிலைச் செய்தாலும், யாதவத்தைப்பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே"

என்கிறார் பட்டினத்தடிகள்.

இந்த வகையிலே மாந்தர்கள் தம் உடலால் எவ்வகைப்பட்ட தொழிலைச் செய்து தம் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பினும், எப்படிப்பட்ட துன்பத்திலே துயரத்திலே, அவஸ்தையிலே ஆழ்ந்திருந்தாலும் உள்ளம் மட்டும் தியானத்தின் மூலம் மோன நிலையாம் பரப்பிரம்மத்திலே நிலைத்திருத்தல் வேண்டும்.

இங்ஙனம் தன் உள்ளத்தைச் சதா சர்வகாலம் யோகத்திலே நிலைநிறுத்தி வைப்பவனே யோக யுக்தன் (யோகத்திலே நிலைத்தவன்) எனப்படுகிறான். அவனால் மட்டுமே மேலே சொல்லப்பட்ட ஒளி நெறி அல்லது சுக்ல கதியிலே செல்ல இயலும்.

**வேதங்களை ஓதுவதிலும் யாகங்களைச் செய்வதிலும் தவம் இயற்றுவதிலும் தானங்கள் கொடுப்பதிலும் ஆன இவை யாவற்றிலும் எவ்வகைப்பட்ட புண்ணிய பலன்கள் சொல்லப் பட்டுள்ளனவோ அவைகளை எல்லாம் அறிந்தும் அந்த யோகியானவன் அவற்றை எல்லாம் கடந்து ஆதியாகிய பரப்பிரம் மத்தை எய்துகிறான். VIII (28)**

ஆத்ம ஞானம் கைவரப்பெற்ற ஒரு யோகிக்கு மேலே சொன்ன வேதம் ஓதுதல், யாகம் செய்தல், தவமியற்றல்,

தானம் செய்தல் முதலிய யாவுமே—இவற்றால் அடையும் பயன்கள் யாவுமே—அற்பமானவை. எனவேதான் அந்த யோகி இவைகளை எல்லாம் கடந்து பரப்பிரம்மத்தை எய்த இடையறாத் தியானத்தில் ஈடுபடுகிறான்; அதன் பலனாய்ப் பரப்பிரம்மத்தை அடைகிறான். இங்ஙனமாக இந்த அத்தியாத்தின் தொடக்கத்திலே அர்ஜுனன் தொடுத்த கேள்விகள் அனைத்துக்கும் விடைகளாகக் கூறி முடிக்கிறார் கண்ணன். அக்ஷரபிரம்மத்தின் இலக்கணங்களும் இதில் அடங்கும்.

எட்டாம் அத்தியாயம் முற்றும்



## ஒன்பதாம் அத்தியாயம்

# ராஜவித்யா ராஜகுய்ய (ரகஸ்ய)யோகம்

**(இறைவன் அவன்படைப்பு அனைத்திலும் மேம்பட்டவன்)**

*இந்த அத்தியாத்திலே சொல்லப்படும் பக்தியானது வித்தைகளுக்கெல்லாம் அரசன். ஆகையினால் இதற்கு இராஜவித்தை என்றும் ரகசியங்களுக்கெல்லாம் மேலான ரகசியம் (குய்யம்) என்றும் கூறப்படுகிறது. இதில் சொல்லப் படும் இந்தப் பக்திதான் நம்மை அடையக் கூடாத ஆனால் வந்தடைந்த சகல பாவங்களையும் போக்கவல்ல பரிசுத்த மானது; அறியவேண்டிய பொருளான நம்மைப் பிரத்தியட்ச மாகக் காட்டக்கூடியது; தர்மத்தினின்றும் சற்றும் நீங்காதது. இந்தப் பக்தியானது தானே மிகவும் இனியது அதோடு எம்பெருமானைப் பிரத்தியட்சமாய்க் காட்டக் கூடியது. இது இனியது மட்டுமன்று; மோட்ச சுகத்தையும் தரவல்லது.*

*இந்தப் பக்தி இனிது மட்டுமன்று; செய்தற்கும் எளிது. பிற சாதனங்களோ பலனை அளித்த பின்பு அழிந்து போகும். இதுவோ மோட்சம் அடைவித்த பிறகும் அழியாமலிருப்பது.*

*இதையே கண்ணன் இந்த அத்தியாயத்திலே அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார்.*

**அர்ஜுனா! பொறாமை கொள்ளாமல் இருக்கும் தன்மை வாய்ந்த உனக்கு மிகவும் மறைபொருளான (இரகசியமான) ஆழமான அனுபூதி-பக்தி என்னும் உபாசனா ஞானத்தை விளக்கமாகச் சொல்லுகிறேன். அதை நன்கறிந்து கடைபிடித் தாயானால் நீ பாவங்களிலிருந்து அசுபவங்களிலிருந்து விடு படுவாய்.** IX (1)

பொறாமை என்னும் குணம் மிகக் கொடியது. அழுக்காறு எனும் ஒரு பாவி திருச்செற்றுத் தீயுழி உய்த்து விடும்" என்கிறது வள்ளுவம். அது சற்றும் இல்லாதவன் பார்த்தன். பொறாமை இல்லாதவனே பக்திக்கு ஏற்றவனாதலினாலே, அர்ஜுனா மிக்க ரகசியமான இந்த யோகத்தை உனக்குச் சொல்லுகிறேன்.

இதை நன்கு சிந்தித்து உணர்ந்து கடைப்பிடிப்பாயானால் நீ சகல பாவங்களில் இருந்தும் விடுபடுவாய் என்கிறார் கண்ணன்.

சுலோகத்திலே அசுபம் என்று சொல்லப்பட்டுள்ள அமங்கலமானது என்னும் பொருளை உடையது.அமங்கலமாவது அஞ்ஞானத்தின் காரியப்பாடு. அஞ்ஞான நீக்கத்துக்குத் தேவை பக்தி. சுவானுபவத்தோடு கூடியது ஞானம். எனவே சுவானுபவத்தோடு கூடிய ஞானமாம் பக்தியாலே நாம் அஞ்ஞானத்தையும் அதன் காரியமாகிய அசுபத்தையும் அமங்கலமாம் பாவத்தையும் நீக்கிக் கொள்ள முடிகிறது.

இங்குச் சொல்லப்பட்ட ஞானம் வெறும் படித்தறிந்த ஞானமல்ல; ஆனால் உண்மையை உள்ளபடி உணர்ந்தறிந்த அனுபூதி ஞானம். அதன் அடிப்படையில் எழுவதே உண்மையான பக்தி.

**இந்த வித்தை அரச வித்தை; மேலான மறைபொருள் (ராஜரகசியம் அனைத்திலும் மேலானது; தூய்மைப்படுத்துவதில் மிகச் சிறந்தது; கண்கூடாக உணரக் கூடியது; (பிரத்தியட்ச அவகமம்); தர்மத்தோடு கூடியது; செய்வதற்கு மிக எளிமையானது; அழிவற்றது.** IX (2)

இந்தச் சுலோகத்திலே சொல்லப்பட்ட பிரத்தியட்ச அவகமம் என்பதுதான் கண்கூடாகக் பிரத்தியட்சமாக உணர்ந்த ஒன்றையே குறிப்பிடுவதாகும். இது வெறும் தருக்கத்தினால் நிறுவப்பட்டதன்று. தன் சொந்த அனுபவத்தால் சோதித்துணர்ந்தது; ஞானம் வருணனைக்கப்பாற்பட்டது, ஆனால் இது(விஞ்ஞானம்)அனுபூதி ஞானம்; நாம்

நன்கு உணரும்படி பிரகாசமாக ஒளிர்கின்ற உண்மை. ஞானம். நம் கண்களை மறைத்துக் கொண்டிருக்கும் அறியாமை (அஞ்ஞான)த் திரை விலகினால் நாம் நம்முடைய ஆத்மாவையும் பரம்பொருளையும் இந்தப் பக்தி யாம் ஞானத்தால் நன்கு காணலாம்.

ஞானம் என்பது சிந்தனையால் எய்தப்படும் அறிவு. விஞ்ஞானமோ அனுஷ்டானத்துக்கு உரிய அறிவு. சிந்தனையால் வந்த அறிவு அனுஷ்டானத்திற்கு உரியதாக மாறுவது இன்றியமையாதது. (அத். VII 2ல் இது விளக்கப் பட்டது.)

சுலோகத்திலே சொல்லப்பட்ட அவகமம் என்பது எளிதாக உணர்ந்துக் கொள்ளக் கூடியது என்பதாகும். அது ஞானத்தின் உட்பொருள் (உட்கிடக்கை). அந்த ஞானத்தின் பொருளாவது மெய்யுணர்வு—உண்மையை உள்ளபடி உணர்தல்—உண்மைப் பொருளை நேருக்கு நேர் காண்டல் என்பதாகும்.

எவனொருவன் தன் உள்ளம் கசிந்து உருகி, பக்தியிலே நிலைத்து பக்தியால் வழிபட்டு, அவனிடம் சரணாகதி அடைகின்றானோ அவன் இறைவனைப் பிரத்தியட்சமாகக் காண்கிறான்.

அதோடு இந்த வித்தை தர்மத்தைச் சார்ந்தது. தர்மத்தில் இருந்து இது வேறுபட்டதன்று. தர்மத்தின் தனிச்சிறப்பு பேரானந்தப் பெருவாழ்வை நல்குவதாகும். இவ்வகையிலே பேரானந்தப் பெருநிலையை அடைவிக்கும் இந்த ராஜவித்தை ராஜ குய்யம் எனும் பக்தி அனுபூதி மார்க்கம் தர்மத்தைச் சார்ந்தது.

மேலும் இது அனுஷ்டானத்திற்கு (செய்வதற்கு) மிகவும் எளிதானது. எளிய நடைமுறையிலே இதை அனுஷ்டிக்க லாம். இந்த மார்க்கம் அன்பு கலந்து இனிமை நிறைந்த தாகையினாலே, சோர்வின்றி இன்பத்தோடு இதைப் பயில முடியும். இதில் வீணாதலாம் தன்மையே இல்லை.

எதிரிகளை வாட்டுபவனே! இந்த (ராஜ) நெறியிலே; பக்திமார்க்கத்திலே நம்பிக்கை இல்லாதவர்கள் சிரத்தையற்ற வர்கள். என்னை அடைய முடியாமல் ஜனன மரண சம்சார மார்க்கத்திலே-பிறப்பு இறப்பு என்னும் பெரு நெறிக்கே திரும்பி வருகின்றனர். IX-(3)

இறைமை சார்ந்த பரஞானம் என்பது பரப்பிரம்மத் துடன் (இறைவன் கிருஷ்ணனோடு) அதுவேயாம் தன்மை யடைதலே. அவனை இந்த அவதார ரூபத்திலே நாம் வழி படுவோமானால் முடிவான தெய்வீகப் பேரொளி நம் முன்னே உதிக்கும்.

மாறாக முழு முதலாம் பரப்பிரம்மத்தை தியானம் செய் தல் என்பது மிகவும் கடினமான ஒரு செயலாகும். மற்று அர்ஜுனனோ கண்ணன் பால் நம்பிக்கை மிகுந்தவன்; சிரத்தை உள்ளவன். எனவேதான் கண்ணன் அவனுக்கு இதைப் போதிக்கிறார்.

ஆனால் நம்பிக்கையற்றவனோ சிரத்தை அற்றவனோ இதைக் கைக்கொள்ள மாட்டான். அவன் மீண்டும் மீண்டும் பிறந்து பிறந்து இறக்கும் சம்சார சாகரத்திலேதான் வீழ்வான்.

இங்கே சொல்லப்பட்ட நம்பிக்கை பிறர் சொல்லுவதை எல்லாம் நம்பும் மூட நம்பிக்கையல்ல, அதாவது சடங்குகள், ஆசாரங்கள் இவைகளை மீறுதல், இவைகட்குக் கற்பிக்கப் படும் மூட நம்பிக்கைகள் ஆகியன அல்ல. மாறாக இது பரத்தைச்சார்ந்த பரஞானத்தை நாம்அடையவும் அதற்கான வல்லமையை ஏற்கவும் நாம் மேற்கொள்ளும் நம்பிக்கையும் சிரத்தையுமே ஆகும்.

இதற்கு முதற்படி நம்முள்ளே பிரகாசிக்கும் தெய்வீக பேரொளியிலே நாம் நம்பிக்கை வைத்தலே ஆகும். அது தான் தெய்வீகவிடுதலைக்கு வழிவகுக்கும். இந்த நம்பிக்கை தான் நமக்கும் நம் செயலுக்கும் ஆதாரமாகிறது.

நமக்குள்ளே உள்ள தெய்வீக உள்ளொளிக்கு நாம் நம்மைச் சமர்ப்பித்து விடுவோமானால் இந்த ராஜ வித்யா, பக்தி யோகம் எளிதாகிவிடும்.

ியங்களுக்குப் புலப்படாத அவ்யக்த (Abstract) மூர்த்தியாகிய என்னால் இந்த அண்டங்கள் யாவும் (உலக மெலாம்) வியாபிக்கப்பட்டுள்ளது. (அதாவது நான் இந்த அண்டகோளங்கள் அனைத்திலும் வியாபித்துள்ளேன்). இந்த ஐம்பூதங்களும் என்னிடத்தே அடக்கமாகி உள்ளன. ஆனால் நான் அவைகளிடத்திலே இல்லை. IX-(4)

சேதனம், அசேதனம் என்று இருவகையாக உள்ள இவ்வுலகங்கள் யாவும் எங்கும் மறைந்துள்ள அந்தர்யாமி யான என்னால், விண்ணிலே காற்று வியாபித்துள்ளதைப் போல வியாபிக்கப்பட்டுள்ளன. கடலிலே கடல் அலைகள் அனைத்தும் அடங்கி இருப்பதைப் போல புல்பூண்டு முதல் அனைத்து உயிர்களும் சகல அண்ட கோளங்களும் இறை வனிலே அடங்கி உள்ளன. இவைகளைத் தாங்கி தரித்து நிற்பவன் இறைவனே. ஆள்பவனும் அவனே. இதற்காகவே இறைவன் அனைத்தோடும் வியாபித்துள்ளான்.

இவ்வகையிலே சகல பூ தங்களும் அந்தர்யாமியான (கண்களுக்குப் புலப்படாத மனம் வாக்குகளுக்கெல்லாம் எட்டாத) என்னிடம் அடக்கமாகி உள்ளன. ஆனால் நானோ அவைகளிலே இல்லை.

'நான் அவைகளிலே இல்லை' என்பது என்னவெனில் இறைவன் பஞ்சபூதங்களில் இல்லை; ஊடுருவி இல்லை; வியாபித்தில்லை என்பதல்ல பொருள். யாவற்றோடும் வியா பித்துள்ள இறைவன் பஞ்ச பூதங்களோடும் வியாபித்துள் ளான். ஆனால் இறைவன் பஞ்ச பூதங்களாலே வியாபித்த வனல்லன். அதாவது அவனது நிலையுதலுக்கு, உண்மைக்கு, வியாபகத்திற்கு அவை காரணமல்ல. அவன் அவைகளைச் சார்ந்தவன் அல்லன். அவன் வியாபகத்திற்கும், அவனு டைய உண்மைக்கும் உளதாம் தன்மைக்கும் அவை துணை புரிவன அல்ல. அவை பிரம்மத்திலே தங்கி இருப்பனவும்

அல்ல. மற்று அவை எங்ஙனம் உள்ளன எனில் அவனுடைய சங்கல்ப மாத்திரத்தானே அவை உள்ளன.
மேலும் கூறுகிறார்:-

**பஞ்ச பூதங்களும் என்னிடம்**
**என்னுடைய -பரப்பிரம்மமாம்-ஈஸ்வர யோகத்தின் ரகசிய சிறப்பைக் கவனி. சர, அசரம் யாவற்றையும், அண்டங்கள் அனைத்தையும் தாங்குகின்ற- அனைத்துக்கும் ஆதாரமாய் உள்ள என் ஆத்மா (பரமாத்மா) பூதங்களை உண்டு பண்ணுகிறது. ஆனால் என் சொரூபம் அவைகளிடத்திலே இல்லை-'**
IX (5)

ஈஸ்வர யோகத்தின் ரகசிய சிறப்பு வரம்பற்ற கடவுள் தன்மையிலிருந்து எல்லையுள்ள அண்ட கோளங்களின் தோற்றமே அதுவே யோக ரகஸ்யம்.

பரம்பொருளே தோற்றங்கள் அனைத்துக்கும் மூல காரணன். ஆனால் அவன் அவைகளின் தொடக்கு-தொடர்பு சிறிதுமற்றவன். இதுவே பரம்பொருளின் யோக ரகஸ்யம். கடவுள் அவைகளின் தரத்திலிருந்து எல்லை மீறிய அளவு மேம்பட்டுள்ளதால் அவைகளிலே அவன் இருக்கிறான் என்று சொல்லவும். இயலாது-

உண்மையாகச் சொல்லுமிடத்து 'பாலில் நெய்போல இயல்பாக எங்கும் ஊடுருவிப்பரந்துள்ளதே இறைவனின் தன்மை' எனும் கருத்தும் ஏற்றுக் கொள்ளத்தக்க வலிமை யற்றதே.

அனைத்துத் தோற்றங்களும் அவனுடைய இருவகைப் பட்ட தன்மையால் உண்டானவைகளே. அவனுடைய பரத்துவமான மிக மேம்பட்ட தனித்தன்மை பரப்பிரம்ம சொரூபம். அதுவோ பிரகிருதியின் செயற்பாட்டிலிருந்து முற்றிலும் தொடர்பற்றது.

எனவே, உயிர்கள், அண்டங்கள் எல்லாம் அவனுள்ளே உறைவன அல்ல என்பதும் அவன் யாவற்றூடும் தங்கி உள்ளவன் அல்லன் என்பதும் உண்மையே!

இவைகள் (இறையும் உலகும் அண்டங்களும் உயிர்களும்) அனைத்தும் ஒன்றே. ஆனால் ஒவ்வொன்றும் தனிப்பட்டவைகளே.

ஜீவாத்மா அல்லது நம் உடலுள்ளே சிறைவைக்கப் பட்டுள்ள உயிர் (ஆத்மா) இந்த உடலைத் தாங்கிக் கொண்டுள்ளது; இதைப் பராமரிக்கின்றது. அந்த ஆத்மா தன் உணர்வால் 'தான்' என்னும் அகங்காரத்தால் இந்த உடலை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டுள்ளது.

இதற்கு மாறாக எல்லாவற்றையும் தோற்றுவித்துப் பராமரித்துக் கொண்டுள்ள பரமாத்மாவோ அவைகளுள் நிலைத்துள்ளவனல்லன். ஏனெனில் 'நான்' (பரமாத்மா) தன் உணர்வாம் அகங்காரத்தில் இருந்து முற்றிலும் விடுபட்டவனாவேன் என்கிறார் கண்ணன்.

ஜீவாத்மா தான் தங்கியுள்ள உடலையும் இந்த உலகையும் 'தான்' என்றும் 'தனது' என்றும் தன் அகங்காரத்தால் கருதுகிறது. ஆனால் பரமாத்மா தன் சிருட்டியாகிய இந்தப் பிரபஞ்சத்தையே தனக்கு வேறாக வைத்துள்ளது. ஏனெனில் பரம்பொருள் அகங்காரத்திலிருந்து முற்றிலும் விடுபட்டது. ஏழாம் அத்தியாயம் பன்னிரண்டாம் சுலோகத்தை நாம் இங்கு நினைவுகூர்வோம்.

'சத்துவ, ரஜோ, தமோ குணங்களில் உண்டான பொருள்களெல்லாம் என்னிடத்தே தோன்றியவைகளே என அறிக. ஆயினும் நான் அவைகளைச் சாரவில்லை. அவைகள் என்னைச் சார்ந்துள்ளன. இந்தச் சுலோகமும் அதற்குரிய விளக்கமும் ஈண்டு இச்சுலோகத்துக்கும் கருதத்தக்கன.

**எங்கும் எப்பொழுதும் வீசிச் செல்கின்ற தன்மையுடைய வலிமை மிக்க காற்று விண்வெளியிலே (ஆகாயத்திலே) எவ்வண்ணம் நிலைபெற்றுள்ளதோ அவ்வண்ணமே சகல பூதங்களும் (சகல உயிரினங்களும், சடமும்) என்னிடத்திலே ளன.** IX (6)

வானத்திலே. பூதங்கள் ஐந்தின் இயக்கமும் நடைபெறு கிறது. வீசுகின்ற காற்றால் விண்வெளி கறைபடுவதில்லை. காற்று வானத்திலே ஒட்டிக் கொள்வதில்லை. மண், நீர், காற்று, தீ ஆகிய நான்கும் கலந்த ஒன்று இந்த உலகம். இந்த உலகம் விண்வெளியிலேதான் இயங்கி வருகிறது. இந்த உலக இயக்கத்தினால் விண்வெளி பாதிக்கப்படு வதில்லை. தீயும், நீரும் விண்ணைச் சுட்டெரிக்கவோ, நனைக்கவோ முடிவதில்லை.

மட்டுமே உண்மையான, உலக முழுதளாவிய, எங்கணும் பரந்துள்ள, எல்லையற்ற அடிப்படைப் பின்னணி ஆகும். இதன் மீதுதான் விண்வெளி யிலே இயங்கும் எல்லா இயக்கங்களும் நடைபெறுகின்றன. ஆனால் இதன் (விண்ணின்) தன்மையோ மாறுதலற்றது; பகுக்கப்படாதது.

இதைப் போலவே பரம்பொருளும் ஒன்றே; பல அல்ல. அப்பரம்பொருளும் பகுக்கப்படாததே. நிலை மாறாததே, ஆயினும், இயங்கும் அனைத்து அண்டங்களையும் எல்லாப் பொருள்களையும் தாங்கி நிற்பது அது ஒன்றே ஆகும். அந்தப் பரமாத்மாவையே மூலாதாரமாகக் கொண்டு அதையே சார்ந்துள்ள, அந்த இயங்கும் அண்டங்களிலோ உயிர்களிலோ அது பொருந்தி இல்லை. ஆனால் அப்பரம் பொருளோ இவை அனைத்துக்கும் ஆதாரமாகிறது.

காற்று விண்ணில் இயங்குகின்றது. காற்றின் இயக்கம் விண்ணைப் பாதிப்பதில்லை. கடவுளின் படைப்பான சகல மும் அவனில் இயங்குகின்றது. இவைகளால் அவன் பாதிக் கப் படுவதில்லை. இவைகளால் அவன் விகாரப்படுதல் இலன்; (சைவ சித்தாந்தக் கருத்தும் இதுவே)

**குந்தியின் மைந்தனே! பூதங்கள் அனைத்தும், உயிர்கள் அனைத்தும் கற்பமுடிவிலே (இதன் விவரம் அத். 8, சு.17, 18ல் காண்க). என்னுடைய பிரகிருதியை**

அடுத்த கற்ப ஆரம்பத்திலே நான் அவைகளை மீண்டும் பிறப்பிக்கிறேன்* IX(7)

என்னுடைய பிரகிருதியை புத்துணர்வு பெறச்செய்து சுதந்திரமின்றிதன் வசமிழந்து பிரகிருதியின் வசப்பட்டுள்ள இவ்வுயிர்த் திரள்கள் யாவற்றையும் திரும்பத் திரும்ப நான் படைக்கிறேன். IX (8)

(பிரகிருதி—பிரபஞ்சத்திற்கு மூலமாக இருக்கும் மாயை)

*கற்ப முடிவிலே என் பிரகிருதியை அடைந்த பூதங்களை; உயிர்களை அடுத்த கற்ப ஆரம்பத்திலே என் மாயை ஆகிய பிரகிருதியை அருளோங்கச் செய்து அம்மாயையின் வசப் பட்டு தற் சுதந்திரமின்றி கிடக்கும் அவ்வுயிர்களைத் திரும்ப வும் நான் படைக்கிறேன்.*

*புறந்தெரியச் சுட்டிக்காட்ட இயலாத மாயை (பிரகிருதி) தோற்றப் புலனாகாது. பரமாத்மாவால் அருள் விளக்கம் செய்யப்பட்டவுடன் மாறுபாடுகள் கொண்ட பல திறப்பட்ட கட்புலனாம் இவ்வுலகத்தினை அது (அம்மாயை) உண்டாக்குகின்றது. அதனுடைய விதி முறை ஒழுங்கும், வளர்ச்சிகளின் தன்மையும் அதனிலே அடங்கியுள்ள விதை களாலேயே நிர்ணயிக்கப்படுகின்றன.*

*என்பன ஈண்டு ஆத்மாக்களின் நல்வினை தீவினைப் பயன்களே.*

*இச்சந்தர்ப்பத்திலே நாம் கீதை 4ஆம் அத்தியாயம் 6ஆம் சுலோகத்தைப் பார்க்கலாம்.*

*நான் பிறப்பற்றவன்; அழிவற்றவன்; உயிர்களுக்கெல் லாம் ஈசன் எனினும் என் பிரகிருதியை (மாயையை) வசப் படுத்தி ஆத்ம மாயையினால் அவதரிக்கிறேன்.*

*இவ்வகையில் இறைவன் தன் ஆற்றலுக்குட்பட்ட பேரானந்தப் பெருஞ்சோதியாம் ஆத்ம மாயையால் உலகிலே உயிர்கள் உய்தியடைய அவதரிக்கிறான்.*

ஆனால் ஆத்மகோடிகள் பிறப்பதோ மாயையால்தான். ஜீவாத்மாக்கள் அவித்தையாம் மாயைக்கு அடிமைப்பட்டுள்ளமையால் அறியாமையால் கட்டுண்டு கிடக்கின்றன. எனவே அவை கர்மத்தால் பிணிபட்டுள்ளன. ஜீவாத்மாக்கள் மாயைக்கு அடிமைப்பட்டிருப்பதால் அவை தற் சுதந்திரம் உடையவை அல்ல, 'எனவே (மாயையின்) பிரகிருதியின் வசமாம் (அடிமையாய்) இருக்கும் உயிர்த்திரள்கள் யாவற்றையும் திருப்பத்திரும்ப நான் தோற்றுவிக்கிறேன்' என்கிறார் கண்ணன்.

**'தனஞ்சயா! மேற்சொன்ன கருமங்களிலே எவ்விதப் பற்றும் அற்றவனாய், எவ்வித அக்கறையும் அற்றவனாய் உதாசீனத்தோடு அமர்ந்திருக்கும் என்னை மேற்கூறிய கருமங்கள் தளைக்க மாட்டா.** IX. 9)

இந்த உலகமனைத்தும் சங்கல்பத்தினாலே தான்உண்டாகியுள்ளது; இய ஆனால் இறைவன் இந்தக் கர்மத்திலே எவ்வித பற்றும் அற்றவன்; ஒருவித அக்கறையும் கொள்ளாதவன்; உதாசீனன். ஏனெனில் அவன் இவ்வுலக அண்ட கோளங்களின் நியதிகளுக்கு அப்பாற்பட்டவன்; மேலானவன்; அண்டங்களைக் கடந்து நிற்பவன்.

இந்த அண்ட கோளங்களின் தோற்றம் இயக்கம் யாவுமே மாயையின் தொழில். மாயையோ இறைவனின் வசம் ஆனது. எனவே, அவன் தன் நிலைபேறான தன்மையில் படைப்பு முழுமையும் பரவி நிலவியுள்ளவனாகக் கருதப் படுகிறான். ஆயினும் அவன் சராசரங்களையும் அண்டங்களையும் கடந்து நிற்கும் தன்மையினால் டாண்டங்களின் நடைமுறைகளின்றும், தன்மைகளின்றும் விலகி நிற்கிறான். எனவே பரமாத்மாவை அவன் சங்கல்ப மாத்திரையாய்ப் படைத்தியக்கும் கருமங்கள் தளைத்த தில்லை.

மாயை சுத்தமாயை, அசுத்தமாயை என்று சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் மாயையின் கூறுபாடுகள்

**குந்தியின் மைந்தனே!**

**என்னால் கண்காணிக்கப் பெற்றே பிரகிருதி (மாயை) யானது இயங்குதிணை நிலைத்திணைப் பொருளாக உள்ள இந்த உலகத்தை உண்டாக்குகின்றது. இந்தக் காரணத்தால் தான் இந்த உலகம் சுழன்று இயங்குகின்றது. IX (10)**

முன் சுலோகத்திலே, சிருட்டியிலே எவ்விதப் பற்றும் அக்கரையும் அற்றவனாயினும் தன் சங்கல்பத்தினால் மாயையைக் கொண்டு இவ்வுலகத்தைப் படைக்கிறேன் என்கிறார் கண்ணன். ஆனால் மாயையின் அச்செயல் தம்மைத் தளைப்படுத்தல் இல்லை என்கிறார். ஏன் தளைப்படுத்தல் இல்லை[9] என்பதை இச்சுலோகத்திலே விளக்குகின்றார். பிரகிருதியே (மாயையே) இந்த உலகை உண்டாக்குகின்றது. மாயை என் உடைமை (சாயை)யாம் சக்தி; இந்தப் படைத்தலைச் செய்ய நான் சாட்சியாக இருந்து கண்காணிக்கிறேன். எனவே நான் அதனால் எவ்விதப் பந்தமும் அடைவதில்லை.

இறைவன் (கண்ணன்) இங்கே தன்னை இந்த உலகத்தின் தோற்றத்திற்கும் அதன் காப்புக்கும் தலைவனாகிய தலைமையை விளக்குகின்றார். ஆயினும் இறைவன் இவைகளுக்கு அப்பாற்பட்டவனாய், இவைகளால் பந்தப்படாதவனாய் உள்ளதையும் விளக்கி விட்டார்.

அப்படியானால் இந்த உலகம் ஏன் படைக்கப்படுகிறது. சங்கல்பத்தினால் படைக்கப்பட்டு பராமரிக்கப்படும் உலகுக்கென ஓர் அடிப்படை காரணமும் இல்லையா?

முற்றும் உணர்ந்தவனான (சர்வக்ஞனான) அவன் செயலுக்குரிய காரணத்தை சிற்றறிவுடைய மக்களால் அளந்தறிய முடியாது.

> 'உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
> நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
> அலகிலா விளையாட்டுடையார்'[10]

என்கிறார் கம்பர்.

அவர் கருத்துப்படி இறைவனுக்கு உலகைத் தோற்று வித்தலும் காத்தலும் நீக்கலும் வெறும் விளையாட்டே.

ஆனால் உலகம் உண்டாக்கப்பட்டது உய்திக்கே—உயிர்கள் பால் உள்ள கருணையால்—அருளால்—அவைகள் தம் பாசபந்தம் நீங்கி இருவினைகளில் இருந்து விடுபட்டுத் தாம் யாரென உணர்ந்து, தாம் உய்யும்படியான செயல்களிலே நிஷ்காமியத்தோடு செயலாற்றி, யோகத்தால், பக்தியால் இறைவனை இடையறாது சிந்தித்துத்தியானித்து உய்யவேண்டியே—வீடு பேறடையவே-இவ்வுலகத்தை இறைவன் சிருட்டித்திருத்தல் வேண்டும்.

**அகில உலக சராசரங்கள் அனைத்துக்கும் பரமேசுரனாய் (பூதமகேஸ்வரன்)உள்ள என்னை என்னுடைய பரம இயல்பை உணராத மூடர்கள் நான் மானுட வடிவம் எடுத்துள்ளவனே என்று எண்ணி என்னை அவமதிக்கின்றனர்.'** IX (11)

இந்தச் சுலோகத்திலே கண்ணன் தன்னுடைய குண விசேஷங்களைக் கூறுகிறார். இதிலே சொல்லப்பட்டுள்ள பூத மகேஸ்வரம் என்னும் சொல் உலகனைத்துக்கும் தலைவன் என்பதை மட்டும் உணர்த்தவில்லை. பூதங்களுக்கெல்லாம் மகேசுவரனாய் இருக்கும் தன்மையால் அவன் முற்றும் உணர்ந்தவன்—சர்வக்ஞன்—சர்வ வியாபகம் உடையவன்—அதாவது எங்ஙனும் நிறைந்துள்ளவன்; சத்திய சங்கல்பன், அதாவது உண்மை வடிவானவன் என அவன் குண நலன்கள் அனைத்தையும் உணர்த்தி நிற்கிறது.

இறைவன் கருணைவடிவானவன்,எனவே இந்த ஜீவாத் மாக்கள் கடைதேற வேண்டும் என்னும் பேரருளால் தாம் மனிதனாகத் திருவவதாரம் செய்திருக்கவும் தீவினை வயப் பட்டு மதிகெட்ட சில மக்கள் அவனை உள்ளபடி அறியாமல் 'கேவலம் உலகத்தில் உள்ள மனிதர்களில் இவனும் ஒருவன்' எனச் சாதாரணமாக நினைத்து விடுகின்றனர்.

தயையின் மொத்த சொரூபமாகித் தாயினும் சாலப் பரிந்து ஆத்மாக்கள் கடைத்தேறும் பொருட்டு நம்மிடையே மனிதனாகஅவதரித்த பரமாத்மாவை நாம் உணருவதில்லை. அவன் புறத் தோற்றத்தையே பார்த்து இவனும் ஒரு மானுடன் என்கிறோம்.

நாம் நம் தீவினையாலும் மாயையாலும் அவனை உள்ள படி அறிவதில்லை. அவனுடைய அருள் திறம் பெருந் தகைமைதாயினும் மிக்கப்பரிவு ஆய இவைகளை நாம்கருதிப் பார்ப்பதில்லை, அவனைக் கேவலம் ஒரு மனிதனாகவே மதிக்கிறோம்.

**'மேற்கூறிய தன்மைகளை தாம் அறியவொட்டாமல் தம்மை மறைக்கின்ற ரஜோகுணமிக்க அரக்கனாயும் தமோ குணம் மிக்க அசுரனாயும் மாயையிலே பங்கேற்கும் இவர்கள் வீணான பேராசை உடையவர்கள்; பயன் ஒரு சிறிதுமில்லாது பணி ஆற்றுபவர்கள்; அறிவு கோணலானவர்கள்; விவேகம் சிறிதும் அற்றவர்களாவர். அவர்களின் எண்ணம், சொல், செயல் யாவும் வீணானவைகளே.** IX (12)

பொய்யுலக வாழ்வை மெய்யென நம்பி இன்பமடைய வேட்டலே மோகம் எனப்படுகிறது. மோகாசா, மோககர் மானா, மோகஞானா, என்பன மோகத்தால் ஆசைவயப் பட்டவர்கள், மோகத்தால் கர்மம் செய்பவர்கள், மோகத் தால் கோணிய அறிவு உள்ளவர்கள் ஆகியோரைக் குறிப்பன.

தன்னலத்தால் ஆசைவலையுட்பட்டு செய்யும் செயலும் சொல்லும் சொற்களும், எண்ணும் எண்ணங்களும் வீணா னவைகளே. ஏனெனில் அவை நம் உயிர் நலனுக்கு உகந் தவைகள் அல்ல.

**பார்த்தா! மகாத்மாக்களோ (தம் சத்துவ குணத்தால்) தெய்வீக இயல்பை அடைந்தவர்கள். வேறு எதிலும் பற்று வைக்காதவர்களாய் அனைத்துயிர் பிறப்பிடமாகியவனும், எக்காலத்தும் அழியாத்**

**தன்மையனுமான என்னை உள்ளபடி உணர்ந்து**
**மனம் பற்றாதவர்களாய் என்னையே வழிபடுகின்றனர்.'**

IX (13)

*மகாத்மாக்கள் சத்துவகுணம் மேலோங்கியுள்ளவர்கள். தங்கள் கடந்த காலப் பிறவிகளிலே செய்யப்பட்ட நல்வினைகளின் பயனாய் என்னையே சரணமாக அடைந்தவர்கள். இந்திரிய வசப்படாதவர்களாகிய இவர்கள் என்னை உள்ள படியே அறிந்தவர்கள். இவர்கள் தங்கள் புலன்களையும் அந்தக்கரணங்களையும் அடக்கியவர்கள். ஆகையினால் இவர்கள் தங்கள் மனதை வேறு எதிலும் செலுத்தாமல் என்னிடமே செலுத்தி என்னையே வழிபடுகின்றனர்.*

*பன்னிரெண்டாம் சுலோகத்திலே சொல்லப்பட்ட அசுர அரக்க இயல்புள்ளவர்கள் பேய்த்தனம் மிக்கவர்கள். அவர்களின் சிந்தனை, சொல், செயல்கள் யாவுமே தன்னைப் பற்றியதாகவே 'தான்' என்னும் அகங்கார வட்டத்துள்ளே தான் அமைந்திருக்கும். அவர்கள் சம்சார சாகரத்திலே வீழ்ந்து தங்களைத் தாங்களே இழந்துவிடுபவர்கள்.*

*அதனால் இந்தச் சுலோகத்திலே சொல்லப்பட்டவர்களே சத்துவகுண சம்பன்ன மகாத்மாக்கள்; தெய்வீக இயல்பு வாய்க்கப்பெற்றவர்கள். இவர்கள் தம்மைத் தாம் அறிந்தவர்கள். தம் சிந்தனை சொல் செயல்யாவுமே தெய்வத்தின் பால்திருப்பி அந்தச் சிந்தனையிலேயே தியானத்திலே மூழ்கியவர்கள். இந்த வகையிலே இவர்கள் தெய்வீக ஞானம் கைவரப் பெற்று பரப்பிரம்மத்தைத் தம் வாழ்க்கையிலே உணர்ந்து தம் ஆத்மாவையே இறைவனிடம் சமர்ப்பித்து விடுகின்றனர்.*

**'அர்ச்சுனா! அவர்கள் என்னை வழிபடும் முறைகள் பின்வருமாறு :**

**எப்பொழுதும் என்னையே புகழ்ந்து கொண்டிருப்பவர்களாய், உறுதியான விரதத்தோடு என்னையடைய முயல்பவர்**

**களாய் உளம் கனிந்த பக்தியோடு நமஸ்கரிப்பவர்களாய் விளங்கும் நித்திய யோகிகள் அனைவரும் என்னையே வழிபடுகின்றனர். IX (14)**

*மேலே பதின்மூன்றாம் சுலோகத்திலே சொல்லப்பட்ட ஞாத்வா (என்னை உள்ளபடி அறிந்த ஞானி) இந்தச் சுலோகத்திலே சொல்லப்பட்ட (பக்தியா: நித்ய யுக்தா:) பக்தன், நித்திய யோகி என்று சொல்லப்பட்ட மூவருமே ஜீவன் முக்தர்கள். ஞானம், பக்தி, கருமம் என்னும் மூன்றுமே ஒரு ஜீவன் முக்தனிடம் அமைந்திருக்கும் தன்மைகளாவன.*

*மகாத்மாக்கள் இவ்விதமாக சத்துவகுணத்தில் மூழ்கியவர்களாய், இறைவனை உள்ளபடி அறிந்தவர்களாய், பக்தி வெள்ளத்தில் இடையறாது படிந்தவர்களாய் தம்முடைய நித்திய கருமங்களில் சிறிதும் பலன் கருதாது ஈடுபடுபவர்களாய் இருப்பார்கள். உள்ளம் அவனைச் சிந்தனை செய்வதாய், வாய் அவன் பலவகைப்பட்ட பெயர்களையும் அவன் குணங்களையும் சொல்லி முணுமுணுப்பதாய் அல்லது கீர்த்தனங்களால் பாடுவதாய், உடல் அவன் திருவடிமுன் வீழ்ந்து அவன் அடிமீது முடி பதிய வணங்கி நிற்கும் தன்மையதாய் விளங்க அவர்கள் வழிபாடாற்றுவார்கள். அதாவது மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களாலும் இடையறாது வழிபட்டு பக்தி செலுத்துவார்கள்.*

**ஞானமாகிய வேள்வியினாலே வேட்பவர்களாம் (என்னை அடைய விரும்புகின்றவர்களும்) மற்றவர்களும் என்னை ஒன்றாகவும் வேறாகவும் பலவாகவுமாக இத்தனை விதங்களில் என்னை வழிபடுகின்றனர். IX (15)**

*ஞானமாகிய வேள்வி என்பது ஞானயக்ஞம் எனப்படும். பரஞானமாகிய பெருவேள்வியிலே தன்னையே அர்ப்பணித்து விடுதலே ஞான யக்ஞம் எனப்படும். ஞானத்திலே முதிர்ந்த ஞானயோகியும் மூவகையாக இறைவனை வழிபடுகின்றனர்.*

1) 'இறைவன் ஒருவனே; உள்பொருள் பிறயாவும் மித்தை' எனும் கொள்கை கொண்ட அத்வைதம்.

2) ஜீவாத்மா பரமாத்மா வெவ்வேறு; ஜீவாத்மா பரமாத்மாவைச் சென்றடைகிறது என்கிறது துவைதம்.

3) அண்டசராசரமும் இறைவன் அங்கமே; ஒருவனே இத்தனையும் ஆகிறான் என்னும் கருத்து கொண்டாத்வைதம்.

இவ்வகையாகச் சொல்லப்படும் மூவகைக் கொள்கைகளிலே ஒரு ஞானயோகி எவ்வகைக் கொள்கை மூலம் தன்னைத் தான் பரமாத்மாவிடம் அர்ப்பணித்துக் கொண்டாலும் அது ஞான யக்ஞமே ஆகும்.

13,14,15 ஆகிய மூன்று சுலோகங்களில் பக்தர்களது தன்மை விவரிக்கப்பட்டது. நம் நாட்டிலே தோன்றிய நாயன்மாரும் ஆழ்வார்களும் இங்கு கூறப்பட்ட மகாத்மாக்களாம் பக்தர்களே. அவர்கள் ஞானத்தினால் உள்பொருளை உள்ளபடி அறிந்து. கொள்கைகளில் ஒன்றையே உறுதியாகக் கடைப்பிடித்து உள்ளம் பாகென உருகி பக்தி செய்து இறைவனை வழிபட்டு வீடு எய்தினர்.

இறைவன் யாவுமாக இருப்பவன். எனவே ஆத்ம கோடிகள் மேற்கூறிய வகையில் எவ்வகையிலே அவனை வழிபடினும் அது அவனைச் சென்றடைகிறது.

தான் யாது யாதாக உளன் என்பதைக் கண்ணன் ஈண்டு 16 முதல் 19வது சுலோகம் வரையிலே சொல்லுகிறார்.

**நானே வைதிக கர்மமாகிய கிரது எனும் வேள்வி; மகா யாகமும் நானே; பிதுரர்களுக்குப் படைக்கப்படும் உணவும் நானே! மருந்தும் உணவாகவும் உள்ள ஔடதம் நானே. நானே மந்திரமும், ஹோமமும்; அதில் சொரிகின்ற நெய்யும் அதைவாங்கிக் கொள்ளும் அக்னியும் வேள்வி வேட்டலாகிய கருமமும் நானே!** IX (16)

நான்காவது அத்தியாயம் 24-ஆம் சுலோகத்திலே சொல்லப்பட்டவை இங்குகருதத்தக்கன.

அர்ப்பணம் செய்வதும் பிரம்மம். நெய் முதலிய அவிசும் பிரம்மம். பிரம்மமாகிய அக்னியிலே பிரம்மத்தால் கொடுக்கப் படுகிற அவிசும் பிரம்மமே. பிரம்மமாகிய கர்மத்தில் மனம் குவித்துள்ளவனால் பிம்மமே அடையப்படுகிறது.

யாகம் செய்கிறவன் தன்னை அதிகாரி என்னும் யாகத் துக்குரிய தியாகத் திரவியம், ஏற்றுக் கொள்ளும் தெய்வம் வேறு வேறு என வேற்றுமை பாராட்டுகிறான். ஆனால் இங்குச் சொல்லப்பட்ட ஞான யக்ஞத்தில் நிலை பெற்றவ னுக்குச் சுலோகத்தில் சொல்லப்பட்ட அனைத்துமே பிரம்மம் ஆகும்.

**மேலும் சராசர உலகுக்கெல்லாம் தந்தையும் தாயும் பாட்டனும் நானே. நானே (கர்மபலனைக்) கொடுப்பவன், வேதங்களால் அறியத்தக்கவன் நான். மிகத் மிகத் தூய்மை யானவன்; புனிதமானவன் நான். ஓங்காரமும்,,ரிக். யஜுர், சாமம் எனும் வேதங்களும் நானே! IX (17)**

**அனைத்துக்கும் புகலிடம் (கதி) ஆனவன் நான். நானே பர்தா (கணவன்). நானே பிரபு (ஆண்டான்). நான் அனைத்துக்கும் சாட்சியானவன். அனைத்தின் இருப்பிடமும் நான். ஆத்மாக்களின் அடைக்கலம் நான். நான் தோழன். நானே களஞ்சியமும் அழியாத வித்தும் ஆவேன். IX (18)**

**அர்ஜுனா! நானே வெப்பத்தைத் தருகிறேன். மழையைப் பொழிபவனும் தடுப்பவனும் நான். சாவாமையும் சாவும் நானே, சத்தும் அசத்தும் நானே ஆவேன். IX (19)**

உலகம் அனைத்துக்கும் இறைவனே தாயும் தந்தையு மாகித் தாங்குகின்றவன். தாயாகித் தந்தையுமாகித் தாங்கு கின்ற தெய்வம் என்கிறார் வள்ளலார். நான் 'தாதா' என்கிறார் கண்ணன் சுலோகத்திலே. அதாவது தாதா என்றால் வள்ளல் தன்மை உடையவன். வள்ளல் தன்மை

உடைய அவன் பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, வேண்டுவன வேண்டியாங்கு மக்களுக்குத் தருகிறான். 'இறைவனிடம் கை ஏந்துங்கள், அவன் இல்லை என்று சொல்லுவதில்லை' என்கிறார் ஒரு கவி.

அறியப்படவேண்டியவன் அவன். அவனன்றி அறிய வேண்டுவன எதுவுமே இல்லை. அவனை அறிவதே அறிவு. அதுவே மதிஞானம். பிற அறிவுகள் யாவுமேபகஞானங்களே.

புனிதமானவற்றுள்ளே மிகப்மிகப் புனிதத் தன்மையானவன் இறைவன். அவனை விடப் புனிதமானது அகிலத்திலே ஒன்றுமே இல்லை. புனிதமானவற்றைச் சார்கின்றவர் புனிதர்களே ஆவார்கள். கர்த்தர் பரிசுத்தர்! பரிசுத்தர்! பரிசுத்தர் என்கிறது விவிலியம்.

அவனே கதி எனப்படுகிறான் சுலோகத்தில். நமக்குப் புகலிடமும் அவனே. நம் கரும பலனுக்கு ஏற்ப நாம் அடையும் கதியாக (சுவர்கம் முதலிய பதவிகளாக) அமைந்திருப்பவனும் அவனே!.

அவன் கணவன்; நாயகன். நாம் அவன் மனைவியர், நாயகியர். பக்தியிலே இதை நாயக நாயகி பாவம் என்பர். கோதை நாச்சியார் பாடியபாசுரங்களில் இதைக் காணலாம்.

'கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்' என்கிறார் ஆழ்வார்.

அவன் ஆண்டான்; நாம் அடிமை. மணிவாசகப் பெருமான் இந்த ஆண்டான் அடிமை முறைமையையே பின்பற்றி உய்தி அடைந்தார். இதனாலே அவர் ஆளுடைய அடிகள் எனப்பட்டார்.

இறைவன் நம் சிந்தனை சொல், செயல் அனைத்துக்கும் சாட்சியாகி உள்ளவன். அவனே சான்று. அவன் சான்றானவன்.

அனைத்தின் இருப்பிடமும் அவன். நேரடியாகவும் மறைமுகமாகவும், அனைத்தையும் தாங்கி நிற்பவன் அவன் ஊஞ்சல் பலகையைத் தாங்குவது கயிறு, தூலம், சுவர்கள் என்றாலும் இவை அனைத்தின் மூலமாக மறை முகமாக தாங்கி நிற்பதுபூமியேஅதைப்போலவே அனைத்துப்பொருள் களையும் நாம் அறியாமலேயே அவனே தாங்குகிறான்.

நான் தோழன் என்கிறான் கண்ணன். தோழன் என்ப வன் தன் தோழனுடைய நலனையே நாடுபவன். அவன் அர்ஜுனனுக்குத் தோழன் தானே! இறைவன் அண்ட சரா சரங்களுக்கு அப்பாற்பட்டவனாயினும் தன்னுடைய தண்ண ளியால் சிழிறங்கி வந்து ஆத்மாக்களிடத்திலே தோழமை பூண்டுறவாடுகின்றான்,

'ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய்
என்னுடைய தோழனுமாய்' என்கிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சர்வஜீவ பூதாதிகளும் அவனிடமிருந்தே தோன்றுகின் றன; அவனிடமே ஒடுங்குகின்றன.

இந்த அத்தியாயம் சுலோகம் 7&8ல் காண்க.

அனைத்து ஆத்மாக்களின் உள்ளத்தையும் நான் உறை விடமாகக் கொண்டு தங்கி இருத்தலைப் போலவே எல்லா உயிர்த்திரளும் என்னையே தம் தங்குமிடமாகக் கொண்டு தங்கியுள்ளன. எல்லா ஜீவாத்மாக்களும் அவனது சரீர மாகவும் அவன் சரீரியாவும் விளங்குகின்றான்,

'தந்ததுன் தன்னை கொண்டதென் தன்னை' என்கி றார் மணிவாசகர்.

அவன் களஞ்சியம்: அள்ள அள்ளக் குறையாத உலகனைத்தையும் துய்க்கத்தன்னைத் தானே உதவும் களஞ் சியம் அவன். இந்த உலகமே அவன். உலகமாகிய அவனே நம் களஞ்சியம். ஆனால் நாம் அந்தக் களஞ்சியத்தை உள்ள

படி அறிந்து துய்க்காமல் நம் வீட்டின் முன்னே நாமே கை ஏந்தி நின்று யாசிக்கிறோம்.

அழிவில்லாத விதை அவன். வித்தின் தன்மை என்ன? தன்னைத்தான் அழித்துக் கொண்டு அது மரம் செடி கொடியாகப் பரிணமிக்கிறது. இந்த இறைவனாகிய விதையோ அழியாத வித்து. தான் அழிவெய்தாமலே இந்த உலகை ஈன்ற அதிசய வித்து இறைவன். 'இங்கு உலகுயிர் எல்லாம் ஈன்றும், பவன் பிரம்மசாரியாகும் பான் மொழி கன்னியாகும்' என்கிறது சிவஞான சித்தியார்.

வெப்பத்தைத் தருபவன் அவன். மழையைப் பொழிபவனும் அதைத் தடுப்பவனும் அவனே. இறவாமை மட்டுமல்ல, இறப்பும் அவனே. இந்த உலகத்திலே ஆத்மாக்கள் உடலோடு வாழ்ந்திருப்பதும், உடலை நீத்து பிரிந்து விடுவதும் அவனாலேயே. அவ்வளவு ஏன்? இந்த உலகிலே காணப்படும் பொருள்களும், காணப்படாத பல கோடிப் பொருள்களும் அவனேதான். (உயிர்களின் தோன்று நிலையே சத்து; தோன்றா நிலையே அசத்து ஆகும்)

**மூன்று வேதங்களையும் ஓதியவர்கள், யாகங்களால், என்னை வழிபட்டு, சோமபானம் அருந்தி, பாவங்களில் இருந்து விடுபட்டவர்களாய், தாம் சுவர்கம் அடைய விழைகின்றனர். அங்ஙனே அவர்கள் புண்ணியம் மிக்க தேவேந்திர லோகத்தை அடைந்து, சுவர்க லோகத்தின் திவ்யமான தேவ போகங்களைத் துய்க்கின்றனர்.** IX(20)

**பின்னர், அவர்கள் அந்த விசாலமான சுவர்க்க லோக போகத்தை அனுபவித்துத் தாம் செய்த புண்ணியம் தேய்வடைந்தபின் மண்ணுலகிலே பிறப்பெடுக்கின்றனர். இவ்விதமாக மூன்று வேதங்களையும் அறிந்த போக நுகர்ச்சியை விரும்பும் பித்தர்கள் பிறப்பு இறப்புகளிலே சிக்கி உழல்கின்றனர்.'** IX(21)

முன்னே சொன்னபடி ஆத்ம தரிசனம் இன்றி-ஞான பக்தி யோகங்களால் இறைவன் திருவடி எய்த வேண்டும்

என்னும் உயர்ந்தநோக்கமின்றி-கேவலம் மூன்று வேதங்களில் உள்ள மந்திரங்களை மனனம் செய்து இந்திராதி போக நோக்கோடு அதற்குரிய யாகங்களைச் செய்து, சோமபானம் என்னும் ஒருவகை மயக்க மது அருந்தித்தாம் தாம் செய்த பாவங்களில் இருந்து விடுபட்டு அவர்கள் தேவலோகம் புகுகின்றனர்.

பின்னர் அந்த இன்ப நுகர்ச்சிக்கு ஏதுவான புண்ணியங் கள் அழிந்து போன பின்னர் மறுபடியும் அவர்கள் இந்த மண்ணுலகிலே வந்து பிறப்பெடுக்கின்றனர். இவ்வண்ண மாக இவர்கள் வேதாந்தத்தில் (உபநிஷத் தத்துவங்கள்) தேறிய பிரம்ம ஞானத்தை அடையாமல் வேத மந்திரங் களை மட்டுமே அறிந்து அதற்குரிய கர்மம் இயற்றி அத்தரு மங்களையே அனுஷ்டித்தபடியால் சுவர்காதி போகங்களான அற்பப் பலனையே அடைந்து அடிக்கடிப் போக்கும் வரத்து மாகி இருக்கிறார்கள்.

**எனக்கு அன்னியன் அல்லனாய், (அனன்யா) என்னவ னாகி, என்னையே சிந்தித்துக் கொண்டு எக்காலத்தும் என்னையே வழிபடும் (உபாசிக்கும்) நித்திய யோகிகளின் யோகத்தையும் க்ஷேமத்தையும் நான் வழங்குகின்றேன்.**

IX (22)

சுலோகத்திலே உள்ள 'அனன்யா' என்ற சொல்லுக்கு 'தான் இறைவனுக்கு அன்னியம் அல்லாதவன்' என எண்ணுதல்; அல்லது 'இறைவனைத் தவிர பிற யாதொன் றையும் சிந்திக்காமல் இருப்பவன்' என்பது பொருளாகும். அனன்யா சரணாகதி என்பது இங்கு கருதத்தக்கது.

இங்கே, கண்ணன் இதற்கு முந்தைய சுலோகத்திலே சொன்ன வெறும் வேத நெறியால் செய்யும் கருமங்கள் யாவும் நம் ஆத்மாவைச் சிக்க வைக்கும் மாயக் கண்ணிப் பொறிகளே என்பதையும் உயர்ந்த பரமாத்மாவைத் தேடும் சாதகர்கள் இவைகளை நீக்கவேண்டிய இன்றியமையாமையை யும் வற்புறுத்துகிறார். சாதகன் அனன்னியனாகி இருத்தல்

வேண்டும்; என்னையே சிந்தித்து வழிபட வேண்டும்.

ஏனெனில் இறைவன் தன் பக்தர்களின் துயரச்சுமை களை நீக்குபவன்; அவர்களின் நலனில் அக்கறையுடையவன். தன் அடியார்க்கு வேண்டியதை அருட் செய்தலாம் யோகத் தையும், அருளியதை வைத்துக் காக்கும் பணியாம் க்ஷேமத் தையும் அவன் நல்குவான்.

தெய்வீக அன்பாம் பக்தி உணர்வு அடைய வேண்டு மானால் பிற அனைத்து அன்பையும் பற்றுகளையும் நாம் துறந்துவிட வேண்டும். நாம் இறைவன் அருட்கடலில், அவன் பாதங்களில் முழுமையாக சரணடைந்து விட் டால் அவன் நம்முடைய கவலைகளையும் துன்பங்களையும் ஏற்றுக் கொள்கிறான். எனவே நம்மைப் பூரணமாகக் காக்கும் புத்துணர்வு தரும் அவன் அருளிலே நாம் பூரண நம்பிக்கை வைக்கலாம். 'வேண்டத் தக்கது அறிவோய் நீ வேண்ட முழுதும் தருவோய் நீ, (திருவாசகம்)

**குந்தியின் மைந்தா; பக்திச் சிரத்தை (அக்கரை)யோடு கூடிய எந்தப் பக்தர்கள் (யாக யக்ஞங்களால்) பிற தெய்வங் களை நம்பிக்கையோடு ஆராதிக்கிறார்களோ, அவர்களும் தாம் தம் நெறி வழுவி ஆராதனை செய்யினும் என்னையே ஆராதிப்பார்கள் ஆகிறார்கள்.'** **IX (23)**

பிற சிறு தெய்வங்களைப் பக்திச் சிரத்தையோடு ஆரா தனை செய்கின்ற யாவரும், பிற தெய்வங்களை ஆராதித் தாலும் அவ் ஆராதனைகள் யாவும் என்னையே வந்தடை ஏனெனில் அவர்கள் ஆராதனை செய்கின்ற ரன் முதலிய சிறு தெய்வங்கள் என்னுடைய சரீரமே ஆகையால், அந்தத் தேவதா ஆராதனை சரீரியான என்னையே ஆராதித்ததாகிறது. ஆனால் அவர்கள் சாட் சாத்கார ஆத்மாவான என்னை ஆராதிக்கவில்லை. அந்தத் தேவதைகள் என் சரீரமே என்று தெரிந்து ஆராதிக்க

வில்லை. எனவே அவர்கள் அஞ்ஞானமார்கமாய் தம் நெறி வழுவி ஆராதிப்பவர்கள் ஆகின்றனர்.

**நிச்சயமாக நானே அனைத்து யாகங்களின் பலன்களையும் ஏற்றுக்கொள்பவனாகவும் யாகங்களின் கர்த்தாகவும் இருக்கிறேன். ஆனால் சூரியன் சந்திரன் அக்கினி இந்திரன் முதலிய தேவதைகளை வணங்குபவர்கள் என்னைஉள்ளபடி உணர்ந்தார்களில்லை. ஆகையினால் அவர்கள் தங்கள் அஞ்ஞானத்தால் தம் நெறி வழுவி வீழ்ந்து விடுகிறார்கள்.**
IX (24)

இங்கே யாக பலன்களை ஏற்றுக் கொள்பவனும் யாகங்களின் கர்த்தாவும் நானே என்பதின் பொருளாவது யாகத்துக்குரிய எவ்வகைப் பலனையும் அருள் செய்பவன் நானே தான் என்பதாம்.

ஆனால் இதிலே உள்ள விசித்திரம் யாதெனில் ஒரே யாகம் வெவ்வேறு வகைப்பட்ட கருத்தோடு—குறிக்கோளோடு—அவனவன் இஷ்ட தெய்வத்தை நோக்கிச் செய்யப்படுகிறது. அவன் குறிக்கோளுக்கேற்ற யாக பலனை அவன் அடைகிறான். அதே யக்ஞத்தை பரமாத்மாவின் உணர்வோடு அவன் செய்வானானால் அவன் பரமபதத்தை அடைகிறான்.

**இந்திராதியர்களைக் குறித்துச் செய்கிறோம் என்னும் சங்கற்பத்தோடு யாகம் வழிபாடு முதலியன செய்கிறவர்கள் இந்திராதி தேவர்களை அடைகிறார்கள்; பிதுரர்களை நோக்கிச் செய்கின்றவர்கள் பிதுரர்களை அடைகின்றனர். பூதம் பிசாசுகளை நோக்கி யக்ஞம் செய்பவர்கள் அவைகளை அடைகிறார்கள். ஆனால் பரமாத்மாவாம் என்னை வழிபடுகின்றவர்கள் என்னையே வந்தடைகின்றனர்.** IX (25)

அழிவுக்குட்பட்ட சிறு தெய்வங்களாம் இந்திரன், நிருதி அக்கினி, வாயு முதலியவர்களும் பிதுரர்களும். பூத பிசாசுகளாம் ஆவிகளும் வழிபட்டு வணங்குதற்குரியவர்கள்

அல்லர். அப்படி வழிபட்டால் அழியும் தன்மை வாய்ந்த வற்றையே அடைவர். ஆனால் தோற்றமும், இறுதியுமற்ற சுயம்புவான பரமாத்மாவை வழிபடுபவர்கள் அழிவற்ற பரானந்தப் பெருநிலையை அடைவார்கள்.

**புனித உள்ளத்தோடு எவன் எனக்கு இலையேனும் மலரேனும் அல்லது கனியேனும் எங்கும் கிடைக்கின்ற தண்ணீரேனும், பக்தியுடன் படைத்து வழிபடுகிறானோ, அத்தூய உள்ளத்தவன் அன்பளிப்பை நான் இன்பத்துடன் ஏற்றுக் கொள்ளுகிறேன்.'** IX (26)

இந்த அகில உலகமும் ஆண்டவன் படைப்பு. அதிலே உள்ளவைகளே இலை, மலர், கனி, நீர் ஆகிய இவைகள். அவன் விலைமதிப்பற்ற இவ்வண்ட சராசரத்திலே உள்ள அற்பமான இலை, மலர், கனி, நீர். இவைகளை—அவன் உடமைகளான இவைகளை அவனுக்கு நாம் பக்தியோடு படைக்கிறோம். நாம் பெற்ற சிறு குழந்தை நம் தட்டிலே உள்ள உணவைத் தன் கையால் எடுத்து நமக்கு ஊட்டு வதைப் போன்றதே இது.

குழந்தை நம்முன் உள்ள உணவை நமக்கு எடுத்து ஊட்டுவது தன் அன்பின் மிகுதியால் தான். அந்த அன்பினால் நாம் நெகிழ்ந்து போகிறோம். அப்படித்தான் இறைவனும், நம்முடைய தூய உள்ளத்தோடு ஏகாக்கிரக சித்தத்தோடு (சலனமற்ற ஒரு முகப்பட்ட உள்ளத்தோடு) அவன் படைப்பாம் இலையோ மலரோ கனியோ நீரோ எவையேனும் அவன் முன்னர் படைத்து பக்தியோடு வழி பட்டால், அவன் அதை மனநெகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளுகிறான்.

'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை'

என்கிறார் திருமூலர்.

'பக்தி வலையில் படுவோன் காண்க'' என்கிறார் மாணிக்கவாசகர்.

'பச்சிலை இடினும் பக்தர்க்கிரங்கி
மெச்சி சிவபத வீடருள் பவனை'
என்கிறார் பட்டினத்தடிகள்!

'தாள தாமரைகள் ஏத்தித் தடமலர் புனைந்து நையும்
ஆள் அலாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறே'
(திருவாசகம்)

**குந்தியின் புதல்வனே! நீ எதைச் செய்தாலும் எதை உண்டாலும், எதை யாகத்திலே அவிர்பாகமாக இட்டாலும் ஏன் உன் தானங்களையும் தவத்தையும் கூட எனக்கு அர்ப்பணித்துச் செய்க!** IX (27)

எதையும் ஈசுவர அர்ப்பணமாகச் செய்தல் என்பது மிக மேலான சிந்தனையும் சொல்லும் செயலுமாகும். எதையுமே கிருஷ்ணார்ப்பணம் எனும் சொல்லோடு செய்தால் தீவினை நம்மை அணுகாது. 'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவம் ஆக்கும்' (திருவாசகம்)

உண்ணும் போதும் நம் முன் இலையிலே உள்ள உணவை கிருஷ்ணனுக்கு அர்ப்பணித்து விட்டால் அது கிருஷ்ணன் ஏற்றுக்கொண்டு எஞ்சிய பிரசாதமாகிறது. அதிலே ருசியை நாம் தேடமாட்டோம். இப்படியே நாக்கு படிப்படியாக ருசிக்கு அடிமையாகும் தன்மையை இழக்கும். யாகத்தையும் பிற நினைவின்றி, பிற கோரிக்கைகள் இன்றி கிருஷ்ணார்ப்பணமாகச் செய்து அவி சொரிந்தால் அதை ஏற்றுக் கொள்ள அவனே அங்கு வருகிறான். தானம் செய்யும் போது கிருஷ்ணார்ப்பணம் என்று செய்யும் ஒருவன், 'தான் தானம் செய்யவில்லை; இறைவன் இவனுக்குத் தானமாக இதைத் தருகிறான்' என்னும் எண்ணம் உண்டாகிறது. அதன் மூலம், தான் என்னும் முனைப்பு அற்றுவிடுகிறது. அவனை நோக்கித் தவம் செய்யும் போதும், அதையும் (தவத்தையும்) அவனுக்கு அர்ப்பணித்து விடுக. ஏனெனில் தவஸ்வரூபமே அவன்; தவமே அவன். இவ்வகையில் நம் சிந்தனை சொல் செயல் யாவற்றையும் அவனுக்கு அர்ப்பணித்தால் நமக்கு இருவினையும் பந்தப் பாசமும் உண்டாகா,

**இந்த வகையிலே நன்மை தீமைகளைப் பயக்கும் நல்வினைத் தீவினைகளின் கரும பந்தங்களில் இருந்து விடு படுவாய். சந்நியாச யோகத்திலே (துறவு மார்க்கத்திலே) மன உறுதி கொண்டவனாய், இருவினைப் பாசமற்ற என்னை வந்தடைவாய்.'** IX (28)

*மேற்சொன்ன வகையிலே நம் சிந்தனை சொல் செயல்கள் யாவையுமே அவனுக்குப் புனிதப் படையலாக அர்ப்பணித்து விடுவதால் ஆத்மாவின் முழு வாழ்க்கையுமே அவனுக்கு நிவேதனம் (பலியாக்கப்படுகிறது). அதன் மூலம் 'நான்' எனும் ஆணவமும், அதன் மூலமாக உண்டாகும் தளைகளும் தூளாகின்றன. பின்னர் எச்செயல்களுமே ஆத்மாவைப் பந்தப்படுத்தல் இல்லை.*

*இங்கு மனிதன் கருமம் செய்யக்கூடாது எனச் சொல்ல வில்லை; கருமம் செய்; அதை ஈசனுக்கு அர்ப்பணித்து விடு. இவ்வகையிலே இது கர்ம சந்நியாசம்—சந்நியாசமே. இதிலே மன உறுதி வேண்டும். இந்தச்சந்நியாச யோகத்திலே நிலைத்து மேற்சொன்ன 26 முதல் 28 வரையுள்ள சுலோகங் களிலே சொல்லியபடி இறைவனுக்குத் தன் ஆத்மாவை முழுவதுமாக நிவேதித்து வருபவன் இருவினைத் தளை நீங்கி இறைவனை அடைகிறான்.*

**'நான் அனைத்து உயிர்களிடத்திலும் சமமானவன். எனக்குப் பகைவனுமில்லை; நண்பனுமில்லை. ஆனால் எவன் என்னிடம் பக்திச் சிரத்தையோடு இருக்கிறானோ அவன் என்னிடத்திலிருப்பவன். அவனிடத்திலே நான் அருள் வடிவாக இருப்பேன்!** IX (29)

*காற்று சிலரை நீக்கி வீசுவதில்லை. கதிரோன் சிலருக்கு மட்டுமே காய்வதில்லை. அதைப் போல இறைவனுக்கு பாரபட்சம் என்பதே இல்லை. சூரியன் ஒளிபோல் அவன் அனைவருக்கும் சமமாகவே இருக்கிறான். அவனுக்கு நண்பர்களும் இலர்; பகைவர்களும் இலர். அவன் விருப்பு வெறுப்பு அற்றவன். அவனை— அவன் அருளை நாம்*

அடைவதற்கு ஒரே வழி அன்பு—பக்தி மார்க்கமே. அந்த அருள் பழுத்த வடிவான அவனை நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீரோடு துதித்து வழிபட்டால் அவன் நம்மிடையே இருப்பான். நாமும் அவனிடத்திலே இருப்போம்.

**இழிந்த வெறுக்கத்தக்க நடத்தை உடையோனும் மனம் மாறி வேறு எதையுமே சிந்திக்காமல் என்னையே வழிபடு வானானால், அவன் மனம் மாறி நன்கு பகுத்தாய்ந்து தெளி வடைந்தவனாகிறான்!** IX (30)

மேற்சொன்ன இழிந்த வெறுக்கத்தக்க வாழ்க்கை வாழ்பவன் புறத்தே தன் இழிவான கருமச் செயல்களைத் துறந்து விடுகிறான். அகத்தே மனம் மாறி பகுத்தாய்ந்து தெளிவடைகிறான். அந்தத் தெளிவின் பயனால் அவன் பக்தனாகிறான்.

அவன் தன் புற ஒழுக்கத்தையும் அக ஒழுக்கத்தையும் தன்னுடைய பகுத்தறிவால் ஆய்ந்து பண்பமைந்த வாழ்க் கையைத் தேர்ந்து தெளிவடைந்த அதனால் பண்பாள னாகவே அவன் கருதப்பட வேண்டும். தன் வாழ்க்கையிலே புது ஏட்டைத் திருப்பினவன் அவன்; மனம் மாறியவன்.

பாவம் செய்த ஒருவன் அதற்கென மனம் வருந்தி உளம் கசிந்தால் அவன் மன்னிக்கப்படுகிறான். அவன் உள்ளத்திலே இப்படிப்பட்ட தீச்செயலை—பாவத்தை இனி மேல் செய்யமாட்டேன் என தீர்மானித்து விடுவானே யானால் அவன் புனிதமானவனாகிறான். அத்தீர்மானம் அவனைத் தூய்மையானவன் ஆக்கிவிடுகிறது.

நம்முடைய தீச்செயல்கள் நற்செயல்களுக்கான பலன் களில் இருந்து தப்பிக்கும் வழியை இச்சுலோகம் சொல்ல வில்லை. காரண காரியத் தொடர்பாக விளையும் வினைப்பயன்களில் இருந்து நாம் தப்பவே முடியாது.

உலக நியதி கருமபலனில் இருந்து மீள எந்த விதமான ஒழுங்கற்ற குறுக்கீடுகளும் கிடையா என்பதாம். ஆனால் பாவம் செய்தவன் மனம் மாறி தன் சித்தத்தைச் சிவன் பாலே திருப்பி வைராக்கியத்தோடு வழிபடுவானானால் அவன் புதுவாழ்வு பெறுகிறான். அவன் திரும்பவும் அத்தகு பாவச் செயலிலே ஈடுபடமாட்டான்; ஈடுபடக்கூடாது.

'எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.' என்கிறார்
திருவள்ளுவர்.

இந்த வகையில் மனம் மாற்றம் எய்தியவன் மிக விரை விலேயே (தர்மாத்மா) பண்பாளன் ஆகிறான். நித்திய சாந்தியையும் அவன் அடைகிறான். குந்தியின் மைந்தா! என்பக்தன் நாசமடைவதில்லை என்பதை நிச்சயமாக நீ அறி!'
IX (31)

ஒரே ஒரு முறை நாம் நம்மை இறைவனிடம் பூரணமாக ஒப்படைத்து விட்டால் பின்னர் நாம் இருட்கடலிலே விழவே மாட்டோம். எவனொருவன் ஒரு முறையாவது, தன் பாதுகாப்புக்காக உளம் கசிந்துருகி 'நான் உன் அடைக் கலம்; எனைக் காப்பதுன்கடன்' என வேண்டிக் கொண் டாலும் அவனை அச்சத்தில் இருந்து காத்து அவனுக்கு அருட் செய்தலிலே நான் மிகவும் உறுதி பூண்டுள்ளேன் என்கிறார் கண்ணன்.

உயர்ந்த மக்களால் கீழானவர்கள் எனக் கருதப்படுபவர் களும், பாவிகளும் மாதர்களும்கூட என்னைச் சார்ந்து என்னை அடைக்கலமாகச் சார்ந்து வழிபடுவார்களாயின் அவர்களும் நிச்சயமாகப் பரகதி அடைவார்கள்' (IX 32)

அப்படியானால் என் பக்தியில் திளைத்த புண்ணிய மிக்கவர்களையும் வேத விற்பன்ன அந்தணர்களைப் பற்றியும், ரிஷிகளைப் பற்றியும் என்ன விதமான ஐயம் எழக்கூடும்?

**அவர்கள் எளிதில் என்னை அடையக் கூடும் அல்லவா; நிலையற்றதும், துன்பமயமானதுமான இவ்வுலகிலே பிறந்த நீயும் என்னை வழிபடுவாயாக.** 1X (33)

இருவகைப்பட்ட மக்களினம் இங்குக் கூறப்பட்டுள்ளது. ஒன்று ஒழுக்கத்தாலும் செய் தொழிலாலும் சிந்தனையாலும் சொற்களாலும் கிழ்ப்பட்ட மக்களினம்; மற்றொன்றுஅதற்கு மாறான ஒழுக்கத்திற் சிறந்த சிந்தனைத் தெளிவான செந் தன்மை மிக்க அந்தணர்கள், துறவிகள், ராஜரிஷிகள், பக்தி யில் திளைத்தவர்கள். முன்னர் சொல்லப்பட்ட இழிசனர் கள் கூட இறைவனைத் தம் அடைக்கலமாகக் கொண்டு வழிபடுவார்களாயின் உய்தி அடைவார்கள் என்றால் பின்னர்ச் செ ால்லப்பட்டவர்களைப் பற்றி பேச என்ன இருக் கிறது? அவர்கள் நிச்சயமாக என்னை அடைந்தே திருவார்கள்.

எனவே நிலையற்றதும் துன்பமிக்கதுமான இந்த உலகத் திலே பிறந்து விட்ட நீயும் என்னை வழிபட்டு உய்திஅடைக.

'உலகு நிலையற்றது; மாற்றமுடையது; துன்பம் மிகுந்தது. நேற்று இருந்தவன் இன்று இல்லை. இலை உதிர்ந்து சருகாகிறது. நிலையில்லாதவற்றையெல்லாம் நிலையுள்ளனவே என்று கருதுவ்துதான் மயக்கம் (பிராந்தி)

'நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறிவான்மை கடை' என்கிறது மறை.

அதோடு இந்த உலகம் துன்பம் மிக்கதுமாகும். பிறப்பு முதல் இறப்பு வரையிலே துன்பம் அனுபவிக்கிறான் மனிதன் ஏன்? மனிதன் தன்னைப்பற்றிக் கொள்ளும் பொய்ப்பற்று, இந்த உடல்தான் என்னும் மயக்கத்தால் அடையும் துன்பம், தன்னைப் பற்றி வருவனவும் தன்னைச் சார்ந்தவர்களைப் பற்றி வருவனவுமான துன்பங்கள் எனும் எண்ணில டங்கா இவைகளாலேயே. ஒருசில வினாடி இன்பத்துக்காக நாம் செலுத்த வேண்டிய துன்பக் காணிக்கைகள் எத்தனை எத்தனை?

அவாவயப்பட்ட மனிதன் 'தான்' 'தனது' எ அகங்கார, மமகாரத்தால் ஏற்படும் மயக்கத்தில் இருந்து விடு பட்டு மெய்ப்பொருளின் உண்மையை உள்ளபடி உணர்ந்தவ னாயின், அந்த மெய் உணர்வே அவன் அறியாமையைக் களைந்து இன்பத்தை உண்மையான நீடித்த இ அவனுக்கு நல்கும்.

இருள் நீங்கி இன்பம் பயக்கும், மருள் நீங்கி
மாசறு காட்சியவர்க்கு. -குறள்

நாம் பிறந்து விட்டோம்; இறப்பது நிச்சயம். அதிலிருந்து மீள முடியாது. இடைப்பட்ட இவ்வுலக வாழ்க் கையிலே மரபு, பழக்க வழக்கங்கள், குருட்டு நம்பிக்கைகள் தன் சுற்றுச் சார்புகள் எனும் பல சிக்கலில் அகப்பட்டுப் பிறரைப் பின்பற்றி போலி வாழ்க்கை வாழ்ந்து தனக்காக—தன் ஆத்மாவுக்காக—இன்றிப் பிறருக்காக மனிதன் வாழ் கிறான். இந்த நிலையில் உள்ள உலக நிலையாமை செல்வ நிலையாமை இளமை நிலையாமைகளையோ உலகிலே நிலவும் துன்பங்களையோ அவன் நினைப்பது கூட இல்லை. ஏன்! மனிதன் கண்களை மாயத்திரை மறைக்கிறது. அதை அகற்ற ஒரே வழி இறைவனை அடைக்கலம் புகுதல்—அவனை வழிபடுதலே ஆகும்.

**எனவே உள்ளத்தை என்னிடத்திலே நிலை நிறுத்தி, என் பால் பக்தி செய்; என்பக்தனாகி விடு. எனக்கென யாகம் செய். என்னையே வணங்கு. என்னையே உன் வாழ்வின் குறிக் கோளாகக் கொண்டு என்னையே வழிபடுவாயானால் நீ என்னை அடைவது நிச்சயம்.**

உள்ளத்தைப் பரம்பொருளிடத்திலே என்பது என்ன? பல சிந்தனைகளின் இடையிலே சிறிதுநேரம் அவனை நினைத்தல் அல்லது அது. மாறாக, இடையறாது தைலதாரையைப் போல வேறு சிந்தனைகளுக்கு உள்ளத் திலே இடந்தராமல் அவனை உள்ளம் ஒருமுகப்பட தியானித்தலே ஆகும். அப்படித் தியானிக்கும்போது உள்ளம்

உருகி பக்தி செலுத்துதல் வேண்டும். அவனுடைய பக்தனாகிவிட வேண்டும். நான் அவன் பக்தன் எனும் எண்ணம் அழுத்தமாக நம் உள்ளத்திலே பதிய பக்தி செய்தல் வேண்டும். 'நான் வேறெனாதிருக்க: நீ வேறெனாதிருக்க உள்ளம் பயிற்சியைப் பெறுதல் வேண்டும். அதனால் நான் என்னும் ஆணவம் அழிவய்திவிடும்.

யாகம் செய்தலும் அவனை நோக்கித்தானே அன்றி பிறரை நோக்கி யாகம் செய்தலாகாது. அவன் ஒருவனையே வணங்கி வழிபடல் வேண்டும், அவனே நம் குறிக்கோள். அவன் அடிசேர்தலே நம் வாழ்வின் லட்சியம். அதுவே ஆத்ம லாபம். பிற எல்லாம் ஆத்ம லாபம் அல்ல; அழியும் உடல் தொடர்பான லாபங்களே. எனவே வாழ்வின் குறிக்கோள் அவனே என அவனை வழிபட்டால் அவனை அடைவது நிச்சயம்.

உள்ளம் முழுமையும் பரப்பிரம்மத்தின் எண்ணத்தால் நிறைந்து பக்தியோடு கூடிய பேரின்பப் பெருவாழ்வுதான் இறைவனையடையும் வழி.

பக்தனது ஞானமும், சடங்கும், ஆசாரமும், பக்தியிலே கரைந்து விடுகின்றன. அவன் அதனால் அடைவது தன்னை மறந்த பேரானந்தப் பெருநிலை. இதுவே இறைவனோடு ஒன்று பட்ட யோகநிலை.'

ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்



பத்தாம் அத்தியாயம்

# விபூதி யோகம்

'இறைவனே யாவற்றுக்கும் மூலாதாரமானவன்
அவனை அறிதலே அனைத்தையும் அறிதலாகும்,'

என்பதையும் பாலில் நெய்போல இயல்பாக எங்கும் ஊடுருவிப் பரவியுள்ள கடவுளது தன்மையினையும், உலகம், காலம், தத்துவம்முதலிய அனைத்தையும் அவன் கடந்து நிற்கும் தன்மையினையும் விளக்குகின்றது இந்த அதிகாரம்.

விபூதி என்பதற்கு அருளாகிய உத்தமகுணங்கள், பெருமை, மேன்மை, வலிமை என்பன பொருளாகும்.

கீதையின் ஏழாவது அதிகாரத்தின் முதல் சுலோகத்திலேயே 'மாம் சமக்ரம்' என்னும் சொல் வருகிறது. 'என்னை—முற்றும்' என்பதே 'மாம்சமக்ரம்' என்பதின் பொருள். அங்கே சமக்ரம் என்பதற்கு விபூதி, பலம், சக்தி, ஐசுவரியம் ஆகிய குண சம்பன்னனாய் இருத்தல் என்பதே பொருள்: அதே அதிகாரத்தில் இறைவனது தன்மை விவரிக்கப்பட்டுள்ளதை மேலும் விளக்குகின்றது இந்த அதிகாரம்.

கடந்த அதிகாரத்தின் இறுதியிலே 'உள்ளத்தை என்னிடத்தே வைத்து, என்பால் பக்தி செய்து, யாகம் செய்து என்னையே வணங்கி, என்னையே குறியாகக் கொண்டு உள்ளத்தை உறுதிப் படுத்தினால் என்னையே அடைவாய்,' என்கிறார் அல்லவா பகவான்? இந்த முறையிலே ஒன்பதாம் அதிகாரத்திலே பக்தி செய்யவேண்டிய முறைகள் ஒழுங்காகத் தெளிவாக உரைக்கப்பட்டுள்ளன. இந்த அதிகாரத்திலே,

பக்தி உண்டாவதற்காகவும் அது வளருவதற்காகவும் பரம்பொருளின் எல்லையற்ற அருள், வலிவை, மேன்மை, பெருமை முதலாகிய உத்தம குணங்களையும் அண்டமெல்லாம் அவன் உடலாக உள்ளதால் அவன் உருவாய் அவன் ஏவச் செல்லும்படியாக இருக்கும் தன்மைகளையும் விளக்கிக் கூறப்படுகின்றன.

**'பெருந்தோள் உடையவனே! அர்ச்சுனா! என் சொற்களைக் கேட்டு மகிழ்ச்சியடைகின்ற உனக்கு, உன் நலன் கருதி சில மேலான கருத்துக்களைக் கூறுகிறேன். மிகச் சிறந்த கருத்துடைய என் மொழிகளைக் கவனத்துடன் கேள்! X (1)**

**'தேவலோகத்திய தேவர் குழாங்களும், மிகச் சிறந்த மகா முனிவர்களும் என்பிரபாவத்தை(மூலகாரணம், உற்பத்தி) உணரார். ஏனென்றால், அந்த தேவர் கூட்டங்களுக்கும் முனிவர் கூட்டங்களுக்கும் எல்லா வகையிலும் முதற் காரணம் நானே! X (2)**

தேவர்களும் முனிவர்களும் பிறருடைய புலன்களுக்கு எட்டாதவற்றையும் தம் தீர்க்க திருஷ்டியால் காணக்கூடியவராய் பிறறினும் மிகுந்த அறிவுடையராய் இருந்த போதிலும், இறைவனது நாம ரூபம், கருமம், சுபாவம் முதலியவற்றை உள்ளபடியே அறியமாட்டார்கள். ஏனெனில் அந்தத் தேவர்கள் முனிவர்கள் முதலியவர்களுக்கெல்லாம் இறைவனே ஆதியாக இருக்கிறான். மற்றபடி அவர்களது தேவத்தன்மைக்கும் ரிஷித்தன்மைக்கும் காரணமான புண்ணியத்திற்கு ஏற்றபடி அவன் அவர்களுக்குக் கொடுத்திருக்கும் அறிவு மிகவும் அற்பம். இந்த வகையில் பிறரோடு ஒப்பிட அவர்கள் தீர்க்கதிருஷ்டி வாய்ந்த அறிவு மிக்கவரே ஆயினும், அவர்களும் அற்ப அறிவுடையவர்களே. எனவே அந்த அற்ப அறிவினைக் கொண்டு அவர்கள் அளவற்ற சொரூபாதிகளை உள்ள இறைவனை உள்ளபடி எவ்வாறு அறிதல் இயலும்?

பரம்பொருள் பிறப்பிறப்பற்றவன்; சர்வ வியாபி, அதோடு இந்த அகில உலகுக்கும் அவனே தலைவன். அவனுக்குப் பிறப்பு என்பதே இல்லையாயினும் யாவும் அவனிடமிருந்து தோன்றியனவே ஆகும். அவன் அனாதி—அதாவது முதல் என்பதே இல்லாதவன். அனைத்துக்கும் ஆதி காரணன். முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருள் அவன். பின்னைப் புதுமைக்கும் புதுமையான வன் அவனே.

**'எவன் என்னை ஆதி இல்லாதவன் (அனாதி) என்றும் பிறப்பிலி என்றும், உலகங்கள் அனைத்துக்கும் தலைவன் என்றும் அறிகிறானோ அவனே மனிதர்களுள் மயக்கமில்லாதவன், அவனே பாவங்கள் அனைத்தினின்றும் விடுபடுகிறான்.**
**(X-3)**

இறைவன் பிறப்பிறப்பற்றவன். ஆனால் அவனிடமிருந்தே இந்த உலகம் அனைத்தும் உண்டாயின. எனவே அவன் இவ்வுலகங்கள் அனைத்துக்கும் தலைவன். இதை நன்குணர இருமையில் இருந்து (நன்மை தீமை, சுகம் துக்கம் முதலியன) விடுபட்ட குழப்பமற்ற மனநிலை ஒருவனுக்குத் தேவை. அவனை ஆதி இல்லாதவன் (அனாதி) என்றும் உலகம் அனைத்துக்கும் தலைவன் என்றும் உணருகிறவன் மயக்கத்திலிருந்து விடுபடுகிறான் என்கிறது சுலோகம்.

''நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவாண்மை கடை'' என்கிறார் வள்ளுவர். இந்த உலகம், உடல், பொருள் முதலிய யாவுமே அழியும் தன்மையை உடையன. அழியும் பொருள்கள் இடையிலே அழியும் மனிதனும் அழிவில்லாத தன்மை வாய்ந்த இறைவனைப் பற்றிச் சிந்திப்பதில்லை. அவனைப் பற்றிய உண்மையை அறிவதில்லை. இதை அறிவதற்கு நமக்குத் தேவை மயக்கமற்ற இருமையிலிருந்து விடுபட்ட மெய்யுணர்வு. இப்படிப் பட்ட மெய்யுணர்வு வாய்க்கப்பட்டவனே மயக்கமில்லாதவன்; பாவங்களில் இருந்து விடுபட்டவனாகிறான்

'புத்தி, ஞானம் மனக்குழம்பமின்மை, பொறுமை, சத்தியம், ஐம்புலனடக்கம், அந்தக் கரணங்களை அடக்குதல், சுகம், துக்கம், பிறப்பு, இறப்பு, அஞ்சுதல், அஞ்சாமை, அஹிம்சை (உயிர்மாட்டிரக்கம்), உள்ளச் சமனிலை, மன நிறைவு, தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி எனப்படும் பலவித மான பாங்குகள் உயிர்களுக்கு என்னிடமிருந்தே உண்டா கின்றன! (X-4-5)

இவ்விரண்டு சுலோகங்களிலே சொல்லப்பட்ட, பல வேறுவகைப்பட்ட தன்மைகள், குணங்கள் யாவுமே, ஆத்மாக்களுக்குத் தத்தம் பூர்வ ஜென்ம கர்மங்களுக்கு ஏற்றவாறு கருமபலனாகவே உண்டாகின்றன. இந்த உலகம் அனைத்தினுடைய சுக துக்கங்களுக்குக்கூட இறைவனே மறைமுகமாக காரணமாகிறான். அவனே உலக முதல்வன். அவனே வழிகாட்டி. அவனே எல்லை. ஆயினும் அவன் இத்தன்மைகளால் குணங்களால் அணுத்துணையும் பாதிக் கப் படுவதில்லை. ஏனெனில் இங்கு குறிக்கப்பட்ட ஆத்மாக்களின் மனோவிகாரங்கள் எல்லாமே இறைவன் சங்கற்பத்தாலே உண்டாகின்றன. இந்தத் தன்மைகள், குணங்கள், சக்திகளே ஆத்மாவின் விபூதிகள். இறைவன் சங்கற்பத்தினால் உண்டான இந்த விபூதிகளை ஆத்மாக்கள் தங்கள் தங்கள் கருமபலனுக்கு ஏற்றவாறு இறைவனிடமி ருந்து அடைகின்றன; ஏற்று அனுபவிக்கின்றன.

இனி சுலோகத்திலே சொல்லப்பட்ட குணங்களின் விளக்கங்களைக் காணலாம்,

புத்தி என்பது நுட்பமான அறிவு. உலகில் உள்ள அனைத்து மாந்தர்களும் தங்களிடம் இருப்பதாக எண்ணிக் கொண் டிருக்கும் ஒன்று.

ஞானம் : இதை அடைய வேண்டியே கற்ற பல்பலர் முயல் வர். சத்து அசத்து, சித்து அசித்து இவைகளை ஆய்ந்து தேர்ந்து தெளிதலே ஞானமாகும்.

அசம்மோகம் : (மனக்குழப்பமின்மை) எந்தச் சூழ்நிலையிலும் எக்காலத்தும் குழப்பமற்ற சமநிலை வாய்ந்த

மனம் உடையவனாய் இருத்தல். மனக்குழப்பத்தால் தான் மனிதன் தவறு செய்கிறான், இது மயக்க அறிவின்மையாம். சிப்பியை வெள்ளியாகவும் பித்தளையை பொன்னாகவும் காண்டல் மயக்க அறிவு. இது இன்மையே அசம்மோகம்.

பொறுமை : உள்ளத்திற்கு விகாரம் உண்டாகும்படியான தருணத்தில் விகாரமடையாமலிருத்தல்.

சத்தியம் : (உண்மை) உள்ளதை உள்ளபடியே உணர்தல். இதமாகப் பேசுதல், யாதொன்றும் தீமை இலாத சொலல்.

தமம் : புறக் கரணங்களை (ஐம்புலன், செயல்கருவிகள்) தீவழிகளில் (அனர்த்தங்களில்) செல்லவொட்டாமல் தடுத்தல்.

சமம் : அந்தக்கரணங்களை (மனம், புத்தி" சித்தம் இவைகளை) மேற்கண்டவாறு தடுத்து நிறுத்தல்.

சுகம் : தனக்கு இன்பம் தருவனவற்றை அனுபவிப்பது.

துக்கம் : தனக்குத் துன்பம் தருவனவற்றை அனுபவிப்பது.

பவம் : உண்டாதல், உண்டாக்கல்

அபாவம் : அழிதல்; அழித்தல்

பயம் : துக்கம் உண்டாவதற்குக் காரணமானவற்றைக் காண்பதால் ஏற்படும் மன மருட்சி.

அபயம் : மேற்கண்டவாறு பயமின்மை.

அஹிம்ஸை : ஓருயிர்க்கும் தீங்கு செய்ய எண்ணாமை. பிறர் துயரத்துக்குத் தான் காரணமாகாமை.

சமதை : நண்பன், விரோதி, யாவரிடத்தும் நன்மை தீமைகளில்; ஒருமனதாய் (உள்ளம் சமநிலையோடு) இருத்தல் விருப்பு, வெறுப்பு அற்று இருத்தல்.

துஷ்டி : திருப்தி—சந்தோஷம்—போதுமென்ற மனநிலை

தவம் ; உள்ள துறவொழுக்கம்

தானம் ; தான் அனுபவிக்கத் தனக்குக் கிடைத்ததையும் பிறருக்களித்து இன்புறுதல்

கீர்த்தி : புகழ் (பிறர் மெச்ச வாழ்தல்)

அபகீர்த்தி ; இகழ் (பிறர் இகழ வாழ்தல்)

இவையாவுமே மனித குலத்தின் மனோவிகாரங்கள் மனோவியாபாரங்கள்—மற்று, இவைகளோ இறைவன் சங்கற்பத்தினாலே உண்டாகின்றன.

**'ஏழுமகரிஷிகளும் ,முன்னைய பூர்வீக நான்கு மனுக்களும் என் பிரபாவத்தை 'உடையவர்களாய் என்னுடைய சங்கற்பத்தால் பிறந்தார்கள். இவ்வுலகின் உயிர்கள் யாவும் அவர்களிடமிருந்து வந்தவைகளே; (X-6)**

**'(இந்த முறையிலே) யார் எனது இந்த விபூதிகளையும் (பெருஞ்சிறப்புகளையும்) யோகத்தையும் உள்ளபடி அறிகின்றானோ அவனே சலியாமல் (சலனமற்று) தன் யோக நெறியைச் சார்ந்தவனவான். இதில் ஐயமே இல்லை.' (X-7)**

இவ்வாறு அண்ட கோளங்கள் அனைத்தினுடைய உயிர்கள் யாவற்றினுடைய—தோற்றங்களுக்கும் அவை நிலைத்திருப்பதற்கும். அவற்றின் முடிவுக்கும் இறைவன் சங்கற்பமே காரணம் என்கின்ற இந்த விபூதியை (பெருஞ்சிறப்பினை—ஐஸ்வர்யத்தை)யும் அவன் தன் கல்யாண குணங்களையும் எவன் உள்ளபடி அறிகின்றானோ அவன் சலியாத யோக நிலையிலே நிற்பான். தன் நிலையிலே அவன் சிறிதும் தடுமாற்றமடைவதில்லை. இதில் ஐயமே இல்லை.

'நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது' என்பதல்லவா குறள்.

**'நானே யாவற்றினுடைய உற்பத்தி ஸ்தானம் (பிறப்பிடம்) அண்டங்களாம் இவை யாவுமே என்னிடமிருந்தே கிளைத்து பரந்து விரிவடைகின்றன. இவ்வண்ணமாக, அறிஞர்கள் என்னை அறிந்து அன்புணர்வோடு கூடியவர்களாய் என்னை ஏத்தித் தொழுகின்றனர்.'** (X-8)

அவனே சித்தும் அசித்தும் விசித்திரமுமாய் உள்ள உலகனைத்துக்கும் தலைவன் ஈஸ்வரன் மரம் செடி கொடி களுக்கு நிலம் ஆதாரத் ஆவதைப் போல இந்த உலகுக்கு அவனே மூலாதாரம். அவனே பயனைத் தருபவன். ஒரு சாதகன், ஒரு யோகி, பக்தன், ஆகிய யாவரும் தம்மைக் கடந்துசெல்லுகின்ற, தம் வாழ்க்கைப் பாதையிலே குறுக் கிடுகின்ற புறத் தோற்றங்களுக்கு மயங்குவதில்லை. அதனால் குழப்பமடைவதில்லை. மாறாக, அவர்கள் இவை யாவும் மாயையே எனக்கருதி மனத்திட்பத்தோடு, அன்புணர்வோடு, இறைவனே எல்லா தோற்றங்களுக்கும் மூல காரணன் என்னும் உணர்வோடு, இறைவனை ஏத்தி வழிபடுகின்றனர். அப்படி வழிபடுவதனால் அவர்களுக்குத் தெய்வத் தன்மைகள் வந்தமைகின்றன.

**'மேற் சுலோகத்திலே சொல்லப்பட்ட அறிஞர்கள் சித்தத்தை என்பால் எக்காலும் வைத்திருப்பவர்கள்; ஆத்மாவை எனக்கே அர்ப்பணம் செய்துவிட்டவர்கள், என்னைப்பற்றி ஒருவருக்கொருவர் விளக்கிப் பேசிக் கொள் பவர்கள்; எக்காலமும் என்புகழ்பாடி தோத்தரித்து அதனால் என்னிலே மனநிறைவும் பேரானந்தமும் அடைபவராகின்றனர்.** (X-9)

'சிந்தனை நின்தனக் காக்கி என்கிறார் மாணிக்கவாசகர் சித்தம் அலைந்து திரியும் இயல்பினை உடையது. அதை அடக்கி ஒருமுகப்படுத்தி இறைவன்பால் வைத்திருப்பது கடினமான செயல். ஆனால் இறைவனுடைய தன்மையை உள்ளபடி உணர்ந்தவர்கள் தம் சித்தத்தை அவன்பால்

சிதறாமல் வைத்திருப்பார்கள். ஏனெனில் தனக்கு மிக விருப்பமான பொருள் இவ்வுலகத்திலே இறைவன் ஒருவனே ஆதலால், எல்லாப் பொருள்களுக்கும் உலகம் ஆதாரமாக இருப்பதைப் போல எல்லா உயிர்களுக்கும் உலகுக்கும் இறைவனே ஆதாரமாக இருக்கின்றவன் என்பதை அவர்கள் அறிந்தவர்கள் ஆதலால் என்க.

எந்தப்பொருள் நமக்கு ஆதாரமானதோ, எந்தப் பொருள் நமக்கு மிகவும் விருப்பமானதோ, அதையே நம் சித்தம் சென்று பற்றும், அதிலேயே நிலைத்து நிற்கும். இவ்வகையிலேயே ஞானிகள், இறைவன் யாவற்றுக்கும் ஆதாரமானவன் என்பதையும் அவனது அளவற்ற நித்ய கல்யாண குணங்களையும் நன்கு அறிந்தவர்கள். ஆகையி னால் அவனையே மனம் சென்று பற்ற இடையறாமல் சிந்திப்பார்கள். தத்தமக்குள் அவனைப் பற்றிப் பேசிக் கொண்டும் அதனால் ஆனந்தமடைந்தும் அவன் குணங் களையே பூஜித்துக் கொண்டும், வாழ்த்தியும், வணங்கிக் கொண்டும், அதனால் தம்தம் மனநிறைவும் ஆனந்தமும் அடைவார்கள்.

**'எக்காலத்தும் யோக முயற்சியோடு அன்புள்ளத்தோடு என்னை வழுத்தி பஜிப்பவர்களுக்கு நான் புத்தியோகத்தை வழங்குகிறேன். அதன் மூலம் அவர்கள் என்னை அடை கின்றனர்,** X-10

மேலே முன் சுலோகத்திலே சொன்னபடி இறைவன் பேரருள் திறத்தினை அவனுடைய சர்வ ஆற்றலை, பிற பிற தன்மைகளைச் சொல்லும்போதே இனிமை பயத்தலாலும்; அதுவே வாழ்க்கைப் பயன் உடைய தாக அமைவதாலும், சொல்பவர்கள் ஆனந்தமடைகிறார் கள். கேட்பவர்களுக்கு, கேட்ட பொழுதே இனிமை பயந்து அவர்கள் வாழ்க்கையைப் பயன் உடையதாகச் செய்தலாலே கேட்பவர்களும் ஆனந்தமடைகிறார்கள். அப்படிப்பட்ட அவர்கள் என்னையே அடையவேண்டும் என்னும் யோக

முயற்சியோடு அன்புடன் என்னைத் துதித்து வழுத்தி பஜித்தால் நான் அவர்களுக்கு பக்தி ரூபமான, பக்குவமான புத்தி விசேஷத்தைத் தருகிறேன். அதைக் கொண்டு அவர்கள் நம்மையே வந்தடைகின்றனர். இங்கு புத்தி யோகம் என்று சொல்லப்பட்டிருப்பது உள்ளம் பக்தி வயப்படும் புத்தி. அதாவது பக்தி மீதூரிய ஞானம். இதனால் பக்தி செய்பவன் இறைவனைத் தன்னிலே மட்டுமல்லாமல் எல்லாப் பொருள்களிலும் கண்டு கண்டு, பக்திக் கடலிலே படிகிறான்.

*பிறிவு அறியா அன்பர் நின் அருள் பெய்கழல்*
*தாளிணைக்கீழ்*
*மறிவு அறியாச் செல்வம் வந்து பெற்றார்*
*—(திருவாசகம்)*

**'நான் அவர்களுக்கு அருள் செய்வதற்காகவே, கருணையோடு, இரங்கி அவர்கள் உள்ளத்திலே வீற்றிருந்து (ஆத்மபாவஸ்த); ஒளிர்கின்ற ஞானதீபத்தினால், அவர்களிடம் அமைந்துள்ள அஞ்ஞான இருளை நாசம் செய்கிறேன்.'**
X (11)

இறைவன் நம் ஆத்ம உய்திக்காகவே இவ்வுலகை கருணையோடு, இரங்கிப் படைத்துள்ளான். உலகத்தில் வாழ்ந்து, தம் கர்மபலனைத் துய்த்துக் கழித்து ஞானம் எய்தி வீடு எய்த இவ்வுலகமே காரணமாக அமைந்துள்ளது. ஆனால் இறைவனோ இதில் எவ்வகையிலும் பந்தப்படாமல் விலகி நிற்கிறான்.

சுலோகத்திலே சொல்லப்பட்ட ஆத்ம பாவஸ்த அதாவது உள்ளத்திலே (ஆத்மாவிலே) வீற்றிருந்து என்பதற்கு மக்கள் உள்ளத்துள்ளே உள்ள 'அந்தராத்மா' என்று பொருள் கொள்ள வேண்டும். உள்ளம் பெருங்கோயில் என்கிறார் திருமூலர்.

இதில் பகவான் கண்ணன், எவ்வாறு பக்தியானது அஞ்ஞான இருளை, அழித்து ஞானச்சுடரை எழச்செய்கிறது என்பதை விளக்குகின்றார்.

இறைவன் மனித ஆத்ம ஜோதியிலே தன்னை வெளிப் படுத்துகிறார். அன்பு. பக்தி, ஞானம் ஆகிய இவைகள் ஆத்மாவிலே மேலோங்கும்போது பரம்பொருள் அவனிடம் குடிகொள்ளுகிறான். பக்தியும் இவ்வகையிலேஞானத்துக்குக் காரணமாகிறது. அதன் மூலமாகவே நாம் தெய்வீக அருளை யும் மெய்யுணர்வெய்தும் திறனையும் அடைகிறோம். இதுவே புத்தியோகம் (மெய்யுணர்வடைதல்) புத்தியின் நேரிடையான அகத்திற உணர்வால் தான், நம்முடைய அறிவுத்திறன் ஒளிமயமாக ஆக்கப்படுகிறது. புத்தி நிச்சயம் உண்டாகிறது.

இடையிலே அர்ச்சுனன், பகவான் கண்ணனிடம் தன் கோரிக்கைகளைச் சமர்பிக்கிறான். இதுவரை தான் கேட்ட வற்றுள் எழுந்த ஐயப்பாடுகள் மட்டுமல்ல. இனி அவன் கேட்பது இறைவனது விபூதிகளின் (தன்மை குணம் வீரியங் களுள்) இதுவரை கேட்டவை போக எஞ்சியவற்றையும் கேட்க அவாவுகின்ற உள்ளத்தனாய் அவைகளை விளக்கிச் சொல்லுக என்று வேண்டுகோள் விடுக்கிறான். (சுலோ 12 முதல் 18 வரை)

'அர்ஜுனன் உரைக்கிறான் :

**'தாங்களே பரப்பிரம்மம், மேலான இருப்பிடம், அதாவது மோக்ஷம். யாவரையும் தூய்மையாக்கும் தூயதான பரஞ் ஜோதி. எல்லா முனிவர்களும் தேவரிஷியாகிய நாரதரும் அப்படியே சொல்லுகின்றனர். அசிதர், தேவலர், வியாசர் யாவருமே உம்மை நித்திய மானவர் என்றும் திவ்விய புருஷன் என்றும் ஆதி தேவர் என்றும், பிறப்பற்றவர் என்றும் வருணிக் கின்றனர். தாங்களும் அப்படியே உரைக்கின்றீர்.'** X(12&13)

பகவான் கண்ணன் இதுவரை சொன்னவைகளையே பரம்பிரம்மத்தின் விபூதிகளை—எல்லாம் அப்படியே அர்ஜுனன் ஏற்றுக் கொள்ளுகிறான். அதோடு, இதுவரை தனக்கு உபதேசம் செய்து கொண்டிருப்பவனான கண்ணனே பரப்பிரம்மம்; பிரம்மத்தின் அவதாரம்; நிர்குண நிரா

தாரன்; அவனை அடைக்கலம் அடைந்தால் நாம் நம் ஆத்ம உய்தி அடைந்து மேனிலை அடையலாம் என்னும் தன் உள்ளத்தெழுந்த பற்றுறுதியினை இங்கு வெளிப்படுத்து கிறான். பற்பல ஞானிகள்,— ரிஷிகள், பரம்பிரம்மத்தினை உணர்ந்தஅதனுடன் ஒன்றி நின்றவர்கள் ஆகியோர்சொன்ன உண்மைகளை அவன்அப்படியே ஏற்று இங்கு வெளிட்படுத்து கிறான்.

தூய பரிபூரண ஞானத்தினை உபதேசிப்பவன் ஆண்டவனே. ஞானிகளோ அதற்குச் சான்றாக நிற்பவர்கள். அர்ஜுனன் இதைத் தன் அனுபவத்தினால் அறிந்தவன்) அவன் மேலும் சொல்லுகிறான்.

**'கேசவா! நீர் எதை உபதேசிக்கின்றீரோ, அது முற்றிலும் உண்மை என்றே ஏற்றுக் கொள்ளுகிறேன் ஓ! பகவானே! உம்முடைய அவதார பிரபாவத்தை (வியக்தியை) தேவர்களும் அறியார் தானவர்களும் அறியார்.'** (X 14)

'இங்கே 'பகவானே' என்று அர்ஜுனன் கிருஷ்ணனை விளிக்கிறான். பகவான் சக்தி அறம், செல்வம், பலம் வைராக்கியம் தேஜஸ் ஆகிய ஆறும் நிறைந்த ஷட்குணன், அவன் ஏன் தன்னை அவதார புருஷனாக வெளிப்படுத்திக் காட்டினான் என்னும் பிரபாவத்தை (வியக்தியை) தேவர் களும் அசுரர்களும் அறிய மாட்டார்கள்.

ஆனால் கண்ணின் உபதேசத்தினால் அர்ஜுனன் இறைவன் பிரபாவத்தை உஅளபடி உணர்கிறான். அவனுடைய பக்தர்களும் ஓரளவு இதை அறிந்து கொள்ள முடிகிறது.

**'புருஷோத்தமா! அனைத்து உயிர்களையும் படைத் தவனே! உயிர்களுக்கெல்லாம் இறைவனே! தேவதேவனே! அண்டங்கள் அனைத்தையும் ஆள்பவனே! உன்னை உன்னா லேயே நீயே உள்ளபடி அறிவாய் (பிறர் அறியார்).'** X (15)

இறைவன் பற்பல ஆத்மாவுள்ளே மிகச் சிறந்துவிளங்கும் பரமாத்மா. அதாவது புருஷர்களிலே சிறந்தவன் புருஷோத்

தமன். அனைத்து உயிர்களையும் படைத்துக் காக்கும் தேவதேவன் அவன். அவனே உலகனைத்தையும் ஆள்பவன். அவன் மகிமையை ஒருவராலும் அறிய முடியாது. அவன் தன்னாலே தானே தன்னை அறிபவன்.

இந்த உடல், உலகம், எனும் இவைகளை எல்லாம் அறிவது ஐந்து பொறியும் புலன்களுமே. இந்தப்புலன்கள் மனம் இயக்க இயங்கி உயிருக்கு விஷயங்களை அறிவிப்பவை. இவற்றை அறிவது புத்தி. இந்தப் புலன்கள், மனம், புத்தி இவையாவும்ஆத்மாவால் அறிவிக்கப்பட்டு அறிந்திருத்தலின் இவை யாவுமேஅறியமாட்டா. ஆனால் ஆத்மா இவைகளை அறியும். இது ஜீவாத்மா, இது தன்னைத்தான் அறியாது.

ஆனால் இந்த பரமாத்வாவோ இதற்கு முற்றிலும் மாறு பட்டவன். அவன் தன்னாலே தானே தன்னை உள்ளபடி அறிபவன்.

பார்த்தன் மேலும் கூறுகிறான்.

**'எந்த விபூதிகளினால் நீர் இந்த அண்டங்கள் அனைத்தினையும் வியாபித்து இருக்கின்றீரோ அந்த தெய்வப் பெற்றியினை உடைய பரமாத்ம விபூதிகளை எவ்வித குறை பாடும் இல்லாமல் (மிச்சம் மீதி இல்லாமல்) எனக்கு விவரித்துரைக்க நீரே கடமைப்பட்டுள்ளீர்.'** X (16)

எந்த விபூதி ரூபங்களாலே (அறம், அருள், சக்திதேஜஸ், பலம் முதலிய குணங்களாலே) இந்த உலகங்களை எல்லாம் வியாபித்துக் கொண்டிருக்கின்றீரோ, அவைகளை எனக்கு முற்றும் உணர்த்தநீரே தகுந்தவர். அதாவது ஆத்ம சொரூபியான உம்முடைய விபூதி ரூபங்கள் அற்புதமானவை. எந்த ஆத்ம சிற்சக்தியின், மான்னிய விசேடத்தாலே நீர் இந்த அண்டங்களாக வியாபித்துள்ளீரோ அந்தச் சக்தியின் விபூதி விசேடத்தை முழுமையாக உணர்த்த நீரே தக்கவறாவீர்.

இங்கே இந்த அத்தியாயத்திலே சொல்லப்பட்ட விபூதி என்பது தெய்வீகப் பேரொளிப் பிழம்பின் வெளிப்பாட்டு

அண்டங்கள் அனைத்திலும் பரவியுள்ளது. இதுவே உலகில் உள்ள ஒவ்வொரு உயிருக்கும், பொருளுக்கும், ஆக்க சக்தியையும் தெய்வீக வலிமையையும் தருகின்றது. இதுவே இயற்கையாக பரிணமிக்கிறது.

எனவே இத்தகு பெற்றி வாய்ந்த அளத்தற்கரிய இறைவனது விபூதிகளை (தன்மைகளை) அவனே எடுத்தியம்புதலே பூரணமானதாகும்; பிறர் அதைச் சொல்லவே இயலாது.

**'யோகீஸ்வரா! பக்தியால் உம்மையே எவ்வகையிலே இடையறாது தியானித்து நான் பூரணமாக, முழுமையாக உம்மை அறியமுடியும்? (முன்னே, உரைத்த புத்தி, ஞானம் முதலிய பாவனையைக் காட்டிலும்) இன்னும் எந்தெந்த பாவனைகளில் இருப்பவராக உம்மை தியானிக்கலாம்.'** X(17)

பகவானே உம்முடைய பலவகையான, மேன்மையுற்று விளங்கும் இறை ஒளி மாட்சிகளைப் பூரணமாக (முழுமையாக, பக்தியால் இடையறாது தியானிப்பதனால் மட்டுமே, நான் உம்மை அறிய வாய்ப்புண்டா? ஏனெனில் நீ மனம், வாக்கு காயங்களுக்கு எட்டாதவன், இந்த பக்தியால் மட்டுமே உன்னை அறியக்கூடுமா) அல்லது இங்கு எனக்கு இப்போது கூறியவை தவிர வேறு எந்தெந்த பாவனைகளால் உம்மை தியானித்துப் பூரணமாக அறியக் கூடும்? அர்ச்சுனன் இறைவனுடைய தரிசனம் வேறு எந்த பாவனைகளில் பூரணமாக அடையக்கூடும் என்று விளக்கமாக அறிந்து கொள்ள விழைகிறான். இங்குக் கேட்ட விபூதிகளின் தொடர்ச்சியை அறிய ஆவல் கொள்கிறான். எவ்வகையிலே இடையறாது தியானித்து நான் உம்மை அடைய முடியும்? என்பதிலே, நான் உமது எந்த கல்யாண குணங்களை தியானிக்கவேண்டும்? எந்த நாம ரூபத்திலே உம்மை தியானிப்பது? உம்மை எந்த பாவனையில் நான் என் சித்தத்திலே நிலைநிறுத்த வேண்டும்?

என்ன பாங்கிலே நான் உம்மைச் சிந்திப்பது? யோகீஸ்வரா விளக்குக'' என வேண்டுகிறான், அவன்.

கிருஷ்ணன் யோகங்கள் அனைத்துக்கும் தலைவன் எனவேதான் அர்ஜுனன் அவனை 'யோகீஸ்வரா' என விளிக்கிறான்.

**'ஜனார்தனா! உமது யோகத்தையும் விபூதியையும் மேற்கொண்டு விவரமாக எனக்கு விளக்குவீராக. ஏனெனில் உம்முடைய மொழி அமுதத்தைக் கேட்கின்ற எனக்கு அது தெவிட்டவில்லை.'** X (18)

உலகப் பொருள்கள் அனைத்துமே நமக்கு அலுத்து விடுகின்றன. நேற்று நமக்கு ருசித்தது இன்று ருசிப்பதில்லை. நேற்று வேண்டாதது இன்று தேவைப்படுகிறது. கேட்ட விஷயங்களையே திருப்பித் திருப்பிக் கேட்பது சலிப்பைத் தருகின்றது. பழகப பழகப் பாலும் புளிக்கும் அல்லவா? வெறுப்பன உவப்பாம்: உவப்பன வெறுப்பாம் என்கிறார் பட்டினத்தடிகள். ஆனால் இறைவனது அளவிடற்கரிய சிறந்த தெய்வீக குணங்களைக் கேட்கக் கேட்க தெவிட்டுவதில்லை. ஏனெனில் அவன் முன்னைப் பழம் பொருட்கும் முன்னையவன்; பின்னைப் புதுமைக்கும் புதுமையானவன். எனவே புதுமையைக் காணும் உள்ளம் கொண்ட மனிதன் ஆத்மா என்றும் புதுமையானவனாக உள்ள இறைவனது திவ்ய குணங்களைக் கேட்பதில் சலிப்படைவதில்லை, தெவிட்டுவதில்லை. ஆகையினாலே கண்ணா; உமது விபூதியையும் யோகத்தையும் விபரமாக எனக்குக் கூறுங்கள் என வேண்டிக் கொள்ளுகிறான் பார்த்தன்.

யோகம் என்பது — இறைவன் அனைத்தையும் ஆளும் தன்மையைஅறியும் சக்தியை உணர்த்தும்.

விபூதி — இறைவனது எண்ணற்கரிய தன்மைகளை விசேஷங்களை உணர்த்தும் சொல். இங்கு எந்தப் பொருள் — தன்மை + மூலம் அவன் உபாசிக்கத் தக்கவன் என்பதே அர்ஜுனனின் கேள்வி.

இறைவன் மேன்மைகளையும் சௌலப்பியத்தையும் (அடியார்க்கு எளியனாத் தன்மைகளையும்.) கேட்கக் கேட்க மனம் சலிப்படையாது. மாறாக அதில் ஆர்வம் பெருகும்; கேட்கும் உள்ளம் இனிப்படையும்.

> "நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தோறும்
> எப்போதும்
> அனைத்தெலும்புள் நெக ஆனந்தத் தேன்சொரியும்
> குனிப்புடையான்" என்கிறது திருவாசகம்.

"பார்த்தாலும், நினைத்தாலும், படித்தாலும் படிக்கப் பக்க நின்று கேட்டாலும் இத்தனைக்கும் தித்திப்பவன் இறைவன்.'—திருவருட்பா.

எனவே பார்த்தன் சொல்கிறான்; உம்முடைய எண்ணரிய வல்லமைகளை, சிறப்புக்களை விபூதிகளை எனக்குச் சொல்லுங்கள். அவை மொழிகளேஅல்ல; அமிர்தம் அவை பருகப் பருக எனக்குச் சலிப்புத் தட்டுவதில்லை; திகட்டுவதில்லை என்கிறான்.

இறைவன் பதிலளிக்கிறான்.

**'குரு குலத்துச் சிறந்தவனே! மிக நன்று (அப்படியே கேள்) மேலான என் தெய்வந்தன்மை வாய்ந்த என் மகிமைகளில் மிக முக்கியமானவைகளை மட்டும் உனக்குச் சொல்லுகிறேன். ஏனெனில் என்மகிமைகளுக்கு எல்லைஎன்பதே கிடையாது. அவை அளத்தற்கரியன."** X (19)

உலகில் உள்ள இயற்கைச் சக்திகள், உயிரினங்கள் மக்களினம் இவை யாவுமே இறைவன் விபூதிகளே. இவை

களை எல்லாம் ஏட்டில் அடங்க வைப்பது இறைவனுக்கே சாத்தியமில்லை. இறைவனின் பருவடிவம் இந்த அகில உலகமும் அதிலே உள்ள இயற்கையுமே. எப்படி இறைவன் அளத்தற்கரியனோ அப்படியே இயற்கையும் அளத்தற் கரியது. அவன் மகிமைகளிலே முதன்மையாக, சொல்லப் படுவது இது.

**'உறக்கத்தை வென்றவனே! (குடாகேசா!) எனக்கு உடலாக (சரீரமாக) உள்ள எல்லாப் பிராணிகளின் உள்ளத்திலும் நான் ஆத்மா வாக இருக்கிறேன், அவைகளின் தோற்றங்களுக்கும் நிலைத்து வாழ்வதற்கும் இறுதிக்கும் காரணன் நானே. (அதாவது ஆதியும், மத்தியமும், அந்தமுமாக இருப்பவன் நான்)'** X (20)

'விழித்திரு' என்கிறார் இராமலிங்க அடிகளார், உறக் கத்தை வென்றவன் என்றால் எல்லாம் வகையிலும் விழிப் போடு இருப்பவன் என்பதே பொருள், விழிப்போடிருப் பவனுக்கே இறைவன் வியாபகம் விளங்கும். இவ்வகையிலே அர்ஜுனன் உறக்கத்தை வென்றவனாகிறான்; சூட்சும புத்தியுள்ள அவன் இவைகளை நன்கு உணர வல்லவன். எனவே கண்ணன் அவனை குடாகேசா என்று அழைக் கிறார். (குடாகேசா—உறக்கத்தை வென்றவன்)

பரமாத்மா, எல்லா உயிர்களுள்ளும் ஆத்மாவாகவே உள்ளார். ஆத்மாவாக எல்லாவற்றுள்ளும் இருப்பதால்தான் தோற்றம் நடைபெறுகிறது. உயிர்கள் வளர்ச்சியடை கின்றன, பிறந்து வளர்ந்தவை தேய்ந்து அழிகின்றன. எனவே இந்தப் பரிணாமம் என்பது இறைவனே என்பதாம்.

இந்த வகையிலே அனைத்துயிர்களின் தோற்றம், நிலை ஒடுக்கம் யாவும் பரமாத்மாவின் இடத்ததே யாகும் என்ப.

பரமாத்மா, அனைத்துயிர்களின் ஜீவாத்மாவாக விளங்குகிறான். அதோடு அவன்,

'அர்ஜுனன்! ஆதித்தியர்கள் பன்னிரண்டில் பன்னிரண்டாவதானதும் மிக்க சிரேஷ்டமானதுமான 'விஷ்ணு' நானே உலகத்திலே ஒளியுள்ளவைகளிலே மிகப் பிரகாசம் பொருந்திய ஆதித்திய கணத்தைச் சார்ந்த 'ஞாயிறு' நானே. நாற்பத்தொன்பது வகை மருத்துக்களில் (காற்றுக்களில்) 'மரீசி' என்னும் வாயு நானே. இரவில் ஒளிரும் விண்மீன்களில் அவைகளை ஆளும் சந்திரன் நானே.' X (21)

ஆதித்தியர்கள் என்பவர்கள் வேதகால தேவதைகள். அவை பன்னிரண்டாகும். (ஆதித்தன்—சூரியன்) அவை பன்னிரண்டு மாதங்களில் சஞ்சரிப்பவை. பன்னிரண்டாக கருதப்படுகின்றன. உலகில் உள்ள யாவற்றுள்ளும் இறைவன் குடி கொண்டிருப்பினும் மற்றவைகளிடத்திலும் ஒரு சிலவற்றுள்ளே அவன் தலைமை நிலையோடு திகழ்கின்றான். இந்த இந்த உலகத்திலே எல்லாப் பொருள்களுக்கும் ஒருவகைப்பட்ட ஏறுமுகம் உண்டு. படிப்படியாக ஒன்றில் ஒன்று சிறந்து விளங்கும் தன்மை உண்டு.

மிக எளிமையானது, எளிமையானது, மிகச் சாதாரணமானது, சாதாரணமானது, மத்திமமானது, சிறந்தது, மிகச்சிறந்தது, மிகமிகச் சிரேஷ்டமானது (முதன்மையானது) என நாம் யாவற்றையுமே பாகுபடுத்திப் பார்க்கிறோம், இந்த வகையிலே முதன்மையானதில் இறைவன் முதன்மையாக விளங்குகின்றான்.

சடப் பொருள்களினும், உயிர்ப்பொருளிலே—ஆத்மாவிலே-கடவுள் அதிகமாக வெளிப்படுத்தப் படுகிறார், வாழ்க்கையைக் காட்டிலும் உள்ளத்தின் விழிப்பு நிலையிலே அவன் நன்கு வெளிப்படுகிறான். மற்றவரைவிட தன்னை உணர்ந்த ஞானிகள் முற்றுந் துறந்த முனிவர்களிடத்திலே அவனை நன்கு காணலாம், உணரலாம், தனிமனிதர்களினும், மிக மேம்பட்ட சான்றோர்களிடத்திலும், தவசீலர்களிடத்தும் அவன் விளங்கிக் காணப்படுகிறான்.

இந்த முறையிலே பகவான் கண்ணன், (இந்தச் சுலோகத்தில் இருந்து 39வது சுலோகம் முடிய) அடுத்துவரும் சுலோகங்களிலே உலகத்திலே உள்ளஒவ்வொரு பொருளிலும் மிகச் சிறந்து மேலானதாக விளங்கும் பொருளாகவே 'தான்' இருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

**'இருக்கு, யசுர், சாமம் அதர்வணம் எனச்சொல்லப்படும் நான்கு வேதங்களிலே மிகச் சிறந்ததான சாம வேதம் நான்; தேவர்களிலே இந்திரன் நான். இந்திரியங்களுள் மனதாக நான் இருக்கிறேன். உயிர் உள்ள ஜந்துக்களிலே நான் உணர்ச்சியாக இருக்கிறேன்.'** X (22)

வேதங்கள் மூன்றே. அதர்வம் பிற்சேர்க்கை என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. எப்படி இருப்பினும், சதுர் வேதம் என்றே, நான்கு வேதங்களை ஒன்றாக்கிச் சொல்லப் படுகிறது. இந்த வேதங்கள் நான்களுள் சாம வேதமே, இசைலயத்தோடு பாடக் கூடியது; ஆகையினால் சதுர் வேதங்களில் சாமவேதமே தலையாயது என்று கருதப் படுகிறது. சாம வேத கீதம் பாடியே, இராவணன் இறைவனை வழிபட்டான் என்பது புராணம், இப்படிப்பட்ட சாம வேதமாக அவன் உள்ளான்.

தேவர்களின் அரசன் இந்திரன். அதனால் கண்ணன் 'இந்திரனாக இருக்கிறேன்' என்கிறான். எந்தப் புலன் உணர்வும் மனமின்றி இயங்கினால் பயனில்லை. ஆதலால் இந்திரியங்களுள் இறைவன் மனமாக இருக்கிறான். உயிரின் ஆற்றல் உணர்விலேதான் உள்ளது; அந்த உணர்வற்றது ஜடமே. ஆகையினாலே உயிர்களிலே அவன் உணர்வாக விளங்குகின்றான்.

**'பதினொரு உருத்திரர்களிலே நான் சங்கரனாக இருக்கிறேன். யக்ஷ ரக்ஷகர்களிலே, செல்வ பதியாகிய குபேரனாகவும், வசுக்களிலே நான் அக்கினியாகவும், கொடுமுடி கூடிய மலைகளுள் நான் மேருமலையாகவும் இருக்கிறேன்.'** X (23)

பதினொரு உருத்திரர்கள்; இவர்கள் துவாதச உருத்திரர்கள் எனப்படுவர். இந்த உருத்திரர்கள் பதினொருவரில் சிறந்த சங்கரனாக இருக்கிறான் கண்ணன், யக்ஷன், ரக்ஷசன், பொருளுக்கு அதிபதிகளாக உள்ளவர்கள். அவர்களுள் சிறந்தவன் குபேரன், அவனாக உள்ளவன் கண்ணன்.

வசுக்கள் எட்டு பேர். இவர்களை அஷ்ட வசுக்கள் என்பர். நிலம், நீர், நெருப்பு, காற்று வெளி எனும் ஐம்பூதங்களுடன் ஞாயிறு, திங்கள், விண்மீன் எனும் மூன்றையும் சேர்த்து வசுக்கள் என்பர். இவைகளுள் அக்கினியாக கண்ணன் இருக்கிறான். மலைகளிலே சிறந்தது பொன்மயமான மேரு மலை. மலைகளிலே கண்ணன் மேரு மலையாக விளங்குகின்றான்.

**'பார்த்தா, புரோகிதர்களுள் நான் மிகச் சிறந்த பிரகஸ்பதி என்று அறிந்து கொள்; சேனாபதிகளுள்ளே நானே கந்தனாகவும், நீர் நிலைகளுள்ளே நானே கடலாகவும் விளங்குகின்றேன்.'** X (24)

புரோகிதர்களுள் வேத விற்பன்ன பிரகஸ்பதி பகவானாக, சேனாபதியிலே மிகச் சிறந்த கந்தபிரானாக, விளங்கும் அவனே நீர் நிலைகளிலே மிகப் பெரிய சமுத்திரமாகவும் விளங்குகின்றான்.

**'மரீசி முதலான மகரிஷிகளுள் நான் பிருகு மகரிஷியாவேன். பொருளைக் குறிக்கும் சொற்களுள்ளே, பிரணவம் என்னும் ஓரெழுத்துச் சொல் நான். யக்ஞங்களுள் (தன்னை—தன் உள்ளத்தை ஈசுவரார்ப்பணம் செய்தல்) நான் சிறந்து விளங்கும் ஜப யக்ஞமாக விளங்குகிறேன். இயங்காமல் நிலைத்த பொருள்களிலே (அசலத்திலே அல்லது ஸ்தாவரத்திலே) நான் இமாலய மலையாக விளங்குகின்றேன்.'** X (25)

தனி எழுத்தாகவோ அல்லது எழுத்துக்கள் ஒன்று சேர்ந்தோ பொருள் உணர்த்தும் போது அது சொல்லாகிறது. பொருளை உணர்த்தாத எழுத்துக் கூட்டம் சொல்

லாகாது. ஓரெழுத்து ஒரு சொல்லாகிய (ஏகாட்சரம்) பிரணவம், பரப்பிரம்மத்தையே உணர்த்துகின்றதால், அதுவே பிரம்மமாகிறது. அச்சொல்லே கண்ணன்.

யக்ஞம்—வேள்வி : ஜீவாத்மா பரமாத்மாவோடு இணைய முயலும் செயல்கள் யாவுமே யக்ஞமே! அனைத்து யக்ஞங்களிலும் ஜப யக்ஞமே சிறந்தது. 'ஜபமாலை தந்த சற்குருநாதா' என்கிறார் அருணகிரி. எனவே மிகச் சிறந்த ஜபயக்ஞமாக விளங்குகின்றான் கண்ணன்.

**'மரங்களுள்ளே சிறந்த அசுவத்த விருட்சம் என்னும் அரச மரமாகவும், தேவரிஷிகளுள் நான் நாரதராகவும், கந்தர்வர் களுள் சித்திர ரதனாகவும், பிறவிமுதலே ஞானமுடைய சித்தர் களிலே நான் கபிலனாகவும் விளங்குகின்றேன்.'** X (26)

மரங்களிலே சிறந்தது அரச மரம். அதன் பெயரே, அது மரங்களுள் அரசன் என்பதைப் புலப்படுத்துகிறது. அதன் கிளை, இலை, பூ, காய் முதலியன எதற்கும் பயன் படுவதில்லை. ஆனால், அது ஆத்ம சிந்தனைக்குரியது; இறைவன் நினைவை ஊட்டுவது ஆகும்.

கபில முனிவர் சாங்கியம் என்னும் தத்துவக் கிளையின் முதல்வர். சாங்கியமே வேதாந்தத்தின் அடித்தளம். கபில முனிவர், மகாவிஷ்ணுவின் அம்சமாகக் கருதப்படுகிறார். எனவே கண்ணன் சித்தர்களிலே நான் கபிலனாக இருக் கிறேன் என்கிறார்.

**'குதிரைகளுக்கிடையிலே, திருப்பாற்கடலிலே அமிர்தத் தோடு தோன்றிய ''உச்சை சிரவஸ்'' என்னும் குதிரையாகவும் யானைகளுள் நான் ஐராவதமாகவும் மானுடர்களுள் நான் அரசனாகவும் இருக்கிறேன். நீ இவைகளை அறிவாயாக.'** X (27)

**'படைக்கலன்களிலே நான் வஜ்ஜிராயுதம், பசுக்களிலே நான் காமதேனுவாக இருக்கிறேன். பிறப்புக்குக் காரணமான மன்மதனும் நானே. ஒரு தலைப் பாம்புகளுள்ளே நான் வாசுகி யாக இருக்கிறேன்.'** X (28)

**'பலதலைகளுடைய பாம்புகளுள் நான் ஆதிசேஷன். ஜல தேவதைகளுள் நான் வருணன். தென்புலத்தார்களாம் பிதிர்களிலே நான் அரியமான். நீதிபரிபாலனத்திலே நான் யமதர்மராஜன் ஆவேன்.'** X (29)

**'தைத்தியருள் (அசுரர்களிலே) நான் பிரகலாதன் ஆவேன். கணக்கிடுபவர்களுள்ளே காலம் நான். மிருகங்களுள் சிங்கம் நான். பறவைகளுள்ளே கருடன் நான்.'** X (30)

*தைத்தியர் என்பவர் 'திதி' என்பவர் வயிற்றில் பிறந்த இரணியன் இராவணன் முதலானோர்; இந்த வம்சத்திலும் சான்றோனாக விளங்கிய மகாபக்தன் பிரகலாதனாகவே தான் இருப்பதாகக் கூறுகிறார், கண்ணன். கூட்டிக் கழித்து வகுத்துப் பெருக்கிச் செய்யும் கணக்குகளிலே பலவிதமான தவறுகள் செய்கிறோம். ஆனால் காலன் மட்டும் தன் கணக்கிலே தவறுவது இல்லை. அவன்தான் சரியான கணக்காளி. (கணக்கன்)*

**'தூய்மைப்படுத்துவர்களுள் நான் வாயுதேவன். படைக்கலன் பூண்டவர்களுள்ளே நான் 'ராமன்'. நீர்வாழ் இனங்களிலே நான் மகரமீன். நதிகளுள்ளே நான் கங்கையாக விளங்குகின்றேன்.'** X (31)

**'அர்ஜுனா! சிருட்டி செய்யும் பொருள்களுள்ளே நான் ஆதி, நடு, அந்தம் ஆகிறேன். வித்தைகளிலே நான் ஆத்ம வித்தை (தத்துவம்) தருக்கம் செய்பவர்களிடையே நான் வாதமாக விளங்குகின்றேன்.'** X (32)

*இங்கே சிருட்டி செய்யும் பொருள்கள் என்பன, பஞ்ச பூதங்களை உணர்த்தும். பஞ்ச பூதங்களின் சேர்க்கையே உயிர்கள் அனைத்தும். உயிர்களுக்குத் தோற்றம், நடு, அந்தம் உண்டு. அதைப் போலவே பஞ்ச பூதங்களுக்கும் தோற்றம், நடு, அந்தம் உண்டு. அவைகள் யாவும் இறைவனே.*

*கலை, விஞ்ஞானம், தத்துவம் என்று சொல்லப்படுபவைகளுள் மிகச் சிறந்தது ஆத்ம வித்தை. பிற வித்தைகள்*

யாவும், லௌகிகத்துக்குப் பயன்பட, ஆத்ம வித்தை ஒன்று மட்டுமே, ஆத்மாவின் உய்திக்கு வழி வகுப்பது. எனவே அது மட்டுமே மிகச்சிறந்த வித்தை (Science). அது மட்டுமே அஞ்ஞானத்தை அறவே போக்கும் வித்தை. நம் பிறவிப் பிணிக்கு மருந்தும் அதுவே. எனவே கண்ணன் வித்தைகளுள் ஆத்ம வித்தை ஆகிறான்.

தர்க்கம் செய்வது, வாதம் என்றும் ஜல்பம் என்றும் விதண்டை என்றும் மூவகைப்படும்.

வாதம் என்பது தர்க்க ரீதியாக, மனக் கோட்டமின்றி, உண்மையை அறிவுபூர்வமாக நிலைநாட்டிப் பேசுவது.

ஜல்பம் என்பது சாத்திரப் பிரமாணம் ஒன்றையே கொண்டு, எதிரியை வாயடக்கித் தன் கட்சியை நிலை நாட்டப் பார்ப்பது.

விதண்டை என்பதுதான் விதண்டாவதம், என்று வழக்கில் வழங்கி வருகிறது. இதில் தன் கொள்கையை ஒருவன் ஸ்தாபித்தலும் இல்லை. பிறன் கொள்கையை ஏற்பதும் இல்லை. தர்க்க ரீதியற்ற முறையிலே பேசி எதிரியை ஏளனம் செய்வதே இந்த விதண்டை.

மூவகைப் பேச்சாற்றலுள்ளும் 'வாதம்' என்னும் சொல்லாற்றலாக விளங்குகிறான், பகவான் கண்ணன்.

**'எழுத்துக்கள் அனைத்திலும் நான் (எழுத்துக்களின் முதற் காரணமான) அகரமாகி விளங்குகின்றேன். கூட்டுச் சொற்களுள் நான் இரு கூட்டு. அழிவதற்றதாகிய காலமும் நானே. எத்திக்கும் எங்கும் முகமுள்ளவனாகிய பிரம்மனாகி அனைத்துயிர்களையும் சிருஷ்டிப்பவன் ஆவேன்.** X (33)

எழுத்துக்களிலே அகரமாக நான் இருக்கிறேன், என்கிறார் கண்ணன்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்கிறார் திருவள்ளுவர்.

மற்றும் தொல்காப்பியம் 'மெய்யினியக்கம் அகரமொரு சிவணும்' என்கிறது. இதற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் 'இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்' போல, அகரமும் உயிர்க்கண்ணும், தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது.

'அகரமுதல எழுத்துக்கள் எல்லாம். அது போல இறைவனாகிய முதலை உடைத்துலகமென்று வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும் எழுத்துக்களில் நான் அகரமாகிறேன் எனக் கண்ணன் கூறியவாற்றானும் கண்டு தெளிக' என்று விளக்கியுள்ளார்.

கூட்டுச் சொற்கள் வடமொழியிலே வழங்கி வருபவை. அவைகளுள் இருசொல் கூட்டாகத்தான் இருப்பதாக உரைக்கிறான் கண்ணன். இருசொல் கூட்டிலே உள்ள விசேஷம் யாதெனில் இருசொற்களுமே ஒன்றைவிட ஒன்று ஏற்றத் தாழ்வின்றி பொருள் பயப்பன.

'இராமகிருஷ்ண அவதாரங்களுள்' என்று வரும் சொல்லிலே இராமன், கிருஷ்ணன் இரண்டும் தாரதம்மியமின்றி குறிப்பிடப்படுகின்றது. இந்த இரு சொல் கூட்டு தான் 'கண்ணன்'. பலசொல் கூட்டல்ல.

எங்கும் முகமுள்ள அனைத்துப் பொருள்களையும் ஆக்குபவன் பிரமன், அந்த சிருட்டி கர்த்தாவும் தானே என்கிறான் கண்ணன். முத்தொழிலுக்கும் முதற்காரணமான பரப்பிரம்மம் 'தான்'. ஆதலால் சிருட்டி கர்த்தாவும் தானே என்கிறார் கண்ணன்.

**'எல்லாவற்றையும் அழிக்கின்ற மரணம் நானே! இனிமேல் உண்டாகும்படியான அனைத்துப் பொருள்களில் உற்பத்தியும் நானே. பெண்மைகளுள்ளே, கீர்த்தியாகவும், திருவாகவும்,**

**வாக்காகவும், நினைவாகவும், அறிவாகவும், துணிவாகவும், பொறையாகவும் நான் இருக்கிறேன்.'** X (34)

*முன் சுலோகத்தின் இறுதியிலே, படைப்புக் கடவுளாக, நான் விளங்குகிறேன்! என்ற கண்ணன், இச்சுலோகத்தின் தோற்றத்திலேயே தோன்றியவைகளைத் துடைக்கின்ற (அழிக்கின்ற) மரணமாகவும் தான் இருப்பதாகக் கூறு கிறான். எனவே தோற்றமும் மறைவும் இடைப்பட்ட நிலையும் அவனே என்பதாகிறது. அவன் காலங் கடந்து நிற்பவன். காலாதீதன். ஆகையினால், இனிவரும் தோற்றங் கள் அனைத்துக்கும் அவனே காரணகர்த்தா ஆகிறான். அங்ஙனமே மறைப்புக்கும் அவனே காரணன்.*

*இனி பெண்மைக் குணங்களுள்ளே சிறந்து விளங்குகின்ற கீர்த்தி, திரு, வாக்கு, நினைவு, அறிவு, துணிவு, பொறை யாக விளங்குபவன் கண்ணன். எனவே, இங்குக் கூறப்பட்டு உள்ள குணங்கள் யாவும் ஈஸ்வரனது விபூதியே (மகிமை களே).*

**'அந்த வகையிலே, நான் சாமங்களில் (இறைவன் துதிப் பாடல்களில்) பிருகத் சாமமாக இருக்கிறேன். சந்தஸில் (வண்ணச் செய்யுள்களில்) நான் காயத்திரியாக இருக்கிறேன் மாதங்களிலே நான் மார்கழி மாதமாகவும், பருவங்களிலே நான் வசந்த காலமாகவும் விளங்குகிறேன்.'** X (35)

*சதுர்வேதங்களிலே நான் சாம வேதமாக இருக்கிறேன். என முன் கண்ணன் சொன்னாரல்லவா? அந்த சாம கீதத் திலேயும் நான் பிருகத் சாமமாக இருக்கிறேன் என இச்சுலோகத்திலே குறிப்பிடுகிறார்.*

*சந்தஸ்களிலே மிகச் சிறந்த காயத்திரி மந்திரமாகவே கண்ணன் இருக்கிறார். எனவேதான் காயத்திரி மகா மந்திரம் எனப்படுகிறது. அந்தணர்கள் இதை அந்தி சந்தி ஜெபிக்கின்றனர்.*

**'ஏமாற்றுக்காரர்கள் வஞ்சகர்களிடையே நான் சூதாட்டமாக விளங்குகிறேன். பிறங்கொளி வீசும் தபஸ்விகள், யோகிகளின் தேஜஸ் நான்; வெற்றியாகவும், முயற்சியாகவும் சாத்வீகர்களின் சத்துவ குணமாகவும் நான் இருக்கிறேன்.'**

X (36)

*ஏமாற்றும் வஞ்சகமும் சான்றோரால் கடியப்பட்டவை. ஒழுக்கத்துக்குப் புறம்பானவை. சமுதாயத்துக்குக் கேடு பயப்பவை. அவைகளில் கூட இறைவன் சூதாட்டமாக விளங்குகிறான். அது வஞ்சித்தொழுகும் தொழிலாயினும் அதற்கென சில வரம்புண்டு. அது ஒரு விளையாட்டு. அரசன் முதல் ஆண்டி வரை பொருள் இழக்கவும், ஈட்டவும் பொழுது போக்கச் சூதாடுகின்றனர். சூதாட்டங்கள் பல வகை. சதுரங்கம், தாயக்காய், சீட்டாட்டம் போல்வன ஒரு சில. இந்தச் சூதாட்டமும் அதற்குரிய விதிகளின்படி ஆட வேண்டும். விதியை மீறுதல், தப்பாகக் காய் நகர்த்தல் என அதிலே மோசம் செய்தல் கூடாது. இந்த வகையில் ஏமாற்று பொய், களவு, வஞ்சகம் உள்ளிட்ட பலவற்றுள்ளும் இந்தச் சூதாட்டம் நியாயமானதல்ல. ஆயினும் ஒரு நியதிக்குட்பட்டதாகையால் இறைவன் தான் சூதாட்டமாக விளங்குகிறான் என்கிறான்.*

*யோகியர், தவசிகள், தீர்க்கதரிசிகள், முனிவர்கள், முதலியவர்கள், தேஜசுடன் விளங்கக் காண்கிறோம். இந்த தேஜசின் காரணம் அவர்களின் வாழ்க்கையின் அருள் ஒளி மிக்க, தெய்வீகத்தின் ஒன்றிப்புதான். அதனாலேதான் இறைவன் அவர்களின் தேஜசாக இருக்கிறேன் என்கிறான். வாழ்க்கையிலே நாம் செய்யும் முயற்சியும், வெற்றியும் அவனே! அதோடு அவன் சத்துவ குண சம்பன்னன். எனவே, முக்குண வசப்படாமல், எக்காலமும் சத்துவ குணமே மேலோங்கப் பெற்ற சாத்வீகர்களின் சத்துவ குணமாக தான் இருப்பதாக இறைவன் விளம்புகிறான்.*

**'யாதவர்களுள்ளே, விருஷ்ணி வம்சத்திலே நான் வாசுதேவனாகவும், பாண்டவர்களுள்ளே நான் தனஞ்செயனாகவும்**

**தீர்க்க தரிசனம் மிக்க முனிவர்களுள்ளே நான் வேதவியாச னாகவும் கற்றறிந்த ஞானிகளுள்ளே நான் சுக்கிரனாகவும் விளங்குகிறேன்.'** X (37)

யாதவ குலத்திலே விருஷ்ணி வம்சத்திலே பிறந்தவன் கண்ணன். வசுதேவன் மைந்தனாக அவதரித்ததால் வாசுதேவன் என்றழைக்கப்படுகிறான். அந்தக் குலம் விளங்க மேன்மேல் உயர்ந்து எல்லா வகையிலும் நிற்பவ னாகையால் அவர்களுள் நான் வாசுதேவனாக விளங்கு கிறேன் என்கிறான் கண்ணன்.

பாண்டவர்களுள்ளே நடுப்பிறந்தவன் தனஞ்செயன்— பார்த்திபன். நரநாராயணன் என்று சொல்லப்படும் இருவருள் நரன் அர்ஜுனனாகவும் நாராயணன் கண்ண னாகவும் இணை பிரியாது விளங்குவதால் பாண்டவர்களுள் தான் தனஞ்செயனாக விளங்குவதாகக் கூறுகிறார் கண்ணன். இவனே (பார்த்தனே) அடுத்து இறைவன் விசுவரூபத்தைக் காணும் பேறு பெற்றவன்.

வருவதை முன் உணரும் முனிவர்களுள்ளே பராசபுத்திர னாகிய, வேதம் வகுத்த, பாரதம் இயற்றிய, வேதவியாச னாக நான் இருக்கிறேன் என்கிறான் கண்ணன், வியாச உச்சிஸ்டம் ஜகத் சர்வம்' என்னும் பழமொழிப்படி இந்த உலகிலே நிலவும் சகல அறிவு நூல்களும் கதைகளும் வியாசன் தீட்டிய வேத இதிகாசம் முதலியவற்றின் எச்சமே என்பதால் அவ்வியாசனின் பெருமை புலப்படும். அப்படிப் பட்ட பெருமை வாய்ந்த முனிவனாகப் பிற முனிவர்களுள் சிறந்தவனாகத் தான் இருப்பதாக உரைக்கிறான் கண்ணன்.

சுக்கிர நீதி இயற்றியவனும், அசுர குருவுமான, சுக்கிரன், தேவ முனியாம் வியாழனுக்கு நிகரானவர்; கற்றறிந்துணர்ந்த ஞானி. 'மிருத்தியுஞ் ஜய மந்திரம் உணர்ந்தவர். புரோகிதர்களுள் நான் பிரகஸ்பதி என்று உரைத்த கண்ணன் ஞானிகளுள் நான் சுக்கிர பகவான் என்று உரைக்கின்றார்.

**'தண்டிப்பவர்களிடையே நான் செங்கோலாக விளங்குகிறேன். வெற்றியை நாடுபவர்களிடையே நான் நீதியாக இருக்கிறேன். ரகசியங்களுள் நான் மௌனமாகவும், ஞானிகளுடைய ஞானமாகவும் நான் இருக்கிறேன்.'** X (38)

*சட்டத்துக்கும் நீதிக்கும், சமுதாயத்துக்கும் அறத்துக்கும் விரோதமாகச் செயலாற்றுபவர்கள் தண்டிக்கப்பட வேண்டியவர்களே. ஆனால் அத்தண்டனை செங்கோல் முறையைத் தழுவியே தரப்பட வேண்டும். கொடுங்கோல் முறையிலே தண்டனை தரலாகாது. இவ்வகையிலே தண்டிக்கப்பட வேண்டியவர்களுக்குத் தண்டனைத் தருபவர்கள் இடையே முறைசெய்யும் செங்கோலாக விளங்குகிறார் கண்ணன். வாழ்க்கையில் வெற்றி, தொழிலில் வெற்றி, வியாபாரத்தில் வெற்றி, கல்வியில் வெற்றி இது போன்ற வெற்றிகள் பலவற்றை நாடுபவர்கள் நீதிநெறியிலே நல்வழியிலே சென்று வெற்றி எய்திட வேண்டும். மறவழியிலே வஞ்சனையால், சூதால் வெற்றி பெறலாகாது. வெற்றிக்கு அடிப்படைத் தேவை நீதியே! எனவே அந்த அடிப்படையான நீதியாக கண்ணன் விளங்குகின்றார்.*

*ரகசியங்களை வெளிப்படுத்தி விடுவது பேச்சுதான். நாவடக்கம் இல்லாத பேச்சால் ரகசியம் வெளிப்படுத்தப்படுகிறது. எனவே ரகசியத்தை வெளிப்படாமல் காப்பது மௌனமே.*

*மற்றும், ரகசியம் என்பது மறை. மறையும் மந்திரங்களும் ரகசியம் எனப்படும். மறைகள் மந்திரங்கள் சிறப்பு வாய்ந்தவைகளே. அவைகளினும் மிகச் சிறந்தது மௌனம். அதாவது சும்மா இருத்தல். இதைத்தான் மோனநிலை எனக் கூறுவர் மேலோர். இதையே பேசாத பேரின்பநிட்டை என்கிறார் தாயுமானார். எனவே மௌனத்தின் உருவாகவே கண்ணன் உள்ளான்.*

*ஞாதுரு, ஞானம், ஞேயம் எனும் (அறிபவன், அறிவு, அறியப்படுவது) மூன்றனுள் அறியப்பட வேண்டிய அறிவை*

அறிந்து தெளிந்தவன் ஞானி; ஞானத்தைப் பெற்றிருப்ப தால்தான் அவன் ஞானியாகிறான். இல்லையேல் அவன். வெறும் மனிதன். எனவே அவனைச் சிறக்கச் செய்த ஞான மாக அவனை உயர்த்தி உலகத்துக்கு விளங்க வைத்த ஞான மாக கண்ணன் விளங்குகிறான்.

இறைவன் சச்சிதானந்த சொரூபன். 'உண்மை அறிவானந்த உருவாகி'—என்கிறது திருவிளையாடல். உண்மை வடிவு, ஞான வடிவு, ஆனந்தவடிவானவன் அவன். 'என் சித்த மிசை குடி கொண்ட அறிவான தெய்வமே' என்கிறார், தாயுமானார். இந்த வகையில் ஞான வடிவாக விளங்குகிறான் கண்ணன் என்றியம்புகிறது சுலோகம்.

**'அர்ச்சுனா! சகல பூதங்களுக்கும் காரணம் எதுவோ அல்லது வித்து எதுவோ, அது நானே. இந்த உலகிலே உள்ள இயங்கு திணைப் பொருளோ நிலைத் திணைப் பொருளோ (ஜங்கம தாவரங்கள்) எதுவுமே என்னையன்றி வேறு இல்லை!**
X (39)

இதனால், உலகின் கண் உள்ள அனைத்தும் அவனே என்றவாறாம்.

எல்லா பூதங்களுக்கும் எது காரணமோ, பீஜமோ அதாவது காணப்படுவதும் காணப்படாததுமான, இரண்டு விதமான உற்பத்திக் காரணம் எதுவோ அது நான். பூதங் களுள் ஒன்றேனும் அந்தராத்மாவாகிய என்னை ஒழியத் தரித்திருப்பது கிடையாது.

எல்லாப் பொருளும் எல்லா நிலைகளிலும் அந்தராத்மா வாகிய நம்மோடு கூடியே இருக்கும். இதனால் எல்லாப் பொருள்களும் பகவத் சொரூபமே என்று சொன்னவா றாயிற்று. ஏனெனில் அவன் அனைத்துள்ளும் அந்த ராத்மாவா யிருக்கையினால் என்றவாறாம்.

**'எதிரியை வாட்டுபவனே! என்னுடைய தெய்வீக மகிமை களுக்கு (விபூதிகளுக்கு) முடிவு என்பதே கிடையாது.**

**'என்னுடைய விபூதிகளின் விரிவுகளிலே ஒரு சிறிது மட்டுமே இங்கு என்னால் உனக்கு இயம்பப்பட்டது.'** X (40)

*இறைவன் அளத்தற்கரியவன். மனவாக்குக் கெட்டாதவன். அவன் விபூதிகளும் அளத்தற்கரியன. அவனாலேயே அவன் விபூதிகளை விவரிக்க இயலாது. ஏனெனில் அவை ஏட்டில் அடங்கா. கடலைக் கண்டேன் என்பவன் தன் கண்களுக்கு எட்டிய தூரத்தையே காண்கிறான். பிறவற்றைக் காண முடியாது. அதைப் போலவே இறைவன் விபூதிகளையும் உள்ளம் எட்டிய மட்டுமே அறிய முடியும். எல்லா விபூதிகளையும் அறிந்திட யாராலும் இயலாது.*

**'மகிமையும் (விபூதியும்) திருவும் அழகும் வலிவும் உடையதாக எங்கெங்கு பொருள்கள் உள்ளனவோ, அவை அவை எல்லாம் என் தேஜஸின் ஒரு அம்சத்தில் உண்டானவைகளே என்று அறிக!**

*எல்லாப் பொருள்களும் இறைவன் அம்சத்தின் ஒரு பகுதியே ஆயினும், அழகு, மகிமை, வலிமை, வீரியம் வாய்ந்தவைகளே பிற யாவற்றினும் அவனை அதிகமாக வெளிப்படுத்திக் காட்டுகின்றன. 'திருவுடை மன்னரைக் காணில், திருமாலைக் கண்டேன்' என்னும் பிரபந்த வாக்கியம் இங்கு நினைவு கூறத்தக்கதாகும்.*

*வீரதீரச் செயல்கள், சாகசங்கள், வாழ்க்கையிலே செய்யப்படும் தியாகங்கள், செயற்கரிய அருஞ்செயல்கள், இவையாவுமே கடவுளின் மகிமையைப் புலப்படுத்துவனவே. மனித வாழ்க்கையின் மிக விழுமிய, மேன்மையான கால கட்டங்கள் விளக்கமுடியாத காரணங்காட்ட இயலா வண்ணம் மனித மனங்களின் முடிவுக்கு அப்பாற்பட்டனவே ஆகும்.*

**'அர்ஜுனா! இவ்வண்ணம் விஸ்தாரமாக உனக்கு விளக்கிச் சொல்லப்பட்ட இந்த விபூதிகளாலே உனக்கு என்ன**

**பிரயோஜனம்? (பயன்) நான் இந்த அண்ட கோளம் அனைத்தையுமே என் ஒரேஒரு அம்சத்தினாலே வியாபித்துக் கொண்டிருக்கிறேன்.'** X (42)

கடலை நாம் காண்கிறோம். அதன் அலைகள் பரப்பு இவைகளையே காண முடிகிறது. அக்கறை ஆழம் இவைகளை யாரும் காணக்கூடுவதில்லை. இந்த வகையிலே இந்த அகிலாண்டமும், ஆதி அந்தம் அற்ற அந்த இறைவனின் ஒரு சிறு வெளிப்பாடே, ஒரு சிறு துளியின் வியாபகமே. இது அவன் அருட்ஜோதியின் ஒரே ஒரு ஒளிக்கீற்றால் மட்டுமே ஒளி கொளுவப்பட்டுள்ளது. அந்த அளத்தற்கரிய இறைவனின் ஜோதிப் பிழம்பு காலத்தைக் கடந்து, அகண்ட வெளியாம் ஆகாசத்தைக் கடந்து, இந்த அண்ட சராசரங்கள் அனைத்தையும் கடந்து ஒளிர்வதாகும் என்க.

இந்த வகையில் அவன் விபூதிகள் ஓர் எல்லைக்குட்படாததால் அதை ஒரு சிறிது அறிவதால் ஏற்படும் பயன் ஒன்றுமில்லை. ஏனெனில் மனித மனத்தால் அவனைப் பூரணமாக அறியவே இயலாது என்பதாம்.

பத்தாம் அதிகாரம்

விபூதி யோகம் முற்றும்

பதினோராவது அத்தியாயம்

# விசுவரூப தரிசன யோகம்

## ஆண்டவனின் வியாபகம் கண்டல்

*இந்த வகையிலே பக்தி யோகம் உண்டாகவும், அது மேன் மேலும் விருத்தியடையவும், மற்ற யாவற்றிலும் வேறுபட்ட தாய், சுவபாவத்திலே ஏற்பட்டதாய், இறைவனுக்கே உரிய அசாதாரணமான சகல கல்யாண குணங்களின் கூட்டத் துடன் கூடிய பகவானே, எல்லாப்பொருள்களுக்கும், சேதன அசேதனப் பொருள்கள் யாவற்றுக்கும், ஆத்மா என்பது இதுவரை பெறப்பட்டது.*

*இந்தச் சேதன, அசேதனத்தினால் ஆய பொருள்களின் கூட்டமும் அவனுக்குச் சரீரம் ஆகையினாலே இவைகள் அடங்கிய, சுவரூபம், ஸ்திதி (இருப்பு, பிரவிருத்தி (செயற்பாடு) முதலியன உடையவைகளே கூறப்பட்டன.*

*இவ்வாறான, பகவானது அசாதாரணமான; ஸ்வபா வத்தையும் [இயல்பு] உலகில் உள்ள எல்லாமே அவனுக்கு வசப்பட்ட சுவரூபத்தையும் [பேருருவினையும்] இருப்பையும் [ஸ்திதியையும்] பிரவிருத்தி [செயற்பாட்டை]யும் உடையது என்பதையும், பகவானிட மிருந்தே முன் அதிகாரத்திலே அர்ஜுனன் கேட்டறிந்தான். இது இவ்வாறே என்றும் நிச்சயித்தான்.*

*அவ்வாறான பகவானை நேரில் காணவேண்டும் என்னும் அவா அவனுள் எழுந்தது. எனவே அவன் கண்ணனை நோக்கிச் சொல்லுகிறான்.*

'எனக்கு அனுக்கிரகம் செய்தற் பொருட்டாக; புருஷார்த்தங்களில் [உறுதிப் பொருள்களில்] மேலானதும், ரகசியமானதும், ஆத்ம அநாத்ம விவேகத்தை உண்டு பண்ணுவதுமான பரம ரகசியத்தை தேவரீர் எனக்கு அருளிச் செய்தீர். அதனால் என்னுடைய மயக்கமெல்லாம் ஒழிந்தன.' XI (1)

அர்ஜுனனுக்கு இருந்த மயக்கம், ஆத்ம அநாத்மாவைப் பற்றிய மயக்கம். நான் யார்? என்று உணராத மயக்கம்; இந்த உலகனைத்தும் தானாகவே நிலைத்துள்ளது என்றும், தானாகவே பராமரித்துக் கொள்ளுகிறதென்றும். அவை பிழைத்திருப்பதும் அழிந்தொழிவதும் தாமாகவே என்றும் நினைத்திருந்த மயக்கம், தான் இயற்ற வேண்டிய கடமைகள், நீக்க வேண்டிய செயல்களைப் பற்றிய மயக்கம். உலகம் உயிர், இறைவன் ஆகிய மூவகைப் பதார்த்தங்களைப் பற்றிய மயக்கம்.

இந்த வகைப்பட்ட மயக்கங்கள் யாவும், கண்ணனிடம் கேட்ட உபதேசத்தினால், விளக்கங்களினால்; அர்ஜுனனிடமிருந்து விலகிவிட்டன. எனவே விபூதி யோகத்திலே; கண்ணன் தன்னிடம் நேரே சொன்ன அவனுடைய மகிமைகள் அடங்கிய பேருருவத்தைதான் நேரே காண வேண்டும் என்றே ஆசைப்படுகிறான். எனவே அவன் கண்ணனை நோக்கி.

'தாமரை இதழ்க் கண்ணா! உம்மிடத்திருந்தே எல்லா உயிரினங்களும் [தாவர, சங்கமம்] தோன்றி உம்மிடமே லயிக்கின்றன என்பதை விரிவாகவே நீர் எனக்கு இயம்பினீர். [ஏழாவது அத்தியாயம் தொடங்கி பத்தாவது அத்தியாயம் வரையிலும்] நான் அவைகளைக் கேட்டேன். அவ்வண்ணமே தங்களுடைய, எல்லையில்லாத தான விபூதிகளையும் [மகிமைகளையும்] நான் கேட்டேன்.' XI (2)

'பரமேஸ்வரா! எந்த விதமாக, நீர் உம்மைப்பற்றி, இயம்பினீரோ அது அவ்வண்ணமே உள்ளது என அறிந்தேன். [இனி]

**புருஷோத்தமா! உம்முடைய ஈஸ்வர சொருபத்தைக் காண நான் விழைகிறேன்.'**

**'இறைவனே! உம்முடைய உருத்தைச் சேவிக்க அடியேனால் கூடுமென்று தேவரீருக்குத் திருவுளமானால், யோகேஸ்வரா! உம்முடைய அழிவற்ற உருவத்தை அடியேன் கண்டு அனுபவிக்க [சேவை சாதித்தருள்க] காட்டி அருளுக.'**
XI (4)

*இறைவனே! எக்காலத்தும், சேதன, அசேதன, (அறி பொருள், அறியாப்பொருள்] ரூபமான எல்லாப் பொருள்களுக்கும் தாமே ஆதாரமாக இருக்கும் தன்மையும், ஞானம் பலம், முதலிய சகல கல்யாண குணங்களாலும் நீரே யாவையிலும் உயர்ந்து விளங்கும் தன்மையும், எல்லாப் பொருள்களுக்கும் நீரே ஆதாரமாக இருக்கும் தன்மையும், கண் இமைக்கின்ற அற்பப் பிரயத்தனமும உம்முடைய ஆதீனமே என்கிற மகாத்மியத்தின் தன்மையும், தாங்கள் எனக்கு விளக்க, நான் அறிந்து கொண்டேன்.*

*'புருஷோத்தமா! யாவரையும் படைத்தல், காத்தல், அழித்தலாம் தன்மைகளில், சகல வகைப்பட்ட கல்யாண குணங்களில், மேன்மையில், யாவற்றினும் வேறுபட்டிருக்கும் தன்மையில், தேவரீர் எழுந்தருளி இருக்கும் நிலையினை, நான் கண்ணாரக் காணவேண்டும் என்றே விழைகிறேன், என்று கண்ணனிடம் வேண்டிக் கொள்ளுகிறான்' அர்ஜுனன். இவைகளைக் கேட்ட பகவான் அவனிடம் உரைக்கிறான்.*

**'பார்த்தா! என்னுடைய தெய்வத்தன்மை வாய்ந்தவைகளையும், பலப்பல விதங்களானவைகளையும், பல நிறங்கள், பல வடிவங்கள் வாய்ந்தனவைகளையும் நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் இனி நீ காண்பாயாக! ஒன்றிலே பலவற்றைக் காணலாகும் இது. அதாவது இது ஒரே பொருளின் எண்ணிறந்த தோற்றங்களாகும் தன்மை.'**
XI (5)

'பரத குலத் தோன்றலே! என்னிலே, நீ பன்னிரண்டு ஆதித்தியர்களையும் எட்டு வசுக்களையும் பதினொரு உருத் திரர்களையும் இரண்டு அச்வினிகளையும், அதோடு நாற்பத் தொன்பது மருத்துக்களையும் நீ காண்பாயாக. அவ்வாறே எண்ணிலடங்காத, முன்னே நீ இதுவரை காணாத ஆச்சர்யங் களையும் பார்ப்பாயாக.' XI (6)

'அர்ஜுனா! என்னுடைய இந்த [சரீரத்திலே] ரூபத்திலே ஓரிடத்திலே [சேதன, அசேதனமான] நிலைபேறுடையவைகள் இயங்குபவைகளாம் அனைத்தும் உள்ள உலகனைத்தையும் பார்ப்பாயாக. மேலும் நீ, வேறு எவை எவைகளைக் காண வேண்டும் என இச்சிக்கிறாயோ, அவை அனைத்துமே ஒருங் கிணைந்துள்ளதை இந்த உடலின் மற்றோர் பகுதியிலே காண்பாயாக.' XI (7)

'ஆனால் நீ உன் ஊனக்கண்களால் இவை அனைத்துமே காண முடியாது. எனவே உனக்கு நான், தெய்வீகப் பார்வை உடைய ஞானக்கண்களைத் தருகிறேன். அதன் மூலம் என்னுடைய அளவற்ற திவ்ய ஆற்றல் மிக்க மகிமைகளைக் காண்பாயாக.' XI (8)

*நாம் பெற்றுள்ள தசையாலான கண்களால் தெய்வீகப் பேரொளியைக் காண இயலாது. அப்பேரொளியைக் காணத்தக்கவாறு நம் கண்கள் அமைக்கப்படவில்லை.*

*பிராணிகள் மற்றும் மனிதனுடைய, கண்கள், வெளியே புலப்படுகின்ற வடிவங்களை மட்டுமே காணும் தகுதி பெற்றவை. நம் அந்தராத்மா மட்டுமே ஞானக்கண்களால் பிரம்மத்தைக் காணும் பக்குவம் அடையக்கூடும்.*

*நம்முடைய ஊனக் கண்களும், வானத்தில் உள்ள விண் மீன்களைக் காண தூரதரிசினி(தொலை நோக்காடியை)நாடு கிறது. நுண் அணுக்களைக் கண்டுபிடிக்க உருப்பெருக்கியின் உதவியை நாடுகிறது. இதைப் போலவே இறைவன் பேரொளி வாய்ந்த உருவினைக் காண நாம் ஞானக் கண் களின் துணையை நாட வேண்டும்.*

நாம் பற்பல சாத்திரங்களைக் கற்றலால், கேட்டலால், சிந்தித்தலால், ஆய்தலால், வாதம் செய்தலால் நாம் அடைகின்ற அறிவு (ஞானம்) ஒரு வகைப்பட்டது. நம் முயற்சியால் எய்துகின்ற ஞானம் இது. ஊனக்கண் போன்றது இது)

மற்றொரு வகைப்பட்ட ஞானமும் உளது. அது தெய்வீக அருளால் நாம் ஆட்கொள்ளப்படும் போது, தெய்வீக சக்தி நேரிடையாக நம்முள் அருட்குருவால் பாய்ச்சப்படும் போது நாம் அடையும் பரஞானமே அது. இதைப் போலவே ஊனக் கண்ணல்லாத ஞானக்கண்ணும் தெய்வீக அருளால் மட்டுமே கிடைக்கப்படுவது. அதையே கண்ணன் பார்த்தனுக்குத் தன் விசுவரூபத்தைக் காண அருளிச் செய்கிறான்.

இவை எல்லாம் அத்தினாபுரத்திலே துரியோதனன் முதலான நூறு பிள்ளைகளின் தந்தையாகிய பிறவிக் குருடன் திருதராட்டிரனனுக்கு, பாண்டவர்களின் புரோகிதனும் வியாசபகவனால் தற்காலிக தீர்க்கதிருஷ்டியைப் பெற்றவனுமான சஞ்சயன், அர்ஜுனன் கண்ட கண்ணனது விசுவரூபத்தைத் தானும் கண்டு அதை (அம்மகாமன்னனுக்கு)ச் சொல்லத் தொடங்கினான்.

**'திருதராஷ்டிர, மாமன்னனே! மகா யோகேஸ்வரனாகிய ஹரி இப்படி உரைத்த பின்னர், பார்த்தனுக்குத் தம்முடைய மிக உன்னதமான, ஈஸ்வர ரூபத்தைக் காட்டி அருளினார்.'**

**XI (9)**

**'அதுவோ நானாவிதமாய் விசித்திரமாய் சகல லோகங்களுக்கும் இடனாய், எல்லாவற்றையும் ஆளுகைக்குடையதாக உள்ளது. அதாவது பலப்பல முகங்களும் பலப்பல கண்களும் உடையதாய், அனேக அற்புதங்களைக் காட்டுவதாய்; அளவிடற்கரிய ஆபரணங்களை அணிந்ததாய், திவ்யமான வாசனை திரவியங்கள் பூசப்பெற்றதாய், அனேக ஆயுதங்களை உடையதாய், திவ்ய மாலைகள் வண்ண வண்ண ஆடைகள்**

அணிந்துள்ளதாய் சகல ஆச்சர்ய அற்புதங்களுக்கு இடனாய் கோடி சூரியப் பிரகாசமாய் முற்காலத்தில் இருந்து சகல ஜகத் திற்கும் இடமாய் இருத்தலால் தேசத்தாலும் காலத்தாலும் அளவிடற்கரியதாய், எல்லா திக்கிலும் முகங்களோடு கூடியது மாய் உள்ளது.' XI (10) & (11)

**'விண்ணிலே ஆயிரம் சூரியர்களின் ஒளியானது ஒரே காலத்திலே உண்டாகுமானால் அது அந்த மகாத்மாவின் திவ்ய தேஜோ மயமான ஒளிக்கு ஒப்பாகும்.'** XI (12)

**'அப்பொழுது பாண்டவனாகிய பார்த்தன் அவ்விடத்திலே —அந்த தேவதேவனது தேகத்திலே—பலவிதமாகப் பிரிந்துள்ள இந்த அகில அண்டங்களையும் ஒருங்கே சேர்ந்திருப்பதைத் தன் ஞானக்கண்ணால் கண்டான்.'** XI (13)

*அர்ஜுனன் இங்கே ஒன்றில் பலவற்றையும், பலவற்றுள் ஒன்றையும் காட்டும் தெய்வீகக் காட்சியைக் காண்கிறான். எல்லாப் பொருள்களும் ஒரே மாதிரி இருப்பினும் ஒவ்வொன் றும் மாறுதலுக் குட்பட்டனவே; மாறிமாறி வருவனவே. தினந்தோறும் நாம் காணும் இந்த நிலவுலகத்தின் நில எல்லைக்கோடுகளும் திருப்புமுனைகளும் திடீரென மறைந்து விடுவது வியப்புக்குரிய ஒன்றே ஆகும். எல்லாப் பொருள் களும் ஒன்றோடு ஒன்றாக பின்னிப் பிணைந்து இணைந்து ஒன்றாகக் கலந்து ஒன்றிலே பிரதிபலித்து விளங்குகின்றது. இந்த விசுவரூப தரிசனம் இவ்வுலக வாழ்க்கையின் ஆற்றல் வாய்ந்த தெய்வீகத்தின் வெளிப்பாடே என்பது உணரத் தகும்.*

**'இதைக் கண்டபிறகு தனஞ்செயன் மிக வியப்படைந்தவ னாய், உரோமம் சிலிர்ப்பெய்தியவனாய், அந்தத் தேவதேவ னைத் தன் தலையால் வணங்கி, இருகைகளையும் கூப்பியவ னாய்ச் சொல்லத் தொடங்கினான்.'** XI (14)

*விசுவருபத்தைத் தரிசித்த அருச்சுனனுக்கு ஒரே வியப்பு. திடீரெனத் தம்முன் இருந்த தன் நண்பன், தன் உறவினன்,*

உள்ளம் கலந்து உறவாடி கேலி பேசிய தோழன், ஒரே பூதாகாரமாகி, விண்ணும் மண்ணும் கலந்த வடிவாகி நின்று, அனைத்து சிருஷ்டிகளும் தன் உடலகத்தே காட்டும் அற்புதம் அவன் உள்ளத்தினை வியப்பில் ஆழ்த்தி செயலிழக்கச் செய்து விட்டது. திடீரென ஏற்பட்ட பயங்கலந்த வியப்பால் உடல் சிலிர்ப்பெய்தி விட்டது. தலை தன்னையறியாமல் தாழ்ந்து வணங்கியது. கைகள் கூப்பின. அவன் கண்ணனையே பரமாத்மாவாகக் கண்டுவிட்டான்.

அர்ஜுனன் கண்ணனைத் தலையால் வணங்கி இருகைகளையும் கூப்பித் தொழுது பேசும் பழக்கமுள்ளவனல்லன். இந்தப் பத்து அதிகாரங்களில் அவன் ஓரிடத்தும் இந்த பயபக்தி கொண்டவனாகச் சொல்லப்படவில்லை. இங்கேதான் அவனுக்குப் பயத்தொடு கலந்த பக்தி உண்டாகிறது. மாணிக்கவாசகர் சொல்வதைப் போல,

'மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன் விரையார் கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி'

நிற்கும் நிலை உண்டாகிறது. பக்தி பரவசத்தோடு அவன் பகரத் தொடங்கினான் :

**'தேவா! உம்முடைய உடலினிடத்தே, அனைத்துத் தேவர்களையும் காண்கிறேன். அப்படியே அனைத்து பூதத் தொகுதிகளையும், கமல ஆசனத்திலே வீற்றிருக்கும் படைக்கும் கடவுளான பிரம்மனையும் காண்கிறேன். அதைப் போலவே சகல ரிஷிகளையும் திவ்யமான சர்ப்பங்களையும் நான் பார்க்கிறேன்.'** XI (15)

**'அகில உலகமே தன் வடிவமாக அமைந்துள்ள விசுவரூபனே; அகிலாண்ட வடிவினனே. எண்ணுக்கு அடங்கிடா கைகளையும்; வயிறுகளையும் முகங்களையும் கண்களையும் பெற்றுள்ள தங்களது அலகில்லாத உருவத்தை எங்கும் காண்கிறேன். ஆயினும் விஸ்வசரீரனாக உள்ள தங்களது முடியையு**

யும் இடையையும் அடியையும் தேவரீர் அளித்த இந்த திவ்ய நேத்திரங்களைக் கொண்டும் பார்க்கச் சக்தியற்றவனாக இருக்கிறேன்.' XI (16)

'கிரீடமும் பூண்டுள்ளவரை, கதையை உடையவரை, சக்கரத்தை ஏந்தியவரை, எங்கெங்கும் ஒளிவீசும்—பிரகாசிக்கும் ஒளிப்பிழம்பை, எவராலும் தம் கண் கொண்டு பார்க்க முடியாதவரை, ஜொலிக்கின்ற சூரியன், அக்கினி இவர்களுடைய காந்தியோடு கூடியவரை, அளவிட்டறியக் கூடாதவரை இப்படிப்பட்ட உம்மை (தேவரீரை) நான் எங்கும் காண்கிறேன்.' XI (17)

'நீரே அழியாத பரம்பொருள், நீரே (ஞானத்தால்) அறியப்பட வேண்டியவர். நீரே இந்த அகில உலகனைத்துக்கும் ஒப்பற்ற ஆதாரமானவர். (தங்களது ரூபம் எவ்வித ஸ்வரூபத்தோடும் எவ்வித குணங்களோடும் எவ்வித மகத்துவத்தோடும் கூடி இருக்கின்றதோ அவ்வாறே எந்நாளுமிருக்கிறது) எனவே நீரே எப்போதும் மாறுதலற்று இருப்பவர். நீரே அறக்கடல்; தர்மாக்ஷகர். நீரே பரமாத்மா என என்னால் அறியப்படுகின்றீர்.' XI (18)

'முதல், இடை, கடை, இல்லாதவரும், முடிவில்லாத ஞானம், பலம், வீரியம் எனும் சக்தி உடையவரும், கணக்கில்லாத கைகளை உடையவரும், சந்திர சூரியர்களையே தம் திருக்கண்களாக உடையவரும், அக்கினி சுவாலை உமிழும் வாய் உடையவரும் தம்முடைய தேஜஸினால் உலகனைத்தும் தகிக்கின்றவருமாய், உம்மைக் காண்கிறேன்.' XI (19)

*இறைவன் காலம், தேசம், நிமித்தம், (Time, Space, Causation) ஆகிய முப்பாழுக்கும் அப்பாற்பட்டவர்.*

*ஆதியும் அந்தமும் இல்லாததால் அவன் காலாதீதன்.*

*தான் யாண்டும் தன் மயமாகி இருந்து கொண்டு தன் மாயையால் அண்டங்களைத் தோற்றி காத்து ஒடுக்குவதால் அவன் தேசாதீதன்.*

எச்செயலும் அவனை வந்து பாதிப்பதில்லை. எனவே அவன் கர்மாதீதன்; காரணகாரியதீதன்; ஆனந்தாதீதன். அவன் நிமித்தத்துக்கு அப்பாற்பட்டவன், அவன் ஆதி, நடு, அந்தமில்லாதவன்.

இவ்வாறு சர்வத்துக்கும் கர்த்தாவாகவும், யாவற்றுக்கும் ஆதாரமாகவும் சகலவற்றையும் காப்பாற்றி ஆள்பவராகவும், சகலத்தையும் அழிப்பவராகவும், ஞானம், பலம், வீரியம் முதலிய குணங்களின் கடலாகியும், முதல், இடை, கடை அற்றவராயும் உள்ள உம்மை, இப்படிப்பட்ட திருமேனியோடு தேவரீர் எனக்குத் தெரிவித்த படியே கண்டு களிக்கிறேன் என்கிறான் பார்த்தன்.

**'மகாத்மாவே! மேலே காணும் விண்ணுலகு, கீழே உள்ள மண்ணுலகு இவை இடையிலே கணக்கற்ற அண்ட கோளங்கள், அவை இயங்குகின்ற வெட்ட வெளி, எட்டுதிக்குகள் ஆகிய யாவுமே உம்மாலே வியாபிக்கப்பட்டுள்ளன. உமது அற்புதமான இந்த உக்கிர ரூபத்தைப் பார்த்து மூவுலகமும் நடு நடுங்குகின்றன.'** XI (20)

**'நான் பார்க்கின்ற இந்த தேவர்களது குழுக்கள்; உம்முடைய உருவத்தினுள்ளே பிரவேசிக்கிறார்கள். சிலர் பயத்தோடு கூடியவர்களாய்த் தத்தம் கைகளைக் கூப்பியபடி உம்மைப் புகழ்ந்து தோத்தரிக்கின்றனர். மகரிஷிகளும், சித்தர் கூட்டங்களும், வாழ்த்துக்கள் கூறி, பரிபூரணமான தோத்திரங்களால் உம்மைப் போற்றித் துதிக்கின்றனர்.'** XI (21)

**'உருத்திரர்கள், ஆதித்தியர்கள், அஷ்டவசுக்கள், சாத்தியர், விசுவதேவர், அசுவினி தேவர்கள், மருத்துக்கள், பித்ருக்கள், கந்தருவர், யக்ஷர், அசுரர், சித்த கணங்கள் முதலானோர் மிகவும் வியப்படைந்து உம்மையே பார்க்கிறார்கள்.'** XI (22)

**'தடந்தோள்களை உடையவரே! பல முகங்களையும் கண்களையும் உடைய, பல கைகள் பல தொடைகள்**

பாதங்கள் உடைய, பல வயிறுகள் உடைய, பற்பல வளைந்த பற்களால் பயங்கரமான தோற்றமளிக்கும் உம்முடைய பெரிய வடிவத்தைப் பார்த்து உலகங்கள் நடுங்குகின்றன; நானும் நடுநடுங்குகின்றேன்.' XI (23)

'விஷ்ணுவே! பரமாகாசம் எனும் விண்எல்லை வரையிலே வியாபித்து மகா பிரகாசமாய் பலப்பல வண்ணங்களுடன் ஜொலிக்கும் திறந்தவாய்களை உடைய, நெருப்புச் சிந்துகின்ற (கக்குகின்ற) விசாலமான கண்களுடன் கூடிய உம்மை நான் பார்த்ததும் மனம் நடுநடுங்கியவனாய் என் மன அமைதி யையும் தைரியத்தையும் இழந்து விட்டேன். (நான் எதையும் காண்கிறேனில்லை)' XI (24)

*இதனையே ''பார்ப்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப் பரந்ததோர் படரொளிப்பரப்பே'' என்கிறார் மாணிக்க வாசகர்.*

'அனைத்து தேவர்களுக்கும் ஈசனே! மகா பயங்கரமான வளைந்த பற்களுடன் கூடிய, பிரளய கால அக்கினிக்கு ஒப்பான, உமது திருமுகங்களைப் பார்த்த மாத்திரத்திலேயே அடியேன் திசைகளை ஒன்றும் அறிந்திலேன். அமைதியும் சிறிதளவேனும் அடைந்திலேன். இந்த அகில அண்டத்துக்கும் ஆதாரமானவரே! எனக்கு அருள்புரிக.' XI (25)

*திக்குகளை நாம் அறிந்து கொள்வது சூரிய சந்திர விண் மீன்களாலேயே. ஆனால் பிரளய கால அக்கினியை ஒத்த ஒளியை, கண்ணன் திருமுகத்திலே அர்ஜுனன் கண்ட அதனால் அவனுக்குத்திக்குகளை அறியக்கூடவில்லை. வியப் பினாலும் அச்சத்தினாலும், அவன் அமைதி இழந்து விட்டான். இந்த நிலையில் இருந்து மீள அவன் கண்ணனது அருள் வேண்டி நிற்கிறான்.*

*பார்த்தன், கண்ணன் உருவத்திலே கண்ட காட்சியை அச்சத்தோடு விவரிக்கிறான். பறந்து திரியும் விட்டில் பூச்சிகள் விளக்குச் சுடரால் கவரப்பட்டு அதிலே தாமே*

சென்று வீழ்ந்து மடிவதை நாம் காண்பதைப் போன்ற காட்சியை கண்ணனிடம் விவரிக்கிறான் பார்த்தன்.

'பார் ஆளும் வேந்தர்கள் கூட்டத்துடனே இதோ இங்கே உள்ள திருதராட்டிரன் புதல்வர்கள் அனைவரும் பீஷ்மரும் துரோணரும், சூதபுத்திரனாகிய கர்ணனும் நம்மைச் சார்ந்த மிக முக்கியமான போர்வீரர்களுடன் மிகவும் பரபரப்புடன் கோரப் பற்களைக் கொண்ட உம்முடைய பயங்கரமான வாய் மூலமாக உமக்குள் புகுகின்றனர். மற்றும் சிலர் பொடிப் பொடியாகிப்போன தலைகளுடன் உம்முடைய பல்லிடுக்கு களில் அகப்பட்டுள்ளனர். இதை நான் காண்கிறேன்.'
XI (26&27)

பெருக்கெடுத்தோடும் ஆறுகள் யாவும், கடலையே நோக்கிப் பாய்ந்தோடுவதைப் போல எங்கும், எப்பக்கமும் ஜுவாலை வீசும் உம்முடைய வாய்க்குள் இவ்வுலக வீரர்கள் அனைவரும் பிரவேசிக்கின்றனர்.

'எப்படி விட்டிற்பூச்சிகள் அதிவிரைவில் நாசமடைதற் பொருட்டு சுடர் விட்டெரியும் விளக்கிலே பாய்கின்றனவோ ப்படியே, உலக மக்களும் தாம் நாசமடைவதற்காகவே உம்முடைய பற்பலவாம் வாயிலே நுழைகின்றனர்.'
XI (28&29)

இந்த உயிரினங்கள் யாவுமே தம்முடைய அஞ்ஞானத்தால் மனமருண்டு கண்ணிருண்டு, தம்முடைய சொந்த அழிவுக் காகவே அவர் வாயிலே புகுகின்றனர். அதை அந்த தெய்வீக ஆற்றல் அனுமதிக்கின்றது, ஏனெனில் அந்த உயிரினங்கள் அவை அவை செய்த, கருமத்தின்பலாபலன்களை அனுபவிக் கவே அப்படிப்புகுகின்றன.

நாம் ஒரு செயலைச் செய்யும் போது நிச்சயமாக அதன் பலன் நம்மை வந்து அடைகின்றது. இந்தக் கருமங்களும், கர்ம பலன்களும் தெய்வீக சக்தியின் சட்டம்-விதியாகும். இந்தச்சட்டத்தையே—விதியையே அந்த தெய்வீக சக்தி நிறைவேற்றிவைக்கிறது. அர்ஜுனன் மேலும் கூறுகிறான்.

'விஷ்ணுவே! வெங்கதிர் வீசுகின்ற உமது பலப்பல வாய்களினால் உலகம் அனைத்தையுமே விழுங்கி எல்லாத் திக்குகளையும் நக்கி ருசி பார்க்கிறீர். உம்முடைய உக்கிரமான ஒளி வெள்ளம், தன்னுடைய தேஜஸால் உலகெங்கனும் பரவி நிரம்பிச் சுட்டெரிக்கின்றது.' IX (30)

'பயங்கர மூர்த்தியாகிய நீர் யார் என்று எனக்குக் கூறுவீராக! உம்மை வணங்குகிறேன். தேவதேவா! எனக்கு அருள் புரிவீராக! யாவற்றுக்கும் மூலமூர்த்தியாகிய உம்மை அறிந்து கொள்ள அவாவுறுகிறேன். ஏனெனில் உம் செயலை நான் அறிகிறேனில்லை.' XI (31)

*இதைக்கேட்ட பகவான் அர்ஜுனனுக்கு பதிலளிக்கிறார்.*

'உலகங்கள் அனைத்தையும் அழிக்கின்ற பெரு வல்லமை வாய்ந்த காலமாக நான் இருக்கிறேன். உலகில் உள்ள பெரு வெள்ளத்தை (பூபாரத்தை) அழித்திடவே நான்பூரண வளர்ச்சி பெற்றுள்ளேன். (அதாவது பூரண அவதாரம்), உன்னுடைய முயற்சி இல்லாமலேயே (கூட) இங்கு அணிவகுத்துள்ள வீரர்கள் யாவரும் என்னுடைய சங்கற்ப மாத்திரத்தால் நாசமடையப் போகிறார்கள்.' XI (32)

*உலகத்தை மூலாதாரமாக நின்று இயக்குகின்ற சக்தி காலம்தான். இறைவனை, நாம் அந்த காலமாகவே கருதி கவனிக்கும் போது, அவன் தொடர்ச்சியாக படைத்து அழித்து வருகிறதை நாம் காணலாம். காலம் ஒன்றுதான், இடையறாது தொடர்ச்சியாகப் பெருகிப் பாயும் இயக்கம்.*

*''ஞாலமே விசும்பே இவை வந்துபோம் காலமே'' என்கிறார் மாணிக்கவாசகர்.*

*பரம்பொருளுக்கு மகாகாலம் என்பது ஒருபெயர். பரம்பொருளே: சிருட்டி, திதி, சங்காரம்ஆகிய முத்தொழிலுக்கும் காரணன். உலகத் தோற்றத்திற்குக் காரணன் கடவுளே என்னும்போது, மக்கள் பிறத்தல், வாழ்தல், மட்டுமல்ல. அவர்கள் அடையும் துன்பம், மரணம், வேதனை யாவற்றையுமே இந்த உலகம் உள்ளடக்கியதே.*

எனவே நல்லனவற்றையே கடவுள் தருகிறார். பிறவற்றைச் சாத்தான் தருகிறான் என்னும் தத்துவம் நமதல்ல. நல்லனவும் தீயனவும் நம் கருமத்தின் பலன்களே.

'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்கிறது புறநானூறு.

காலம் கடந்து நிற்பவன் கடவுள். எனவே காலம் அவன் ஆதிக்கத்தில் நிற்கிறது. எனவே அவன் காலாதீதன். காலத்தின் பின் நின்று இயக்கும் மாசக்தியாக அவன் இருப்ப தால், அவனால் முன்னும் பின்னும் பார்க்க முடிகிறது. எனவே கண்ணன் அர்ஜுனனுக்குச் சொல்லுகிறான், 'இவர்கள் இவ்வீரர்கள், துரியோதனன், பீஷ்மர், துரோணர் முதலியோர் யாவரும் தாம்தாம் முன் செய்த பண்டைய கரும பலனுக்காகவே இப்போது இப்படி மடிகின்றனர். இதை நாம் இப்போது செய்யும் எந்த வகையான நற்செயலும்தடுத்து நிறுத்த இயலாது' என்கிறார்.

மேலும் பகவான் தொடர்கிறார்.

**'எனவே அர்ஜுனா! நீ எழு! கீர்த்தியை அடை, உன்னுடைய விரோதிகளை வென்று செல்வவளம் கொழிக்கும் திருநாட்டை அனுபவி. இவர்கள் அனைவரும் என்னால் ஏற்கனவே கொல்லப்பட்டவர்களே. ஆகையினால் சவ்விய சாசியே! (இடக்கையாலும் அம்பு எய்பவனே) நீ இந்த யுத்த வீரர்களைக் கொல்வதில் வெறும் நிமித்த காரணனாக மட்டுமே இரு.'** XI (33)

விதிக்கு நாயகனாகிய பரம்பொருள் முடிவெடுக்கிறான். அந்த முறைப்படியே வினையை ஆத்மாக்களுக்கு ஊட்டு கிறான். தத்தம் கரும வினைகளுக்கு ஏற்பவே வீரர்கள் முன்னமே கொல்லப்பட்டவர்கள். அர்ஜுனன் இங்கு ஒரு கருவியே; புல்லாங் குழல் போன்றவனே அவன். அதை இசைப்பவனோ கண்ணன். தன்னுடைய தவறுதலான கருத்துக்களால் உந்தப்பட்டு தன் முடிவின்படியே அவன் (அர்ஜுனன்) முடிவெடுப்பானானால் அவன் தன்னைத்தான்

ஏமாற்றிக் கொள்பவனாகிறான். இறைவன் முடிவை மாற்றியமைக்க எந்த ஆத்மாவாலும் இயலாது என்பதை உணர்க என்று உரைக்கிறார் கண்ணன். இதிலே இந்த யுத்தத்திலே அருச்சுனன் வெறும் நிமித்த காரணனே. ஒப்புக்கு போர் செய்பவனே. மூல காரணன் இறைவனே.

இது, இது இவ்வண்ணம் என முன்னமே தீர்மானிக்கப் பட்ட விவகாரம். இதில் அர்ஜுனன் செய்யத்தக்கது ஒன்றுமே இல்லை. அவனால் அணுவளவும் இதில் மாற்றம் செய்ய முடியாது. அவன் இறைவனுடைய கையில் ஏந்தி உள்ள ஒரு கருவியே, ஆனால் இறைவன் கொடுமையான வனோ, விளையாட்டுத்தனத்தோடு மாறுபாடுள்ளவனோ அல்லன். மாறாக அவன் அன்பே வடிவானவன். அருள் பாலிப்பவன். தர்ம உருவானவன். அருள் பாலிக்கும் அன்பு வடிவான தர்ம சொரூபி, ஏன் பயங்கரமாகப் பிறர் பிறரை அழிக்கக் காரணமாகிறான்.

பரம்பொருள் நமக்கு உணவை மட்டுமே ஊட்டவில்லை. அவன் நம்முடைய கருமங்களுக்கேற்றவாறு இன்ப துன்பங் களையும் ஊட்டுகிறான். ஊட்டுபவன் அவன் ஊட்டுவிப்பது வினைப்பயன். அதைச் சுகதுக்கத்தோடு அனுபவிப்பது நாம். ஒவ்வொருவரும் அவரவர் வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டும். எண்ணம் சொல் செயல்களால் ஆற்றிய செயல்கள் அனைத்தும் இப்பொழுதோ பிறகோ நம்மை நிச்சயமாக வந்து அடைந்தே தீரும். அதை உயிர்க்கு அடை விப்பது காரணகாரியத் தொடர்புடைய நியதி.

இறைவனுடைய செயல்கள் யாவுமே மனிதனை நிமித்த காரணமாகக் கொண்டு செயலாக்கப்படுகின்றன. நாம் புத்திசாலிகளாக இருந்தால் இதை நன்கு உணர்ந்து அறியலாம். அதன்படி நடக்கலாம். நாம் அவன் கையில் உள்ள ஒரு கருவி மட்டுமே. நாம் தற்சுதந்தரம் அற்றவர் என்பதை உணர்ந்து நம் ஆத்மாவை முழுமையாக அவனிடம் ஒப்படைத்துவிட்டு 'நான்' என்பதை அறவே அழித்து அதன்

வேரடிமண்ணும் இல்லாமல், உலகில் செத்தாரைப் போல திரிய நாம் அவனுக்கு ஆளாகிவிடலாம்...

'என் அமைதி உன்னுடைய சித்தத்திலேதான் உள்ளது' என ஆத்மாவை இறைவனிடம் ஒப்படைத்து விட்டால், 'தந்ததுன் தன்னை கொண்டதென் தன்னை' என்று ஆத்மாவும் பரமாத்மாவும்.

மாறிப்புக்கு இதயம் எய்தினால், 'இந்த உலகிலே உனது சித்தத்தைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. தாங்களே செயலாற்றுபவர். தான் வெறும் கருவியே' என்பது நம் இதய ஓலமாக அமைந்து விட்டால், நம் ஆத்ம நிவேதனம் இறைவனுக்கு என ஆகிவிட்டால், பின்னர் இன்பமே எந்நாளும் துன்பமில்லை.

கண்ணன் மேலும் கூறுகிறார் :

**'அர்ஜுனா! ஏற்கனவே என்னால் கொல்லப்பட்டு (இங்கே நடைப்பிணமாக நடமாடிக் கொண்டிருக்கும்) துரோணரையும் பீஷ்மரையும் ஜயத்ரதனையும் கர்ணனையும், அப்படியே பிற பிற போர் வீரர்களையும், நீ என்னுடைய கருவியாக இருந்து போரிலே வதைத்துவிடு. பயந்து நடுங்கி வருந்தாதே. போரிலே பகைவர்களைக் கொன்று நீயே வெற்றியடைவாய்; எனவே போர் புரிக!'** XI (34)

இச் சுலோகத்திலே சொல்லப்பட்டுள்ள நால்வரும் (துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன் கர்ணன் ஆகிய நால்வரும்) பிறரால் வெல்லற்கரியவர்கள்.

துரோணர் க்ஷத்திரிய குல காலனாகிய, தனுர் வேதத்திலே மிகச் சிறந்த பரசுராமரிடத்திலே வில்வித்தை பயின்றவர்; அர்ஜுனனுக்குக் குரு.

பீஷ்மரோ தனுர்வேத விற்பன்னர். தாம் இறக்க வேண்டும் என்று தாமே நினைத்தாலன்றி இறவாதவர்.

அவர் உயிர் பிற வகையில் பிறரால் போகாது. அர்ஜுனன் பாட்டனார் அவர்.

ஜயத்ரதன் என்பவனது தலையை எவன் அறுத்து பூமியின் மேல் வீழ்த்துகிறானோ அவன் தலை ஓராயிரம் சுக்கலாக வெடிக்கும்படி தன் தந்தையால் வரம் பெற்றிருப்பவன் ஜயத்ரதன்.

கர்ணன் வில்வித்தையிலே அர்ஜுனனுக்கு நிகரானவன். அர்ஜுனனைக் கொல்வேன் என்னும் சபதத்தோடு வாழ்பவன். அவனைக் கொல்லவே காண்டவ தகன காலத்தில் தப்பிப் பிழைத்த நாகம் கர்ணனிடம் வளர்ந்து கொண்டிருக்கிறது.

'இவர்கள் அனைவரும் நம் கரத்தால் மாள முடியுமா?' எனும் ஐயம் அர்ஜுனனுக்கு எழுகின்றது. அவன் வெறும் அம்புதான். எய்பவன் கண்ணனே, என்னும் உண்மையை இங்கு விளக்குகிறார் கண்ணன். தான் கருவியே ஆயினும் வென்றவன் அர்ஜுனனே என்னும் பெயரை—புகழை அர்ஜுனன் அடைகிறான். எனவே புகழ் எய்த, நாடடைந்திட போர்புரி. நீ நிச்சயம் வெல்வாய்' என்கிறான் கண்ணன்.

அத்தினாபுரத்திலே திருதராட்டிரன் அரண்மனையில் இருந்தபடியே போர்க்களத்தில் நடந்த இவையனைத்தையும் கண்டும் கேட்டும்—கண்ட, கேட்ட அவைகளைத் திருதராட்டிரனுக்கு உரைத்தபடி இருந்த சஞ்சயன் இப்போது மேலும் கூறுகிறான்.

**'கேசவனுடைய இந்த உரைகளை எல்லாம் கிரீடி கேட்டான். கேட்டு, நடுநடுக்கத்தோடு அந்த கிரீடமணிந்த பார்த்தன் தன் இரு கைகளையும் கூப்பியவனாய் வணங்கித் திரும்பவும் அஞ்சினவனாய், மேலும் மேலும் நன்கு வணங்கி; வாய் குளறியபடி கண்ணனிடம் கூறலுற்றான்.'** XI (35)

என்னவென்று கூறுகிறான் :

**'இருஷிகேசா, தங்கள் புகழ்பாடிப் போற்றுவதில் இந்த வையகம் உண்மையிலேயே பெருமகிழ்வும் ஆனந்தமும் அடைகிறது. தங்களுக்கு அஞ்சிய அரக்கர்கள் பற்பல திக்குகளிலும் நடுநடுங்கிப் பறந்தோடுகின்றனர். சித்த சுத்தி வாய்ந்த ஆத்ம ஞானிகளோ பணிவோடு போற்றி வழிபடுகின்றனர். இவை உமக்குத் தகுதி வாய்ந்தனவே (பொருத்தமானவைகளே)**

XI (36)

*பயத்தினாலும் பக்தியினாலும் (பய—பக்தி) ஏற்பட்ட பேரானந்தத்தினால், அர்ஜுனன் பரம்பொருளைத் தோத்தரிக்கிறான்; அவனுடைய புகழைப் பாடுகிறான். காலத்தோடு ஒன்றிய காலகாலனை (அழிக்கும் தன்மை வாய்ந்த சங்கார கர்த்தாவை) மட்டுமே அவன் காண்கிறானில்லை. இந்த அண்டகோளங்கள் அனைத்தையுமே தன்னுடைய சங்கற்பத்தினால் இயக்குகின்ற அந்த பரம் பொருளின் தெய்வீக தரிசனத்தையும் அவன் காண்கிறான்.*

*ஒரு வடிவம் அவனுக்கு அச்சத்தைக் கொடுக்கிறது; நடுநடுங்குகிறான். மாறாக மற்றொரு வடிவமோ, அவனுள் ஆனந்தப் பரவசப் பேரின்பத்தை நல்கிவிடுகிறது. அவன் தன் உள்ளத்துள்ளே கிளர்ந்தெழும் பக்திப் பிரவாகத்தை அப்படியே முழுமையாக வெளிப்படுத்துகிறான்.*

*இந்தச் சுலோகத்தில் இருந்து அர்ஜுனன் சொல்லுகிற எல்லா சொற்களுமே ஒரு தோத்திரமாலை மாதிரியாகவே அமைந்துள்ளன. பரமாத்மாவைப் பற்பல சொற்களால் சொல்லிச் சொல்லிப் புகழ் பாடுகிறான் அர்ஜுனன்.*

**'மகாத்மாவே! முடிவென்பதே இல்லாதவரே! தேவ தேவா! அண்டங்கள் அனைத்துக்கும் ஆதாரமானவரே! படைப்புக் கடவுளையும் படைத்தவரே! அனைத்துக்கும் ஆதி காரணமான உமக்கு ஏன் அவர்கள் தங்கள் வழிபாடுகளைச் செய்ய மாட்டார்கள்? தோன்றியவைகளும் நீரே! தோன்றாதவைகளும்**

**நீரே! அவைகட்கு அப்பாற்பட்டது எதுவோ, அந்த அழிவு இல்லாத பொருளும் நீரே!'** XI (37)

**'ஆகையினாலே நீரே ஆதிதேவனும் புராண புருஷனும் ஆவீர். (மிகவும் தொன்மையானவன்). இவ்வுலகனைத்துக்கும் பரமாத்மாவாய் நின்று தாங்குகின்ற மேலான ஆதாரப் பொருளும் நீரே ஆவீர். அறிபவனும் அறியப்படுபொருளும் நீரே. எல்லா ஆத்மாக்களும் சென்றடையத்தக்க மேலான பரமபதம் நீரே. எண்ணுக்கடங்காத பலப்பல வடிவங்களை உடையவரே! இவ்வண்டங்கள் அனைத்தும்வியாபித்துள்ளவர் நீரே.'** XI (38)

*புராண புருஷன் என்பது மிகத் தொன்மையானவன் அவன் என்பதை உணர்த்துகிறது. 'முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருள்' என்கிறது திருவாசகம்.*

*இவ்வண்டங்கள் அனைத்தையும் தாங்குகிறான் இறைவன். எப்படி? இவ்வுலகனைத்தும் அவனுள்ளே அடங்கியுள்ளது. அதாவது உலகனைத்தும் தாங்கி நிற்கும் ஆதாரமாக அவன் இருக்கிறான். அண்டங்களே அவன் உடல்; அவன் உயிரோ ஏக அண்டமாகப் பரவியுள்ள பரமாத்மாவே.*

*அவன் அறிவு மயமானவன். அறிபவன் அவன். 'என் சித்தமிசைக் குடிகொண்ட அறிவான தெய்வமே, என்கிறார் தாயுமானார். அவனே பேரறிவாளன் (சர்வக்ஞன்); இயற்கை அறிவாளன்; முற்றும் உணர்ந்தவன். 'வாலறிவன்' என்கிறார் வள்ளுவர்.*

*ஆனால் உயிர்கள் அறிவு குறைபாடுடையது. (கிஞ்சிக்தன்) செயற்கை அறிவுடையது: பிறர் கொளுத்தக் கொண்டு அறிவை வளர்த்துக் கொள்வது.*

*அவன் அறிவுமயமானவன் மட்டுமல்ல; அறியவேண்டிய அறியப்படுபொருளும் அவனே. நீ பிறவற்றை எல்லாம்*

அறிவது உலகியல் அறிவு. அவனை முற்றத் தெளிந்தறிவதே உண்மையறிவு; மெய்யுணர்தல்; மெய்ஞ்ஞானம் எனப்படும்.

இது மட்டுமல்ல; ஆத்ம ஞானமும் அதை அடைந்ததால் வாழ்கின்ற ஞான வாழ்க்கையும் அந்த ஞான வாழ்க்கையின் முடிவெல்லையாக விளங்கும் அருட்பெரு நிலமாம் பரமபதமும் அவனே! இந்த வகையிலே இவ்வுலகம் மட்டும் அல்லாமல் அவ்வுலகத்தும், அனைத்திடத்தும் அவன் வியாபித்திருக்கிறான்.

**'கிருஷ்ணா! காற்று, தீ, நீர், சந்திரன் அனைத்தும் தாங்களே! சகல உயிரினங்களுக்கும், பிதாக்களான பிரஜாபதி களுக்குப் பிரம்மதேவன் பிதா ஆகையினால் அவர் எல்லா பிரஜைகளுக்கும் பிதாமகன் (தாத்தா) ஆகிறார். அவருக்குத் தாங்கள் தந்தை ஆகையினால் தாங்கள் எங்கள் அனை வருக்குமே முற்பாட்டனார்; அப்படிப்பட்ட தங்களுக்குப் பலப் பல வணக்கங்கள் ஆயிரம் முறையும்; அதற்கு மேலும் நமஸ்காரங்கள்.** XI (39)

**'யாவுமாகி நின்றவரே! எங்கும் நிறைந்துள்ளவரே! தங்களை முன்னின்றும் பின்னின்றும் நமஸ்கரிக்கிறேன். அதோடு தமது எல்லாப் பக்கத்திலும் நின்று நான் நமஸ்கரிக் கிறேன். அளவில்லாத வீரியத்தையும் (வல்லமையையும்) பரந்த அதி பராக்கிரமத்தையும் உடைய நீரே அனைத்திலுமே நன்கு வியாபித்திருக்கிறீர். அதனால் நீரே யாவுமாக இருக்கிறீர்.** XI (40)

'யாதுமாகி நின்றாய்; காளி எங்கும் நீ நிறைந்தாய்' என்கிறார் பாரதி. பரம்பொருள் எங்கும் நீக்கமற நின்ற பொருள். உள்ளும் புறமும் மேலும் கீழும், திக்குகள் அனைத்தும் பரந்துள்ள பொருளே பரம்பொருள்.

'எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கும் ஒன்றாய் முட்டித்ததும்பி முனைத்தெழும் சோதி' என்கிறார் பட்டினத்தடிகள்.

அவன் இல்லாத இடமே இல்லை. 'நீ இல்லாத இடமே இல்லை, நீதானே உலகின் எல்லை' என்கிறது இக்காலப் பாடல் ஒன்று.

நாம் அனைவருமே ஓர் எல்லையற்ற பரம்பொருளின் உயிர்ப்படைப்பே, என்னும் உண்மையும் அவன் நம் உயிர்க்குள் உயிராய்க் கோயில் கொண்டுள்ளான் என்னும் உண்மையும் அடிக்கடி இங்கு நினைவூட்டப்படுகிறது.

'இப்படிப்பட்ட உமது அளவிடற்கரிய மகிமையை அறியாது நான் என் மெய்யுணர்வின்மையால் உன்னிடம் வைத்த அன்பினால், பிர்யத்தால், தோழன் என்றே மதித்து (கருதி) ஏ கிருஷ்ணனே! என்றும் யாதவா என்றும் தோழனே என்றும் பலமுறை பணிவில்லாச் சொற்களோடும் நாம் உம்முடனே பலப்பல முறை உரையாடி இருக்கின்றேன். அச்சுதனே! நான் உம்மோடு விளையாடிய காலத்தும் படுத்திருந்த காலத்தும் அமர்ந்திருந்த காலத்தும் உண்ணும் காலத்தும் தனித்திருந்த காலத்தும் பிறருடனே கூடி இருந்த காலத்தும் நான் உம்மை ஏளனமுடனே எப்படி எல்லாம் அவமதித்தேன். அளப்பதற்கு அரியவனே! அவைகளை எல்லாம் மன்னித்தருள்க! XI (42)

'ஒப்புயர்வற்ற பெருந்தகையோய்! இந்தச் சராசர அகில உலகத்துக்கும் நீரே பிதாவாகவும் குருவாகவும் குருவுக்குக் குருவாகவும் ஆகிறீர். ஆகையினால் யாவராலும் போற்றத் தக்கவர் ஆகிறீர். இந்த மூவுலகத்திலும் தங்களுக்குச் சமமானவர் எவரும் இலர். எனவே தங்களுக்கு மிக்கவர் யார் என்ற பேச்சுக்கே இடமேது? XI (43)

இறைவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். இயங்கும் பொருள்களும் நிலைத்து நிற்கும் பொருள்களும் அடங்கிய இந்த உலகத்திலே அவனே யாவருக்கும் பிதாவாகிறான். ஏனெனில் நம் பிறவிக்கு அவனே ஆதி கர்த்தா. நம்முடைய கல்வி, அறிவு, உணர்வு பண்பாடுகளைப் போதிக்கின்ற நம் ஆசிரியரைக் காட்டிலும் குருவுக்குக் குருவாக விளங்குகின்றவன் அவன். ஏனெனில் பரம்பொரு

ளாகிய குரு, உலக குருவைப் போலன்றி அவர் கற்றுத்தராத மெய்ஞ்ஞான மெய் உணர்வுகளை ஊட்டித் தன்னையறியும் ஆத்ம போதத்தை ஊட்டிடும் தன்மையால் அவன் குருவிலும் மேம்பட்ட குருவாகிறான். இந்த வகையிலே இறைவனுக்கு ஒப்பாரும் இலர்: மிக்காரும் இலர்.

**'எனவே, இப்படிப்பட்ட ஒப்பற்றப் பெருமை வாய்ந்தவரே! தேவ! நான் கீழே வீழ்ந்து என் உடலால் அஷ்டாங்க நமஸ்காரம்செய்து(அடியற்ற பனைபோல்—என் எல்லாஅங்கங்களும் தரையிலே பதிய) வணங்குகிறேன். போற்றத் தகுந்த ஈஸ்வரனாகிய உமது அருளை எனக்கு அருளுமாறு வேண்டி நிற்கிறேன். ஒரு பிள்ளைக்குத் தகப்பனைப் போலவும் தோழனுக்கு ஒரு நல்ல நண்பனைப் போலவும் காதலிக்குக் காதலன் போலவும் தாங்கள் என்னை மன்னித்தருள வேண்டிக் கொள்கிறேன்.'** XI (44)

பரம்பொருள் தத்துவம் அனைத்தையும் கடந்த தனிப் பொருள்; மனோவாக்கு காயங்கட்கு எட்டாத ஒரு புதிர். அதை மறைபொருள் என நாம் கருத வேண்டியதில்லை. ஆனால் ஒரு மகனுக்குத் தந்தை போலவும் தோழனுக்குத் தோழனைப் போலவும் ஒரு காதலிக்குக் காதலனைப் போலவும் ஒவ்வோர் உயிரும் ஆத்மாவும் கருதி பக்திசெய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். ஆண்டான் அடிமையாகக் கருதி வழிபடுவது ஒரு மரபு.

'ஈன்றாளுமாய் எந்தையுமாய் உடன் தோன்றினராகச் சொல்கிறது தேவாரம்.

'தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்' என்கிறார் வள்ளலார்.

'ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய தோழனுமாய்' என்கிறார் சுந்தரர்.

காதலன், காதலி, நாயகன், நாயகி பாவத்தைப் பாடி வழிபடாத அடியார்களே இலர். வைஷ்ணவ இலக்கியம் அம்முறையிலே அதிக ஈடுபாடு கொண்டுள்ளது.

பாரதியார் கண்ணனைத் தன் தாயாக, தந்தையாக சற்குருவாக தன் ஆண்டையாக, அரசனாக மட்டும் காணவில்லை; தன் காதலியாக, தன் காதலனாக மட்டும் நோக்கவில்லை; தன் சீடனாகவும் தன் பணியாளனாகவும் காண்கிறார். அதாவது, அவர் பக்தி உள்ளம் மேற்கூறிய அனைவரிடத்தும் கண்ணனையே காண்கிறது.

அர்ஜுனன் கண்ணனிடம் அருளை வேண்டுகிறான்; மைந்தனுக்குத் தந்தை மன்னிப்பதைப் போல, தோழன் பிழையைத் தோழன் பொறுத்துக் கொள்வதைப் போல, காதலியின் குற்றத்தைக் காதலன் பொறுத்துக்கொள்வதைப் போல என் பிழைகள் அனைத்தையும் பொறுத்தருள்க என வேண்டுகிறான். இதுவே பராபக்தி என்பது. இதுவே இறைவனைத் தனக்கு அணுக்கமாகக் காணும் பக்தி.

**'தேவா! இதற்குமுன் நான் காணாத தங்கள் விசுவரூபத்தைக் கண்டு உளம் களிகூர்ந்தேன். ஆனாலும் ஒருபுறம் என் உள்ளம் அச்சத்தால் நடுநடுங்குகின்றது. ஆகையால் தேவர்களின் தலைவனே (தேவேசா), உலகனைத்துக்கும் இருப்பிடமான ஆண்டவனே (ஜகந்நிவாச!) அடியேனுக்கு, உமது முன்னைய இனிய வடிவையே காட்டியருள வேண்டுகிறேன்.'** XI (45)

**'முன்னைய வடிவமான கிரீடம் தரித்தவராய்; கதையை ஏந்தியவராய்; கையிலே சக்கராயுதத்தை உடையவராய் இருந்த அந்த வடிவத்தையே மீண்டும் காண விரும்புகிறேன். ஆயிரம் திருக்கரங்களை உடைய இந்த விசுவரூபத்தை நான்கு கைகளை உடைய பழைய வடிவமாக மாற்றி எனக்குச் சேவை சாதித்தருள்க; அங்ஙனமே இருப்பீராக.'** XI (46)

கண் கூசும்படியான தெய்வீகப் பேரொளியுடன் கூடிய பலப்பல கரங்கள் பலப்பல உடல்கள் பலப்பல முகங்கள் எண்ணற்கரிய ஆயுதங்கள் மிகப் பயங்கரமான பலப்பல கண்கள் அக்கினி சுவாலை வீசுகின்ற அங்காந்த வாய்கள் இவைகள் யாவற்றையும் கண்டு அச்சம் கொண்டான்

அர்ச்சுனன். இந்த விசுவரூப தரிசனம் அவன் வேண்டு கோளின்படியே அவனுக்குக் காட்டப்பட்டது. ஆனாலும் அதையே அவன் நீண்ட நேரம் காண முடியவில்லை.

கடவுளது வடிவம் எல்லை கடந்த, அண்டத்தை அளாவிய அகண்டாகாரப் பேருருவம் மட்டுமேயல்ல; பக்தன் தன் உள்ளத்திலே பதிய வைக்கத்தக்க கோமளமான அழகிய திருவுருவமுமாகும். எனவே, தேஜோமயமான விசுவரூபத் தைக் கண்டதால் கண்கூசப் பெற்று அதையே தொடர்ந்து அல்லது மீண்டும் மீண்டும் பார்க்க இயலாத பார்த்தன் தன்னோடு பழகிய தோழனான கண்ணனின் பழைய வடிவத்தையே தான் காணவேண்டுமென வேண்டிக் கொள்கிறான்.

இதைக் கேட்ட கண்ணன் அர்ஜுனனுக்குச் சொல்லத் தொடங்கினார்.

**'அர்ஜுனா! என்னுடைய பேரருளாலும் என்னுடைய தெய்வீக யோக சக்தியாலும் இந்த ஒளி நிறைந்ததும் நாசமற்ற தும் முடிவில்லாததும் அகில உலகளாவியதுமானது. என் னுடைய மிக உன்னதமான விசுவரூபம் உமக்குக் காட்டப் பட்டது. நீயும் தரிசித்தாய். உன்னைத் தவிர வேறு பிறர் யாரும் இக்காட்சியை முன்பு கண்டது கிடையாது."** XI (47)

மனிதனது ஆத்மீக வாழ்க்கையின் எல்லை இத்தகைய ஓர் அற்புதத் தெய்வீகக் காட்சியைக் காண்பதோடு முடிவடைவதில்லை. அப்படி முடியும் என்றால் கீதை இந்த இடத்தோடு முடிவடைந்திருக்க வேண்டும்.

திடீரென்று ஒருவன் கண்முன் காட்சியளித்து மறைந்த அந்தக் காட்சி ஆத்ம சாதகனுக்கு ஒரு நிலைத்த செயல் பாட்டுக்கு, யோக முயற்சிக்குத் தொடக்கமாக அமைய வேண்டும். அதுவே முடிவல்ல. அது சுழுத்திநிலையோ, சமாதியோ, ஆத்ம சாதகத்தின் முடிவோ அல்லது மிக முக்கியமான மூல தத்துவமோ அன்று.

கண்கூசும்படியான பேரொளிக்காட்சிகள், மெய் மறந்த ஆனந்த பரவசமாக்கும் விரைவியக்கக் காட்சிகள் நிலையான மார்க்கத்திலே பக்தியுடன் ஞானகர்மமாகிய ஒரு நெறியிலே தான் மேற்கொண்டு சென்று பரிபூரண நிலையை எய்தும் ஒரு நிலைமாற்றமாக அது மாற வேண்டும்.

அர்ஜுனன் தான் மெய்மறந்து கண்ட இந்தக் காட்சியைத் தன் வாழ்நாளிலே இனி என்றுமே மறக்கவே மாட்டான். ஆனால் இது முடிவல்ல; இதுவே போதாது. இனிமேல்தான் தன் வாழ்க்கையிலே தன் ஆத்ம உய்திக்காக அவன் பாடுபடவேண்டும்.

இத்தகு ஜோதிமயமான அருட்காட்சி நம் கண்களைத் திறந்து விடுகிறது. ஆத்ம சாதக வழியைத் திறந்து விடுகிறது. ஆனால் அக்காட்சி மட்டுமே ஆத்ம முன்னேற்றத்தை அடைவித்து விடாது. நம் கண்களைத் திறந்துவிட்ட அக்காட்சி காட்டிய நெறியிலே நாம் செல்ல வேண்டும். அதற்குரிய சாதனைகளை இடையறாது நாம் செய்தல் வேண்டும்.

(இதைக் குறித்தே கண்ணன் இந்த அதிகாரத்தை அடுத்து, அடுத்த அதிகாரத்தில் பக்தியோகத்தை விரிவாக இயம்புகிறார்.)

மேலும் கண்ணன் சொல்கிறார் :

**'குருகுல சிரேஷ்டா! மாந்தர்கள் வேதங்களை ஓதி அதன்படி கர்மகாண்ட யாகாதிகளைச் செய்வதை அறிவதாலோ, தானங்களாலோ அல்லது வேதங்களில் கூறிய கிரியைகளைச் செய்வதாலோ அல்லது மிகக் கடுமையான தவங்களை இயற்றுவதாலோ அல்லது இத்தகு வேறு எதனாலுமோ உன்னைத் தவிர வேறு எவராலும் இந்தப் பூவுலகில் நான் இவ்வடிவத்துடன் காணக் கூடியவன்அல்லன்.' XI (48)**

**'இத்தகைய பயங்கரமான எனது விசுவருபத்தைக் கண்டு நீ பயப்பட வேண்டா; மனக்கலக்கம் அடைய வேண்டா,**

அச்சத்தை உன் உள்ளத்திலிருந்து அகற்றி மன மகிழ்ச்சி உடையவனாய் மறுபடியும் இந்த என் பழைய உருவத்தை நன்கு காண்பாயாக.' XI (49)

எனக்கூறித் தன் பழைய வடிவத்தைக் காட்டியருளினார் கண்ணன்.

தானம், தவம், கிரியைகள், வேத அத்யயனம் முதலிய எதனாலும் இறைவனது விசுவரூபத்தைக் காண இயலாது. இது தன்னிடம் உள்ள ஒன்றைக் கொடுத்து வேறொரு பொருளை வாங்குவதையே ஒக்கும். இது ஒருவகை வியாபாரம். இதனால் நாம் அவனைக் காண இயலாது.

ஆனால் தன்னையே கொடுத்துவிடும் தகைமையாளருக்குத்தான் இந்தத் தரிசனம் கிட்டும். இதுதான் தன்னையே ஈஸ்வரனுக்கு அர்ப்பணமாக்கிவிடுதல். இதுவே ஆத்ம நிவேதனம்.

'இன்றெனக்கருளி இருள்கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின் தன்மை நினைப்பற நினைத்தேன்
நீயலால், பிறிது மற்றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்.'

தன்மை தன்னிடம் எய்தியவர்க்குத்தான் இதுகைகூடும்.

நரநாராயணர் என்று சொல்லப்படும் இரட்டையரில் நரன் அர்ச்சுனனையும் நாராயணன் கண்ணனையும் குறிக்கும். இப்படி நாராயணனோடு இணைத்துச் சொல்லப்படும் தகைமை வாய்ந்தவனாக, பூர்வ ஜன்மாந்திரங்களின் புண்ணிய பலன் வாய்ந்தவனாக, அர்ச்சுனன் இருந்த காரணத்தால்தான் அர்ச்சுனனுக்கு விசுவரூப தரிசனம் கிடைத்தது.

யுத்த களத்தில் நடைபெற்ற இந்த உரையாடல்களையும் நிகழ்ச்சிகளையும் திருதராட்டினனின் அரண்மனையில்

*இருந்தவாறு கேட்ட, கண்ட சஞ்சயன், தன் பக்கல் உள்ள திருதராட்டிரனிடம் சொல்கிறான்.*

'வாசுதேவனாகிய கண்ணன், அர்ச்சுனனுக்கு இப்படிச் சொல்லிய பின், தமது சொந்த பழைய உருவத்தை மீண்டும் அவனுக்குக் காட்டியருளினார். இந்த வகையிலே மகாத்மா வான கண்ணன் சாந்தமான இனிய வடிவத்தோடு கூடியவராய் பயத்தோடு இருந்த அவனைத் தேற்றினார்.' XI (50)

*அந்த இனிய சாந்த உருவத்தைப் பழையபடி பார்த்த பார்த்தன் கண்ணனை நோக்கி இயம்புகிறான்.*

ஜனார்த்தனா! தங்களுடைய அருள் நிறைந்த,—சாந்த,—இனிய,—மானுட வடிவத்தை நான்மீண்டும் கண்டு விட்டேன். இப்பொழுது கலங்கி இருந்த என் உள்ளம் தெளிவடைந்து விட்டது. என்னுடைய பழைய மன இயல்பை நான் மீண்டும் அடைந்துவிட்டேன். XI (51)

*தங்களுடைய இந்த உருவம் கருணையே வடிவானது; தோற்றத்திலே மானுட வடிவம் தாங்கியது. மேலும் உமக்கெனவே அமைந்த இந்த வடிவம் அருள், அழகு, மென்மை கனிவு, அன்பு என்னும் இப்படிப்பட்ட குண நலன்களையே இயற்பண்பாக அமைந்தது. இந்தப்பண்புகள் யாவுமே எல்லையற்றவை. எனவே, அருளொழுகும் இந்த உம்முடைய வடிவம் என் மனக்கலக்கத்தை நீக்கி உள்ளத்தைத் தெளிவடையச் செய்து விட்டதால் நான் என் பழைய மன இயல்பினைப் பெற்று விட்டேன் என்கிறான் பார்த்தன்.*

*பகவான் அர்ச்சுனனுக்குப் பதில் அளிக்கிறார்:*

பிறரால் பார்ப்பதற்கு அரிய, நீதரிசிக்க உனக்குக்காட்டிய, இந்த என் உருவை தரிசிக்க வேண்டுமென தேவர்களும் பன் னெடுங்காலம் இச்சித்திருக்கிறார்களே ஒழியக் கண்டதில்லை. XI (52)

நீ என்னை எவ்வாறு தரிசித்தாயோ, அந்தவிதமாக இந்த விசுவருபக் காட்சியளித்த என்னை வேதங்களாலும் காண

**இயலாது: தவத்தினாலும் தானத்தினாலும் யாகங்களாலும் காணவே இயலாது.** XI (53)

*(இந்தச் சுலோகம் இவ்வதிகாரம் 48வது சுலோகத்தினை அனுவதித்துக் கூறியதே ஆகும்.)*

**எதிரிகளை வாட்டுக்கின்றவனே அர்ஜுனா! என்னிடம் சிறிதும் மாறாத, குறையாத, அனன்ய பக்தியால் மட்டுமே இவ்விதம் என்னை உள்ளவாறு அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற்கும் சாத்தியமாகும்.** XI (54)

*அனன்யம் என்பது 'அன்னியமற்ற' என்னும் பொருளது. கடவுளைத் தவிர்த்து வேறு அன்னியமான எதையும் நினையாத, நாடாத பக்தி என்பதுதான் அனன்ய பக்தி ஆகும். அதாவது எவனொருவன் தன்னுடைய பொறிபுலன் அந்தக் கரணங்களால் பிற எல்லாப் பொருள்களையும் விலக்கி ஒரு பொருளையே அதாவது இறைவனையே உண்மைப் பொருளாகக் காண்கிறானோ, அவனே இறைவனைத் தன் இதயத்தாலும் ஆத்மாவாலும் போற்றிப் பூசிக்கும் ஆர்வலன் ஆகிறான். இவனே அனன்ய பக்திமான்.*

*அடுத்துச் சொல்லப்படும் சுலோகம் பக்தியோக விளக்கத்துக்குத் தோற்றுவாயாக அமைகிறது.*

*கண்ணன் மேலும் உரைக்கிறார் ;*

**பாண்டவா! தான் செய்கின்ற கருமங்கள் அனைத்தையுமே என்பொருட்டுச் செய்கிறவனும், என்னையே தன்னுடைய குறிக்கோளாகக் கொள்கிறவனும், என்னிடத்து மாறாதபக்திச் செய்கிறவனும், எல்லா உயிர்களிடத்தும் சிறிதும் வெறுப்பற்றவனுமானவன் எவனோ, அவனே என்னை வந்தடைகிறான்.**
XI (55)

*இந்தச்சுலோகத்திலே பக்தியின் சாரமே அடங்கியுள்ளது அது மட்டுமல்ல. கீதையின் முழு உபதேசமும் இதில் அடங்கியுள்ளது எனலாம்.*

நாம் நம்முடைய கடமைகளையும் கருமங்களையும் சரிவர ஆற்றவேண்டும்; அதே நேரம் நம் ஆத்மாவை இறைவனிடத்திலே நிலைநிறுத்த வேண்டும்; இந்த உலகில் உள்ள அனைத்துப் பொருள்களிடத்திலும் எவ்விதப் பற்றுமற்று வாழ வேண்டும்; உயிரினங்கள் எதனிடத்துமே நாம் வெறுப்புப் பாராட்டலாகாது.

நம்முடைய தொழில் யாதாயினும் ஆகுக. சமுதாயத்தில் நம் நிலை யாதாயினும் ஆகுக. நாம் எழுத்தாளனாக இருக்கலாம். சிந்தனையாளனாக இருக்கலாம். கல்வி வல்ல மேதையாக இருக்கலாம். தொழில் மேதையாகவோ, மருத்துவராகவோ பொறியியல் வல்லுநராகவோ, இருக்கலாம். பெரும் பணக்காரனாக, ஆட்சியாளனாக அமைச்சனாக, ஆசிரியராக, கவிஞனாக இருக்கலாம். அல்லது குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பெருமைகள் ஒன்றுமே இல்லாத ஏதேனும் ஒரு சிறப்பான திறனும் அமையப் பெறாத ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம். இவர்களில் யார் ஒருவர் கடவுளிடம் அன்பு பூண்டு பக்தி செலுத்தி அவனுடைய அடிமையாகி விடுகிறாரோ, அவர் யாவரினும் பெரும் பேறு பெற்றவராகிறார். அவர் தானாக இயங்குவதில்லை. கடவுளின் கருவியாக இயங்குகிறார். அவர் இறைநெறியிலே இயங்கி, அவன் அருளுக்கே, அவன் குறிக்கோளுக்கே வாழ்கிறார். அவன் சித்தத்திற்கென்றே அவர் வாழ்க்கை அமைகின்றது. இந்த வகையில் அவருக்கு மனித வாழ்க்கையின் குறிக்கோள் எய்தி விடுகிறது. ஏனெனில் அவர் தன்னையே கடவுளிடம் ஒப்படைத்து விடுகிறார் அல்லவா?

பதினோறாம் அத்தியாயம் முற்றும்

பன்னிரண்டாம் அத்தியாயம்

# பக்தியோகம்

## சகுண நிர்க்குண பக்தி

(கடவுளின் உருவ—அருவ நிலைகள்)

கண்ணபிரான், (தன்னிடம்) இறைவனிடம் பக்தி செலுத்துவதைப் பற்றி, அர்ஜுனனுக்கு இந்த அத்தியாயத்தில் விளக்குகின்றார்.

ஆறாம் அத்தியாயத்திலேயே பக்தியைப் பற்றி குறிப்பிட்டு கோடி காட்டியுள்ளார் கண்ணன். தியான யோகத்தினை விளக்குமுகத்தான் பக்தியை அங்கேயே தொடங்கி விட்டார் பகவான். ஏழாம் அத்தியாயத்திலே, (ஞான விஞ்ஞான யோகம்) 'பிரபக்தி' அல்லது 'ஆண்டவனிடம் சரணாகதி' என்பது விளக்கப்பட்டது. அதை அடுத்து வந்த எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று ஆகிய அதிகாரங்களில் பக்தியைப்பற்றி ஆங்காங்கே நன்கு விளக்கப்பட்டது.

இந்தப் பன்னிரண்டாம் அதிகாரத்தில் இறைவனிடம் நாம் செலுத்த வேண்டிய பக்தியைப் பற்றி விளக்குகிறார் கண்ணன்.

இருபது சுலோகங்களே கொண்ட இந்தச் சிறிய அதிகாரத்திலே பக்தியைப்பற்றி அதன் வகை தொகைகளைப்பற்றி விளக்குகின்றார் கண்ணன்.

சகுணப் பிரம்மம் (உருவநிலை) நிர்க்குணப் பிரம்மம் (அருவநிலை). இந்த இருவகை பிரம்மங்களை உபாசிப்

பவர்கள் சகுண உபாசகன் (உருவ வழிபாடு உடையவன்) நிர்குண உபாசகன் (அருவ வழிபாடு உடையவன்) எனப்படு வார்கள்.

பிரம்மம் இரண்டல்ல; ஒன்றுதான். சகுண உபாசகன் பிரம்மத்தை உருவமாகக் (சகுணமாக) காண்கிறான். நிர்க்குண உபாசகன் பிரம்மத்தை நிர்க்குணமாகக் (அருவ மாக) காண்கிறான்.

சகுணப் பிரம்மம் என்பது எல்லாவித நல்ல குணங்களும் அமையப் பெற்றதாய், அனைத்து விபூதிகளும்அடங்கியதாய், தனித்தன்மை வாய்ந்து, மக்கள் உலகிலே நாம ரூபங்களோடு பொருந்தி இயற்கையோடு எங்ஙனும் வியாபித்துள்ள நிலை யாம். இதையே சகுணப் பிரம்மம் என்கிறோம்.

நிர்க்குண பிரம்மமோ. குணங்குறியல்லாத நிலை. குணங்களைக் கடந்த நிலையே நிர்க்குண நிலை. நிர்வுபாதி, நிர்விஷய, நிர்க்குண நிலை என இது சொல்லப் படுகிறது. அழிவற்ற ஆத்மாவின் சொரூபமாக பரமாத் மாவைக் காணும் நிலையே நிர்க்குணப் பிரம்மம்.

சகுண பக்தன் புலன்கள் மூலமாய் ஆண்டவனுக்குச் சேவை செய்கிறான். பக்தியால் வழிபடுகிறான்.

நிர்க்குண பக்தனோ, உள்ளத்தினால். தன்னை நன்கு உணர்ந்து, தன்னை அறிந்த அதனால் தலைவனை அறிந்து இறைவன் அழிவற்ற தன்மையையையும் (அக்ஷரம்)— விளங்கிக் காணக்கூடாத தன்மையையையும் (அவ்வியக்தம்) அறிந்தவன் அத்வைத தத்துவத்தில் மூழ்கிய பக்தன்.

சகுண பக்தியோ அன்பு மயமானது. உணர்ச்சி மயமானது. சகுண உபாசகனுக்கு பொறிபுலன்கள் கருவி களே. கண்களால் இறைவன் உருவத்தைக் கண்டு மெய் சிலிர்த்து பக்தி செய்கிறான். காதுகளால் இறைவன் புகழைக் கேட்டு, கீர்த்தனங்களை, பஜனைகளைக் கேட்டு

வாயால் அவன் புகழ் பாடி, கைகளைக் கூப்பி கால்களால் அவனை வலம் வந்து வழிபடுகிறான்; தன் பொறிபுலன் களை அடக்காமல் அவைகளை இறைவழி பாட்டிலே செலுத்தி விடுகிறான்.

நிர்க்குண பக்தியோ ஞானமயமானது. நிர்க்குண பக்த னுக்குப் பொறிபுலன்கள் தடையாகத் தோன்றுகின்றன. தியான காலத்திலே பக்தி செய்யும்போது பொறிபுலன்களின் தொல்லை தாங்க முடியாமையால் அவைகளை அடக்க முற்படுகிறான். தன் உள்ளச் சிறையில் அவைகளை அடைத்துப் பூட்டி வைக்க முற்படுகிறான். அவைகளுக்குத் தீனி போடாமல் பட்டினிபோட்டு வதைக்கிறான். அதனால் அவை மூர்க்க மிக்க குதிரைகளைப்போல் கட்டுக்கடங் கிடாமல் ஓடத் தலைப்படுகின்றன.

இந்த நிலையிலே, பக்தி செய்பவர்கள் இருவகையின ராய் உள்ளதால், அர்ஜுனன் கண்ணனை நோக்கி கேட்கிறான்.

**இவ்வகையில் (மேல் அத்தியாயத்திலே இறுதி சுலோகத் திலே சொன்னபடி) உம்மையே எக்காலத்தும் பக்தி செய்து அந்தப் பக்தி யோகத்திலே உறுதிப்பாட்டுடன் தியானத்தில் நிலைத்துள்ள சகுண பக்தர்களா? அல்லது அழிவற்ற (அக்ஷரம்) விளங்கிக் காணக்கூடாத தன்மை வாய்ந்த (அவ்யக்த) நிர்க்குண பிரம்மத்தை ஆத்ம ரூபமான பரமாத் மாவை) பக்தி செய்து உபாசிப்பவர்களா? இவர்களுள் யோகத் தைப்பற்றிய ஞானத்தை நன்கு அறிந்தவர்கள் யார்? XII (1)**

சென்ற அத்தியாயம் இறுதி சுலோகம் என்ன சொல் கிறது?

"பாண்டவா! எனக்காகக் கர்மம் செய்கிறவனும் என்னையே குறிக்கோளாகக் கொண்டவனும், என்னையே பக்தியால் உபாசிக்கின்றவனும், பற்றில்லாதவனும், எந்த உயிரினிடத்தும் வெறுப்பற்றவனும் என்னையே வந்தடை

கிறான்:'' என்று சொன்னார் கண்ணன் எனக் கூறுகிறது, சுலோகம்.

கண்ணன் பார்த்தனுக்கு இதற்கு முன் அத்தியாயதிலே தன்னுடைய விசுவரூப தரிசனத்தைக் காட்டி உபதேசித்தார். அதற்கு முன் அத்தியாயத்திலே தன்னுடைய விபூதியை அனந்த கல்யாண குணங்களின் தன்மையை—மகிமைகளைச் சொல்லி உபதேசித்தார்.

இந்த வண்ணம் கேட்டான், கண்டான், விஜயன். அவனுள் ஒரு சந்தேகம் எழுகிறது. இப்படிப்பட்ட மகிமை களைக் கேட்டோம். சகலகுண சம்பன்னனாக உள்ள இவனது அளத்தற்கரிய உருவத்தையும் கண்டோம். இந்தக் கண்ணனாகிய பரம்பொருள் உபதேசித்தபடி எக்காலத்தும் அவனுடைய பக்தியிலே திளைத்து அவனையே குறிக் கோளாகக்கொண்டு உபாசிக்கும், சகுண உபாசனைசெய்யும், பக்தர்கள் மேம்பட்டவர்களா?

அல்லது ஆத்ம தரிசனம் வாய்ந்து, தன்னை உணர்ந்து, ஞானம் கைவரப்பெற்ற ஞானிகளாய், தம் உள்ளத்துள்ளே உறைகின்ற நிர்க்குண, நிராலம்ப (ஆதாரம் வேண்டாதது) நிரஞ்சன (வியாபித்துள்ளது) பரப்பிரம்மத்தை உபாசிக்கும் நிர்க்குண உபாசனை செய்யும் பக்தர்களா? எவர்கள் மேம் பட்டவர்கள்? சிறந்தவர்கள்? எனக் கூறுக என்று கேட் கிறான் பார்த்தன், கண்ணனை.

இதே போன்ற சந்தேகம் அர்ஜுனனுக்கு (மூன்றாம் அத்தியாயத்திலேயே) முதலிலேயே உண்டாகிறது.

ஜனார்தனா! கர்மத்தினும் ஞானம் சிறந்தது என்பது தங்களது கருத்தானால் ஏன், கேசவா! என்னை பயங்கர மான கர்மத்திலே ஈடுபடுத்துகிறீர்? தூண்டுகிறீர்? என்று அங்கே 3ஆம் அதிகாரத்தில் கேட்டதை ஒப்பவே இங்கும்; பக்தியிலே சகுண வழிபாடு சிறந்ததா? அல்லது நிர்க்குண வழிபாடு சிறந்ததா? இருவகை பத்தர்களாம் இவர்களுள் யோகத்தை நன்கு அறிந்த ஞானிகள் யார்? எனக் கேட் கிறான் பார்த்தன்.

ஒவ்வொரு பக்தனும் இறைவனை நோக்கியே அடி எடுத்து வைக்கிறான். சகுண பிரம்ம பக்தனுக்கும் நிர்க்குண பிரம்ம பக்தனுக்கும் இலக்கு ஒன்றே! பரப்பிரம்மமே! எந்த பக்தன் சிறந்தவன்? பக்தி யோகத்தை அறிந்த ஞானி எவன்? என்று இறைவன் பதிலளிப்பான். இருவகையினரும் அவன் பக்தர்கள் அல்லரோ?

பகவான் பதிலளிக்கிறார்.

**அர்ஜுனா! தன் உள்ளம் முழுவதையும் என்னிடத்திலே வைத்து, அவ்வகையிலே கூடிய பக்தி யோகத்திலே, நிலைத்தவராய், மிகுந்த சிரத்தையோடு கூடியவராய், யார் தன்னை தியானித்து வழிபடுகின்றார்களோ அவர்களே யோகத்திலே மேம்பட்டவர்கள் என நான் கருதுகிறேன் (XII-2)**

தன்னுடைய பண்பு, குணநலன், உருவம், ஆகிய இவைகளை வெளிப்படுத்திக் காட்டும் இறைவனை வழிபடும் சகுண பிரம்ம உபாசகன யோக ஞானத்திலே மேம்பட்டவன் என்று இறுதியாகக் கூறுகிறார் பகவான்.

இருவகைப்பட்ட பக்தர்களுமே (இறைவனை) என்னை நோக்கித்தான் பயணம் செய்கின்றனர். ஆனால் சகுண பிரம்மத்தைத் தியானம் செய்யும் பக்தர்கள் என்னிடம் அளவு கடந்த அன்பு வைத்துள்ளனர். என் பக்கத்திலேயே இருக்க விழைகின்றனர். என்னிடம் பற்றுள்ளத்தோடு, பக்தி ரசத்தோடு, பக்தி ரசத்தைத் துணையாகக் கொண்டு என் அடித் தொண்டை ஆற்றுகின்றனர். விருப்பு வெறுப்பு அற்ற அவர்கள், தாங்கள் வாழ்வதுகூட என் பொருட்டாகவே என்னைக் காண்பது (ரூபத்திலே) என் புகழ் கேட்பது, என் புகழ் பாடுவது, யாவும் அவர்களுக்குத் தேன்போல இனிப்பதால் அவர்கள் என் நாமத்தைப் போற்றிப்பாடி, பாடுவதைக் கேட்டு, என் தரிசனத்துக்காக ஏங்கி நின்று, கண்டு, இணையில்லாதோர் ஆனந்தம் அடைகின்றனர். தன்னை மறந்து, தன்குடும்பத்தை மறந்து, உலகை மறந்து;

தம் உடல் புளகாங்கிதம் அடைய, விதிர்விதிர்க்க, தம் கண்களிலே கண்ணீர் மல்க, கைகளைத் தம் தலைமேல் கூப்பி, இறைவன் நாமத்தைப் பாடியாடித் தொழும், அந்தப் பக்தர்கள் தம் உள்ளமெல்லாம், இரவும் பகலும் இறைவனைப் (என்னை)பற்றிய சிந்தனை ஒன்றேகொண்டவர்களாதலால் அவர்களே சிறந்த யோகியர் என்கிறார் பகவான்.

**ஆனால் யார் ஒருவர் எக்காலத்தும் எந்நிலையிலும் சம புத்தி உடையவராய், இந்திரியத் தன் வசமாக அடக்கிச் சொல்லால் விளக்க முடியாததும், கட்புலனுக்கு எட்டாததும் மனதுக்கு எட்டாததும் எங்கும் வியாபித்துள்ளதும், மாறுதலுக்கு உட்படாததும், எக்காலத்தும் நிலைத்துள்ளதும், அழிவில்லாததுமான, பரப்பிரம்மத்தை (நிர்குண உபாசனையாக) பக்தி செய்பவராய் அனைத்து உயிர்களின் நன்மைகளிலே ஈடுபட்டவராய் இருக்கிறாரோ அவர் என்னையே வந்தடைகிறார்.** (XII-3, 4)

இந்தச் சுலோகத்திலே பொறிபுலன்களை (இந்திரியக் கூட்டத்தை) கடுமையாக அடக்கச் சொல்லப்பட்டுள்ளதே தவிர அவைகளை ஒதுக்கிவிடச் சொல்லவில்லை. நிர்க்குண உபாசகனுக்கு பொறிபுலன்கள் தன்னுடைய தியானத்திற்குத் தடைக் கல்லாய்த் தோன்றுகின்றதால் அவைகளை அவன் அடக்கி வைக்க வேண்டியதாகிறது. அவைகளுக்குத் தீனி போடாமல் சாவின் கடுஞ்சிறையிலே அடைத்து வைக்கிறான். இந்த பக்தன். இவ்வகையிலே தன் இந்திரியக் கூட்டத்தை அடக்கி ஆள்பவனே சமபுத்தி உடையவனாய் இருக்க இயலும்.

இச் சுலோகத்திலே நிர்க்குணப் பிரம்மத்தின் இயல்பு நன்கு விளக்கப்பட்டுள்ளது.

தாயுமான சுவாமிகள் இந்த நிர்க்குணப் பிரம்மத்தை

நித்தியமாய் நின்மலமாய் நிஷ்களமாய் (1)
நிராமயமாய்(2) நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய் தூரமுமாய் சமீபமுமாய்த்
துரிய நிறைச் சுடரால் (3) எல்லாம்

வைத்திருந்த தாரகமாய் (4) ஆனந்த
மாயமாகி மன, வாக் கெட்டாச்
சித்துருவாய் நின்ற ஒன்றைச் சுகாரம்பப்
பெருவெளியைச் சிந்தை செய்வாம்

என்று வருணிக்கிறார்.

1) நிஷ்களம் — உருவமற்றது. 2) நிராமயம்—குறைவற்றது. 3) துரியநிறைச் சுடர்—ஆத்மப் ப்ரகாரம், 4) தாரகம்—நிலைக்களன் (ஆதாரம்)

இந்த வகையிலே நிர்க்குணப் பிரம்மம் அழிவற்றது, மலமற்றது. உருவமற்றது, குறைவற்றது, நிறைவானது, தூய்மையானது, காலம் இடங்களைக் கடந்தது, ஆத்ம பிரகாசம் உடையது; ஆனந்த மயமானது; மனவாக்குக்கு எட்டாதது; சித்து (அறிவு) உருவானது; அதுவே சுகாரம்பப் பெருவெளி—அதுவே பிரம்மம்.

இனி இந்தச் சுலோகம் அந்த நிர்க்குண பிரம்மத்தை விவரிக்கும் முறைகளைப் பார்ப்போம்.

அது உலகப் பொருள்களோடு, சீர்தூக்கி ஒப்பிட முடியாதது. (அநிர்தேசியம்) ஆகையால் விளக்கமுடியாதது. உலகமும், உலகத்து உயிர்களும் தோன்றி மறைவன. ஆனால் முதலும், முடிவும் அற்றது, தோற்றமும் இறுதியும் இல்லாதது. ஆகையால் அது தோற்றத்திற்கு அப்பாற்பட்டது. (அவ்யக்தம்) அது, அங்கு இங்கு எனாதபடி எங்கும் சோதி மயமாகி ஒளிர்கின்றது. ஆதி, ஆகையால் அதுஎங்கும் வியாபித்துள்ளது (சர்வத்ரகம்) அது மனங்கடந்து நிற்பது சிந்தைக்கு எட்டாதது (அசிந்தயம்) அது சலித்தல் (சலனம்) இல்லாதது (அசலம்) அசைவற்றது; அது நிலைத்திருப்பது (த்ருவம்) அழிவற்றது (அக்ஷரம்).

இப்படிப்பட்ட நிர்க்குண பிரம்மத்தை இந்திரியக் கூட்டங்களை அடக்கி, சமநிலை வாய்ந்த உள்ளத்தோடு உபாசிக்கின்ற பக்தன். அனைத்து உயிர்களின் நன்மையிலே

ஈடுபட்டு அவர்களின் நலனுக்கு மன, மொழி, மெய்களால் உழைத்தல் வேண்டும். அவன் உள்ளம், உலகம் வாழ்க, உயிர்கள் வாழ்க! அனைத்து உயிர்களும் நலனோடு இன் புற்று வாழ்க! என ஒலமிடுதல் வேண்டும். இதுவே அவன் வாழ்க்கையின் லட்சியமாக இருத்தல் வேண்டும். இப்படிப் பட்ட நிர்க்குண பிரம்ம உபாசகன்தான் என்னை வந்தடை கிறான்.

கிருஷ்ணன் மேலும் கூறுகிறார் ;

**நிர்க்குண பிரம்மத்திலே தன் சித்தத்தை நிலைக்க வைத்து பக்தி செய்யும் பக்தர்களுக்கு, மிகுந்த கடினமான பயற்சி தேவைப்படுகிறது. ஏனெனில் உடற்பற்று (தேகாபிமானம்) உடையவர்களால் நிர்க்குணப் பிரம்ம நிஷ்டை எளிதில் அடைய முடியாது. (மிகவும் கஷ்டப்பட்டே அடையமுடியும்)**

கிருஷ்ணன் மேலும் கூறுகிறார் :-

உலகத்தையும் நாம் அறிவெல்லையையும் கடந்த தத்துவமயமான நிர்க்குண பிரம்மத்தை நாம் நாடி அடைதல் மிகவும் கடினமான ஒன்று. ஆனால் எல்லா உயிரி னங்களின் ஆத்மாவாகவும் யாவற்றூடும் ஊடுருவி நின்றுள்ள வழக்காற்றிலுள்ள ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லான் ஆயினும், ஆயிரம் நாமங்களையும், பலப்பல உருவங்களையும் படைத்துள்ள இறைவனை உருவமாக பக்தி செய்தல் எளிதான செயல்.

உருவமற்றவனை, அருள் வடிவானவனை, வேறுபடுத் தப்படாதவனை, அவன் மூலமாகவே அவனால் தோற்று விக்கப் பட்டு அவனாகவே யாவற்றின் உள்ளும் புறமும் எங்கும் நிறைந்துள்ளவனை, நான் எப்படி என் மனத்திலே இருத்தி வழிபட முடியும்? என்கிறார் ஒரு பக்தர்.

அழிவற்ற மாறுதலற்ற அது, தன்னைச் சிக்கெனப் பிடிக்க எளிதான, எந்த ஒரு ஆதாரத்தையும் நமக்குத் தர வில்லை. நம் உள்ளமோ சலனமுடையது. அதன் மார்க்

கமோ மிகவும் செங்குத்தானது. ஆனால் அதே எல்லையை நாம் எளிதிலே சகுணப் பிரம்மத்திலே உருவ வழிபாட்டிலே நம் உள்ளத்தை உறுதியோடு முழு சக்தியோடும் சித்தத்தோடும் செலுத்தி, பக்தி செய்தால், அடைய முடியும் என்பது

மற்றும் நிர்க்குணப் பிரம்ம உபாசகனுக்குத் தேகாபிமானம் (உடல்பற்று) சற்றும் இருத்தலாகாது. உடலை ஒரு சுமையாக அவன் கருதவேண்டும். புளியம் பழமும் அதன் ஓடும் போல, அவன் உடல், ஆத்மா, இரண்டும் அமைந்திருக்க வேண்டும். இங்ஙனம் தேகாபிமானம் அற்றவனுக்கே நிர்க்குணப் பிரம்ம உபாசனை கைகூடும். ஆனால் சுகுண உபாசகன் தேகாபிமானம் உடையவனாயினும், சிறிது சிறிதாகத் தன் உபாசனை மூலம் தன் தேகாபிமானத்தைத் துறந்து, தன் பக்தி வலிமையால் மேனோக்கிப் போய் தன் கதியை (எல்லையை) எய்தி விடுகிறான்.

கண்ணன் மேலும் தொடர்கிறார் :-

**பார்த்தா! ஆனால் யார் தம்முடைய எல்லா கருமங்களையும் என்னிடத்திலே அர்ப்பணித்துவிட்டு, என்னையே தாம் அடைய வேண்டிய மேலான கதியாகக் கருதி, சிறிதும் நெறி திறம்பாத யோகத்தினால், என்னையே தியானிப்பவர்களாய், வழிபடுகின்றனரோ, (அந்த, தம் சித்தத்தை என்பால் சிதையாமல் வைத்துள்ள) அவர்களை—என் பக்தர்களை—நான் மரண சம்சார சாகரத்திலிருந்து கரையேற்றி விடுகிறேன்.**

இறைவனே நம்முடைய பாதுகாவலர். பந்த நீக்கம் செய்பவர். அருட்கடல். நாம் நம்முடைய உள்ளத்தையும், இதயத்தையும் அவரிடம் அர்ப்பணித்துவிட்டால் அவர் நம்முடைய பிறப்பிறப்பாம் இடர்க்கடலில் இருந்து நம்மை விடுவித்துப் பொன்றாத துறக்க வாழ்விலே நமக்கோர் இடத்தை நல்குவது திண்ணம்.

எவனுடைய உள்ளமும், இயல்பும், சலனமுடையதாய், வைராக்கியமற்றதாய், உண்மை துறவிலே பற்றற்றதாய்

உள்ளதோ, அவன் எளிதிலே கைகொள்ளக் கூடியது இந்த சகுண பிரம்ம உபாசனையாம் பக்தி மார்க்கமே ஆகும்.

இந்த உலகத்தில் உலக நிகழ்ச்சிகளால், உலக வாழ்வில் எவன் ஒருவன் அயர்வுறுதல், இல்லையோ அல்லது எவன் ஒருவன்அதிகமாகப் பற்று வைத்தல் இல்லையோ, அவனுக்கு பக்தி மார்க்கமே மிகச் சிறந்தது.

பிரவிருத்தி கருமமா? கருமங்கள் இயற்றுகின்ற கரும மார்க்கமா? அல்லது (நிவர்த்தி கருமமா) துறவு மார்க்கமா? எதை நாம் தேர்ந்தெடுப்பது என்பது நம்முடைய உளப் பாங்கின் அடிப்படையிலேதான் அமையும்.

**எனவே என்னிடத்திலே உள்ளத்தை நிலைநிறுத்தி வைப்பாயாக. என்னிடத்திலேயே உன் புத்தியைச் செலுத்து வாயாக. அதன்பின், நீ என்னிடத்திலேயே நித்திய வாழ் வெய்துவாய். இதில் சிறிதும் ஐயமே இல்லை.** XII (8)

என்னிடத்திலே உள்ளத்தை நிலைநிறுத்தி புத்தியைச் செலுத்துக என்று கட்டளை இடுகிறார் கண்ணன். ஓடும் உள்ளத்தினை உலகப் பொருள்களிலே ஓடவிடாமல் என்னிடம் நிலை நிறுத்தி, செலுத்த வேண்டிய அறிவை என்னிடமே செலுத்துக என்பது கண்ணன் கட்டளை. மனமும் புத்தியும் அவனிடம் அமைந்துவிட்டால் பின் வாழ்வே அங்கேதான்.

"இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்" என்கிறார் மணிவாசகப் பெருமாள். இறைவன் தன் உள்ளத்திலே கண் இமைக்கும் நேரமும், நீங்காமல் வீற்றிருக் கிறான் என்கிறார்அவர். அப்படியானால் தன் உள்ளத்திலே இறைவன் வாழ்வதால் அவர் இறைவனிலே வாழ்கிறார்.

மனம் வாழ்கின்ற இடத்திலேதான் மனிதன் வாழ் கிறான். நடைபாதையிலே வாழ்கின்ற நல்ல தம்பி தன் உள்ளத்தினை இறைவனிடம் ஒப்படைத்து வாழ்கின்றான் என்றால் அவனே'இறைவனில் வாழ்பவன்.

கோடீஸ்வரனாக இருக்கும் கோவிந்தன் உளம் மாசு படிய, பயங்கரமான பழி பாவங்களைச் செய்து தன் உள்ளம், பஞ்சமா பாதகங்களிலே ஆழ்ந்து கிடக்க வாழ்கிறான். அவன் பத்து அடுக்கு மாடி மேலே வசிப்பவனாகிலும் பாழ் நரகில் வாழ்பவனே.

ஏதோ. ஒரு விரக்தியில் ஒருவெறுப்பில், தன் இல்லத்தை யும் மனைவி மக்களையும் துறந்து வெளியேறிவிடுகிறான் ஒருவன். துவராடை அணிந்து சாமியாராகி விடுகிறான். அவனிடம் உள்ளத்துறவில்லை. உள்ளன்பில்லை.

காடெல்லாம் சுற்றித் திரிகிறான். உணவில்லாமல், காய்கனி புசித்துப்பின் காற்றையே உணவாக உட்கொண்டு ஐம்புலன்களை அடக்கப் பாடுபடுகிறான். அவன் ஆடை வெறும் கந்தையே; அவனிடம் உள்ளது ஒரே ஒரு இரந்துண் ணும் ஓடுதான். அதுவும் தன் உயிர் வாழ்வதற்காக எப்பொழுதேனும் ஊருள் புகுந்து தேவையான அளவுபிச்சை எடுத்துப் புசிக்கத்தான். ஆனால் இவன்உள்ளன்பிலாதவன். காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தை சுற்றி ஓடே எடுத்தென்ன உள்ளன்பில்லாதவர்? உள்ளன்புள்ள வனே இறைவனில் வாழ்பவன்.

**''தனஞ்செய!'' இனி என்னிடத்திலே உன் சித்தத்தை உறுதியாக, நிலைநிறுத்தி வைக்க உன்னால் இயலாவிட்டால் அக்காலத்திலே நீ அப்பியாச யோகத்தினாலே என்னை அடைய விழைவாயாக.''** XIX (9)

முன் சுலோகத்திலே சொன்ன நிலை முதிர்ந்த பக்தி நிலை. இப்படிப்பட்ட முதிர்ந்த பக்திநிலை, ஒருவனிடத்து அகத் தூண்டுதலாக முயற்சியின்றியே முகிழ்க்கவில்லையா னால்நாம் நம் சித்தத்தை ஒருமுகப்படுத்த முயலவேண்டும். விஷயாதிகள் பால், பொருள்கள் பால், செல்லும் சித்தத்தை சிவன் பாலே செலுத்தப் பழக்கப்படுத்த வேண்டும்.

பலமுகமாகி, பல கோணங்களில் ஓடும் சித்தத்தினை, உள்வாங்கி ஒருமுகப்படுத்தி ஒரே பொருளாம் பரம்பொருள்

மேல் இடையறாது பாய்ச்சும் தியானத்தை ஒருவன் பழக வேண்டும். இந்தப் பழக்கமே நம்மை, உறுதியாக தடுமாற்றமற்ற நெறியிலே உய்த்து ஆத்மாவை இறைவனிடம் மெல்ல மெல்ல அணுகுவிக்கும்.

**இந்த அப்பியாச யோகத்திலும் உனக்கு வல்லமை இல்லாமல் போகுமானால் (நீ சக்தியற்றவனானால்) நீ செய்யும் அனைத்து செயல்களையும் (கருமங்களையும்) எனக்கே அர்ப்பணமாக்கி—என்பொருட்டே; உன் செயல்கள் அனைத்தையும் ஆற்றுவதே உன் குறிக்கோளாகக் கொள். அப்படி உன் அனைத்துக் கருமங்களையும் என் பொருட்டுச் செய்வாயானால் (எனக்கே அர்ப்பணம் எனக்கருதி செய்வாயானால்) நீ சித்தி அடைவாய்.** XII (10)

அதாவது இந்த அப்பியாச யோகத்திலும் உனக்குச் சாமர்த்தியம் இல்லாவிட்டால் இறைவன் கைங்கரியங்களைச் செய்யலாம். இறைவனுக்குத் தொண்டாற்றுவது; அடியவர்களுக்கு தொண்டாற்றுவது; தொண்டனுக்குத் தொண்டனாய்த் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்வது பிறபிற உலகியல் செயல்களையோ, குடும்பத்துக்கேற்ற பணிகளையோ செய்யும் போதும் இவைகளும் இறைவன் தொண்டே எனக்கருதுவது. இவையாவுமே முன்சொன்ன அப்பியாச யோகத்திற்குச் சமமாகிறது. இந்த முறையிலும் நீ சித்தி அடைவாய் என்கிறார் கண்ணன்.

**இந்த வகைப்பட்ட இறைவன் கைங்கரியங்களையும் செய்வதற்கு உன்னால் முடியாவிட்டால் என்னையே அடைக்கலம் என என்னிலே சரண் புகுந்து, உன் உள்ளம் என்னிடத்தே பொருந்தியவனாய்த் தன்னடக்கத்தைப் பயின்று உன் எல்லாக் கருமங்களின் பலனையும் தியாகம் செய்துவிடு. (அதாவது கரும பரித்தியாகம் செய்)** XII(11)

நீ உன் செயல்கள் அனைத்தையுமே இறைவனுக்கு என அர்ப்பணம் செய்ய இயலாவிட்டால், கரும பலன்களில் இச்சை வைக்காமல் காரியமாற்றுக. இந்த வகையில் நீ

*நிஷ்காம்ய கரும யோகத்தினைக் கடைப்பிடித்தவனா கிறாய்.*

*இதன்மூலம் ஒருவன் தன்னுடைய சொந்த வாழ்க்கைப் போராட்டத்தைத் துறந்துவிட முடியும்.*

*இதனால் நம் கருமங்களிலிருந்து முழுமையாக, அடியோடு விலகி, இறைவனின் அருட்சக்தியிலே நம்மை நாமே ஒப்படைத்துக் கொள்கிறோம்.*

*நம் கரும பலன்களை எல்லாம் நாம் தியாகம் செய்து விடுவதால், பலன்களைப் பற்றிய நினைவும் நம்மிடம் இல்லாமல் செய்துவிடுவதால், நாம்தெய்வத்தின்கரங்களிலே சிறு குழவியாகி விடுகிறோம். அங்கே தானில்லை. தான் கர்த்தா என்னும் முனைப்பில்லை. கருமபலன் விழைவும் இல்லை. பால் நினைந்தூட்டும் தாய் அவன்-அந்த அருட் பாலைப் பருகும். தன்னை மறந்த கருமபலன் துறந்த சிறு குழவி இவன்.*

*இந்த வகையிலே கர்மபலனைத் தியாகம் செய்து விடுவதால், தான் என்னும் முனைப்பு அழிந்து போகிறது. தானே இச்செயலின் கர்த்தா என்ற கர்த்தவ்வியமும் அழிகிறது.*

**அப்பியாச யோகத்தைவிட ஞானம் சிறந்தது. ஞானத்தி னும் தியானம் மேம்பட்டது. தியானத்தைக் காட்டிலும் கருமபலனின் தியாகம் உயர்ந்தது. அந்தக் கருமங்களின் தியாகத்திலிருந்து சாந்தி உண்டாகிறது.** XII (12)

*அப்பியாச யோகத்தையே வள்ளுவர் முயலும் முறை யாகச் சொல்கிறார்.*

*"இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை"*

*என்கின்ற குறட்பாவிலே, முயல்வார் என்பவர்களே அப்பியாசிகள் (முயல்வார் என்பது மூன்றாம் நிலையினை*

உணர்த்தும் என்பர். பரிமேலழகர். (அதாவது வனப்பிரத்த நிலையினர் என்பதாம்.)

அப்பியாசம் என்பது பயிற்சி. அதாவது பல விதங்களில் பல திக்குகளில் பல விஷய போகங்களில், தாவித் தாவி குரங்கென ஓடும் சிந்தனைக் கதிர்களை உள்வாங்கி குவித்து ஒருமுகப்படுத்தி இறைவன் மேல் இடையறாமல் செலுத்தி பக்தி செய்தலாகும்.

இதைக் காட்டிலும் ஞானம், அதாவது ஆத்ம ஞானம், தன்னிலையறிந்த தலையறிவு, மேம்பட்டதே! அந்த ஆத்ம ஞானத்தைக் காட்டிலும், முன் சொன்ன அப்பியாசத்தின் பயனாகி விளைந்த தியானம் சிறந்தது. அந்த தியானத்தைக் காட்டிலும் தான் வாழ்வது, தான் பணியாற்றுவது, யாவுமே கடவுளுக்காகவே என்னும் எண்ணத்தினால் தான் செய்யும் கருமத்தின் பலனைத் தியாகம் செய்து விடுவது, மிகச் சிறந்தது.

இந்தக் கருமபலத் தியாகத்தினால் தான் ஒருவனுக்கு சாந்தி உண்டாகிறது. ஏனெனில் கருமபலனைத் தியாகம் செய்பவனிடத்திலே, தான், தனது என்னும் அகங்கார மமகாரம் அற்றுப் போவதால், தான் செய்கின்ற அனைத்துமே கடவுளுக்கு என்னும்உணர்வு தோன்றுவதால், சாந்தி தானாகவே ஏற்படுகின்றது. ஆனால் காமிய கர்மம் செய்கின்ற எவனுக்கும் சாந்தி கிட்டுவதே இல்லை. அவன் மனம் அமைதியற்ற அலைபாயும் கடல் போன்றதே ஆகும்.

**எல்லா உயிர்களிடத்தும் சிறிதளவும் வெறுப்பில்லாதவனாய், நட்பும் கருணையும் உடையவனாய், "தனது" என்னும் மமகாரம் அற்றவனாய், "தான்" என்னும் அகங்காரம் இல்லாதவனாய், இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுபவனாய், பொறுமை உடையவனாய், எக்காலத்தும் மகிழ்ச்சி உடையவனாய், யோகியாய், தன்னடக்கம் உடையவனாய், தன் மன உறுதியிலே, தீர்மானத்திலே சலனமில்லாதவனாய், என்னிடத்திலே தன் உள்ளத்தையும் புத்தியையும்**

சமர்ப்பித்தவனாய் உள்ள எனது பக்தன் யாரோ அவன் எனக்கு பிரியமானவன். XII (13&14)

என்னுடைய பக்தன் இப்படித்தான் இருப்பான். வேறு வகையாக இருப்பவன் என் பக்தனே அல்லன். அவன் என்னைக் கரும யோகத்தின் மூலம் இவ்விதமாகத்தான் வழிபடுவான். இவனே எனக்குப் பிரியமானவன். அன்புக்கு உகந்தவன். அவன் எந்த உயிர்களிடத்தும் துவேஷம் பாராட்டுதல் இலன். அவனைப் பகைப்பவரிடத்தும் துன்புறுத்துபவர்களிடத்தும் கூட அவன் பகை பாராட்டுதல் இல்லை. "பகைவனுக்கருள்வாய் நன்னெஞ்சே, பகைவனுக் கருள்வாய்" என்று பண்ணிசைப்பான் அலன். இந்த உயிரினங்கள் மனிதர்கள் யாவருமே, என் பழவினை வலிமை யின் பயனுக்கேற்ப இறைவன் சித்தப்படி என்னை அண்டி எனக்கு ஊறு விளைவிக்கின்றன என்று அவன் நினைக் கிறான். எனவே அவன் எந்த உயிரையும் வெறுப்பதில்லை. இந்த வகையில் அவன் தன்னுடைய பகைவர்கள் ஊறு செய்தவர்கள் உட்பட அனைவரிடத்தும் நட்பொடு பழகு கின்றான். அவர்களோ, பிறரோ, பிற உயிரினங்களோ துன்புறும்போது, கண் கலங்கும்போது, அவர்களுக்கும் அவன் அருட்குணத்தோடு ஆறுதல் அளிக்கிறான்.

அவனுக்கென எப்பொருளும் இல்லை. மாடு, கன்று மக்கள், வீடு, மனை, வயல், காடு, யாவும் அவன் வரையில் அவனுடையவை அல்ல. அது மட்டுமல்ல, தன்னுடைய உடலையே ஒரு சுமையாகக் கருதுகின்றவன் அவன். "இத்தேகம் கந்தல்" என்பது அவன் கருத்து. அவன் தன் அந்தக் கரணங்களையும் பொறி புலன்களையும் கூட தனதல்ல, தானல்ல என்று ஒதுக்கித் தள்ளி விட்டவன். தனது என்னும் மமகாரமற்றவன் தான் யார் என்று உணர்ந்தவனாதலால், "தான்" என்னும் அகங்கார மற்றவன்.

எனவே அவனுக்கு இன்பமும், துன்பமும் ஒன்றே. இன்பத்தினால் எழும் மனவெழுச்சியும் துன்பத்தால்

ஏற்படும் துக்கமும் அவனைத் தீண்டா. இவ்வகையில் அனைச் ''சாந்தி'' வந்தடைகிறது.

உள்ளதைக் கொண்டு திருப்தி அடையும் யோகியர் மன நிலை அவனுக்குள்ளதால், அவன் எக்காலத்தும் மகிழ்ச்சி யிலே மிதக்கிறான். அவன் உடல் வாழ்க்கைக்குத் தேவை யான சிற்சிலவும் அவனிடம் தானே வந்தமைகின்றன. இப்படிப்பட்டவனே யோகி ஆகிறான்.

அவன் தன்னடக்கம் உள்ளவன். அவனுடைய புத்தியின் செயலாற்றல் கூட ஒரு கட்டுப்பாட்டுக்குள்ளானது. ஒரே சீரானது.

அவனுடைய தீர்மானங்கள் மாற்ற முடியாதவை. திட சித்தத்தால் முடிவெடுக்கப்பட்ட, திடமான தீர்மானங்கள் அவை. ஆத்ம தத்துவங்களைப் பற்றிய காரண காரிய தொடர்பான தர்க்கரீதியான முடிவுகளைச் சார்ந்த தீர்மானங்கள் அவை. ஆதலால் அவனுடைய தீர்மானங்கள் மாற்றமில்லாதவை.

ஆத்மாவைப் பற்றிய—தன்னைப் பற்றிய இப்படிப்பட்ட தன் திடசித்தத்தையும் தன் அறிவையும் இறைவனுக்கே அவன் அர்ப்பணித்து விடுகிறான். தன் ஆத்மாவையே சித்தம் அறிவு இவைகளைச் சமர்ப்பணம் செய்வதின் மூலம், சமர்ப்பித்து விட்ட அவன் இறைவனின் பிரியத்துக்கு உகந்த பக்தனாவதில் வியப்பேதும் இல்லை.

மேலும் கூறுகிறார், கண்ணன்;

**''யாரால், இந்த உலகமானது இடர் உறுதல் இல்லையோ; இந்த உலக நடைமுறைகளால் யார் இடர்படுவதில்லையோ; மற்றும், யார் களிப்பு கோபம், அச்சம் கலக்கம் இவைகளில் இருந்து விடுபட்டவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.**

XII (15)

உலக மக்களோ, பிற உயிரினங்களோ, இடர்ப்பட அவன் காரணமாகி நிற்க மாட்டான். அது மட்டுமல்ல.

அவனை இடருள் ஆழ்த்த எவராலும் இயலாது. அதாவது எவராலும் எதனாலும் அவன் துன்ப உணர்வை அடைந்திடான்.

அவன் இன்பத்துள் இன்பம் விழைதல் இலன். ஆதலால் துன்பத்துள் துன்பம் அடையான்.

கோபம் ஏன் ஒருவனுக்கு வருகிறது? ஆசை நிறைவேறாத காலத்திலே வருகிறது. ஆசைக்குக் காரணம் அறியாமை; தன்னைத்தான் உணராமை; அதனால் உண்டாகும் உளச் சோர்வு மனவலி இன்மை இவைகளே கோபத்தின் காரணங்கள். எனவே ஆசைக்குட்படாத, தன்னையறிந்த, மனவலிமை வாய்ந்தவனான ஒருவன் கோபத்தில் இருந்து விடுபட்டவனாகிறான்.

அச்சம்—மானிட இனத்தின் சாபக்கேடு "அஞ்சி, அஞ்சி சாவார் இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே" என்கிறார், பாரதி. அச்சத்தால் மனிதன் அணு அணுவாகச் சாகிறான். உண்மை உணராதவன் யாவற்றுக்கும் அஞ்சுகிறான். இது மனப்பிராந்தியால், மயக்க உணர்வால் உண்டாகிறது. இது மரணத்தைவிடக் கொடியது. தன்னையறிந்தவன். தன் ஆத்மாவை பரமாத்மாவிடம் சமர்ப்பித்து விட்டவன். எதற்கும் அஞ்சமாட்டான்.

அப்பர் கூறுகிறார்.

"அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்சவருவது மில்லை" என்று. கலக்கம், தெளிவின் விரோதி. தெளிவற்ற உள்ளத்திலேதான் கலக்கம் நிலைபெறுகிறது.

தெளிவான சிந்தனையை, கலக்கம் அழித்துவிடும். தனக்கு ஒரு சிறு இடர் வந்தாலும் கலங்கி விடுகிறான் மனிதன். தனக்கு ஏற்பட்ட இடர், உடலுக்கா, உள்ளத்துக்கா, ஆத்மாவுக்கா எனச் சிந்திக்காமல் கலக்கமடைகிறான் அவன்.

''இலக்கம் உடம்பு இடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையறாக் கொள்ளாதாம் மேல்''

என்கிறார் வள்ளுவர்.

இவ்வுடல்தான் இடும்பைக் கென்று இலக்கானது. (ஆத்மா அல்ல) என்னும் உண்மை அறிந்த மேலோர் துன்பம் வந்த போது கலக்கத்தைக் (ஒழுக்க நெறியாக) கொள்ளார் என்பது பொருள்.

மேலும் கூறுகிறார் கண்ணன் :

**'வேண்டுதல் இல்லாதவனாய், சுத்தமானவனாய், திறமை வாய்ந்தவனாய், ஓரம் சாராதவனாய், மனத்துயரமற்ற வனாய், எல்லா வகைப்பட்ட காமிய கருமங்களையும் துறந்து விட்டவனாய் உள்ள என் பக்தன் எனக்கு மிகவும் பிரிய மானவன்.'** XII (16)

இந்த பக்தன் தன்னுடைய காமிய கரும பலனை அடியோடு துறந்து விடுவதால், அவை இறைவனுடைய—இறைவனுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட—கருமங்கள் என அவன் கருதுவதால், அவன் செயலாற்றல், திறமை வாய்ந்ததா கிறது. அவன் ஆசையிலிருந்து விடுபட்டு விடுகிறான். ஓரம் சார்தலிலன். ஆசையினால் மனத்துயரம் அவனை அண்டுவ தில்லை. அவன் கனவிலும், எவ்வகைப்பட்ட களியாட்டங் களிலும் தன்னை இழத்தல் இலன். இந்த உலகத்திலே தனக்கென வரையறுக்கப்பட்ட நெறியைத்தான் உணர்ந் தவன். இவனும் இறைவனுக்குப் பிரீதி வாய்தவனாகிறான்.

**இன்பத்திலே மகிழ்தலும், துன்பத்திலே வெறுத்தலும், உலக விவகாரங்களிலே அவாவுறுதலும் இல்லாமல், நன்மை தீமைகளைத் துறந்த பக்தனே எனக்கு மிகப் பிரியமானவன்.** XII (17)

இன்பத்துள் இன்பம் விழையாத நிலையும், மகிழ்ச்சி யடையாத நிலையும், மாறாக இன்பம் நல்காதவை நமக்கு

ஏற்பட்டால் நாம் அடையும் துக்க நிலையும் தவிர்த்தல் வேண்டும். முன்னது விருப்பம். அதையடைவதால் ஏற்படும் ஆனந்தம். பின்னது நம் விருப்பம் நிறைவேறாததால் அடையும் துன்ப நிலை. வெறுப்பின் பலன் துன்பம்.

''வாழ்தல் இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னாதென்றலு மிலமே''

என்கிறது புறநானூறு.

இந்த விருப்பம், வெறுப்பு, இன்பம், துன்பம் இவை யாவற்றுக்கும் அடிப்படையாக அமைந்திருப்பது மூலாதாரமானது ஆசை, அவாவுறுதல், கடும்பற்றுள்ளம்.

''அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்''

என்கிறார் வள்ளுவர்.

''ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்''

என்கிறார் திருமூலர்.

ஆசை எனும் ஆணிவேரைத் தன் உள்ளத்திலே இருந்து கல்லி எறிந்தவன், நன்மையையும் தீமையையும் துறந்து விடுவான். அதாவது நன்மை தீமைகள் தன்னைத் தானாக வந்தடையினும் அவைகளைத் துறந்து, அவைகளின் நிழலும் தன் மேல் படாமல் ஒதுங்கி நிற்பான்.

இப்படிப்பட்ட பக்தனே இறைவனுக்கு உவந்தவன்.

மேலும் பகவான் சொல்கிறார்.

**'எவன் நண்பனிடத்தும், பகைவனிடத்தும், மானத்திலும், அவமானத்திலும் சமநிலையோடு உள்ளவனோ, எவன் குளிரிலும், வெப்பத்திலும், இன்பத்திலும், துன்பத்திலும் சமநோக்கு உடையவனோ, எவன் பற்றற்ற உள்ளத்தோடு இருக்கிறானோ எவன் வைதலையும் வாழ்த்துதலையும் ஒப்ப ஏற்றுக் கொள்ளு**

**கிறானோ, எவன் எக்காலத்தும் தன் நாவடக்கிக் கூடுமான வரை மௌனியாக இருக்கிறானோ, எவன் தனக்குக் கிடைத் ததைக் கொண்டு மன நிறைவடைகிறானோ, எவன் தனக் கெனத் தங்குமிடமாக எதையும் ஏற்றுக் கொள்வதில்லையோ, எவன் நிலை பெயராத புத்தி அமையப் பெற்றவனோ அப்படிப் பட்ட பக்திமானே எனக்கு உவந்தவன்.** XII (18&19)

*''தீதும் நன்றும் பிறர் தரவாரா'' என்னும் கணியன் பூங்குன்றன் கருத்தை சித்தாந்தமாகக் கருதுபவர்களுக்குப் பகையும் நட்பும் உண்டாக மாட்டா.*

*நமக்கு உறும் தீமைக்கும், நன்மைக்கும் பிறர் எப்படிக் காரணமாதல் இல்லையோ, அப்படியே நமக்கு ஏற்படும் நட்புக்கும், பகைக்கும் பிறர் காரணமாதல் இலர். நம்முடைய மனோவிகாரத்தால்தான் தீதும் நன்றும் நம்மை வந்தடைகின்றன. நம்முடைய மனோ விகாரத்தாலேயே நமக்கு பகை, நட்பு ஏற்படுகிறது. பகையும் நட்பாகும், நட்பும் பகையாகும்; காலம் மாறும்; நம் மனமும் தன் விகாரத்திலிருந்து விடுபட்டால், இந்த மான அவமானம் நம்மை வந்தடையும் நிகழ்ச்சிகளை ஏற்றுக் கொள்ளும் மன நிலையை நாம் அடைவோம். சத்துவ ரஜோ, தமோ குணங்கள் தம்முள் ஒன்றுக்கொன்று மேம்பட்டு நிற்கும் போது, அந்த மன எழுச்சியினால், மானமே, அவமானமாக வும், அவமானமே மானமாகவும், நம் மனம் கருதிவிடுகிறது. குளிர் வெப்பம் இன்ப துன்பங்கள் என்னும் இருமையினால் மனம் வேறுபடுவதெல்லாம் மனோ விகாரங்களாலேயே ஆகும். ''தான்'' என்னும் அகப்பற்றும் ''தனது'' என்னும் புறப்பற்றும் அற்றால் இவை நம்மை வந்து அண்டா. பற்றற் றவனே உயர்ந்த பக்தன்.*

*இப்படிப்பட்டவனை வைதாலும் வாழ்த்தினாலும் அது எவ்வித மன உளைச்சலையும் எழுச்சியையும் அவனுக்கு உண்டாக்காது.*

நாவடக்கம் மனவடக்கத்திற்கு வழிசோலும். நாவடக்காதவனால் விளையும் தீமைகள் பலப்பல. அதனால்தான் வள்ளுவர், 'யாகாவாராயினும் நாகாக்க' என்றார். நாவடக்கத்தால் குறைவான பேச்சு விளையும் அதையும் அடக்கிவிட்டால் பேசாத மோனநிலை உண்டாக்கும். இந்தப் பேசாத மோனநிலை சித்த மௌனத்தை உண்டாக்கிவிடும்.

'சித்த மௌனம் செயல்வாக்கு எலாம் மௌனம்
சுத்த மௌனம் என்பால் தோன்றின் பராபரமே'

என்கிறார் தாயுமானார்.

எல்லாம் அவன் செயல் என்றிருப்பார், ஏதும் சொல்லார்; பேசார்; இந்த வாய் பேசாத நிலை, மௌனத்தில் உய்த்துவிடும். பேசாத பேரின்ப நிட்ட நிலையும் கைகூடும்.

அடுத்துச் சொல்லப்பட்டிருப்பது தனக்குக் கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடைவது. இந்த மனநிறைவுதான் மாந்தரினத்திலே இல்லவே இல்லை எனலாம். ஏனெனில் மனிதனின் ஆசைக்கோர் அளவே இல்லை. பொன், பொருள், பூமி, ஆயுள், புகழ் இவை யாவற்றையுமே மனிதன் இன்னும், இன்னும், இன்னும் வேண்டும் என்றே ஏங்குகின்றான்.

பிறர் ஆக்கங்கண்டு, பொறாமைப் படாமல் தம்மின் மெலியாரைக் கண்டு, தம் உடைமை அம்மா பெரிதென்று அகமகிழும் பண்பு அமைந்துவிட்டால், அங்கே திருப்தி அமைந்து விடும். தனக்கு வேண்டும், தனக்காக இது அமைய வேண்டும் என்னும் மாயையே மமகாரம். இதனால் ஆத்மாவுக்கு எந்த உதவியும் இல்லை என்றும், 'அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே' என்ற உண்மையையும் உணர்ந்தவர்களே, பரம பக்தர்கள்.

இப்படிப்பட்டவனுக்குத் தனக்கென வாழும் தனி இடம் இல்லை. 'காடோ, செடியோ, கடற்புறமே கனமே மிகுந்த வீடோ புறந்திண்ணையோ' என்னும் நிலைதான் இவன்

நிலை. உடல் சுகத்துக்கென ஓர் இடந் தேடாத நிலை ஒருவனுக்கு அமைதல்வேண்டும். பறவைகள் தத்தம் கூடுகளுக்குத் திரும்புவதைப் போல் பக்தன் தனக்கென ஓரிடத்தை அமைத்துக்கொள்ள விரும்புவதில்லை. மனித சமுதாயம் முழுமைக்கும் அவன் சேவை தேவை. ஆதலால் அவன் நாடோடி போல நாடும் காடும் மேடும் பள்ளமும் கடந்து போய்ப் போய்த் திரும்பித் திரும்பி வந்து, மக்கட்பணிகளையும் கடவுள் பணிகளையும் ஆற்றிய வண்ணம் இருப்பான். சித்தம் போக்கு சிவன் போக்காக, தன் உள்ளம் உந்த சிவன் ஏவலாக அதைக் கருதி, பலப்பல இடங்கட்கு, கடவுள் பணிக்கென மக்கட்பணிக்கெனக் காற்றாய் பறக்கின்ற காரணத்தால், தனக்கென ஓர் இடத்தையும் அவன் தங்குமிடமாகக் கருதுவதில்லை.

இப்படிப்பட்ட பக்தன் நிலை, எக்காலத்தும் இடம், பெயர்ந்து சென்ற வண்ணம் இருந்த போதிலும் அவன் புத்தி, அறிவு, நிலை பெயராது. அதாவது, அவன் இடம் பெயர்வானே தவிர, புத்தி பெயரமாட்டான். அவன் புத்தி நிலைத்து நிற்பது, ஸ்திரமானது.

இப்படிப்பட்ட குணநலன்கள் வாய்ந்த பக்தனே இறைவனுக்கு உவந்தவனாகிறான்.

**எங்கெந்த பக்தர்கள் மிகுந்த சிரத்தையோடு கூடியவர்களாய் (பற்றுறுதி உள்ளவர்களாய்) என்னையே (கதியாக, குறிக்கோளாகக் கொண்டு இந்த அழியாத அமிர்தம் போன்ற பக்தியோகம் என்னும் தர்மத்தை, இங்கே நான் உனக்குச் சொன்னவண்ணம் கடைப்பிடிக்கின்றார்களோ, அவர்களே எனக்கு மிக மிகப் பிரியமானவர்கள். XII (20)**

இங்கே, இந்தச் சுலோகத்திலே வலியுறுத்திச் சொல்லப்பட்டுள்ளது சிரத்தையே, பற்றுறுதியே. இது பக்தனிடம் அமையாவிட்டால் பிற எல்லாம் அமைந்தும் எப்பயனும் இல்லை. இந்தச் சிரத்தைதான் நம் மனம், வாழ்க்கை

என்னும் இரண்டினிலும் உறுதிப்பாட்டை அடைவிக்கும். இது இல்லாத பக்தி ஆழமாக அமையாது. பக்தனிடம் பிற எல்லா குணங்களும் அமைந்திருந்தாலும், சிரத்தை இல்லாத காரணத்தால் அவனிடமிருந்து மேற்சொன்ன குணங்கள் சிறிது சிறிதாக நழுவிவிடும்.

எனவே பத்தனுக்கு உரிய எல்லா குணங்களும் நன்கு அமையப் பெற்றிருப்பதோடு, அவன் பற்றுறுதி கொண்டவனாகவும் அமைதல் வேண்டும். இப்படிப்பட்டவன் இறைவனிலே வாழ்கிறான். அவன் வாழ்வு இவ்வுலக வாழ்வல்ல; வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும், தெய்வீக வாழ்க்கை. இறைவன் அவனுள் வாழ, அவன் இறையருளிலே வாழ்கிறான்.

12ஆம் அத்தியாயம் முற்றும்.

இரண்டாம் ஷட்கம் முற்றும்.

பதின்மூன்றாம் அத்தியாயம்

# விளை நிலமாம் உடம்பும் அதையறியக் கூடிய ஆன்மாவும்

பகவத்கீதையின் முதல் ஆறு அத்தியாயங்களில், அதாவது முதல் ஷட்கத்தில், நம் ஆன்மா அடையவேண்டிய பயனும் அதன் குறிக்கோளும் இவை என இறைவனை அடைய வேண்டியதற்கு உபாயமாகிய பக்தி என்பதைப் பற்றியும், பகவானுடைய உபாசனைக்கு அங்கமாகிய ஞான யோகம், கர்ம யோகம் எனும் இரண்டு வித யோகங்களைப் பற்றியும், ஜீவாத்மாவின் உண்மையைப் பற்றியும் விளக்கப் பட்டது.

அடுத்த ஆறு அத்தியாயங்களில் (7-12) இறைவனது உண்மையான (விபூதி) மகிமைகளையும், சுபாவங்களையும் விளக்கப்பட்டது. அவைகளைத் தெரிந்து கொண்ட பின்னர், நமக்கு ஏற்பட வேண்டிய — ஒரே நிச்சயத்துடன் அமைந்திருக்க வேண்டிய,— எக்காலத்தும் இடைவிடாமல் இருக்க வேண்டிய — பக்தி யோகத்தைப் பற்றியும் விளக்கப் பட்டுள்ளது.

இப்பொழுது இந்த இறுதி ஆறு அத்தியாயங்களில் மூன்றாவது ஷட்கத்தில் (13 அத்—18 அத்) மேற்கூறிய இரண்டு ஷட்கங்களில் சொல்லப்பட்ட பிரகிருதி ஜீவன், இவைகளின் சேர்க்கையில் ஏற்பட்ட பிரபஞ்சம், ஈஸ்வரன், இவைகளின் உண்மையான தன்மைகளும், கர்மயோகம்

---

வினோபாஜீ இதை ஆத்ம அனாத்ம யோகம் என்கிறார்.

ஞான யோகம், பக்தி யோகம் ஆகிய இவைகளின் தன்மை களும் இவைகளை அனுஷ்டிக்கும் முறைகளும் விவரிக்கப்படு கின்றன.

சென்ற அத்தியாயத்திலே பக்தியைப் பற்றி பகவான் விவரித்துச் சொன்னதைக் கேட்ட பின்னர் அர்ச்சுனன் பகவானை நோக்கிக் கேட்கிறான் :

*கேசவா! பிரகிருதியைப் பற்றியும் புருஷனைப் பற்றியும் க்ஷேத்திரத்தைப் (புனிதத்தலம்) பற்றியும் க்ஷேத்திரக்ஞனைப் பற்றியும் (புனிததலத்தை அறிபவன்) ஞானத்தைப்பற்றியும், ஞேயத்தை அறிவதைப் பற்றியும் எல்லாம் நான் தெரிந்து கொள்ள விழைகிறேன்.*

(பல பதிப்புக்களில் காணப்படாத ஒரு சுலோகம் இது.) இதைக் கேட்ட பகவான் பதிலளிக்கிறார் :

**குந்தியின் மைந்தனே! இந்த உடம்பே க்ஷேத்திரம்; அதாவது புனிதத்தலம் என்று இயம்பப்படுகிறது. இதை எவன் நன்கு உணர்கிறானோ அவனே க்ஷேத்திரக்ஞன் என நன்கு அறிந்தவர்களாகிய ஞானிகள் உரைக்கின்றனர் XIII (1)**

க்ஷேத்திரம் என்னும் சொல்லுக்கு இடம் என்பது பொருள். ஆத்மாவை இடமாக இருப்பிடமாகக் கொண் டுள்ள உடம்பே இங்கே க்ஷேத்திரமாகக் கூறப்படுகிறது.

'உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்கிறது திருமந்திரம். ஆன்மாவின் இருப்பிடம் இறைவன். அவன் உறையும் இடம், இந்த உடல். எனவே இது க்ஷேத்திரம்.

இந்த உண்மையை உள்ளபடி அறிந்தவன் யாரோ அவன் க்ஷேத்திரக்ஞன். உடம்பு வேறு, ஆன்மா வேறு என்று அறிவதே பரஞானம். உடம்பே ஆத்மா எனக் கருதுவது அபர ஞானம். உடம்புள்ளே நின்று தன்னை யார் என்று அறிவது எதுவோ அதுவே க்ஷேத்திரக்ஞன்.

நான் இந்த உடல் அல்ல என்கிற அறிவு தெளிவாகப் புரிந்திருக்க வேண்டும். 'நான்' என்பது இந்த உடலில் இருந்து வேறானது; தனித்திருப்பது; மிகவும் அழகியது; ஒளி பொருந்தியது; குறைபாடற்றது என்று நாம் ஆத்ம சோதனை செய்ய வேண்டும்.

மேலும் கூறுகிறார், கண்ணன் :

**பரதகுலத் தோன்றலே! எல்லா க்ஷேத்திரங்கள என்னையே க்ஷேத்திரக்ஞன் என்று நீ அறியக் கடவாய். க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனைப் பற்றிய உண்மையான அறிவு எதுவோ அதுவே ஞானம் என்பது என் கொள்கை என்றுணர்க.**
XIII (2)

தன்னுணர்வற்ற செயலாற்றலே—பிரகிருதி.
செயலற்ற உணர்வு நிலையே—புருஷன்.

இந்த உடல்தான் க்ஷேத்திரம், அதாவது இடம், வயல் என்று குறிப்பிடப்படுகிறது. இதிலே எல்லா நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன. எல்லா விதமான வளர்ச்சிகளும், தேய்மானமும் இறப்பும் இதில்தான் நடைபெறுகின்றன. உணர்வு பூர்வமான, தத்துவம் — மூலக் கோட்பாடு— செயற்பாடற்று, தொடர்பற்று, எல்லா விதமான செயலாற்றலுக்கும் பின்னால் சாட்சியாக உள்ளது எதுவோ, அதுவே இந்த விளை நிலத்தினை நன்கறிந்த ஒன்று. அதாவது அதுவே க்ஷேத்திரக்ஞன். அதுவே உணர்வு நிலைக்கும், உணர்வு நிலையிலே காண்கின்ற பொருள்களுக்கும் உள்ள, நன்கறியப்பட்ட வேறுபாடு ஆகும்.

க்ஷேத்திரக்ஞன் என்பது, அனைத்துணர்வின் ஒளிப் பிழம்பு. யாவற்றையும் அறிந்தவன்; அறிபவன் அவன். சாட்சி என்பது தனிப்பட்ட மனதை—சித்தத்தினை அங்கமாகக் கொண்டதல்ல. அது ஒரு அகண்டமான உணர்வு நிலை. அகண்ட பேரறிவுப் பிழம்பு. அதனுடைய அறிபொருள்இந்த அகிலாண்டகோடி அனைத்துமே ஆகும். அது ஒரு அமைதி நிலை. அழிவற்றநிலை. அது காட்சியாகத்

தான் விளங்கும், அதற்குப் பொறிபுலன்களோ மனமோ தேவை இல்லை.

க்ஷேத்திரக்ஞன் தான் பரம்பொருள், பரப்பிரம்மம். அது இவ்வுலகத்திலே உள்ள ஒரு பொருளல்ல. அது எல்லா பொருள்களூடும விரவி உள்ளது. அது எல்லா நிலங்களிலும் நிலைகளிலும் நிலவி உள்ளது. படைப்புக் கடவுள் பிரம்மனி லிருந்து பூமியிலே உள்ள ஒரு சிறு புல்பூண்டு வரையுள்ள யாவற்றிலும் ஒரு எல்லைக் கோட்டுக்குட்பட்டு ஒரு வரம்போடு சிற்சில மாறுதலோடு நிலவி உள்ளவன் க்ஷேத்திரக்ஞன். ஆனால் அவன் எவ்வித எல்லையுமில் லாதவன், வரம்பிகந்தவன். எவ்வகைப் பிரிவினுள்ளும் அடங்காதவன். யாவராலும் இப்படியன், இவ்வண்ணத்தன் என்று விவரித்துக் கூற இயலாதவன்.

மாறுதலற்ற ஒரே நிலையான அந்தப் பேரறிவுப் பிழம்பினை, உணர்வு நிலையை—பேரறிவாளன் என நாம் உருவகப்படுத்திக் கூறுகிறோம்.

இனி க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் என்னும் இரண்டைப் பற்றிய உண்மையான அறிவெதுவோ, அதுவே ஞானம் என்கிறது சுலோகம்.

க்ஷேத்திரம் என்பது உடல்; க்ஷேத்திரக்ஞன் என்பது ஆன்மா என்பதைக் கண்டோம்.

இச்சுலோக விளக்கத்தின் ஆரம்பத்திலேயே தன்னுணர்வு அற்ற செயலாற்றலே பிரகிருதி என்றும், செயலற்ற உணர்வு நிலையே புருஷன் என்றும் சொல்லப்பட்டுள்ளது அல்லவா? இதிலே பிரகிருதியே க்ஷேத்திரம். புருஷனே க்ஷேத்திரக்ஞன்.

பிரகிருதியின் (க்ஷேத்திரம்) கூட்டுறவால் அதன் கூறுபாடுகளைப்புருஷன் (க்ஷேத்திரக்ஞன்)தன்னுடையதாகக் கருதுகிறான். அப்பொழுது அவன் ஜீவாத்மாவாகிறான்.

அதாவது உடலது, கூட்டுறவால், உடலது கூறுபாடு களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலியனவை களையும், பொறிபுலன்களையும், கரும இந்திரியங்களையும், ஆத்மா தன்னுடையதாகக் கருதுகிறது. எனவே அவன் ஜீவாத்மாவாகக் கருதப்படுகிறான்.

உடலாகிய க்ஷேத்திரத்திற்கு, க்ஷேத்திரக்ஞன் ஆன்மா. இந்த உலகில் வாழும் ஒவ்வொரு உடலிலும் உள்ள ஆன்மா வாகிய க்ஷேத்திரக்ஞன் அனைத்துக்குமே, நானே க்ஷேத்திரக்ஞன் ஆவேன் என்கிறார், கண்ணன்.

க்ஷேத்திரக்ஞன் ஜீவாத்மா என்று கூறிய பின்னர் க்ஷேத்திரக்ஞன் தானே என்றுக் கூறுவது எப்படிப் பொருந்தும் எனில்; எல்லா உயிர்களும் (ஆன்மாக்களும்) இறைவனது உடம்பே. ஜீவன் பகவானது சரீரம்; பகவான் ஜீவனுக்குச் சரீரீ; ஆதலால் சகல ஆன்மாக்களும் உறையும் தன் சரீரமே தான் என்று அருளிச் செய்கிறான், கண்ணன்.

இந்த வகையிலே உடலுக்கு (க்ஷேத்திரத்திற்கு) ஆன்மா க்ஷேத்திரக்ஞன். ஆனால் சகல ஆன்மாக்களுக்கும் இறைவனே க்ஷேத்திரக்ஞன். ஏனெனில் அவனுக்கு அன்னியமாக எந்த ஆன்மாவும் இல்லை. எந்த உலகமும் இல்லை. ஆகையால் அவனே எல்லா க்ஷேத்திரங்களுக்கும் ஹேத்திரக்ஞன் ஆகிறான்.

இனி ஞானம் என்பது இவைகளைப் பற்றிச் சரிவர உணரும் அறிவு என்கிறது சுலோகம்.

இந்த க்ஷேத்திரம் (உடல்) க்ஷேத்திரக்ஞன் (ஆன்மா) இவைகளைப் பற்றி நாம் சரிவர உணர்வதே இல்லை. இந்த உடலையே நான் என்று நினைக்கிறோம். அதன்மீது அதிகமான பற்று வைக்கிறோம். மிதமிஞ்சி போஷிக் கிறோம். ஒப்பனைச் செய்கிறோம். ஆடை அணிகளால் அலங்கரிக்கிறோம். ஆனால் இதில் நூறில் ஒரு பங்குகூட ஆன்மாவைப் பற்றி நினைப்பதே இல்லை. ஆனால் இந்தக்

கூட்டை விட்டு ஆவி போய்விட்டால் அதாவது இந்த க்ஷேத்திரத்தை விட்டு க்ஷேத்திரக்ஞன் போனபிறகு இந்த க்ஷேத்திரம் என்ன ஆகும்? அழுகி நாற்றமெடுக்கும். கட்டியணைத்திடும் பெண்டிரும் மக்களும்கூட கிட்ட வரக் கூசுவார்கள். அப்படி எந்த நேரத்திலும், எந்தக்ஷணத்திலும் பறந்து போய்விடக் கூடிய ஆனால் அழியாத ஆத்மாவைப் பற்றிய சிந்தனை சிறிதும் இல்லாமல், அழியக்கூடிய உடலைப்பற்றியே சிந்தித்து, காலந் தள்ளுகிறோமே அது ஏன்? உடல் பொய் உறவை எண்ணாமல், ஆன்ம சிந்தனை இன்றி இருப்பதால்தான்.

வாழைப்பழத்தைத் தின்கிறோம்; அதன் மேல் தோலை புறத்தே போட்டு விடுகிறோம். உண்மையான மதிப்பு பழத்துக்கே அன்றி தோலுக்கல்ல. ஆனால் நாம் பழத்தைப் புறக்கணித்து விட்டு தோலுக்கே முக்கியத்துவம் தருகிறோம். உடலாகிய கூட்டை கவனிக்கின்றோமே அன்றி உள்ளீடாகிய ஆன்மாவைக் கவனிப்பதே இல்லை.

மகாபாரதத்திலே கர்ணனைப் பற்றிக் குறிப்பிடும்போது "புறஞ்சுவர் கோலம் செய்வான்' என்கிறார் வில்லிபுத்தூர் ஆழ்வார். நாமும் புறஞ்சுவரைத்தான் கோலம் (அழகு) செய்கிறோம்.

அது மட்டுமல்ல, இந்த உலக வாழ்க்கை, அதன் முன்னேற்றம், உடல்நலம்பேணல், அதற்கேற்ற ஒப்பனைகள் அணிபணிகளைப் பற்றிய நம் ஞானம், நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து கொண்டே போகிறது. அதோடு கலை ஞானம், இசை நடனம் பற்றிய பூதபௌதிக சாத்திரங்கள் யாவும் பலப்பலவாகப் பல்கிப்பெருகி உள்ளன.

இவையாவும் அபர ஞானமே. ஆன்மாவைப் பற்றியதும் பிரம்மத்தைப் பற்றியதுமான ஞானமே பரஞானம் ஆகும். ஆத்ம அனாத்ம ஞானத்தைப் பகுந்தறிந்துணர்வதே பரஞானம். அதைத்தான் சுலோகம் குறிப்பிடுகிறது. எனவே

*க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனைப் பற்றி அறிவதே ஞானம் ஆகும்.*

**இந்த க்ஷேத்திரம் என்பது யாது? அதன் இயல்புகள் யாவை? அது என்னென்ன விரிவுகளை உடையது. எதிலிருந்து அது உற்பத்தியானது? என்பவைகளையும்; அந்த க்ஷேத்திரக்ஞன் யார்? என்பதையும் அவன் மகிமை யாது? என்பவைகளையும் நான் உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள்.** XIII (3)

**(இங்கு நான் சொல்லப்போகும் உண்மை) ரிஷிகளால் விதவிதமான சந்தங்களிலே (பண்களிலே) அழகுறப் பலவகையாகப் பாடப் பெற்றிருக்கிறது. நிச்சய புத்தியைத் தருகின்ற யுக்தியோடு கூடிய (பிரம்ம சாத்திரமாம்) பிரம்மத்தைக் குறிக்கின்ற சொற்களாலும் பாடப் பெற்றிருக்கிறது.** XIII (4)

*மூன்றாம் சுலோகத்திலே பகவான் கண்ணன் எழுப்பிய கேள்விகளின் விடைகளை அடுத்துவரும் சுலோகங்களால் காணலாம். இந்த க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞன் சொரூபம் நான்கு வேதங்களிலும் பிரம்ம சூத்திரத்திலும் சொல்லப் பட்டுள்ளது.*

*மற்றும் தைத்திரீயோபநிஷத்திலே இந்த உடலைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் கூறப்பட்டுள்ள விவரம் வருமாறு :*

*"உண்மையாகவே இந்த ஆத்மாவினின்று ஆகாயம் உற்பத்தியாயிற்று. அதனின்று (காற்றும்) வாய்வும், அதனின்று தேயுவும் (நெருப்பும்) அதனின்று அப்புவும் (நீரும்) அதனின்று பிரிதிவியும் (மண்ணும்) தோன்றின. அம் மண்ணினின்றே பயிர், தாவரங்களும் அவற்றால் அன்னமும் உண்டாயின. அவ்வன்னத்தரல் ஆயதே இந்த தேகம் எனும் க்ஷேத்திரம். இதுவே அன்னமய கோசம எனப்படுகிறது. இந்தப் உடலைப் பார்க்கிலும் அன்னியனாய் உள்ளே உள்ளவன் பிராணமயன். அவனுக்கும் உள்ளே*

உள்ளவன் மனோமயன் இவனைப் பார்க்கிலும் உள்ளே உள்ளவன் விஞ்ஞானமயன். இவனே க்ஷேத்திரக்ஞன். இவனே ஜீவன். க்ஷேத்திரத்தையும் அதற்கு அன்னியனாகிய ஜீவனையும்விட அன்னியன் ஆனந்த மயன். இவனே பரமாத்மா"' தைத்திரியோப நிஷத். (1, 2, 3, 4)

**ஆகாயம், விண்வெளி முதலாக உள்ள பஞ்ச பூதங்கள் அகங்காரம், புத்தி, ''அவ்யக்தம்'' எனும் மூல பிரகிருதி அதாவது மாயை, பத்து இந்திரியங்கள், மனம் புலன்கள், ஐந்து (இந்திரிய விஷயங்கள்) இவைகளுடனே இச்சை துவேஷம் (விருப்பு வெறுப்பு), சுகம், துக்கம், உடல் அமைப்பு, நிறை, அறிவு, மன உறுதி, ஆகிய பற்பல வேறுபாடுகளுடனே கூடிய க்ஷேத்திரம் 'இந்த உடல்' சுருக்கமாக இங்கு உரைக்கப் பட்டது.** XIII (5—6)

வெளி (ஆகாயம்) காற்று, நெருப்பு, நீர், மண், எனும் ஐந்து பூதங்களும் எங்கும் நிறைந்துள்ளமையால் அவை பஞ்ச மகாபூதங்கள் எனப்படுகின்றன.

கீதை ஏழாவது அத்தியாயத்தில், நான்காம் சுலோகத் திலே, நிலம், நீர், நெருப்பு காற்று, விண்வெளி, மனம், புத்தி, அகங்காரம் என எட்டுவகையாக என்னுடைய பிரகிருதி பிரிவுபட்டுள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது.

இந்த சூத்திரத்திலே சொல்லப்பட்ட அவ்யக்தம் என்பது மாயை—மூலப்பிரகிருதி.

அவ்யக்தம், பிரதானம், மூலப்பிரகிருதி, அவ்யாக் கிருதம் ஈஸ்வர சக்தி, மாயை என்பன ஒருபொருட் கிளவி.

இந்த மாயையில் இருந்து, புத்தி ரூபமான மகத்துவன் உண்டாயிற்று. இந்த மகத்துவத்திலிருந்து அகங்கார தத்துவம் உண்டாயிற்று.

இந்த அகங்காரத்துவம், 1. வைகாரி அகங்காரம், 2. தைசத அகங்காரம், 3. பூதாதி அகங்காரம் என மூவகைப் படும்.

இவற்றுள் வைகாரி அகங்காரம் — சத்துவ குணத்தையும்
தைசத அகங்காரம் — ரஜோ குணத்தையும்
பூதாதி அகங்காரம் — தமோ குணத்தையும்
உணர்த்துவனவாம்.

இந்த வைகாரி அகங்காரம் என்னும் சாத்வீக அகங்காரத்தில் இருந்து; மனமும்

தைசதம் என்னும் ராஜச அகங்காரத்தில் இருந்து தச இந்திரியங்களும் உண்டாயின.

ஞான இந்திரியங்கள் 5 } 10
கர்மேந்திரியங்கள் 5 }

அதோடு புத்தியும், பிராண வாயுவும் இந்த ராஜச அகங்காரத்தில் இருந்து உண்டானவைகளே.

இனி பூதாதி அகங்காரம் என்னும் தாமச அகங்காரம் விகாரப்பட்டு சப்த (ஒலி) தன் மாத்திரையை உண்டாக்கியது. அந்த சப்த (தன்) மாத்திரையினின்று ஆகாயம் உண்டாயிற்று. அவ்வாகாயத்திற்கு சப்தமே குணம் எனப்படும்.

இந்த ஆகாயம் விகாரப்பட்டு ஸ்பரிச (தீண்டல்) தன் மாத்திரையினின்றும் வாயு உண்டாயிற்று. அந்த வாயுவிற்கு சப்தம், ஸ்பரிசம் இரண்டும் குணங்களாயின.

அந்த வாயு விகாரப்பட்டு, ரூப (உருவம்) தன் மாத்திரை உண்டாயிற்று. அந்த ரூப தன் மாத்திரையினின்று தேயு (நெருப்பு) உண்டாயிற்று.

இந்தத் தேயு விகாரப்பட்டு 'இரச' தன் மாத்திரை உண்டாயிற்று. இந்த இரச மாத்திரையினின்று அப்பு (நீர்) உண்டாயிற்று.

இந்த அப்புவிக்கு சப்தம், ஸ்பரிசம் ரூபம், ரசம் கந்தம் இவ்வைந்தும் குணங்களாயின.

இந்தச் சப்தம். ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் தன் மாத்திரைகள் ஐந்தும், அந்தப் பஞ்ச பூதங்களுக்குக் காரண மான சூட்சும பூதங்கள் எனப்படும்.

இந்தச் சுலோகத்திலே, (XIII-5ல்) புத்தி (1) அகங்காரம் (1) மூலப்பிரகிருதி (1) கர்ம, ஞான, இந்திரியங்கள் (10) மனம் (1) இந்திரிய விஷயங்களாம். தன் மாத்திரைகள் (5) ஆக மொத்தம் 24 தத்துவங்கள் என்கிறது சாங்கிய நூல். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று அந்தக்கரணங்கள் நான்காகக் கொண்டு தத்துவங்கள் 25 என்கிறது சைவ சித்தாந்தம்.

இவையாவுமே க்ஷேத்திரத்தின் (உடலில்) ஆக்கக் கூறுகள்; மூலக்கூறுகள் ஆகும். மனக்கூறு, பொருட்கூறு, இவைகளிடையே உள்ள வேறுபாட்டுப்பண்பு, புறப்பொருள் வகையைச் சார்ந்தது. அவ்வேறுபாடுகள் யாவும் க்ஷேத்திரம் எனும் களத்திடையே உள்ளவைகளே.

இந்த உடலும், பொருள்களைச் சுட்டி உணரும் தன்மை வாய்ந்த புலன் உணர்வுத்திறனும் புறப்பொருள் கூற்றைச் சார்ந்தனவே. இந்த "நான்" என்னும் அகங்காரம் ஒரு போலியான கற்பனையாகும் ஓர் உருவமைப்பே. இதுதான், நம் மனத்தினது அனுபவ அறிவினால் ஏற்படும் திரட்சியின் முனைப்பு.

ஆனால் பேரறிவுப் பிழம்பாகி, சாட்சி பூதமாக விளங்கும் பரமாத்மா, இந்த நீலவானை ஒளி கொளுவும் காலத்தும் செந்தாமரையை மலரவிக்கும் காலத்தும் ஒரே தன்மையதே ஆகும். க்ஷேத்திரமாகிய உடல்கள், பற்பல விதமாக அவை களின் தன்மைக்கேற்ப ஒளி கொளுவப்பட்டாலும் அவை களை பிரகாசிக்கச் செய்யும் பேரொளி மட்டும் ஒரே தன்மையதே ஆகும்.

நிற்க சுலோகத்திலே சொல்லப்பட்டுள்ள சுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு ஆய இவையாவும் மனத்தின் செயல்கள்.

*இவைகளின் அடிப்படை 'நான்' என்னும் உணர்வே. எனவே இவைகளும் க்ஷேத்திரத்தைச் சார்ந்தனவே.*

*உடலமைப்பும், உறுதியும், உடல் சார்ந்தனவே. இவ் வகையிலே உடலாகிய விளைநிலம், (க்ஷேத்திரம்) இன்னது என்று உணர்த்தப்பட்டது.*

*வினைப் போகமே ஒரு தேகம் கண்டாய்'' என்று வினை விளையும் கழனியாக இந்த உடலைக் கூறுகிறார் பட்டினத்தடிகள்.*

*இரண்டாம் சுலோகத்திலே சொல்லப்பட்ட—ஞானம்—க்ஷேத்திரக்ஞனைப் பற்றிய அறிவே ஞானம், என்பதற்கு ஏதுவாக உள்ள குணங்கள் யாவை என்பதை அடுத்து விளக்குகிறார் கண்ணன்.*

**தற்பெருமை இல்லாமை, கர்வமில்லாமை, அகிம்சை, பொறுமை, நேர்மை, குருசேவை, தூய்மை, தன் ஆத்மப் பயிற்சியில் விடா முயற்சி தன்னடக்கம்;** XIII (7)

**இந்திரிய போக விஷயங்களில் விருப்பமின்மை, தான் என்னும் முனைப்பு (அகங்காரம்) இன்மை, பிறப்பு, இறப்பு, பிணி மூப்பு, துயரம் ஆகியவைகளில் அமைந்துள்ள கேடு களை நினைத்துப் பார்த்தல்.** XIII (8)

**எதிலுமே பற்றுள்ளமின்மை. தன் மனைவி, மகன் வீடு இவைகளிடத்திலே அபிமானமின்மை, வேண்டியவைகளோ வேண்டாதவைகளோ சம்பவித்த நேரத்தில் மனம் சலித்த லின்றி (மகிழ்ச்சி, துக்கம் கொள்ளாமல்) சமசித்தத்தில் நிலைத்தல்.** XIII (9)

**என்னைத் தவிர வேறு எதையும் எண்ணாத யோகத்தி னால், என் மீதே முழு மனதையும் செலுத்திப் பிறழாத பக்தி செய்தல், தனித்திருத்தல், மக்கள் கூட்டத்தினைத் தவிர்த்து விடல்.** XIII (10)

**ஆத்ம ஞானத்திலே நிலை பெற்று நிற்றல், தத்துவ ஞானத்தின் பயனை ஆராய்தல், இவை யாவும் ஞானத்திற்கு ஏது என்று சொல்லப்படுகிறது. இவைகளுக்கு எதிர் மாறான வைகளே அஞ்ஞானம் ஆகும். XIII (111)**

*இங்கு ஏழாம் சுலோகம் முதல் பதினோறாம் சுலோகம் வரை பட்டியலிட்டுக் காட்டப்பட்ட நற்குண நற்செயல்கள் யாவும் ஞானத்திற்கு அடிப்படைக் காரணமானவைகள். எனவே அவைகளே ஞானம். அதற்கு எதிர்மாறானவை களோ அஞ்ஞானம் எனப்படும்.*

*இந்த வகையில் அறஞ்சார்ந்த ஒழுக்க நெறியினைக் கடைப்பிடித்து ஒழுகுதலே, ஞானத்தின் அடிப்படை என அறிகிறோம். வெறுஞ் சாத்திர ஞானத்தை மட்டுமே கற்றுப் பிறரிடம் தன் மேதைத் தன்மையைக் காட்டுவது ஞான மன்று. மேற்கூறிய அறஞ் சார்ந்த நல்லொழுக்கங்களை நாம் விருத்தி செய்வதன் மூலம் எக்காலத்தும் மாறுதலற்ற ஆத்ம சாக்ஷியாகி நிற்கும் அந்தப் பேரொளிப் பிழம்புக்கும் கணந்தோறும் மாறுதலுக்குட்பட்டு, நம்மைக் கடந்து செல் கின்ற மாயாவிகாரத் தோற்றங்களுக்கும் உள்ள வேறு பாட்டை நாம் நன்கு உணர முடியும். மனக்குழப்பம் நம்மை விட்டு விலகித் தெளிந்த சிந்தனை நம்மை வந்தடையும்.*

*மாறாக இவைகளைக் கைவிட்டு எதிரிடையானவை களைக் கடைப்பிடித்தால் நாம் அஞ்ஞான இருளில் மூழ்கித் தடுமாற வேண்டியதுதான்; வாழ்க்கையிலே குழப்பந்தான் மிஞ்சும். மெய்யுணர்வு இல்லாமல் பொய்யுணர்வில் ஆழ்ந்து கிடக்க வேண்டியதுதான்.*

*'இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி*
*மாசறு காட்சியவர்க்கு' என்கிறார் வள்ளுவர்.*

**எது அறியத்தக்கது, எதைஅறிந்து ஒருவன் அமரத்துவம் (*சாகாநிலையை*) அடைகிறானோ, அதை நான் உனக்குச் சொல்லுகிறேன். அது ஆதியில்லாதது; மேலானது. அதுவே**

பிரம்மம். உள்ளது அல்லது இல்லது (உளது இலது) எனச் சொல்ல ஒண்ணாதது. XIII(12)

அறிய வேண்டியவன் (காண்போன்) அறியத்தக்கது எது என அறிந்து அதை அறிவதற்கு முயலவேண்டும். அந்த அறிவுதான் ஒருவனைச் சாகாநிலைக்கு உயர்த்த வேண்டும். அதுவே உண்மை அறிவு. அதுதான் ஞானம். எதை அறிய வேண்டும்? ஆதியில்லாததும் மேலானதுமான பிரம்மத்தைத் தான் ஒருவன் அறிய முயல வேண்டும். பிறப்பிறப்பற்றதும் மன மொழிகளுக்கு எட்ட சாகா நிலையடைய உதவ வேண்டும். ஒண்ணாததுமான பிரம்மத்தை அறிய முயலல் தான் ஞானமார்க்கம். ஆத்மஞானமல்லாத பிறவற்றை அறிவது ஞானமன்று. அவைகளால் உடலுக்குப் பலன் உண்டாகலாம். உயிருக்கு அந்த அறிவால் பயனேதுமில்லை.

எனவே அந்தப் பிரம்மத்தை அறிவதே ஞானம். அது உள்ளது என்றும் இல்லது என்றும் சொல்ல முடியாத ஒன்று 'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்' என்கிறார் அருணகிரிநாதர். உருவாக உள்ளபோது உள்ள பொருளாகியும் அருவாய் கண்ணுக்குப் புலப்படாதபோது இலதாகியும் உள்ள பொருள்; மெய்ப்பொருள் அது.

கீதை ஒன்பதாவது அத்தியாயம், பத்தொன்பதாவது சுலோகத்திலே, பகவான் தம்மைமிருத்யு (மரணம்) என்றும், அம்ருதம் (சாவாமை) என்றும் சொல்லுகிறார். அதோடு, தாமே சத் (உளது) என்றும் தாமே அசத் (இலது) என்றும் கூறுகிறார்.

பரப்பிரம்மத்தினது சொரூபம், பிரபஞ்ச சொரூபமாக இருக்கும்போது, சகுணப் பிரம்மம் எனப்படுகிறது; இங்ஙனம் குணத்தோடு சம்பந்தப்பட்டு தோன்றியுள்ள காரியப்பிரம்மம் சத் ஆகிறது. அதனுடைய தோன்றா நிலை அசத் எனப்படுகிறது. தோற்றம்; சத்; தோன்றா நிலை; அசத், எனவே அசத் என்பது இன்மையல்ல. தோன்றா நிலையே.

நிர்க்குணப் பிரம்மம் அரூபமானது. எங்கும் பரந்துள்ளது. அது உளதென இலதெனச் சொல்ல முடியாதது. தோற்றமும் மறைவும் அற்று எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது அது. முதலும், முடிவும் இல்லாத, மாறுபாடு சிறிதும் அற்றது அது. அதுவே அறியத்தக்கது. அறிய வேண்டியது. அதை அறிவதால் மட்டுமே ஒருவன் இறவா நிலையை அடைகிறான்,

அந்தப் பிரம்மம் அழிவற்றது. அனுபவத்தால் அறியப்படும், தோன்றும் நிலை, தோன்றாநிலைகளினுடைய முரண்களுக்கு அது அப்பாற்பட்டது. அதை நாம் உணரப் பெற்றால், ஆத்மாவின் சாசுவத நிலையைத் தீண்ட முடியாத ஜெனன மரணம் இரண்டும், வெறும் புறத்தே நிகழும் செயலாகவே காணப்படும்.

**அந்தப் பிரம்மம் அண்ட கோளத்தின் எல்லா இடத்தும் கை கால்களை உடையது. எங்கும் முகம் கண் தலை வாய் முதலியவைகளையுடையது. எவ்விடத்தும் காதுகளை உடையது. உலகம் முழுமையும் அது வியாபித்துள்ளது.**

XIII (13)

நம் அனுபவத்தால் அறிகின்ற, புறத்தே காணப்படும் அனைத்துப் பொருள்களுக்கும் மூல ஆதாரமாக உள்ளஅந்தப் பரப்பிரம்மம் இந்த உலகனைத்தையும் நீக்கமற நிறைந்து வியாபித்துள்ளதாகப் பேசப்படுகிறது. இவ்வகையில் எவ்விடத்திலும் அவன் கை, கால், முகம், தலை, கண், வாய், காது, காணப்படுகிறது. ஒளியே இல்லை என்றால் அனுபவமே இல்லை.

பரம்பொருளுக்கு இருவகைத் தன்மை உண்டு. ஒன்று அனைத்தையும் கடந்து, நிற்கும் நிலை, கட்டற்ற தொடர்பற்ற தனிநிலை. மற்றொன்று பாலில் நெய்போல, யாவற்றூடும் ஒவ்வொன்றிலும் உள்ளே பரவி நிற்கும் நிலை. இவ்வகையில் அவன் மிக மிக எட்டப்படாத தூரத்தில் இருக்கிறான். மற்று நாம் எட்டக்கூடிய நிலையிலும் உள்ளான்.

அது அனைத்து இந்திரியங்களின் வாயிலாக ஒளிர்வது. அனைத்து இந்திரியங்களும் அற்றது. அது பற்றற்றது. ஆயினும் அது அனைத்தையும் தாங்கி நிற்பது. நிர்குண மானது. (குணங்களே அற்றது) ஆனால் அதுவே குணங் களை அநுபவிப்பதும் ஆகும். XIII (14)

*இந்தச் சுலோகம், பரப்பிரம்மம் மாறும் இயல்புள்ள தென்றும், மாறும் இயல்பே இல்லாதது என்றும் இருவகையை யும் விவரிக்கிறது. ஏகமாகி நிற்பதும் அதுவே. அநேகமாக பரவி நிற்பதும் அதுவே.*

*அவன் அனைத்தையும் காண்கிறான். ஆனால் பருப் பொருளான கண்களால் அல்ல. அவன் யாவற்றையும் கேட்கிறான். பருஉருவான காதுகளால் அல்ல. அனைத் தையும் அவன் அறிகிறான். நமக்குள்ளதைப் போன்ற அளவுக்குட்பட்ட அறிவால் (கிஞ்சித் ஞானம்) அல்ல. (சுவேதஸ்வத்ர உபநிடதம்) III (19)*

*அவன் கண்களே இல்லாமல் காண்கின்றவன். காதுகளே இல்லாமல் கேட்கிறவன். அவன் சர்வக்ஞன். அனைத்தும் அறியும் அறிவு சொரூபமானவன்.*

*இவ் விதம் பரம்பொருளின் அளக்கலாகாப் பெருஞ்சிறப்பு அவனுடைய கற்பித குணங்களாகச் சொல்லப்படும் திவ்ய குணங்கள், மகிமைகள், விபூதிகள், ஆகிய இவைகளால் வெளிப்படுத்தப் படுகின்றன.*

*சூரியன், உலகிலே எல்லாப் பொருள்களையும் விளக்கிக் காட்டுவதைப்போல, இறைவன் நமது ஐம்புலன்கள் மூலமாகப் பிரகாசித்துப் புலன் உணர்வு மூலமாக அனைத்தையும் விளக்குகிறான்.*

*விளக்கப்பட்ட பொருள்கள் எப்படிச் சூரியனின் கதிர் களில் பொருந்தி இருக்கவில்லையோ, அதைப் போலவே நம் பொறிகள் மூலமாக நமக்கு விளக்கம் செய்யும் இறைவ னும், அனைத்து இந்திரியங்களுக்கும் அப்பாற்பட்டவன்;*

இந்திரியங்களால் கட்டுப்பட்டவன் அல்லன். சத்துவ, ரஜோ, தமோ குணங்களுக்கு அப்பாற் பட்டவன் அவன். அவனிடம் முக்குணங்கள் இல்லை. ஆனால் குணங்களை விளங்க வைப்பவன்; ரசிக்கச் செய்பவன் அவனே!

அது எல்லாப் பொருள்களுக்கும் புறந்தேயும் உள்ளது. அகத்தேயும் உள்ளது. அசையாப் பொருளும் அது. அசையும் பொருளும் அதுவே. மிக நுண்மையானதாதலால் அறிவரிது. அதுவே மிகச் சேய்மையிலே (தூரத்திலே) இருப்பது. அதுவே மிகச் சமீபத்திலே இருப்பதும் ஆகும்.
XIII (15)

''ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனை''

என்கிறது திருவாசகம்.

''சிந்தையும் செல்லாச் சேட்சியன், என்றும்
''பக்தி வலையில் படுவோன்'' என்றும்

மிகத் தூரமானவன் என்பதையும், மிகவும் சமீபமானவன் எனபதையும் விளக்குகின்றது, திருவாசகம்.

நிலம், நீர் முதலிய பஞ்சபூதங்களையும் விட்டு, புறத்தே விலகி நின்று, ஆத்மா தனித்து (தான் ஒரு உடம்பினுள் (இல்லாமல்) நிற்க வல்லது. மாறாக ஆத்மா உடலுக்குள்ளே நின்று, பஞ்ச பூதங்களுள் கிடந்து, பல்வகைப் பணிகளின் மூலமாகத் தன் உள்ளத்து அபிலாஷைகளை நிறைவேற்றும் காலத்திலே அகத்தேயும் உள்ளது.

ஆத்மா இயல்பாகவே தானாக இயங்காதது. அது அசையாப் பொருள். ஆனால் உடலுள் பொருந்தி உள்ள காலத்திலே பல காரணங்களுக்காக அங்கும், இங்கும் ஓடி ஆடி இயங்கும் இயக்கம் உடையது. அது மிகவும் நுட்பமான பொருள். நோக்கரிய நோக்கு; நுணுக்கரிய நுண் பொருள். ஆகையால் அறிவதற்கு அரிது. புறக் கண்ணால் கண்டுணர

முடியாதது. ஆத்ம ஞானிகளுக்கு மட்டும் அது அறியக் கூடிய பொருளாகும். தன்னை உணரக் கூடிய அந்த ஆத்ம ஞானிக்கு அது மிகச் சமீபமானது; எட்டக்கூடியது. ஆனால் தன்னை உணராத தன்மையனுக்கு அது மிகவும் தூர மானது- எட்டவே முடியாதது.

**அது எவ்வகையிலும் பிரிக்கப்படாதது (பின்னப்படாதது) ஆனால் பிளவு பட்டதைப்போல் காணப்படுகிறது. எல்லாப் பொருள்களையும் அது தாக்குகின்றது. யாவற்றையும் அது விழுங்குகின்றது. அனைத்தையும் அதுவே மறுபடியும் உண்டு பண்ணுகின்றது.** XIII (16)

விண்வெளி பிளவுபடாதது. பின்னம் இல்லாதது. ஆனால் புகைமண்டலம், மேகங்கள், இவைகளது சஞ்சாரத் தால் அது பிளவு பட்டதைப் போல் காணப்படுகிறதல்லவா? அதைப் போலவே பரமாத்மாவும் பிளவு படாதவன். பின்னம் அற்றவன். தாவர, சங்கமமாக உள்ள பூதங்களிலே காரண சொரூபத்தால் பரமாத்மா பிரிவற்றது. ஆனால் காரியசொருபத்திலே பிரிந்திருப்பதைப்போலத் தோற்றுவது அது.

ஆத்ம ஞானியின் கண்களுக்கு இது ஒரே பிரம்மம். விண்வெளியைப்போலப் பகுப்பு ஏதுமின்றி எல்லா உடல்களி லேயும் அமைந்துள்ளது. ஆனால் ஆத்ம ஞானம் இல்லாத வனுக்கு ஆத்மா பகுப்புடையது. இவன் மனிதன், இவன் தேவன், என்பதாக அவன் படு

மற்றும் அது, சம்ரக்ஷிக்கிற (காக்கும்) காலத்திலே சர்வ பூதங்களையும் அதுவே காக்கிறது. அழிக்கும் காலத்திலே அனைத்தையும் அது விழுங்கித் தன் வயிற்றிலே அடக்கிக் கொள்ளுகிறது. அக்கால் ஆத்மாவில் பூதங்கள் ஒடுங்கு கின்றன. சிருட்டி காலத்திலே மீண்டும் அவை ஆத்மா விலேயே தோன்றுகின்றன.

கடலிலே உண்டாகும் அலைகள் அதிலேயே தோன்றி, அதிலேயே நிலைபெற்று, அதிலேயே அடங்குவதைப் போல

உலகும் உயிர்களும், சிருட்டி திதி சங்காரம் ஆகிய மூன்று நிலைகளிலும் பரம்பொருளுக்குப் (பரமாத்மாவுக்கு) புறம்பாக இருப்பதில்லை.

**அது ஜோதிகள் அனைத்துக்கும் மேம்பட்ட பரஞ்சோதி. இருளுக்கு அப்பாற்பட்டது என்று கூறப்படுகிறது. அதுவே ஞானம். அதுவே அறியப்படுபொருள்—(ஞேயம்) காட்சி. அதுவே ஞானத்தால் தெளியப்படுவதுமாகிய (ஞாதுரு) யாவருடைய உள்ளத்திலும் அது நிலைத்திருப்பதாகும். XIII (17)**

*அது பகலிலும், இரவிலும் ஒளிர்கின்ற ஜோதிகளாம், சூரியன் சந்திரன், விண்மீன்கள் அனைத்தினும் மேம்பட்ட பரஞ்சோதி ஆகும். அந்த ஒப்பற்ற பரஞ்சோதியே, ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிலைபெற்றுள்ளது. அந்தப் பொருளே ஞானம். அதுவே ஞேயம் (அறியப்படு பொருள்) இந்த அறியப்படுபொருளைக் கொண்டு (ஞேயத்தைக் கொண்டு) காண்போன் (ஞாதுரு) அறிந்து தெளிவதே ஞானம். அந்த ஞானமே அது. அவனே பரஞ்சோதி. அவனே ஞான வடிவானவன்.*

**இந்த வகையிலே, உடலுள் வசிக்கின்ற உயிராகிய க்ஷேத்திரம், அதாவது காண்போனை—ஞாதுருவைப்பற்றியும், ஞானத்தைப் பற்றியும் காண்போன் காணும் அறிபொருளாம் ஞேயத்தைப் பற்றியும் சுருக்கமாக இதுவரைச் சொன்னேன். இதை அறியத்தக்க என் பக்தன், என்னை அடையத் தக்கவனாகிறான். XIII (18)**

*காண்போன் (ஞாதுரு) என்பது உடலுடன் கூடிய உயிர். இந்த உயிர், தான் காணும் காட்சியைக் கொண்டு (ஞேயத்தைக் கொண்டு) அடைவதே ஞானம். உலகில் காணும் காட்சிகளால் நித்ய அநித்திய வஸ்துக்களின் விவேகத்தை உணர வேண்டும். அதன் மூலம் இகபோக—இவ்வுலக வாழ்க்கையிலும் உண்டாகின்ற போகங்களிலே—நிராசையும் அடையும்படியான ஞானத்தை அடைதல்வேண்டும்.*

இந்த வகையில் ஆத்ம சாதகன் (ஞாதுரு) தன் ஆத்மாவையே தன் உள்ளுறையும் ஜோதியாக—அருட் பெருஞ்சோதி ஆண்டவனாகக் காண்கிறான். அந்த தெய்வீகப் பேரொளியில் தன் உள்ளத்தைப் பதிய வைக்கிறான். அன்பு செலுத்துகிறான். தியானிக்கிறான். இவைகளின் மூலமாக அதுவாகவே ஆகிறான்.

**பிரகிருதியையும், புருஷனையும் ஆதி இல்லாதவைகளென அறிக. பல்வேறு தோற்றங்களும், குணங்களும், பிரகிருதியில் பிறந்தவைகளென அறிக. XIII (19)**

இறைவன் எப்படி அனாதி நித்தியமோ, அப்படியே அவனது பிரகிருதியும், புருஷனும் அனாதி நித்தியமே.

"பதி பசு பாசம் என பகர் மூன்றில்
பதியினைப் போல் பசுபாசம் அனாதி" என்கிறது திருமந்திரம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஏழாம் அத்தியாயம் நான்காம் சுலோகத்தையும் ஐந்தாம் சுலோகத்தையும் சற்றுக் காண வேண்டும்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், மனம், புத்தி, அகங்காரம் என இப்படி எட்டு விதமாக என் பிரகிருதி பிரிவுபட்டிருக்கிறது.

இது என் கீழான பிரகிருதி. இதினின்று வேறானது உயிர். இந்த என்னுடைய மேலான பிரகிருதியை அறிக. இந்த உலகமானது இதனால் தாங்கப்படுகிறது,

இந்த இரண்டு சுலோகங்களால் நாம் அறிவது யாதெனில் பஞ்ச பூதங்களும் அந்தக்கரணங்களும் சேர்ந்து உருவாகி இருப்பது கீழான பிரகிருதி. உயிர் என்று சொல்லப்படும் ஜீவாத்மாவே மேலான பிரகிருதி. இது ஜீவப் பிரகிருதி. முதலில் சொன்ன பிரகிருதி இறைவனின் "அபர பிரகிருதி". அடுத்து சொன்னது (ஜீவன்) இறைவனின்

"பரபிரகிருதி". இந்த இரண்டையும் பிரகிருதி—புருஷன் எனவும் க்ஷேத்திரம்: க்ஷேத்திரக்ஞன் எனவும் கூறப்படுவது மன்றி, இவை அனாதிகளெனக்சொள்ளப்பட்டன. பிரகிருதியும் புருஷனும் இரண்டல்ல. இறைவனது மாயையின் இரு கூறுகளாம், அசுத்த மாயையும் சுத்த மாயையுமே ஆகும்.

பிரம்மத்தை நித்தியனாகவும் அனாதியாகவும் நாம் கொள்ளும்போது ஈஸ்வரனது பராபரப் பிரகிருதிகளான மாயை, ஜீவன், என்போரையும் அனாதி நித்தியர்களாகவும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஏனெனில் இந்த இரண்டு பிரகிருதிகளாலேயே, ஈஸ்வரனது சிருட்டி, திதி, சங்காரம் முதலிய காரணத்துவம் சொல்லப்படுகிறது.

இந்தப் பிரகிருதிக்கும் ஆத்மாவுக்கும் அனாதி நித்யம் சொல்லக் கூடாது. (கிடையாது) என்றால், பிரம்மத்துக்கு ஈஸ்வரத்துவமும் ஜெகத்காரணத்துவமும் சொல்லக்கூடாது.

பிரகிருதி புருஷனை உடையவன் எவனோ அவனே ஈசுவரன். ஏவுவதற்கு வஸ்து இல்லை எனில், ஏவும் எஜமானத்துவம் கிடையாதல்லவா?

பிரகிருதியும் புருஷனும் அனாதியல்லார். உண்டானவர்களே என்றால், அவர்கள் உண்டாவதற்கு முன்னால், ஈஸ்வரத்துவம் இல்லாதிருத்தல் வேண்டும். புருஷனுக்கு (ஆத்மாவுக்கு) அனாதியான கர்ம பந்தம் என்பதும் இல்லையாகிவிடும்.

அதுவுமின்றி ஒரு ஆத்மாவை சுகியாகவும் மற்றோர் ஆத்மாவை துக்கியாகவும் படைக்கும் பட்சத்தில் அவ்விறைவன் பட்சபாதமுடையவன், தயையற்றவன், என்றாகிவிடும். பந்தம் இல்லை என்றும் முடிவாகும். பந்தமில்லாவிட்டால் வீடு பேறு ஏது? ஆகையால் பிரகிருதியும் புருஷனும் அனாதியே எனக் கொள்க. (இதுவே சைவ சித்தாந்திகள் கொள்கையாம் என்பதுணர்க)

**உடலையும் பொறிகளையும் உண்டுபண்ணும் விஷயத்திலே பிரகிருதியே காரணமென்று சொல்லப்படுகிறது. புருஷன் அதாவது ஜீவன் அல்லது ஆன்மாவோ, இன்பம் துன்பங்களைத் துய்ப்பதற்குக் காரணமாகிறது என்று சொல்லப்படுகிறது.** XIII (20)

*இந்தச் சுலோகம் சொல்வதை இப்படிப் பார்க்கலாம். அதாவது பிரகிருதி என்னும் மாயையே, உடலினைச் சார்கின்ற சுகத்தையும், துக்கங்களையும் உண்டுபண்ணுவதற்குக் காரணமாகிறது. மற்று க்ஷேத்திரக்ஞன் என்னும் புருஷனோ (ஆத்மாவோ) அந்தச் சுக துக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாகிறது.*

*பிரகிருதி உடலையும் அதைச் சார்ந்த பொறிபுலன்களையும் உண்டு பண்ணுகிறது. அந்தப் பொறி புலன்களால் உண்டாகும் சுக துக்கங்களை ஒரு குறிப்பிட்ட எல்லை வரையிலும் புருஷன் அனுபவிக்கிறான். ஆனந்த மயமான—பரமானந்தத் தன்மை வாய்ந்த— ஆத்மா, பிரகிருதியில் (இயற்கையில்) ஒன்றி, தோய்ந்து ஈடுபட்டுச் சுக துக்கங்களைத் தனதாகக் கொண்டு விடுவதால் மாசடைகின்றது.*

*இந்த வகையில் ஆத்மா, பிரகிருதியோடு தொடர்பு கொள்ள (மாயையாம்) பிரகிருதியின் இந்திரியங்கள், புலன்கள் அந்தக் கரணங்கள் யாவும் பயன்படுகின்றன. இந்தத் தொடர்புதான் இன்பமாகவும், துன்பமாகவும் வடிவெடுக்க அவைகளை அந்த ஆத்மா அனுபவிக்க ஏதுவாகிறது.*

*இங்ஙனம் இன்ப,துன்ப போகங்களை நுகர்வித்து, அதன் மூலம் ஆத்மாவைப் பக்குவப்படுத்துவதே பிரகிருதியின் (மாயை)யின் தொழில் ஆகும் என்க.*

*தனு (உடல்) கரணம், புவனம் (உலகம்) போகங்கள் (இன்பதுன்ப நுகர்ச்சிகள்) எனும் இவைகளை இறைவன் உண்டாக்கியதன் நோக்கமே ஆத்மா பக்குவ நிலை அடையவே என்கிறது சித்தாந்தம்.*

**புருஷன் (ஜீவாத்மா) பிரகிருதியில் பொருந்தி இருப்ப தாலேயே பிரகிருதியில் பிறந்த குணங்களைத் துய்க்கிறான். ஜீவாத்மாவின் அந்த குணப்பற்றே நலம் மிக்க, அல்லது கேடுள்ள, மேலான அல்லது மிகத் தாழ்ந்த (உதரத்தில்) பிறவி களில் பிறப்பதற்குக் காரணமாகின்றது. XIII (21)**

*பிரகிருதியின் காரியமாகிய தேகத்தில் இருக்கின்ற ஜீவாத்மா தேகத்தால் உண்டாகின்ற சுக துக்கங்களை அனுபவிக்கிறது. அதாவது தன்னை அனுபவிப்ப தொன்றையே, சுகமாக உடைய ஜீவாத்மா, பிரகிருதியோடு சேர்ந்ததாய், பிரகிருதியின் சம்பந்தத்தைக் காரணமாக உடைய, சத்வம் முதலிய குணங்களின் காரியமாகிய சுகம், துக்கம் முதலியவைகளை அனுபவிக்கிறது. இந்த வகையில் ஜீவாத்மா, பிரகிருதியின் தன்மைகளை எல்லாம் தன்னுடையவைகளே எனக் கருதுகிறது. இப்படிக் கருது கின்ற தன்மை தான், பிறவிக்கு ஏதுவாகிறது. இப்படிக் கருதுகின்ற உணர்ச்சிகள், சத்துவம் முதலிய குணங்களோடு பற்று வைப்பதால் உண்டாகின்றன. மேலான குணங்களிலே பற்று வைப்பவர், மேலான பிறவியிலும், கீழான குணங் களிலே பற்று வைப்பவர் கீழான பிறவியிலும் பிறக்கின்றனர். எனவேதான் நலமுடைய பிறவியோ கேடுடைய பிறவியோ ஒருவன் எடுப்பதற்குக் காரணம் குணப்பற்றே என்கிறது சுலோகம்.*

*மனிதன் உடலிலே உறைகின்ற இந்த ஜீவாத்மா, தான் பிறந்த குடி, குடும்பம், நாடு, பழக்க வழக்கங்கள் முதலியவைகளால் ஏற்படும் சத்துவம் முதலிய குணங்களின் காரியங்களாகிய சுக துக்க முதலியவைகளை அனுபவிக்கிறது. அந்தக் குணங்களின் காரியங்களாகிய சுக துக்க முதலியவை களில் பற்றுதலை அடைகின்றது. அவைகளுக்குக் காரண மாகிய புண்ணிய பாவங்களில் பங்கேற்கிறது. அவை அனுபவிப்பதற்கென அந்த ஜீவனுக்கு அடுத்தடுத்து பிறவி உண்டாகிறது. ஒவ்வொரு பிறவியிலும் ஜீவன் கர்மங்களைச்*

செய்து செய்து, கர்ம பலனை அனுபவிக்கப் பிறவிகளை அடைய வேண்டியதாகிறது.

**இந்த உடலிலே உள்ள ஜீவன் (ஆத்மா) இந்த தேகத்திலேயே உறைந்திருப்பினும் அவன் தேகத்தைக் காட்டினும் அன்னியன். அவன் பரபுருஷன். அவனே சாட்சி. அனுமதிப்பவனும் தாங்குபவனும் அவனே. யாவற்றையும் அனுபவிப்பவனும் அவனே. அவனே மகேஸ்வரன் என்றும், பரமாத்மன் எனறும் அழைக்கப்படுகிறான்.** X.II (22)

ஜீவனாகிய ஆத்மா, இந்த உடலிலே உறைந்திருப்பினும் இந்தப் பிரகிருதி குண கர்மங்களில் தோயாத தன்மை வாய்ந்த பரமாகவே உள்ளது. எக்கருமங்களிலும், தான் தன் சம்பந்தமில்லாமல் செய்யப்படும் கருமங்களின் குண தோஷங்களை எதிர் நின்று பார்த்திருக்கும் அன்னியனைப் போன்றது அது. தேகாதிகளின் பிரகிருதி சேஷ்டைகளில் தான் தோய்தலின்றி, அறிவே சொரூபமாக இருத்தலின் தனக்கு யாதோர் ஆக்ஷேபமுமின்றி அனுமதி அளித்துப் பார்த்திருக்கும் சாட்சியாக உள்ளது அது.

பொய்யாகிய மயக்க அறிவுக்கு, (சர்ப்ப பிராந்தி—கயிற்றரவு) கயிறு காரணமாகி நிற்றல் போல, தன் சொரூப ஞானத்தினால் பொய்யாக்கப்பட்ட உடல், பொறி அந்தக்கரணங்களுக்குக் காரணமாய் அவை தோன்றுவதற்கு ஆதாரமாகித் தாங்கி நிற்பதும் அதுவாகிறது.

அறியாமையால் உண்டாகித் தோன்றும் "நான் அனுபவித்தேன்" என்னும் அகங்கார அறிவும், விஷய அனுபவங்களும் சுக துக்கங்களும் வேறுபடுதலுக்குத் தானே காரணமாகி உள்ளும் புறமும் வியாபித்து நிற்றலின் அனுபவிப்பதும் அதுவாகிறது.

---

* (கீதையிலே தன்னையறிந்த க்ஷேத்திரக்ஞனுக்கும், இறைவனுக்கும் வேறுபாடு ஏதும் சொல்லப்படவில்லை) **Dr. Sir. S.R.**

*அனைத்துப் பொறி புலன்களையும் தான் நின்று உணர்த்தி இயங்கச் செய்யும் இயவுள் ஆக இருத்தலின் மகேசுவரன் எனவும், தன்னை உணர்ந்த மேலான ஆத்மா ஆதலினாலே பரமாத்மா எனவும் அழைக்கப்படுகிறது "அது".*

*இச் சுலோகத்தில் (இங்கே) சொல்லப்பட்டுள்ள பரமாத்மா என்பது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அந்தக் கரணங்கள் பிரகிருதியின் தொடர்பால், பொறி புலன்களால், ஆளப்பட்டுப் பின் தன்னுடைய அப்பியாசத்தால் தன்னுணர்வு நிலையிலிருந்து விலகித் தன்னை அறியும் தன்மையால் மேலுயர்ந்ததுள்ள அழிவற்ற (ஜீவ) ஆத்மாவிற்கு முற்றிலும் வேறானது.*

**இங்ஙனமாகப் புருஷனையும் (ஜீவன்) (சுகதுக்க மோகாதிகளோடு) குணங்களுடன் கூடிய பிரகிருதியையும் எவன் அறிகிறானோ, அவன் எவ்விதம் வாழ்பவனாயினும் அவனுக்கு இவ்வுலகிலே மறுபிறவி என்பதில்லை.** XIII (23)

*முன்சொன்ன சுபாவங்களை உடைய, ஜீவாத்மாவையும், மேற்கூறிய தன்மைகளை உடைய பிரகிருதியையும், இனிச் சொல்லப் போகிற தன்மைகளைப் பெற்றுள்ள சத்துவம், ரஜஸ், தமோகுணங்களையும் எவன் நன்கு உணர்கிறானோ, அதாவது உள்ளபடி பகுத்தறிவினால் அறிகின்றானோ, அவன் எப்படிப்பட்ட நிலையில் எப்படிப்பட்ட தேகத்தோடு பிறந்து, எந்தெந்த சூழ்நிலையில் வாழ்ந்து வந்த போதிலும், மறுபடியும் பிரகிருதியோடு சேரும் தன்மை அற்றவன். அவனுக்கு மறுபிறவி என்பது கிடையாதாம். எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும், அவன் மனம் மோனத்திலேயே நிலைத்திருக்கும். ஏனெனில் அவன் பிரகிருதியையும் (மாயையையும்), ஜீவனையும் அவற்றின் முக்கிய பேதங்களையும் நன்கு உணர்ந்தவன் அவான். பிரகிருதியின் விகாரங்களால் அவன் சலனம் அடைவதில்லை. பிராரத்துவ கர்மம் அவனைக் கட்டுப்*

படுத்துதல் இல்லை. இந்த உலகம் வெறும் மாயை, கானல் நீர் எனக் கருதுவதால் அவன் இதைப் புறக்கணிக்கிறான்.

**இந்தத் ஆத்மாவைத் தம்முடைய தியான யோகத்தினால் தெளிவடைந்த அறிவோடு சிலர் தம் உள்ளத்திலே காண்கின்றனர். வேறு சிலர் ஞான யோகத்தினாலும் கர்ம யோகத்தினாலும் காண்கின்றனர்.** XIII (24)

*இங்கே தியான யோகம் என்று சொல்லப்பட்டிருப்பது இராஜ யோகத்தையே. இந்த ராஜ யோகமே அன்றி ஞான யோகத்தினாலும் கர்ம யோகத்தினாலும், தம் ஆத்மாவை, ஆத்மாவினாலே, ஆத்மாவினுள்ளே காண்கின்றனர் சிலர்.*

*இந்தச் சுலோகத்தின் மூலம், ஆத்ம ஞானத்தை அடைவதற்கான, கர்ம யோகம், இராஜ யோகம், ஞான யோகம் எனும் வழிகள் சொல்லப்படுகின்றன. இதில் மூன்றாவது ஞானத்தைப் பற்றி இதில் மட்டுமே கூறப்பட்டுள்ளது. அடுத்துவரும் சுலோகத்திலே பக்தி யோகத்தைப் பற்றிக் கூறப்படுகிறது.*

**மற்றும் சிலரோ, இவ்வாறு மேற்கூறிய மூன்று ஞானங்களைப் பற்றி அறியாதவர்களாயினும், பிறரிடமிருந்து என் மகிமையைக் கேட்டு என்னை வழிபடுகின்றனர். (பக்தி செலுத்துகின்றனர்) அவர்கள் தாம் கேட்ட உபதேசமே கதி எனக் கொண்டு, பக்தி வழியே ஒழுகி மரணத்தை நிச்சயமாகக் கடக்கின்றனர்.** XIII (25)

*மற்றும் சிலர் என இங்கு குறிப்பிடப்பட்டுள்ளவர்கள் இராஜ (தியான) ஞான, கர்ம யோகங்களைப் பற்றிய உண்மையை உள்ளபடி உணராதவர்கள். அவர்கள் தம் கூடும் சத்சங்கத்தின் மூலம், இறைவனைப் பற்றியும் அவன் வழிபாடு பற்றியும், அறிந்து பக்தி செலுத்திப் பிறவிப் பெருங் கடலைக் கடக்கின்றனர். அவர்கள், பக்தி யோகத்தினாலே தம் இதயத்திலே அவனை எழுந்தருளப் பண்ணி, அவனையே நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, உள்ளம் நெகிழ்ந்து நெகிழ்ந்து அவனிடமே அன்பு நிறைந்து நிறைந்து கண்களில்*

நீர் வழிய வழிபட்டு ஆராதிக்கின்றனர். இந்த வழி, பக்தி வழி. யாவரும் கைக்கொள்ளக் கூடிய எளிய வழி. இதற்குச் சாத்திர ஞானம், அளவை நூல் அறிவு, வேத கர்ம காண்ட விதிமுறைகள், அல்லது அஷ்டாங்க யோக முறைகள், எனும் பலப்பல அறிவு நூற் கல்விகளும், அதற்கான பயிற்சிகளும் தேவை இல்லை.

இந்த இரண்டு சுலோகங்களிலே நான்கு வகைப்பட்ட யோகங்கள் சொல்லப்படுகின்றன, இவை யாவும் கீதையிலே முன்னமேயே விளக்கப்பட்டுள்ளன. கரும யோகம் ஒருவனுக்கு ஆற்றல் அளிக்கிறது. இராஜ யோகம் ஒருவனுக்கு உள்ளத்திண்மையைத் தருகிறது. பக்தி ஒருவன் அன்பைப் பெருக்குகிறது. ஞானம் ஒருவன் அறிவை வளர்க்கின்றது. இவைகளில் எந்தவித ஏற்றத் தாழ்ச்சியுமில்லை.

''அன்பைப் பெருக்கி என் ஆருயிரைக் காக்கவல்ல
இன்பப் பெருக்கே''

என்கிறார் தாயுமானார்.

**பரதகுலத் தலைவா! உலகிலே தோன்றியுள்ள தாவரமோ, சங்கமமோ, அதாவது ஓரறிவுடைய உயிர்முதல் அனைத்துயிர்களும், எல்லாப் பொருள்களும், க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ சேர்க்கையினால் உண்டானவைகளே என்பதை அறிக. (க்ஷேத்திரம்—க்ஷேத்திரக்ஞன்) சேர்ந்தால் மட்டுமே உண்டாகும், அன்றிப் பிரிந்திருந்தால் உண்டாக மாட்டதென வும் அறிக.** XIII (26)

உலகப் பொருள்கள் அனைத்தும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞக் கூட்டுறவால் உண்டானவைகளே. மின்சக்தி (Electricity) நேர்மின் (Positive) ஆற்றலும் (Negative) எதிர்மின் ஆற்றலும் சந்திக்கும் போது மட்டுமே உண்டாவதைப் போல, உலகப் பொருள்கள் (உயிர்கள் அனைத்தும்) புருஷன், ப்ரகிருதி ஆம் இரண்டின் கூட்டுறவால் மட்டுமே உண்டாகும் என்க.

ஆத்மாவுக்கு அறியும் தன்மை உண்டு. ஆத்மாவுக்குப் பிறப்புமில்லை இறப்புமில்லை என்று முன்னரே கூறப் பட்டுள்ளது. உண்டாவது ஆத்மா அன்று. அதாவது க்ஷேத்திரக்ஞன் அன்று. உண்டாகும் எது ஒன்றும் அழியும். ஆனால் ஆத்மா அழியும் பொருள் அன்று. க்ஷேத்திரக்ஞன் க்ஷேத்திரத்தினது சேர்க்கையால் உடலைப் பெறுகிறது. பெற்று உடலில் இயங்குகின்றது. தன் பூர்வ கர்ம வினைப்பயனை அனுபவிக்கிறது. பிறகு உடலை விட்டு ஆத்மா விலகிப் போகின்றது. க்ஷேத்திரமாகிய பிரகிருதி (உடலுக்கும் இந்திரியங்களுக்கும் காரணமான பிரகிருதி) இயற்கையோடு இயற்கையாக ஒடுங்கிவிடுகிறது. இவ் வகையில், மேற்கூறிய இரண்டும் இணைவதால் உயிர் உண்டாவதில்லை. உடலுள் உயிர் ஒன்றி உயிரியக்கம் ஏற்படுகிறது. ஆனால் (மித்தியா ஞானம்) அறியாமை உடையவன், இந்தப்பிறப்பும், இறப்பும் ஆத்மாவிலே — உயிரிலே உண்டாவதாகத்தான் உணர்கிறான். இந்த உடல், உயிர் மட்டுமல்ல, இந்த உலகமும் உண்டாவது, நிலைத்திருப்பது, ஒடுங்குவது அனைத்தும் இவ்வண்ணமே என்பதை ஒரு ஞானி நன்கறிவான்.

உடலியக்கத்தை எல்லாம் உயிர் இயக்கம் எனக் கொண்டு, நான் செய்கிறேன், நான் நினைக்கிறேன் நான் சாப்பிடுகிறேன் எனக்கருதுவது, அத்தியாசம் என்னும் வேறு பாட்டுக் குழப்பம். இது நீங்கினால் பற்று அறும். பற்று அற்றால் வீடு பேறு சித்திக்கும்.

**அனைத்து உயிர்களிடத்திலும் சமமாக இருக்கின்றவனை அழிவனவற்றுள்ளே எக்காலும் அழியாதவனாக உள்ளவனான பரமேஸ்வரனை எவன் உள்ளபடி உணாகின்றானோ அவனே உண்மையில் உணர்ந்தவன் (மெய்யறிவு வாய்ந்த ஞானி) எனப்படுகிறான்.** XIII (27)

"உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

என்கிறார் திருமூலர்.

மேலும்,

"உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம் விட்டோ ரடி நீங்கா ஒருவனை"

என்றும் கூறுகிறார் திருமூலர். இவ்வகையிலே பரப்பிரம்மம் அனைத்து உயிர்களிடத்திலும் சமமாக இருக்கிறான்.

மலரிலே மணத்தைப் போல, எள்ளிலே எண்ணெயைப் போல, அனைத்துயிர்கள் உடலிலும் உயிராக விளங்குகிறான் அவன்.

மக்கள் அனைவரும் பிறந்து வாழ்ந்து இறப்பவர்களே. மக்கள் மட்டுமல்ல, எல்லா உயிர் இனங்களும் அப்படிப் பட்டனவே.

"பிறந்தன இறக்கும்; இறந்தன பிறக்கும்
தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்"

"பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்"

என்னும் பட்டினத்தடிகள் வாக்குப்படி இந்த உலகிலே உள்ளனவாவும் இறக்கும், பின் பிறக்கும்; தோன்றும், பின் மறையும். இதுதான் பிறப்பிறப்பென்னும் சுழற்சி. இது மட்டுமா?

இவ்வுலகிலே எப்பொருளும் மாறிக் கொண்டே உள்ளன. மாறுதலுக்குட்படாத எப்பொருளும் இவ்வுலகில் இல்லை. குழந்தை வளர்ந்து இளைஞன் ஆகிறான். நடுத்தர வயதுள்ளவனாகிறான், வயோதிகன் ஆகிறான், இதுவே வளர்ச்சியும் தேய்வும் தாவர சங்கமம் அனைத்தும் இப்படியே வளர்ந்து வளர்ந்து பின் தேய்ந்து தேய்ந்து பின் அழியும். அதனால்தான் பட்டினத்தடிகள் பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும் என்கிறார். இதைத்தான் பௌத்தர்கள் "கணபங்கம்" என்கின்றனர். கணபங்கம் என்றால் க்ஷணம் தோறும் மாறுதலுக்குட்படுவது என்பதாம்.

இப்படி மாறுதலுக்குட்பட்டு அழியும் தன்மை வாய்ந்தது தான் உடல். தாவர சங்கமக் கூட்டத்தின் அனைத்துப் பருப்பொருள்களும் இத்தன்மையவே. ஆனால் உடம்புளே உள்ள, உள்ளத்தொருவன், உள்ளுறு சோதி, ஆகிய பரமன், அழிவற்றவன். அப்படியே இந்த உடலிலே உள்ள ஆத்மாவும் அழிவற்றது. பதியைப்போன்று பசுவும் (ஆத்மாவும்) அனாதி மூத்த சித்துருவே.

''என்று நீ, அன்று நான் உள்ளபடி அல்லவோ''

என்கிறார் தாயுமானார்.

இந்த உண்மைகளை எல்லாம் உள்ளபடி உணர்ந்தவனே ஞானி. உணராதவன், பேதை; அஞ்ஞானி ஆவான்.

**உண்மையிலேயே எங்கும் ஒப்பச் சமமாக நிலைத்துள்ள பரமேஸ்வரனை உள்ளபடி உணர்ந்தவன் தன்னைத்தானே அழித்துக் கொள்ளுவதில்லை. (அதாவது தன் ஆத்மாவை நாசம் செய்துக் கொள்ளுகிறதில்லை) எனவே அவன் பரகதியை அடைகிறான்.** XIII (28).

பானையைப் பார்க்கும் போது அது களிமண்ணால் ஆனது என்பதை நாம் நினைப்பதில்லை, பானையிலே களிமண்ணைக் காண்பது போல, நாம் ஒவ்வொன்றிலும் மூல காரணமாகவும் சமமாகவும், அழிவற்றவனாகவும் உள்ள ஆத்மாவாகிய தன்னைக் காண்பவன், தன்னால் தன்னைத் துன்பப்படுத்திக் கொள்ளுதலை மேற்கொள்ளுகிறதில்லை. தான் உடலல்ல, ஆத்மா என்று அறிந்த அவனே, தன் உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் என்றுபதையும் தன் உள்ளத்துள்ளே, ஆத்மாவின் ஆத்மாவாகப்பரப்பிரம்மம் உள்ளது என்பதையும், உணர்கின்ற காரணத்தினால் அவன் வீடு பேறடைகிறான். பிரம்ம நிர்வாணத்தை அடைகிறான்.

**பிரகிருதியாலேயே அனைத்துக் கருமங்களும் செய்யப் படுகின்றன என்றும் ஆத்மாவோ செயலற்றது என்றும் யார் உள்ளபடி உணர்கின்றானோ அவனே காண்போன் ஆவான். (காண்பவன்—ஞான திருஷ்டி உடையவன்)** XIII (29).

உடல், மனம், புலன்கள் (தேகேந்திரியாதி) சொருபமாக இருக்கின்ற பிரகிருதியாலேயே எல்லா விதமான கருமங்களும் செய்யப்படுகின்றன. அவ்வாறே, செய்யப்படும் எந்த ஒரு கருமத்துக்கும் தான் கர்த்தா அல்லன், ஏனென்றால் ஆத்மா க்ஷேத்திரக்ஞனை உள்ளபடியே அறிந்தவனாகிறான்.

உண்மையாகவே ஆத்மா எந்த ஒரு செயலும் செய்வதில்லை. அது வெறும் சாட்சியே. அது தானே நடிப்பதில்லை. நடிப்பதைக் காணும் அருவ வஸ்து அது.

உடல், மனம், புலன்களால் (தேகேந்திரியங்களால்) செய்யப்படும் செயல்கள் யாவும், "நானே செய்தேன் அதற்குக் கர்த்தா நானே" என எண்ணுகிறான், இந்த உடலையே தானாகக் கருதும் ஒருவன். ஆனால் ஆத்மஞானியோ எச்செயலுக்கும் தான் கர்த்தா அல்லன் என்பதை உணர்கிறான்.

என் செயல் இன்றி யாவும் நின் செயல் என்று
எண்ணுவேன் ஒவ்வொரு காலம்

—இது ஞானி.

புன் செயல் மாயை மயக்கின் என்செயலாய்
பொருந்துவேன் அஃது ஒரு காலம்."

—இது அஞ்ஞானி என்கிறார் தாயுமானார். தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகள், என் செயலால் ஆவது யாதொன்றுமில்லை என்றுதெளிந்தவர்கள். பிரகிருதியாகிய மயக்கத்தால் தான் "என்செயல் இது; இதற்கு நானே கர்த்தா"எனும் எண்ணம் தனக்கு உண்டாகிறது என்பதை உணர்வார்கள். இவ்வகையில், க்ஷேத்திரத்தின் தன்மையை அறிந்தவர்கள் க்ஷேத்திரக்ஞனை உள்ளபடியேஉணர்வார்கள் என்க.

உலகத்தின் சிருட்டி பேதங்கள்—தனித்தனியாக தத்தம் தனித்தன்மையோடு வாழும் பல்வகைப்பட்ட உயிரினங்கள்—

**யாவுமே அந்த ஒரே பொருளிலிருந்தே விரிவடைகின்றன என்பதையும் காணும் ஒருவன் பிரம்மமாகிறான். XIII (30)**

*இயற்கையின் விசித்திரமாகிய சிருஷ்டி பேதங்களையும் அவைகளின் விரிவு ஒடுக்கங்களையும் கூர்ந்து கவனித்து, அவை நித்திய வஸ்துவிலிருந்தே கிளைத்தெழுந்து ஒடுங்கு வதைக் கவனிப்பவன், பரிபூரண நித்தியத்துவத்தையே அடைகிறான்.*

*''பிரகிருதி என்றும், புருஷன் என்றும் இரண்டு தத்துவங் களில், பிறவி வேறுபாடுகளும், குறுகி இருத்தல், நீண்டு இருத்தல் முதலிய வேறுபாடுகளும், பிரகிருதி என்னும் தத்துவத்திலேதான் இருக்கிறதென்றும், அப்படியே அந்தப் பிரகிருதியிலிருந்தே புத்திரன், பௌத்திரன் முதலிய விஸ்தாரமும் உண்டாகின்றது என்றும், எப்பொழுது ஒருவன் உண்மையைக் கண்டறிகிறானோ அப்பொழுதுதான் அளவற்ற ஞானமே வடிவான பரம ஆத்மாவை அடை கிறான்,'' என்பது ஸ்ரீ ராமானுஜர் கருத்தாகும்.*

*ஆனால் ஸ்ரீ சங்கரர் இதற்கு வேறு விதமாகப் பொருள் கொள்ளுகிறார்.*

*''ஒரே கடல், அதனிடையே அலை என்றும் நுரை என்றும் திவலை என்றும் பலப்பல வடிவங்கள் தோன்று கின்றன. அவை திரும்பவும் அக்கடல் நீரிலேயே ஒடுங்கி விடுகின்றன. கடலே, தன் சக்தியால் பலப்பல வடிவெடுக் கிறது. அதைப் போலவே மாயையும் (பிரகிருதியும்) தன் வல்லமையால் பல வகை வடிவெடுத்துத் திரும்பவும் அம்மாயையிலேயே ஒடுங்கி விடுகின்றது. அந்த மாயா சக்தியோ பரப்பிரம்மத்திற்குச் சற்றும் அன்னியமானதல்ல. இதைச் சுவானுபூதியில் அறிய வல்லவர்களே பிரம்மமா கின்றனர்'' என்பது ஸ்ரீ சங்கரர் கருத்தாகும்.*

**குந்தி மைந்தனே! ஆதி இல்லாததாயும் (அநாதியாய்) குணமில்லாததாயும் உள்ளதால், இந்த பரமாத்மாவுக்குக்**

**கேடென்பதே கிடையாது. இத்தன்மைத்தான பரமாத்மா இவ்வுடலிலே இருப்பினும் செயலற்றது. கரும பலனால் பாதிக்கப்படாதது. XIII (31)**

*பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஆதி இல்லாதவை. எனவே அந்தம் என்பதே அவைகட்குக் கிடையாது. முக் குணங்களால் ஆத்மா, பாதிக்கப்படுவதில்லை.*

*குணங்களால் பாதிக்கப் படுவனவே கேடெய்தும். ஆத்மா முக்குணங்களால் பாதிக்கப்படுவதில்லை; எனவே கேடென்பதே அதற்குக் கிடையாது. பிரகிருதியின் சத்துவம் முதலிய முக்குணங்களால் ஆத்மா பற்றப்படுவதில்லை. ஆகையினால் உடல் மனமாதி கருமங்களால் அது மாசு அடைவதில்லை.*

*இவ்வகையில் பரமாத்மா அநாதியாய், அழிவற்றதாய் முக்குணங்களால், பாதிக்கப் படாததாய் இருத்தலின், அந்த ஆத்மா உடலைச் சார்ந்துள்ளதாயினும், தேகேந்திரியங்கள் உலகியலிலே ஈடுபட்டு, கருமங்கள் ஆற்றும் போதும், அது கருமங்களைச் செய்வதில்லை. கரும பலன்கள் அதைப் பற்றுவதுமில்லை.*

*எப்படி இந்தப் பரமாத்மா, செயலற்றுப் பற்றற்று உள்ளது என்பதை அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார் கண்ணன்.*

**உலகனைத்தையும் (எங்கும்) வியாபித்துள்ள விண்வெளி (ஆகாயம்) மிக நுண்ணியதாக இருக்கின்ற காரணத்தால் எப்படிக் களங்கம் அடைவதில்லையோ அப்படியே, மிக மிக நுட்பமாக உடலெங்கும் நிறைந்திருக்கும் ஆத்மாவும் களங்க மடைவதில்லை. XIII (32)**

*பிருதிவியை (மண்—நிலம்) விட, நீர் நெகிழ்ச்சியும் நுட்பமுமானது. திண்மை குறைவானது. நீரைவிட நெருப்பு நுட்பமானது, நெருப்பைவிட காற்று நுட்பமானது. இவை அனைத்திலும் நுட்பமானது ஆகாயம். ஆகாயம் எங்கும்*

வியாபித்துள்ளது. அது ஒன்றே பிற நான்கு பூதங்களும் உலாவ இடமளிப்பது. பிற நான்கு பூதங்களும் களங்கம் அடையலாம். ஆனால் ஆகாயம் களங்கம் அடைவதில்லை.

ஆயினும் களங்கமே அடையாத ஆகாயம் களங்கமடைந்துள்ளதைப் போல நம் கண்களுக்குப் புலப்படுகிறது. பகலிலேயும் இரவிலேயும் வானவெளியிலே மிதந்து செல்லும் மேகங்கள் சிற்சில நேரங்களில் விண்வெளியை மறைத்து விடுகின்றன. சிற்சில நேரங்களில் திட்டு திட்டாக வெண்மையாகவும், கருமையாகவும் ஊர்ந்து செல்லும் மேகங்கள் ஆகாயத்தையே அழுக்காக்கி விட்டதைப் போல நமக்குத் தென்படுகின்றன. பகலிலே சூரியனும், இரவிலே சந்திரனும், விண்மீன்களும், நிர்மலமான ஆகாயமாயினும்; தாம் தம் இயக்கத்தினால், ஆகாயத்தை ஒளிமயமாக, இருளாக மாற்றி விடுகின்றன. ஆனால் இவைகளால் ஆகாயம் சிறிதும் கறைபடிவதில்லை.

ஆகாயத்தை ஒப்பவே ஆத்மாவும் (சூக்ஷமமானது) மிக மிக நுண்ணியது. எங்கும் பரந்துள்ள ஆகாயத்தைப்போலவே ஆன்மாவும் எங்கும், உடல்கள் எங்கும் பரவி நிலவுகின்றது. ஆகாயம் எப்படிப் பிற நான்கு பூதங்களாலும் (அவை தன்னிலே தான் இயங்கி வந்தாலும்) கறைபடுவதில்லையே. ஆகாயம் எப்படி தன்னிடையே இயங்கும் மேகங்கள், சூரியன், சந்திரன், விண்மீன், புகை இளைகளால் கறைபடிவதில்லையோ, அதைப் போலவே இந்த உடம்புள்ளே பொருந்தியுள்ள ஆத்மாவும், உடல், மனம் முதலிய கரணங்கள், ஐம்பொறிகள் முதலியவற்றின் இயக்கத்தினால் கருமங்களால் கறைபடிவதில்லை. ஆத்மா தனித்து, இவைகளுடன் ஒட்டாமல் இருக்கும்.

**அர்ஜுனா! எவ்வண்ணமாக ஒரே சூரியன் இந்த அகில உலகத்தையும் ஒளியுறச் செய்கின்றதோ அவ்வண்ணமே இந்த க்ஷேத்திரத்தில் (களத்தில், நிலத்தில், உடம்பில்)**

உறைகின்ற ஆத்மாவே (க்ஷேத்திரக்ஞனே) க்ஷேத்திர முழுமையும், பிரபஞ்சம் அனைத்தையும் பிரகாசமடைவிக்கிறது.
XIII (33)

ஒரே சூரியன் தன் ஒளியால் இந்த உலகங்கள் எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துகிறான். அதைப் போல க்ஷேத்திரியான ஜீவனும் க்ஷேத்திரமான உடலை, இது என் க்ஷேத்திரம் இது இப்படிப்பட்டது, என உள்ளும் புறமும் எங்கும், கால் முதல் தலை வரை, தன் ஞானத்தாலே ஒளி கொளுவுகிறான். சூரியன் அகில உலகத்துக்கும் வெளிச்சம் கொடுப்பதைப் போல பரமாத்மா இந்த அகிலாண்டத்துக்கும் தன் சைதன்யத்தை வழங்குகிறார் என்பது சங்கரர் கருத்தாகும்.)

இவ்விதமாக க்ஷேத்திரம் (உலகம்-உடல்) க்ஷேத்திரக்ஞன் (ஆத்மா, பரமாத்மா) இவைகளின் வேற்றுமைகளையும், ஆத்மாக்கள் பிரகிருதியிலிருந்து விடுதலை அடைதலையும் தம் ஞானக்கண்ணால் யார் அறிகின்றார்களோ அவர்கள் பரத்தை (பிரம்மத்தை) அடைகின்றனர்.
XIII (34)

க்ஷேத்திரம் என்பது இருப்பிடம். ஆன்மாவின் இருப்பிடமான உடலையும் பரமாத்மாவின் இருப்பிடமான உலகையும் க்ஷேத்திரம் என்பது உணர்த்தும். அங்ஙனம் இந்த உடலாகிய க்ஷேத்திரத்தை உள்ளபடி அறிகின்ற ஆத்மாவையும் க்ஷேத்திரக்ஞன் என்பது உணர்த்தும்.

இவைகளையே பிரகிருதி என்றும் புருஷன் என்றும் கூறப்படும் என்பது முன்னர் கூறப்பட்டது.

இதில் பிரகிருதி என்பது மாயை, மாயையின் கூறு இந்த உடல் என்பதையும், புருஷன் என்பது பரமாத்மா, பரமாத்மாவின் கூறு இந்த ஆத்மா, என்பதையும், அதாவது இவை இரண்டினது வேறுபாடுகளையும் நன்கு உணர வேண்டும்.

பிரகிருதி என்னும் மாயை புருஷன் என்னும் பரமாத்மாவைச் சார்ந்துள்ளது. ஆனால் புருஷன் பிரகிருதியைச்

சார்ந்திருப்பதில்லை. ஆயினும் பிரகிருதி (மாயை) புருஷ பரமாத்மாவுக்கு அன்னியமானதல்ல.

ஆத்மாவுக்கு தேவை விடுதலை—அதாவது மோக்ஷம். இதையடைய ஆத்மா பிரகிருதியிலிருந்து விடுபடவேண்டும். மாயையிலிருந்து (மித்தையிலிருந்து) விடுபடுதலே மோட்சம். இவை அனைத்தும் நன்குணர நமக்குத் தேவை ஞானக்கண். ஞானக் கண்ணை நாம் அடைய நம் ஊனக்கண்ணினால் உணரும் மாயத் தோற்றங்களை அகற்றிவிடக் கற்றுக் கொள்ள வேண்டும்.

> "ஊனக்கண் பாசம் உணராப் பதியை
> ஞானக்கண்ணிற் சிந்தை நாடி
> உணராத்துணைத் தேர்ந்தெனப் பாசம் ஒருவ"

என்கிறது சிவஞான போதம்.

நமது ஊனக்கண்ணினால் நாம் பரமாத்மாவைக் காண இயலாது. அதன் மூலம் நாம் காணக்கூடியது பாசத்தையே. பாசத்தால் பொருள்களை விஷய ஞானத்தையே நாம் நம் ஊனக்கண்ணால் காண்கிறோம். எனவே அதை விடுத்து, நாம் நம் ஞானக் கண்ணால் பரம்பொருளை நாடவேண்டும்; சிந்தையால் நாட வேண்டும். இவ்விதமாக ஞானக் கண் கொண்டு சிந்தையால் நாம் நாட—அறியக் கற்றுக் கொண்டோமானால் நாம் விடுதலை அடைவது நிச்சயம். பிரம்மத்தை—பரத்தை நாம் அடைய அது ஒன்றே வழி.

ஞானக் கண்ணை நாம் பெற்று விட்டால் பாசம் உலகம் என்பது எல்லாம் வெறும் கானல் நீர், பேய்த்தேர் என்பதை அறிகிறோம். ஆத்மாக்கள் பிரகிருதியில் (மாயையிலே) கட்டுண்டு கிடப்பதெல்லாம் வெறும் மித்தை—இதற்குக் காரணம் அஞ்ஞானம் என்பது, ஞானக்கண் நமக்குக் கற்றுத் தரும் பாடமாகும். எனவே ஊனக்கண் பாசம் நீங்க ஞானக் கண்ணை நாம் பெற்று, பாசம் விலக லௌகீக இன்பங்கள் அனைத்தும் பேய்த்தேர், கானல்நீர் என்று கண்டு பிரம்ம சைதன்ய (அபரோட்ச அனுபூதியை) அடைதல் வேண்டும்.

---

அத்தியாயம்—14

# குணத்திரய விபாகயோகம்

## முக்குணங்களின் விசாரணை விளக்கம்

*சென்ற அத்தியாயத்திலே, ஒன்றோடொன்று கலந்த பிரகிருதி—புருஷன் ஆகிய இருவரின் சுவரூபத்தின் உண்மையை அறிந்து, பரப்பிரம்மத்தின் பக்தியால் ஆத்மா பந்தத்தினின்று விடுபடுகிறது என்று சொல்லப்பட்டது.*

*அந்த அத்தியாயத்திலேயே பந்தத்துக்குக் காரணம் பூர்விகமான சத்துவ முதலிய குண விகாரமான, சுக துக்கங்களால் உண்டாகும் பற்று என்றும் விளக்கப்பட்டது.*

*இந்த அத்தியாயத்திலே, குணங்கள் பந்தத்திற்கு உறுப்பாகும் தன்மையும், அக்குணங்களை நீக்கிவிடும் முறையும் கூறப்படுகின்றன.*

*கண்ணன் கூறுகிறார்:*

**முனிவர்கள் அனைவரும் எதனை அறிந்ததனால் இவ்வுடல் வாழ்க்கைக்குப் பின்னர் மேலான சித்தியாம் வீடு பேற்றினை அடைந்தார்களோ அந்த ஞானங்களுள் சிறந்த ஞானத்தைப்-பரம்பொருளைப் பற்றிய அந்த ஞானத்தை-நான் மீண்டும் உனக்குச் சொல்லுகிறேன்.** XIV (1)

ஞானத்தைப் பற்றி முன்னமே உரைக்கப்பட்டு விட்டது. ஆனால் இந்த ஞானமோ வேறொரு கோணத்திலிருந்து உணர்த்தப்படும் உயரிய ஞானமாகும். இது முன் கூறிய ஞானத்திற்கு மாறுபட்டது, வேறானது. இந்த ஞானம்

பிரகிருதிக்கும், ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பினை விளக்குகிறது.

சென்ற அத்தியாயம் 21ஆம் சுலோகத்திலே, "புருஷன் பிரகிருதியில் நிலைத்து பிரகிருதியைத் துய்க்கின்றான். அவன் நலம் கேடு உடைய பிறவியில் பிறப்பதற்கு அவனிடம் உள்ள குணப்பற்றே காரணம்" என்றார் கண்ணன்.

சத்துவம் முதலிய முக்குண வேறுபாடுகளால் மனமழிந்து செயலாற்றும் ஜீவன், தன் குண பேதங்களால் யோனிபேத மெய்துகிறான். ஆனால் தேக இந்திரிய அந்தக் கரணங்களின் குணபேதத்தினால் ஈர்க்கப்பட்டு உடல்ஆற்றும் செயல்கள், ஆத்மாவை பந்தப்படுத்துவதில்லை. அது உடல் குற்றமே ஒழிய புருஷனது குற்றமன்று. இதைத் தெளிந்த ஞானிகள் இப்போது நான் சொல்லப் போகும் ஞானத்தினை நன்கு உணர்ந்திருந்த காரணத்தினால் தம் உடலைத் துறந்த பின்னர் வீடு பேற்றினை அடைந்தார்கள். அந்த வேறுவகைப் பட்ட ஞானமே இங்கு விளக்கப்படுகிறது.

இந்த ஞானத்தைக் கடைப்பிடித்து என்னுடைய குணநலன்களை முற்றும் அடைந்தவர்கள். சிருட்டி காலத்தில் பிறப்பதுமில்லை. பிரளய காலத்தில் துன்புறுவது மில்லை.

XIV (2)

வீடுபேறு அதாவது துறக்க வாழ்வு என்பது ஒருவனின் ஆத்மா எல்லையற்ற தனி முதலாம் பரப்பிரம்மத்தோடு கரைந்து ஒன்றாகி விடுவதல்ல. அது ஆத்மா விடுதலையடைதலே. அதாவது பந்தநீக்கமே. (அற்றது பற்றெனில் உற்றது வீடு.)

ஆத்மா, தன்னுடைய அனுபவத்தால் அறிகின்ற தன்மையாம் இயக்கத்திலிருந்து மேலெழுப்பப்பட்டு அகண்டமான தன்மை எய்துவதுதான் வீடுபேறாகும்.

படைப்பாலும், பிரளயத்தாலும் (சங்காரத்தாலும்) சுழன்று சுழன்று வரும் பிறப்பிறப்பாம் சக்கரம். மேற்கூறப்

பட்ட அத்தகைய ஆத்மாவைச் சென்று அடைவதில்லை. பிறப்பிறப்பாம் சம்சார சாகரத்தில் இருந்து அது விடுபட்டு விடுகிறது. எவ்வகைப்பட்ட பிரத்தியக்ஷயங்களுக்கும் அது அப்பாற்பட்டது.

இந்த ஞான முதிர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்ட அந்த ஆத்மா, தெய்விகத் தன்மை சிறிது சிறிதாக அடையப்பட்டு, பின் என்றும் மாறாத இறைத் தன்மையை எய்தி விடுகிறது. எனவே, இந்த ஞானத்தால் என்னுடைய குணநலன்களை எய்தியவர்கள் சிருட்டியில் பிறப்பதுமில்லை, பிரளயத்தில் துன்புறுவதுமில்லை.

ஞான முதிர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்ட ஆத்மா என்பதையே சித்தாந்த சாத்திரம் சத்திநிபாதம் என அழைக்கிறது. (அதாவது இறையருள் சக்தி சிறிது சிறிதாக ஆத்மாவில் பதித்தல்) இப்படிப் படிப்படியாக மாயை அகன்று விட ஆத்மா வறுத்தெடுத்த நெல்லைப்போல் மறுபடி முளை விடாத தன்மையை எய்தி விடுகிறது.

வறுத்த நெல்லை பூமியில் விதைத்தால் அது மறுபடியும் முளைக்காது. வறுக்காத நெல்தான் முளைவிடும். ஆத்மாவும் ஞானத்தினால் வறுத்து எடுக்கப்படுகிறது. எனவே அது திரும்பவும்முளைப்பதில்லை. அதாவது அதற்குப்பிறப்பிறப்பு இல்லை.

**பரதகுலத் தோன்றலே, எல்லா உலகங்களுக்கும் பிறப்பிடமாகிய மகத் பிரம்மம் எனும் பெரிய பிரகிருதியே எனது கர்ப்ப நிலை. அந்த மகத் பிரம்மத்திலே (பெரிய பிரகிருதியிலே) நான் என் விதையை (கருப்பத்தை) தரிக்கிறேன். அதிலிருந்தே சகல சராசரமும் உண்டாகின்றன.** XIV (3)

நான் என் கருப்பத்தைத் தரிக்கிறேன் என்றது போகஸ்தானமாகிய அசேதனப் பிரகிருதியோடு போக்தாக்களின் தொகையாகிய சேதனப் பிரகிருதியைக் கூட்டுகிறேன் என்றவாறாயிற்று.

இங்கு அசேதனப் பிரகிருதி என்பது பிரிதிவி, அப்பு தேயு வாயு, ஆகாயம் (நிலம், நீர், தீ, வளி, வெளி) மனம், புத்தி, அகங்காரம் எனப் பகுக்கப்பட்டுள்ள பிரகிருதியையே. இந்த எட்டு வகைப்பட்டவற்றையே மகத்பிரகிருதி என்கிறது சுலோகம்.

சேதனப் பிரகிருதி என்பது முற்கூறப்பட்ட அந்த பிரகிருதியில் இருந்து வேறுபட்டது. ஏழாம் அத்தியாயம் 4, 5 சுலோகங்கள் வருமாறு :

நிலம்; நீர், நெருப்பு, காற்று, வானம், மனம், புத்தி, அகங்காரம் இப்படி எட்டு விதமாக என் பிரகிருதி பிரிவு பட்டு உள்ளது. VII (4)

இதுவோ என்னுடைய கீழான பிரகிருதி. இதனின்று வேறாவதும் உயிர் ஆவதும் ஆன என்னுடைய மேலான பிரகிருதியை அறிக. இந்த உலகம் இதனால் தாங்கப்படுகிறது. VII (5)

மேற்சொன்ன ஏழாம் அத்தியாயம், 4, 5 சுலோகங்களால் கீழான பிரகிருதி (அசேதனப் பிரகிருதி) என்றும் மேலான பிரகிருதி (சேதனப் பிரகிருதி) என்றும் பகுக்கப்பட்டுள்ளவை; இறைவனின் இருவகைப்பட்ட பிரகிருதிகளே என்பதை அறிகிறோம்.

மகத் பிரம்மம் என்னும் அசேதனப் பிரகிருதியாம் கருப்பத்திலே, நான் என் சேதனப் பிரகிருதியாம் விதையை ஊன்றுகிறேன். அந்த விதைதான் பல கோடி ஜீவாத்மாக்களை உண்டுபண்ணும் தன்மை உடையது.

இந்த; என்னுடைய சங்கற்பத்தினால் இணையும் இருபிரகிருதிகளின் சேர்க்கையால்; அண்ட சராசரங்கள் அனைத்திலுமுள்ள பல கோடி ஜீவ பேதங்கள் தோன்றுகின்றன.

இயற்கையின்—அதாவது அசேதனப் பிரகிருதியின்—படைப்புகளாக மட்டுமே நாம் இருந்தால், நாம் வீடுபேற டையவே மார்க்கமில்லை.

இந்த சுலோகம், நாம் மட்டுமல்ல, எல்லாப் படைப்புக் களுமே, தெய்வீக அருட்சக்தியின் உருவெளிப்பாடே என்பதை உணர்த்துகிறது.

**குந்தி புத்திரா! எல்லா வகைப்பட்ட (எழுவகைப்படும்) பிறவி பேதங்களிலும் பிறக்கின்ற வடிவங்களுக்குப் பெரிய பிரகிருதி என முன்னர் சொன்ன அசேதனப் பிரகிருதியே தாய் ஆவாள். விதையை விதைக்கும் தந்தையே நான் ஆவேன்.** XIV (4)

"எழுவகைப் பிறவிகளுள் எப்பிறவி எய்தினும் எய்துக" என்கிறார் வள்ளலார் தேவர். மக்கள், விலங்கு, ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, தாவரம் எனப் பலவகைப்படும் பிறவிகளிலே பலப்பலவாய் வேறுபட்ட யோனி பேதங்கள் பல வகைப்படும். அப்படிப் பிறக்கின்ற அனைத்து வடிவங் களை உடைய ஜீவன்களுக்கும் பிரகிருதியே தாய், பிரம்மமே விதை ஊன்றும் தந்தை.

இந்த வகையில் அகிலத்தும் தாயானவள் பெரிய நாயகி என்னும் மூலப்பிரகிருதியே. தந்தை பரமாத்மாவே. இந்த இரண்டுமே அபின்னமானவை. வேறுபடுத்த முடியாதவை. (மற்றுமோர்முறை 7ஆம் அதிகாரம், 4, 5 சுலோகங்களைக் கவனித்து உணர்க.)

**பெருந்தோளனே! பிரகிருதியில் உண்டான சத்துவகுணம், ரஜோ குணம், தமோகுணம் என்னும் முக்குணங்கள் அழிவில்லாத ஆத்மாவை அது உறைகின்ற இந்த உடலிலே பிணிக்கின்றன.** XIV (5)

எக்காலும் அழிவில்லாத ஆத்மா, பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியில் சிக்கிக்கொள்வது போலக் காணப்படு வதற்குக் காரணம், ஆன்மா உறைகின்ற உடலைக்

குணங்கள், செயல்களாம் இவைகள் வலிமையோடு பிணிப்ப தாலேதான் என்க.

இவைகளே பிரகிருதியின் (இயற்கையின்) மூலக்கூறு களாம். அதுவுமன்றி இவைகளே எல்லா பொருள்களுக்கும் அடிப்படையாகும். முக்குணம் எனும் பண்பு பிரகிருதி சொரூபமாகிய குணியைச் சார்ந்திருக்கிறது.

குணங்கள் என்பன பிரகிருதியின் மூன்று வகைப்பட்ட தன்மைகள் அல்லது சார்நிலைகள் ஆகும். அவை இயற்கை எனும் தாம்புக் கயிற்றிலே முறுக்கி விடப்பட்டுள்ள மூன்று முறுக்கிழைகள் போன்றவை.

இனி முக்குணங்களின் தன்மைகள் ஒவ்வொன்றாக விளக்கப்படுகின்றன.

**பாபமற்றவனே! அம்முக்குணங்களுள், சத்துவ மானது, குற்றமற்றது, நிர்மலமாகப் பிரகாசிப்பது; கேடு அடைவிக்காதது. அச்சத்துவ குணம் இந்த க்ஷேத்திரக்ஞனை) ஆத்மாவைச் சுகத்தோடும் ஞானத்தோடும் பந்தப்படுத்துகிறது பிணிக்கிறது.** XIV (6)

சிறிதும் அழுக்கே இல்லாத தூய கண்ணாடியுடன் இந்த சத்துவ குணத்தை ஒப்பிடலாம். வெளியே உள்ள வெளிச் சத்தை உள்ளே புகுவிக்கவும், உள்ளே உள்ளவர்கள் விளக்க மாக வெளியே உள்ள பொருள்களைத் தாம் காண்பதற்கும் கண்ணாடி உதவுவதைப்போல, ஆத்மப் பிரகாசத்தைச் சத்துவ குணம் விளக்கும் தன்மை வாய்ந்தது.

சத்துவகுணம் புற அகக் காட்சிகளை இடர்ப்படுத்துவ தில்லை. இச்சத்துவகுணம் அழுக்கிலிருந்து அறவே நீங்கி இருப்பதால் தானே பிரகாசிக்கின்றது. இந்தப் பிரகாசம் (ஒளியாவது) ஞானத்தை அதாவது உண்மையை உணரும் ஒளியே ஆகும்.

சத்துவகுணம், "தான்" என்னும் முனைப்பை—அகங் காரத்தை நம்மிடமிருந்து ஒழிக்கவல்லதல்ல. மாறாக அது

தூய, மேலான பொருள்களின் மேல் ஆசை வைக்கக்காரண மாகிறது. எவ்விதப் பற்றும்,எப்பொருள் மேலும், வைக்காத ஆத்மாவை தன் இன்பத்துக்கும் (சுகத்துக்கும்) அறிவுக்கும், அவாவுறும்படி அது பிணிக்கிறது; அவைகளிலிருந்து நாம் விடுபட நாம், நம்மிடமுள்ள "தான்" என்னும் முனைப்பை, அடியோடு அழிக்கவில்லை என்றால், நமக்கு வீடென்பதே இல்லை; விமோசனமே இல்லை.

'சத்துவகுணம் ஞானத்தினோடு நம்மை பந்தப்படுத்து கிறது' என்கிறது சுலோகம். ஞானமாவது, புத்தியின்தொடர் பானது. பிரகிருதியின் விளைவாக்கமே அது. ஆத்மாவினது உள்ளியல்பும், பிழிவுமான, தெளிந்த மெய் உணர்வுக்கும் "தான்" என்னும் முனைப்பற்ற வெறும் ஞானத்துக்கும் உள்ள வேறுபாட்டை நாம் நன்கு பகுத்துணர வேண்டும்.

சத்துவகுணம் உண்டாக்கும் இந்தச் சுகப்பற்றும் ஞானப் பற்றும் மிகவும் வலிமை வாய்ந்தவை. இதை உடைத் தெறிய ஒருவனுக்கு மனம் வராது. ஏனெனில் இது பொன் விலங்கு போன்றது. சுகமும் ஞானமும் அடையும் ஒருவன் அதுவே தன் மோட்சம் என்று கருதிவிடுகிறான்.

**குந்தி மகனே! ரஜோ குணமானது, ஆசையே வடிவ மானது. வேட்கையையும் பற்றுதலையும் உண்டுபண்ண வல்லது என்பதை அறிக. இந்த ரஜோ குணம் வினையினது பற்றினால் உடலை உடைய ஆத்மாவைப் பிணிக்கிறது.**

XIV (7)

ரஜோ குணம் இச்சா சொரூபமானது. கிடைக்காத பொருள்கள்மேல் ஆசையையும்,கிடைத்த பொருள்கள் மேல் அபிமானமும் உண்டாக்குவது இது. கர்ம பந்தத்தால் இது தேகியைக் கட்டுப்படுத்துகிறது.

ஆண், பெண் உறவை ஏற்படுத்தும் மனோவேகமாம் ராகத்திற்கும்,சப்தாதி இந்திரிய விஷயங்களிலே உள்ளத்தைச் செலுத்தி அவைகளிலே உண்டாக்கும் ஆசையாம்.

திருஷ்ணைக்கும் புத்திர மித்ராதிகளிடம் உள்ள பற்றாம் சங்கத்திற்கும், இந்த ரஜோ குணமே உற்பத்தி நிலைக்கள னாகி இருக்கும். அவ்வாறே; உடலைச் சார்ந்துள்ள ஆத்மாவை (புருஷனை) மேற்சொன்ன ஆசைகளின் வழி, கிரியைகளில், செயற்பாடுகளில், ஆசையை உண்டு பண்ணு வித்து அவ்வழியே ஆத்மாவைக் கட்டுப்படுத்தும்.

இந்த முறையிலே ரஜோகுண விசேஷத்தின் ஆசை யினால் ஒருவன் எவ்வகைப்பட்ட செயல்களை—கருமங் களைச் செய்ய ஆரம்பிக்கிறனோ (அவைகள் புண்ணிய மாகவோ, பாவமாகவோ இருக்கும்) அக்கரும பலனை அனுபவிக்கப் பிறக்கவும், இறக்கவும் அச்செயல்கள் காரண மாகின்றன.

இவ்வகையில் ரஜோ குணமானது கர்மத்தில் பந்தத்தை உண்டுபண்ணி ஆத்மாவைக் கட்டுப்படுத்தும்.

**பரதகுலத் தோன்றலே, மற்றுத் தமோ குணமோ, அஞ்ஞானத்திலே பிறந்து, அனைத்து உயிர்களுக்கும் (ஆத்மாக் களுக்கும்) மயக்கத்தை உண்டு பண்ணுவது. அந்தத் தமோ குணமே, அனைத்து ஜீவன்களையும், அசட்டை, சோம்பல், உறக்கம், இவைகளால் பந்தப்படுத்துகிறது. XIV (8)**

அறியாமை (அஞ்ஞானம்) அறிவுக்கு (ஞானத்துக்கு) எதிர்மறையாகும். ஒரு பொருளைப்பற்றி உண்மையை உணர்ந்தறிவது ஞானம். அதற்கு மாறாக ஒருபொருளைப் பற்றிய தவறான செய்தியைத் தப்பாகப் புரிந்து கொள்வது (அஞ்ஞானமாகும்) அறியாமை ஆகும்.

இந்த தமோ குணமானது பொருளைப்பற்றிய உண்மைக்கு மாறான பொய்யறிவிலே பிறப்பது. இது உடலை எடுத்துள்ள அனைத்து உயிர்களுக்கும் மயக்கத்தை உண்டாக்குவது. மயக்கம் என்பது மாறுபட்ட அறிவு. அதாவது தமஸ் என்பது மாறுபட்ட மயக்க அறிவின் பயனாகும்.

இப்படிப்பட்ட மாறுபட்ட மயக்க அறிவின் பயனே, அசட்டை சோம்பல், உறக்கம் என்பன. இவைகள் தேகியைக் கட்டுப்படுத்தி விடுகின்றன.

அசட்டை என்பது செய்தக்க செயல்களைச் செய்யாமல், செய்யத் தகாதவற்றைச் செய்தல். சோம்பல் என்பது எதையும் செய்யாமல் வீணே காலம் கழிப்பது, உறக்கம் என்பது நாம் செய்ய வேண்டிய நற்செயல்களுக்கும் நம் கடமைகளுக்கும் ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் செயலாகும்.

**பாரதா! சத்துவ குணத்தின் பிரதான குணம் சுகத்தோடு இணைப்பதாகும். இரஜோ குணத்தின் பிரதான குணம் தர்மத்தோடு இணைப்பதாகும். தமோ குணத்தின் தன்மையோ பொருள்களின் உண்மைத் தன்மையை உள்ளபடியறிய ஒட்டாமல் தடுத்து, ஞானத்தை மறைத்து, கவனமின்மையில் இணைப்பதாகும். (செய்ய வேண்டியதை விட்டு விபரீதத் தோடு சேர்ப்பிப்பதாகும்.)** XIV (9)

சத்துவ குணம் சுகத்தோடும், ஞானத்தோடும் தொடர்புடையதாக முன்னர் சொல்லப்பட்டது. ஆகையினால் சத்துவகுணம், ஆத்மாவை சுகத்தோடு இணைப்பதையே தன் முதன்மைக் குணமாகக் கொண்டுள்ளது.

ரஜோகுணமோ செயலாற்றும் தன்மை வாய்ந்தது. அது தருமத்தோடு (தன் சுய கருமங்களோடு இணைத்து செயலாற்றலைச் செய்வித்தலே) எனவே ரஜோ குணம் தன் கடமையை ஆற்றுவித்தலையே தன் முதன்மைக் குணமாகக் கொண்டுள்ளது.

ஆனால் தமோ குணம் பொருள்களைப்பற்றிய உண்மைகளைத் திரையிட்டு மறைத்து விடுகிறது. இதன் மூலம் விபரீத அறிவுக்கு அது காரணமாக அமைகின்றது. இதனால் இந்தத் தமோ குணந்தான் தான் இன்றியமையாது செய்ய வேண்டிய நற்காரியங்களை எல்லாம் புறத்தே போட்டுவிட்டு எவை எவைகளைச் செய்யத் தேவை இல்லையோ, அவை

களையே மேற்கொண்டு செய்யும். இவ்வகையில் இக்குணம் எல்லாச்செயல்களிலும், அலட்சியம் புறக்கணிப்பு சோம்பல், தூக்கம் முதலியவைகளைக் கலந்து செயலாற்று வதையே தன் முதன்மைக் குணமாகக் கொண்டுள்ளது.

இங்கே ஒரு கேள்வி எழலாம். சத்துவம் முதலிய முக்குணங்களும் பிரகிருதியின் முக்கியமான தன்மை என்று கூறப்படுகிறது. ஆத்மா உறைகின்ற இந்த உடலிலிருந்து அவை மூன்றுமே முகிழ்த்து மேலெழுகின்றன. பிரகிருதியின் முக்கியத் தன்மையிலிருந்து மேலெழுவதால் ஒவ்வொரு உடம்பிலும் அவை எக்காலத்தும் உள்ளனவே. அப்படி இருக் கும்போது, அவை ஒன்றுக்கொன்று மாறுபட்ட குணங்களை எப்படி உண்டாக்கும்?

இதற்குக் கண்ணன் இவ்வண்ணம் விடை பகர்கிறார்.

**சத்துவ குணம் ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் தன் கீழே அடக்கி நிற்க மேலோங்குகின்றது. ரஜோ குணமோ சத்துவ குணத்தையும் தமோ குணத்தையும் தன் கீழே அடக்கி தான் மேலெழுகின்றது. அப்படியே, தமோ குணமோ, சத்துவ குணத்தையும் ரஜோ குணத்தையும் தன் கீழே அடக்கிவிட்டு தான் மேலெழுகின்றது.** XIV (10)

சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் இந்த மூன்று குணங்களும், ஆத்மாவின் இயல்பு, பிரகிருதி யோடு சம்பந்தப்படும்போது உண்டாகின்றதாயினும், ஆத்மாவின் பூர்வ கர்மத்துக்கும், தான் உண்ணுகின்ற உணவின் வேறுபாட்டால் உடலிலே ஏற்படும்படியான வேறு பாட்டுக்கும், தக்கவாறு சத்துவம் முதலிய முக்குணங்களும் மேனிலை ஆதிக்கத்திற்கோ அல்லது அடிமட்ட அடிமை நிலைமைக்கோ மேலெழும், அல்லது கீழே அமுந்திக் கிடக்கும்.

நேரங்கள் சத்துவம் மேலெழும்போது ரஜோ குணமும், தமோ குணமும், கீழே தம் செயலிழந்து கிடக்கும்.

இதைப் போலவே ரஜோ குணம் தலைதூக்கும்போது சத்துவ குணமும் தமோ குணமும் அடிமட்டத்திலே அடங்கிக் கிடக்கும்.

தமோ குணம் தலை தூக்கி ஆட்டம் போடுங் காலத்திலே, சத்துவ குணமும் ரஜோ குணமும் தம் செயலற்று அழுந்திக் கிடக்கும்.

ஒவ்வொரு மனிதனிடத்தும் இம்முக்குணங்களின் சேர்க்கை ஒரே அளவாக அமைந்திருப்பதில்லை. அவைகளில் ஒன்று மிகுந்தும் பிற இரண்டு குறைந்தும் அல்லது பிற இரண்டுமிகுந்தும் மற்றொன்று குறைவாகவும்அமைந்திருக்கலாம். உடலைப் பற்றிச் சொல்லும் போது பித்தம் மிகுந்த தேகியைப் பித்த தேகி என்றும் வாயு மிகுந்தவனை வாத தேகி என்றும் சிலேத்துமம் மிக்கவனைச் சீதளத் தேகி என்பதைப் போல இவன் சத்துவ குணம் மிக்கவன்; இவன் ரஜோகுணத்தோன்; இவன் தமோ குணம் மிக்கவன் என்று சொல்கிறோம். ஆயினும் அவர்கள் அனைவரும் முக்குணமுள்ளவர்களே. மிகுதியான குணத்தைக் கொண்டுதான் ஒருவரைக் குறிப்பிடுகிறோம்.

இதிலே சத்துவ குணம் ஒளியையும் ஞானத்தையும் தன் குறிக்கோளாகக் கொண்டது; அமைதியான தன்னலமற்றது. ரஜோ குணமோ; துடிதுடிப்பு மிக்கது; வெளிப்பொருள்களின் மேல் நாட்டம் மிகக்கொண்டது; தன்னல மிக்கது. தமோ குணமோ, சோம்பம்மிக்கது; செயலாற்றல் இல்லாதது; மனம் இருள் அடைந்தது; குழப்பம்மிக்கது. இவ்வகையில் முக்குணங்களும்சூழ் நிலைக்கு ஏற்பமாறி மாறி வரும்.

**இந்த உடலின், வாயில்களாம், அனைத்தும் (ஐந்து) பொறிகளின் வழியாக சர்வாத்வாரேஷு தே ஹேஸ்மின் எப்பொழுது, ஞானத்தின் ஒளி ஒளிர்கின்றதோ, அப்பொழுதே**

**அங்குச் சத்துவ குணம் ஓங்கியுள்ளது என்பதை அறிதல் வேண்டும்.**
XIV (11)

*இந்த உடலின் வாயில்கள் அனைத்தும் என்பன கண் வாய், காது, மூக்கு, மெய் என்பன. இது சர்வத்வாரேஷு தேஹேஸ்மின் என்பதால் உணர்த்தப்படும். ஞானத்தின் ஒளி ஆத்மாவில் ஒளிர்வதால் இந்த உள்ளொலி, கண்ணிலே வாக்கிலே, மூச்சிலே, காதுகேட்பதிலே ஒளிர்கிறது; முழுமை யும் தேஜசுடன் கூடிய ஒளியாக வெளிப்படுகின்றது. ஒரு நல்ல ஞானியை அவன் கண்களிலே ஒளிரும் விழி சுடரே நன்கு காட்டிவிடும். ஐம்புலன்களிலே ஒளிரும் ஞான ஒளி உள்ளத்தின் உள்ளொளி. உள்ளம் ஆத்ம பிரகாசத்தோடு விளங்கும்போது புலன்கள் ஞானவழி வேகமாகச் செயலாற்ற சத்துவ குணம் தலை எடுக்கிறது—ஓங்குகின்றது.*

**அதாவது பரதருள் காளையே! லோபம் என்னும் அளவற்ற அவாவும், சுருசுருப்பும், அதாவது இந்திரியங்கள் வாயிலாக வெளியுலக விவகாரங்களில் மிகவும் ஈடுபடலும், பலப்பலவாக வினைகளை வளர்த்துக் கொள்ளுதலும், இந்திரியங்களால் மனம் அமைதி இன்மையும், விஷய சுகங்களில் இச்சையும் ரஜோ குணம் கிளைத்தெழும்போது உண்டாகின்றன.**
XIV (12)

*அதாவது கோபம் முதலாகச் சொல்லப்பட்ட குணங்கள் ஒருவனிடம் காணப்படும் போது அவனிடம் ரஜோ குணம் மேலோங்கி உள்ளதென அறியத் தக்கதாம்.*

*லோபம் என்பது பேராசை. இக்குணத்தை உடையவள் தன் உடைமைகளையும் பொருளையும் பிறருக்குச் சிறிதளவேனும் தர இசைய மாட்டான்.*

*அடுத்துச் சொல்லப்படும் சுருசுருப்பு என்பது ஆத்ம ஞான நோக்கமின்றி, உலகச் சுகம்பாக வாழ்வினிலே வாழக் குறிக்கோளின்றி, அயராது உழைத்தலாகும்.*

இனி வினைகளை வளர்த்துக் கொள்ளல் என்பது தான் விழைகின்ற இன்பத்துக்குரிய விளைவுகளுக்கென்று பல வகையாலும் முயலல். இந்திரியங்களால் மன அமைதி இன்மை என்பது எக்காலமும் எதையாவது எண்ணிச் சொல்லிக், கேட்டு, வாழ்க்கையைச் சுகபோகமாக்கிக் கொள்ள விழைந்து இந்தியங்களைக் கண்டபடி ஓடவிடுதல்

அடுத்து விஷய சுகங்களில் இச்சை என்பது, ஐம்புலன் நுகர்ச்சி, சிற்றின்ப வேட்கை, இவைகளுக்காக மனம் ஏங்குதல்.

இப்படிப்பட்ட தன்மைகள் ஒருவனிடம் எப்பொழுது அமைந்திருக்கிறதோ, அப்பொழுதே அவனிடம் ரஜோ குணம் மேலோங்கி உள்ளதென அறிய வேண்டும்.

**குருகுலத் தோன்றலே! அறிவற்ற தன்மையும், செயலாற்ற லின்மையும், அஜாக்கிரதையும் (விழிப்பின்மையும்) மதி மயக்கமும் ஆகிய இவைகள் யாவுமே, தமோ குணம் தலை தூக்கும் போது உண்டாகின்றன.** XIV (13)

பிரகாசம் 'ஒளி விடும் தன்மை', சத்துவத்தின் குணமாகும். மாறாக, ஒளியற்ற தன்மை (அப்பிரகாசம்) தாமத குணத்தின் இயல்பாகும். தவறுகளை மேலும் மேலும் செய்தல், மெய் உணர்வற்றுப் பிறரைச் சந்தேகித்தல் பகைத்தல், அலட்சியப்படுத்தும் போக்கு, சோம்பிக் கிடத்தல் தூங்குதல் இவையாவுமே தமோ குணத்தின் பயன்களாகும்.

தமோ குணம் மிக்கவன், விபரீத ஞானம் உடையவன். தன் கடமையை மறந்து காரியமல்லாத காரியத்திலே பிரவேசிப்பான். அவன் எக்காலமும் குழம்பிய மனத்தோடே இருப்பான். தெளிவான, நிலையான புத்தி, அவனிடம் அமைந்திராது. ஐயமும் திரிபும் அவன் அணிகலன்கள்.

இப்படிப்பட்ட குணங்கள் எப்பொழுது ஒருவனிடம் அமைந்திருக்கிறதோ, அப்பொழுதே அவன் தமோ குண வயப்பட்டவன் என்பதை அறிய வேண்டும்.

உடலெடுத்த ஒருவன், தன்னிடம் சத்துவ குணா மேலோங்கியுள்ள காலத்திலே தன் ஜீவனை (உயிரை) விடுவம் னாகில், அப்பொழுது அவன், அஞ்ஞானம் அழியப் பெற்று ஞானமுற்று மேலோங்கிய ஞானிகளின் ஆத்ம லோகத்தைச் சென்றடைகிறான். XIV (14)

மேற்கூறிய அவர்கள் வீடுபேறு அடையாவிடினும், உயிர் விடுங்காலத்திலே அவர்களுக்குச் சத்துவ குணம் மேலோங்கி இருந்த தன்மையால் விஞ்ஞான மழிந்த ஞானிகளின் ஆத்மா உரையும் நல்லுலக வாசம் அவர்கட்குக் கிட்டுகிறது.

மீண்டும் அவர்கள் பிறக்கும் பொழுது ஆத்ம ஞானிகளின் குலத்திலே பிறந்து ஆத்ம ஞானியாகி தன்னை யறிந்து தலைவனை அடைகிறான்.

உயிர் இந்த உடலை விட்டு நீங்கும்போது உள்ளம் எந்த நிலையில் எக்குண வயப்பட்டிருக்கிறதோ, அதற்குத் தகவே அவன் மறு பிறப்பும் அமையும். எனவே சத்துவ குணம் மேலோங்கி நிற்கும்போது அவன் உள்ளம் இறை நினை வோடுதான் நிச்சயம் இருக்கும். ஆனால் மரண காலத் திலே தெய்வ சிந்தனையும் சத்துவ குணமும் பொருந்தி இருக்க வேண்டும் என்றால் ஒருவன் தன் வாழ்நாள் முழுவ தும் சத்துவ குணத்தோடும் தெய்வ சிந்தனையோடும் இருந்தாலல்லது இயலாது.

> "ஐயும் திரண்டு விழியும் செரிகி அறிவழிந்து
> மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று
> வேண்டுவன்யான்
> செய்யும் திருவொற்றி ஊருடையீர் திருநீறுமிட்டுக்
> கையும் தொழப் பண்ணி ஐந்தெழுத்தோதவும்
> கற்பியுமே!"

என்று பட்டினத்தடிகள் இறைவனை நோக்கித் தான் உயிர் விடும் காலத்தில் தொழவும் ஐந்தெழுத்து ஓதவும் கற்பிக்கும் படி வேண்டுகிறார்.

தன் வாழ்நாள் முழுமையும் ரஜோ குணத்திலும் தமோ குணத்திலும் உழலும் மக்களினம், திடீரென மரண காலத்தில் பழக்கமில்லாத பழக்கமாக இறை உணர்வும் சத்துவ குணமும் அடையமுடியுமா? அப்படி மேலோங்க வேண்டுமென நினைப்பதே மடமையல்லவா?

எனவே பழ வினை வசத்தாலும், சூழ்நிலைகளாலும், ஆகாரங்களாலும், ரஜோ குணமும், தமோ குணமும் தம் பெரும்பாலான நேரங்களில் ஓங்கப் பெற்றுள்ளவர்களும், தம் இறுதி நாட்களுக்குள்ளாகவேனும், சத்துவ குணம் தம்மிடம் மேலோங்கிக் குடி கொள்ளப் பயில வேண்டியது அவசியமாகும்.

**அஃதின்றி தன்னிடம் ரஜோ குணம் மேலோங்கியுள்ள போது மரணமடைபவன் கர்மப் பற்றுள்ளவர்களிடையே பிறவி எடுக்கிறான். அவ்வாறே தன்னிடம் தமோ குணம் மேலோங்கியுள்ளபோது மரணமடைபவன், அறிவிலிகள், மூடர்கள் கீழ்த்தர மக்கள் இடையே பிறவி எடுக்கிறான்.**

XIV (15)

அமைதியாக உயிர் துறக்கும் சத்துவ குண ஜீவனைப் போலன்றி, ரஜோ குண ஜீவன் தான் உயிர் விடும்போது நிறைவேறாத வேட்கையோடும், துடிப்போடும் மனோ வேதனையோடும், உயிர் விடும் காரணத்தால், அந்த ஆத்மா தான் என்னும் முனைப்போடும், கர்ம பலனில் விருப்பத்தோடும், ஓயாது கர்மமியற்றும் கூட்டத்திடையே மீண்டும் பிறவி எடுத்து பின்னும் அந்த ஆத்மா இடையறாது கர்மம் இயற்றி மேலும் மேலும் வினையைக் கூட்டிக் கொள்ளுகிறது.

இதைப் போலவே, தன்னிடம் தமோகுணம் மேலோங்கியுள்ள போது மரணமடைபவன், சோம்பி செயலாற்றலின்றி மந்த புத்தியோடு, மருட்சி நிலையில் தீமைகளை நன்மைகளாக, நன்மைகளைத் தீமைகளாக விபரீத உணர்வோடு

உள்ள நிலையில் மரணமடைவதால் அவன் மந்த புத்தியுள்ள கீழ்த்தர மக்கள் கூட்டத்திடையேயோ அல்லது விலங்கினத் திலேயோ பிறவி எடுக்கிறான். அதாவது (அவன்) அந்த ஆத்மா, மனிதப் பிறப்பு அடைய வேண்டிய முக்தி நிலையால் எல்லையை அடையக் கூடாத, அடைய முடியாத இழி பிறப்பிலே பிறக்கின்றான்.

**சத்துவ குணத்தின் பயன்; நற்செய்கையும் தூய்மையும் என்று கூறப்படும். ரஜோ குணத்தின் பயனோ துன்பம். (துக்கம்). தமோ குணத்திலிருந்து விளைவதோஅஞ்ஞானமே.**
XIV—(16)

அதாவது சத்துவ குணத்தின் பயனாகிய நற்செய்கை களைப் — பற்றற்ற பலன் கருதாது எச்செயலும் ஈஸ்வரார்ப்பணம் என ஆற்றும் நற்கருமங்களை — ஆற்றி, மனம், மொழி, மெய் ஆகிய மூன்றையும் தூய்மையாகத் தன் வாழ்க்கையில் அமைத்தபடி கணப் பொழுதேனும் வேறு சிந்தனை இன்றி இறைவனையே சிந்தித்தபடி வாழ் கின்றவன் இறுதி காலத்திலே அதே சத்துவ குணத்தோடு கூடியவனாய் உடலை நீத்து விடுகிறான். எனவே அடுத்து அவன் ஆத்ம தரிசனம் அடைந்துள்ள தன்னையறிந்த குடும்பத்திலே பிறக்கிறான். இதன் மூலம் அடுத்த பிறவி யிலே அவன் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டவனாய் முழு விடுதலையை அடைந்து விடுகிறான்.

ரஜோ குணமோ, இந்திரியங்களின் வாயிலாக வெளி உலக விவகாரத்தில் ஈடுபடுதலும், எதிலும் இச்சை கொள்ளு தலும், அமைதியின்மையும் ஏதாவது செயலாற்றலில் கொள்ளும் இச்சையுமே ஆகும். எனவே இந்த வகைப்பட்ட எத்தொழிலை ஆற்றும் போதும் ஒருவன் அடைவது துன்பமே. ரஜோ குணம் மேலோங்கியவன் தன் கருமத்தின் பயனாகத் தான் அடைந்த துன்பத்தின் காரணத்தை அறிய

முயன்று அதன் மூலம் அவன் தன்னைத் திருத்திக் கொள்ள வேண்டும். அது மட்டுமல்லாமல், அவன் தன் ரஜோ குண வாழ்க்கையிலிருந்து சத்துவ குண வாழ்க்கைக்கு மாற முயல வேண்டும்.

மற்றும் முயற்சி இன்மை, தவறுகளையே செய்தல், மனக் குழப்பம், இவைகளை உண்டாக்கும் தமோ குணம் மேலோங்கப் பெற்றவன், சிறிதளவேனும் முயன்று ரஜோ குணத்துக்கும் அதையடுத்த மேல்படியாம் சத்துவ குணத்துக்கும் படிப்படியாக ஏற முயலுதல் வேண்டும். அப்படி முடியாதவன் வாழ்க்கை மனித வாழ்க்கையாக அமையாமல் மிருக வாழ்க்கையாகவே மாறிவிடும்.

இனி முக்குணங்களிலிருந்து உண்டாவன யாவை என்பதைக் கண்ணன் விளக்குகிறார்.

**சத்துவ குணத்திலிருந்து ஞானம் உதிக்கிறது. ரஜோ குணத்திலிருந்து பேராசையின் அடிப்படையாம் லோபம் உண்டாகின்றது. தாமத குணத்திலிருந்து அறியாமையும் (அஞ்ஞானம்) அலட்சியமும் மனக்குழப்பமும் ஏற்படுகின்றன**
**XIV (17)**

சத்துவ குணம் மேலோங்கி நிற்க, அங்கே ஞானம் உண்டாகிறது. ரஜோ குணம், தன்னையடையப் பெற்றவனுக்கு அது பேராசையை உண்டாக்கி விடுகிறது. தமோ குணமோ, தன்னைப் பெற்றவனுக்கு அறியாமை, அலட்சியம் மனக் குழப்பம் எனும் இவைகளை உண்டாக்கி விடுகின்றது.

இந்த வகையிலே, சத்துவகுணம் தம்மிடம் ஓங்கப் பெற்றவர்கள், மேன்மேலும் மேலுக் குயர்கின்றனர். ரஜோ குணத்தில் நிலைத்திருப்பவர்களோ இடையிலே அங்கேயே நிற்கின்றனர். தமோ குணம் உடையவர்களோ கீழ் நோக்கிச் செல்கின்றனர்.

சத்துவ குணம் படிப்படியாக மேலே உய்த்துச் செல்லும் தன்மை உடையது. மனிதப் பிறவியிலிருந்து உய்தி அடையும் தன்மையைச் சிறிது சிறிதாக மேலும் மேலும் உயரும் ஆத்ம முன்னேற்றம் இது.

ஆனால் ரஜோ குணம் அப்படிப்பட்டதல்ல. செக்கு மாட்டைப் போல சுழன்று சுழன்று வரும் தன்மையது அது. காமம், குரோதம், லோபம், மதம், மாச்சரியங்களால், கருமம் இயற்றி, அதன் பலனை எதிர்பார்த்து அதனால் கரும பலன்களைத் துய்க்கப் பிறவி எடுத்து பின் இறந்து பிறந்து பின்னர் கருமம் செய்து அதனால் பிறந்து, இறந்து, ஜனன மரண சூழலுக்குட்பட்டு, மேலுக்கும் போகாமல் கீழ் மட்டத்துக்கும் வாராமல் இடையிலே உழல்கின்ற தன்மையை உண்டாக்குவது ரஜோ குணம்.

மாறாக தமோ குணத்தை உடையவர்களோ; மேலும் மேலும் இழிவான, மனித தர்மத்துக்கு மாறான, அதர்ம; அநியாயச் செயல்களைச் செய்து, செய்து, சிறிது சிறிதாக கீழ்மட்டத்துக்குப் போய்க்கொண்டே இருப்பவர்கள். இவர்களுக்குக் குறிக்கோள் என்று ஒன்றுமில்லை. ஆத்ம சிந்தனை இல்லாதவர்கள் இவர்கள். மனித குணத்துக்கு மாறுபட்ட விலங்கு குணங்கள் ஓங்கப் பெற்றவர்கள் இவர்கள். எனவே இவர்கள், மனிதப் பிறவியிலிருந்து கீழ்ப்பட்ட விலங்கு, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்முதலிய பிறவிகள் எடுக்கவும் வாய்ப்புண்டு.

**ஜீவன் (ஆத்மா) எப்பொழுது குணங்களுக்கு அன்னியமான வேறொன்றை—வேறொருவனைக் கர்மங்களைச் செய்வதற்கு அதிகாரியாகக் (agent) காண்பதில்லையோ, அதே நேரத்தில் குணங்களுக்கு அப்பாற்பட்டவனாக அந்த மேலான பரம்பொருளைக் காண்கின்றதோ அந்த ஆத்மா என் சொரூபத்தை அடைகிறது. XIV(19)**

உலகிலே நடைபெறும் அனைத்துச் செயல்பாடுகளுக்கும் கருமங்களுக்கும் முக்குணங்களே காரணம். முக்குண

களோ, பிரகிருதியின் சொரூபம். பொறிபுலன் உணர்வுகள் விஷயங்களில் சென்று பற்றக் காரணமாக இருப்பவை முக் குணங்களே. எனவே முக்குணங்கள் தாம் எல்லாச் செயற் பாடுகளுக்கும் காரண கர்த்தாவாகும்.

சுத்த சத்துவ நிலையில் நின்று ஆத்ம சொரூபத்தைக் காண்கிறவன் இதை நன்கு உணர்வான். அதே நேரத்தில் பரமாத்மா, குணத்தின்—குணங்களுக்கு அப்பாற்பட்டவன். குணங்களால் தீண்டப்படாதவன் என்பதை உணர்கிறான். அவன் எச்செயலுக்கும் காரண கர்த்தா அல்லன். அவன் வெறும் சாட்சியே என்பதையும் உணர்கிறான். இந்த மெய் யுணர்வை அடைகின்ற விவேகியே என் சொரூபத்தை அடைகிறான் என்கிறார் கண்ணன்.

ஆனால் ஆத்மா தான் கர்த்தாவாக இருப்பதென்று கருதுவதெல்லாம் பூர்வ ஜென்ம, கரும பலனாம் குண சங்கத்தால் வருவதே ஆகும். ஆத்மா சுவபாவத்தில் கர்த்தா அல்லன்.

இந்த உண்மைகளை எல்லாம் உள்ளபடியே அறிகிறவன் பரமாத்மாவுக்கு உரியவன் ஆகிறான். அவன் பரமாத்ம சொரூபமே ஆகிறான்.

**உடலை உண்டாக்கும் இந்த மூன்று குணங்களையும் கடந்து, பிறப்பு, இறப்பு மூப்பு துக்கத்தில் இருந்து விடுதலை யடைந்த (தேகி) உடலை எடுத்த ஆத்மா, மரணமிலாப் பெரு வாழ்வு அடைகிறான்.** XIV (20)

ஓர் உயிர் பிறவி எடுப்பது பூர்வ ஜென்ம கரும பலன் ஆயினும், உடல் தோன்றக் காரணமாக இருப்பது முக்குணங் களே. இந்த உடல் தோன்றக் காரணமான முக்குணங்களை யும் இந்த உடலுள் உறையும் ஆத்மா கடந்து நிற்க வேண் டும். ஏனெனில் ஆத்மா, உடலோடு தொடர்புள்ளதல்ல. கூட்டிலே உறையும் பறவைப் போல உடலுள் தனித்து உயிர் உறைகின்றது.

இந்த உடலை எடுத்திருக்கும் பொழுதே, உடல் வடிவாகி விகாரப்பட்டிருக்கும் பிரகிருதியினின்று உண்டான இந்த சத்துவம் முதலிய குணங்கள் மூன்றையும் கடந்து மேலெழும்பி அவைகளைக் காட்டிலும் வேறாகி, ஞானமே வடிவான ஆத்மாவைக் காண்பவன் பிறப்பு இறப்பு மூப்பு முதலிய துன்பங்களிலிருந்து விடுபடுகிறான். அவனே ஆத்ம சொருபத்தை அனுபவிக்கிறான்.

இந்த வகையில் இந்த முக்குணங்களும், முக்குணங்களின் காரியமாகிய உடலிலிருந்துதான் கிளைத்தெழுகின்றன; இந்த மூன்றில் சிறந்ததான சத்துவகுணமும் பூர்ணமானதல்ல. ஏனெனில் இந்த சத்துவ குணமும் பிற இரண்டு குணங்களாம் ரஜோ, தமோ, குணங்களோடு போராட வேண்டியுள்ளது. இந்தப் போராட்டம் இடையறாத போராட்டம். இந்தப் போராட்டத்தை ஒருமுடிவுக்குக் கொண்டு வரத் தன்னையறிந்த ஒரு விவேகியால் மட்டுமே இயலும். முக்குணங்களின் போராட்டத்தை முடிவுக்குக் கொண்டு வந்தபின் அங்கு நிலவுவது பூரண அமைதியே.

காலில் தைத்த முள்ளை வேறொரு முள்ளைக் கொண்டு எடுத்து விட்டபின் இரண்டையும் வீசி எறிவதைப் போல சத்துவ குணத்தைக் கொண்டு, ரஜோ, தமோ குணங்களை அழித்துவிட்டுப் பின் அந்த சத்துவ குணத்தின் சம்பந்தமும் இன்றி, அதையும் துறந்து அமைதியில் சாந்தியில்—நிலைத்திருப்பதுதான் மரணமிலாப் பெரு வாழ்வு.

இந்த முக்குணங்களையும் கடந்து நிற்பவன் எப்படி இருப்பான்? அவன் இலக்கணம் யாது என்று அறியத் தனக்கு ஏற்படுகின்ற ஐயத்தைத் தீர்த்துக் கொள்ள கண்ணனை நோக்கிக் கேட்கிறான் அர்ச்சுனன்.

**பிரபுவே! சத்துவம் முதலிய இந்த மூன்று குணங்களையும் கடந்து நிற்பவன் எவ்வித லட்சணங்களுடன் கூடி இருப்பான்? அவனுடைய (ஆசாரம்) ஒழுக்கங்கள் எத்தகையன? இந்தச்**

**சத்துவம் முதலிய முக்குணங்களை அவன் எவ்வித உபாயத்தாலே கடக்கிறான்? XIV (21)**

*எவன் முக்குணங்களையும் கடந்து மேனிலையில் உள்ளவன்? என்பதை எவ்வித அறிகுறிகளால் நாம் அறியக்கூடும்? அப்படிக் கடந்து வாழ்பவன் வாழ்க்கைநிலை என்ன? எப்படி அவன் வாழ்க்கையை நடத்துகிறான். அவன் இந்த மூன்று வகைப்பட்ட குணங்களைக் கடக்க மேற்கொண்ட உபாயம் என்ன? என்பது அர்ஜுனன் கேள்வி.*

*அதற்குக் கண்ணன் பதிலளிக்கிறார்.*

**பாண்டவா! சத்துவ குணத்தில் காரியமாகிய ஒண்மையும் (பிரகாசம்—அறிவு—ஞானம்) ரஜோ குணத்தின் காரியமாகிய செயலாற்றலும், தமோகுணத்தின் காரியமாகிய குழப்ப—மயக்க—அறிவும், சூழ்வினையால் அல்லது ஊழ்வினையால் ஒருவனிடத்தில் பொருந்துமானால் அவைகளை அவன் வெறுக்கிறதில்லை. அவை நீங்கியவிடத்து அவன் அவைகளுக்காக வேட்கையுற்று ஏங்குவதுமில்லை. XIV (22)**

*சத்துவம் முதலிய முக்குணங்களைக் கடந்தவன் எப்படி இருப்பான்? இது கேள்வி.*

*முக்குணங்கள் ஒவ்வொருவனிடத்தும் மாறிமாறி வருகின்றன. தன்னிடம் சத்துவ குணமாகிய ஞானம், கல்வி, நல்லொழுக்கம் அறம், நேர்மை முதலிய ஒளிமிக்க குணங்கள் மேல் எழும்போது குணங்களிலே கட்டுண்டிருப்பவன் அவைகளை மேலும், மேலும் அடைய விழைகிறான். ஆனால் முக்குணங்களைக் கடந்து நிற்பவனுக்கோ இவைகளில் விருப்பு வெறுப்பு என்பதில்லை. எனவே அவன் அவைகளை வெறுப்பதுமில்லை. அவைகளை அடைய அவன் ஏங்குவதுமில்லை.*

*இதைப் போலவே ரஜோ குணம் மேலோங்கப் பெற்றுள்ள ஒருவன் அக்குணத்தின் தன்மையால் ஓயாமல், செயலாற்றிக் கொண்டே இருப்பான். அவன் செய்யும்*

கருமங்கள் அனைத்தும் "தான்" என்னும் அடிப்படையில் அமைந்தவையே. முனைப்பின்றி அவன் செயலாற்றுவதில்லை. தன்னலமும் அகந்தையும் அவன் செயலின் அடிப்படை அம்சங்கள். தனக்குச் சாதகமானவற்றை, மகிழ்ச்சி தருவனவற்றை, அவன் விருப்போடு ஏற்றுச் செயலாற்றுகிறான். மாறாக பிறவற்றில் அவன் வெறுப்பு கொண்டு அவைகளை விலக்கி விடுகிறான்.

ஆனால் குணங்களைக் கடந்து நிற்பவனோ ரஜோ குண வசத்தால் செயலாற்றும் நிலை உண்டாகும்போதும், அவன் தன்னலமற்று கருமபலனை எதிர்ப்பாராமல் ஈஸ்வர அர்ப்பணமாகச் செய்கிறான். இவ்வகையில் எச்செயலையும் அவன் வெறுப்பதில்லை. எச்செயலுக்கும் அவன் விருப்பம் கொண்டு ஏங்குவதுமில்லை.

தமோ குணம் மேலோங்கப் பெற்றவனோ சோம்பல், தூக்கம் மயக்க அறிவு, நல்லவனவற்றை நீக்கி அல்லனவற்றை நாடுதல் சூது, வஞ்சனை, பொறாமை, கோபம், காமம், சினம் முதலியவைகளிலே தன் காலத்தைக் கழிப்பான். இவைகளுக்கு எதன் மூலமாக இடையூறு ஏற்பட்டாலும் அவனால் அதை அமைதியாக ஏற்றுக் கொள்ள முடியாது, இடையூறுகளைக் கடிந்து ஒதுக்குவான். அந்த இடையூறுக்குக் காரணமானவன் மேல் பகை கொள்வான்.

ஆனால் முக்குணங்களையும் கடந்து நிற்பவன் ஏதோ அசந்தர்ப்பத்தால் தமோ குணம் வயப்பட்டால் மேற்கூறிய குணங்கள் தோன்றி கணப் பொழுதில் மறையும்; அதனால் அவன் பாதிக்கப் படுவதே இல்லை.

"குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது"

என்ற குறள் விளக்குவதினையே என்பது தேற்றம்.

காமம் வெகுளி; மயக்கம் எனும் கீழ்க்குணங்கள் யாவும் குணாதீதனைத் தீண்டா. தீண்டினாலும் கணப்போதும் அவனிடம் தங்கா.

எதிலுமே அக்கறையற்றவனாய், வெறும் சாட்சியாக இருப்பவன் எவனோ எவன் குணங்களால் சலனப்படுவதில்லையோ, குணங்களே செயலாற்றுகின்றவனென்று எவன் தன் ஆத்மாவில் நிலைத்து நிற்கிறானோ. XIV (23)

எவன் துன்பத்தையும் இன்பத்தையும் சமமாகக் கருதுகிறானோ, ஆத்ம சொருபத்தில் எவன் இருக்கிறானோ, எவன் மண்ணையும், கல்லையும், பொன்னையும் சமமாகக் கருதுகிறானோ, எவன் இனியவற்றையும் இன்னாதவற்றையும் நிகராகக் கருதுகிறானோ எவன் பேரறிஞனோ எவன் இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் சமமாகக் கருதுபவனோ.
XIV (24)

மான அவமானங்களைச் சமமாகக் கருதுபவன் எவனோ, நண்பனிடத்தும் பகைவனிடத்தும் ஒரே பாங்குடையவன் எவனோ, தனக்கெனத் தொழில் செய்யாதவன் எவனோ, அவனே குணாதீதன் எனப்படுகிறான். XIV (25)

*அர்ச்சுனன் கேட்ட முதற் கேள்வி ''குணாதீதன் அதாவது முக்குணங்களிலிருந்து விடுபட்டவன் தன்மை என்ன? அவன் எவ்வித லட்சணங்களுடன் கூடி இருப்பான்? என்பதல்லவா? குணாதீதன் எதிலும் பற்றற்றவனாய் யாவற்றிலும் உதாசீனனாய், ''எதுவரினும் வருக அலது எது போயினும் போக'' என்னும் நிலையிலே, மேடையிலே நடைபெறும் நாடகத்தைக் காணும், காட்சியாளனாக, சாட்சியாகவே, இருப்பான். மாறி, மாறி, சூழ்நிலைக்கும் பண்டைய வினைகளுக்கும் ஏற்ற—உண்டாகின்ற—முக்குணங்களால் அவன் மனம் விகாரப்படுவதில்லை. ஏனெனில் மலைமீதுள்ள மரஞ்செடி, கொடிகள் அசைந்தாலும் மலை அசைவதில்லை. அதைப் போல குணங்கள் அசைந்தாலும் அவன் ஆத்மா அசைவதில்லை. (19ஆம் சூத்திரத்தில் சொன்னபடி) இந்த உலகிலே நடைபெறுகின்ற அனைத்துச் செயல்பாடுகளுக்கும் காரணம் முக்குணங்களே,*

இதை நினைவில் கொண்டு தன் ஆத்மாவிலே தான் நிலைத்து நிற்பவனே குணங்களைக் கடந்தவன்.

அடுத்து குணங்களைக் கடந்தவன் தன்மை, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுதல்; மண்ணையும் பொன்னையும் ஒப்ப நோக்குதல்; இனிய, இன்னாத, இரண்டையும் சமமாக ஏற்றுக் கொள்ளுதல்; ஆகிய இவை களே.' இதையே வள்ளுவர்.

''இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்'' என்கிறார். இருமை வகை தெரிந்தவனின் மனம் சலித்தல் இல்லை. அவன் மனம் சமநிலையில் நிலைத்திருக்கும். அவன் பேரறிஞன் அவனுக்கு இகழ்ச்சியும் புகழ்ச்சியும் ஒன்றே!

அப்படிப்பட்ட குணங்களைக் கடந்த குணாதீதன், மான அவமானங்களைச் சமமாகக் கருதுவான். மான அவமானம் என்பனவெல்லாம் வெறும் பொய்த் தோற்றம். மனம் அவைகளை ஏற்றுக் கொள்ளும் பக்குவமே அவைகள் என்பதை அவன் உணர்வான். எனவே மான அவமானங்கள் அவனைச் சென்று பற்றுவதில்லை. அவன் பகைவன் நண்பன் இருவரிடத்தும் ஒரே வகையான மனப்பக்குவத் தோடு பழகுவான். குணாதீதன், முக்குணங்களைக் கடந்த வனாதலால், தன்னலமற்றவன். தன்னலமில்லாததால் தனக் கென அவன் தொழில் செய்யான். இந்தக் குணங்களை— லட்சணங்களைப் பெற்றிருப்பவனே முக்குணங்களைக் கடந்தவன் எனப்படுகிறான் என்றார் கண்ணன். மேலும் கூறுகிறார் கண்ணன்.

**இனி ஒரு சிறிதும் சிதைவு படாத—சலித்தலில்லாத பக்தி யோகத்தினால் எவன் என்னை உபாசிக்கின்றானோ அவனே இந்த முக்குணங்களையும் கடந்து பிரம்மம் ஆதற்குத் தகுதி உடையவனாகிறான்.** XIV (26)

பிரகிருதியையும், ஆத்மாவையும் பிரித்தறிவதால் மட்டுமே குண நாசம் உண்டாகிவிடாது. ஏனெனில் இந்த

முக்குண சம்பந்தம் அனாதி கால முதலே, ஆத்மாவைத் தொடர்ந்த விபரீத வாசனையால் உண்டானதாகும்.

எனவே, சிறிதும் சலித்தலில்லாத பக்தியால் எவன் என்னை இடைவிடாமல் உபாசிக்கிறானே; எவன் என்னையே தஞ்சமென்று அடைக்கலம் புகுந்து ஓயாமல் பக்தி செய்கிறானா, அவனே, எதனாலும் விலக்க முடியாத, ஒழிக்க இயலாத இந்த முக்குணங்களைக் கடந்து, ப்ரம்ம பாவத்தை அடைகிறான்.

**அழியாத நிலைபேறுடைய மோட்சநிலையாம், பிரம்மத்துக்கும் நித்தியமான தர்மத்திற்கும் ஒப்பற்ற ஆனந்தத்துக்கும், நானே இருப்பிடமாக இருக்கிறேன்.** XIV (27)

பரப்பிரமம் அழியாதது, நித்தியமான நிலை பேறுடையது. மோட்சமும் கர்மமும் கூட அழியாத நித்தியமான நிலை பேறுடையனவே. கர்ம சொரூபியான பரமாத்மாவே மோட்சமாகவும் அமைகிறான். அவனே ஒப்பற்ற சுகரூபியாகவும் (ஆனந்த ரூபி) இருக்கிறான்.

இங்கே கண்ணால் காணப்படும் கண்ணனே, காணப்படாத பரப்பிரம்மமாகவும், கரும சொரூபியாகவும், சுகத்தின் இருப்பிடமாகவும் விளங்குவதாகச் சொல்லப்படுகிறது. சகுணப்பிரம்மமே நிர்குணமாகிறது—பரப்பிரம்மமாகிறது. ஈஸ்வரன் தன் கருணையை—அருளை,—தன் ஈஸ்வர சக்தி மூலமாகவே தான் காட்டுகிறான்.

பரமேஸ்வர உபாசனையே பிரம்மோபாசனை எனப்படுவதாலும் என்னை உபாசித்தவர்கள் முக்குணங்களைக் கடந்து பிரம்மமாவார்கள் என்பதாலும், நானே அழிவற்ற பரப்பிரம்மத்துக்கும், அழிவற்ற கர்மத்திற்கும் ஒப்பற்ற சுகத்துக்கும் இருப்பிடமாக ய இருக்கிறேன் என்கிறார் கண்ணன்.

தத்துவ ஆராய்ச்சியால் பிறக்கும் ஆத்ம ஞானமானது. அதிவிரதா பக்குவிகளுக்கே அன்றி ஏனையோர்க்கு அருமையானதாகையினாலே, எல்லா மக்களும் உய்யும் பொருட்டு "என்னையே ஒரு சிறிதும் சிதைவு படாத பக்தியால் வழிபடுக, ஏனெனில், நானே பரப்பிரம்மம். நானே கரும சொரூபி, நான் சுக சொரூபி, என்னை வழிபடுபவன் முக்குணங்களையும் கடந்து வீடு பேறடைவான்" என்று இவ்வத்தியாத்தின் இறுதி சுலோகங்களால் கண்ணன், பார்த்தனுக்கு விளக்குகிறார்.

(14ஆம் அத்தியாயம் முற்றும்



# அத்தியாயம்—15

# புருஷோத்தம யோகம்

## உலக மகாமரம்

பதின்மூன்றாம் அத்தியாத்தில் ஆத்மா (உயிர்) அனாத்மா (உடல்) என்னும் வேறுபாட்டையும் அப்படி அதைப் பிரித்தறிய வேண்டியதன் இன்றியமையாமையையும் கண்டோம்.

சென்ற அத்தியாயத்திலே முக்குணங்களின் எழுச்சியைப் பற்றியும் அவைகளது தன்மைகளைப் பற்றியும் ஆராய்ந்து கண்டோம். ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் புலனடக்கத்தின் மூலம் ஒழிக்க வேண்டும். சத்துவ குணத்தை மட்டுமே வளர்த்து பிறகு அதனிடமும் நமக்குள்ள பற்றை அறவே விலக்கவேண்டும்; இவ்விதமாக நாம் முக்குணங்களையும் கடந்து குணரகிதனாகஅமைய இதிலேமுழுவெற்றி எய்த —ஆத்ம ஞானமே இன்றியமையாதது என்றும், அந்த ஆத்ம ஞானமும்,பக்தி இல்லையாயின் எய்தாது என்றும் கண்டோம்.

இந்த அத்தியாயத்திலே பரிபூரணமான யோகமாம் "எங்கும் யாங்கனும் புருஷோத்தம தரிசனம்" எனப்படும் புருஷோத்தம யோகம் இயம்பப்படுகிறது. இதைப் பூரண யோகம் என்கிறார் வினோபாஜி. இதுவரை நாம் கீதையிலே கண்ட கருத்துக்களை எல்லாம் பூரணமாகும்படி இந்த அத்தியாயத்திலே விளக்குவதால் இது பூரண யோகம் எனப் படுகிறது. இந்த அத்தியாயத்தின் முடிவிலே பகவான் கண்ணன், 'மிக்க மறைபொருளான, குற்றமிலாத சாத்திரத்தைச் சொல்லி இருக்கிறேன்' என்று இந்த அத்தியாயத்தைச் சாத்திரம் என்றே இயம்புகிறார். ஏனெனில் இதுவரை சொல்லப்பட்ட தத்துவங்கள்

அனைத்தும் இதில் நிறைவெய்துவதனாலேயே இது சாத்திரம் என்று கண்ணனால் குறிப்பிடப்படுகிறது. எனவே தான் இது புருஷோத்தம யோகம் என்று அழைக்கப்படுகிறது.

**மேலே வேருள்ளதும், கீழே கிளைகளுள்ளதுமான அச்வத (அரச) மரத்தினை அழிவற்றது என அறிஞர் பகர்கின்றனர். வேதங்களே அதன் இலைகள். இதை நன்கு உணர்பவனே (வேத வித்) வேதங்களை அறிபவன் ஆகிறான். XV (I)**

கண்ணன் இங்கே, அண்டகோளமாம் பிரகிருதியை ஓர் அசுவத மரத்திற்கு (அரச மரத்திற்கு) ஒப்பிடுகிறார்.

அசுவதம் (அஸ்வத்தம்) என்றால் 'தொடர்ந்து மாறு பாடுடையது' 'நிலைபேறற்றது' என்பதாகும். அதாவது ஒரு கணம் இருப்பதைப் போன்று அடுத்த கணம் இருப்பதில்லை என்பதே அஸ்வத்தம்.

உலகத்திலே நாம் காணும் மரங்கள் அனைத்துமே பூமியின் அடியிலே வேர் உள்ளவை. நிலத்துக்கு மேலே அடிமரமும் அதற்கு மேலே கிளைகள், மிலார்கள், இலைகள், பூ, பிஞ்சு, காய், கனிகள் உள்ளவை.

ஆனால் இந்த அஸ்வத்த மரம் அகண்ட வெளியிலே தன் வேரைப் பரப்பி ஊன்றி, பூமியை நோக்கி வளர்ந்துள்ளது. அதன் அடிமரம் காற்று மண்டலத்திலே இருக்க, அதன் கிளைகள், மிலார்கள், இலைகள், பூ, பிஞ்சு, காய்கனிகள் யாவும் பூமி முழுமையும் படர்ந்து தலைகீழாக (ஊர்தவமாக—அடியில் இருக்க வேண்டியது மேலாக) உள்ளது. தலைகீழாக அமைந்துள்ளது.

இது அண்ட கோள மரம்—உலக மரம். பிரகிருதி மரம். தலைகீழான அதிசய மரம், விசித்திரமான மரம், மாறுதலுக்குட்பட்டது. ஆனால் அழிவற்றது. மாறுதலுக்குட்படும் எதுவுமே அழியும். ஆனால் இது அழிவற்றது. எப்படி? இந்த அத்தியாயத்தின் தொடக்கத்திலே அர்ஜுனன் கண்ணனிடம் கேள்வி ஏதும் கேட்காமலேயே பகவான்

கண்ணன் தன் உண்மையான சொருபத்தை ஒரு மரமாக உருவகித்துச் சொல்லத் தொடங்கி விட்டார். 'ஒன்றாய் முளைத்து எழுந்து எத்தனையோ கவடு விட்டு' என்கிறது திருவாசகம்.

காலத்தினால் சூட்சுமமாயும், நித்தியமாயும், சகலத்துக்கும், காரணமாகவும் அக்யக்தம் எனும் மாயையைச் சக்தியாகவும் உடையவன் (பிரம்மம்) இறைவன். அவ்வாறான பிரம்மத்தின் மாயையினையே மூலமாக (வேராக) உடையது இந்த அஸ்வத்த மரம் (என்றும் அழியாத விருட்சம் இது). இந்தச் சம்சாரம் எனும் விருட்சம் நாசமற்றது. எவ்வாறெனில் மாயை அனாதி. ஆகையால், அந்த மாயா மயமான சம்சாரமும், ஆதியும் அந்தமும் அற்றுத் தொடர்ந்து வருவதனால் என்க.

முன் சொன்ன அருபமான (அருவமான) சூட்சுமமான அப் பரப்பிரம்மத்தின் கூறான (சக்தி) மாயையில் கிளைத்துள்ள அஸ்வத்த மரம் தன் வேர்களை அகண்டத்திலே (வெட்ட வெளியிலே) பரப்பி உள்ளதெனக் கூறப்பட்டது. அதன் கிளைகளோ, பூமியிலே படர்ந்துள்ளது. மகத்தத்துவம், அகங்காரதத்துவம், பஞ்ச பூதங்கள் சப்தாதி விஷயங்கள் முதலானவைகளே அதன் கிளைகள். அதனுடைய இலைகளே வேதமாகும். அதன் இலைகளே நம் உலக வாழ்க்கைப் பயணத்திலே, நமக்கு நிழல் தந்து இங்குத் தங்க இடமளிக்கிறது.

மரத்தின் இலைகள் மக்களைக் கதிரவன் வெப்பத்திலிருந்து எப்படிப் பாதுகாக்கின்றனவோ அப்படியே, வேதங்கள், தர்ம அதர்மங்களை வெளிப்படுத்தி சுகத்தை அடைய துக்கத்தைத் துடைக்க வழிகாட்டுதலால் அந்த அஸ்வத்த மரத்தின் இலைகள் வேதங்கள் எனப்பட்டன.

இதை நன்கு உணர்ந்தவன் எவனோ அவனே வேதவித்தாகிறான். அதாவது வேதத்தை உள்ளபடி உணர்ந்தவனாகிறான்.

**அந்த மரத்தின் கிளைகளோ முக்குணங்களால் செழிப்படைந்து விஷய சுகங்கள் என்னும் தளிர்விட்டு மேலும் கீழுமாகப் படர்ந்திருக்கின்றன. நில உலகிலே அம்மரத்தின் விழுதாம் வேர்கள் வினையை விளைவிப்பனவாய்க் கீழ்நோக்கிப் பரவியுள்ளது. XV (2)**

*மரத்தின் கிளைகள் வளமுடன் செழிக்கத் தண்ணீர் உரம், உயிர்ப்பு இவை தேவை. (மரங்களும் மூச்சு விடுகின்றன, உள் வாங்குகின்றன) இங்குச் சொல்லப்படும் அஸ்வத்த மரமாகிய வாழ்க்கை மரத்திற்கு முக்குணங்களே காற்று; உரம் உயிர்ப்பாகின்றன. பிரகிருதியின் முக்குணங்களாலேயே இம்மரம் செழித்து வளர்கிறது. விஷய சுகங்கள் ஐம்புலன் நுகர்ச்சிகள் ஆகிய இவைகளே, மிலாறுகள், தளிர்கள் அல்லது மொட்டுகள்.*

*முக்குணங்களால் செழித்து வளர்ந்த கிளைகள் விஷயங்களால் மிலாறுகளாய்த் தளிர்களாய் மொட்டுக்களாய் பரிணமிக்கின்றன. குணங்கள் இருக்கும் வரை, கிளைகள் தளிர்த்துக் கொண்டேதான் இருக்கும்.*

*அந்தோ மனிதர்கள் முக்குணங்களால் ஆளப்பட்டு விஷய சுகங்களில் ஈடுபட்டுள்ளதால் பிரகிருதியின் அஸ்வத்த மரம் ஓங்கி வளர்ந்து கப்பும் கிளையும் இலையும் தளிர்களும் மொட்டுமாகச் செழித்து வளர்கிறது.*

*இந்த மரம் ஆலமரத்தைப் போல கிளைகளிலும் வேர்களை உடையது. ஆலமரத்தின் கிளையிலிருந்து கீழ்நோக்கிப் பாயும் வேர்களை விழுதுகள் என்கிறோம். ஆகாயத்திலே வேர்களைப் படர விட்ட, இந்த அஸ்வத்த மரமும் தன் கிளைகளில் இருந்து உற்பத்தி ஆகும் வேர்களைப் பூமியை நோக்கிப் பாயவிட்டு இம்மண்ணிலே அம்மரத்தைப் பிணிக்கிறது.*

*கீழ்நோக்கிப் பாயும் இந்த வேர்களே வாசனைகளாகும். ஆத்மாவோடு தொடரும் ஜென்மாந்திர வாசனைகளால்*

உண்டாகும் அவா, விருப்பு, வெறுப்பு, இன்பதுன்பங்களாகும். இவைகள், அந்த மரத்தைக் கருமங்கள், கரும பலன்களிலே உறுதியாகப் பிணித்து விடுகின்றன. இவைகளே, பிறப்பு இறப்பாம் பந்தத்தால் மனிதனைப் பிணிக்கின்றன.

இந்தக் கீழ்நோக்கிப் பாயும் வாசனையாம் இரண்டாந்தர வேர்கள் பூமியின் கீழே மறைந்திருந்து, கரும பலன்களை மாந்தர்களுக்கு நல்குகின்றன. பிறப்பிறப்பாம் சம்சாரத்திலே மாந்தரைப் பிணிக்கின்றன.

இவ்வுலகிலே இம்மரத்தினது வடிவம் புலப்படுவதில்லை. இம்மரத்திற்கு முதலும் இல்லை. முடிவும் இல்லை. ஒரே நிலை இல்லை. வலிவோடு அழுத்தமாக வேரூன்றிய இந்த அஸ்வத்த மரத்தைப் பற்றின்மை என்னும் உறுதியான வாளால் வெட்டி XV (3)

அதன் மூலம் எந்த இடத்துக்குச் சென்றவர்கள் மீண்டும் பிறப்பெடுப்பதில்லையோ—அவ்விடத்தைத் தேடி அடைய வேண்டும். எந்தப் பரம புருஷனிடமிருந்து நித்தியமான அழியாத மகாசக்தி பெருக்கெடுத்து வந்ததோ அந்த ஆதி புருஷனைச் சரணடைதல் வேண்டும். XV (4)

மனிதர்கள் இந்த அசுவத்த மரத்தினை முழுமையாகப் பார்ப்பதில்லை. அது என்ன உணர்த்துகின்றதென்பதை அவர்கள் புரிந்து கொள்வதில்லை. அவர்கள் அம்மரத்தின் மிலார்கள், தழைகள், கனிகள் இவைகளையே காண்கின்றனர். அதிலேயே அவர்கள் ஆழ்ந்து விடுகின்றனர். அவர்கள் தங்கள் இந்திரியக் கவர்ச்சிகளால் ஈர்க்கப்படுகின்றனர்.

இந்த மரத்துக்கு முதலும் இல்லை. முடிவும் இல்லை. ஏனெனில் அது மாயையில் இருந்து வெளிப்பட்டது. மாயைக்கு முதலும் முடிவும் ஏது?

பூதாகாரமாகப் பரந்து கிளைத்து அண்டத்தையே தன்னுள் அடக்கியது போல கவிந்து கொண்டிருக்கும். கப்பும்

கிளையும் தழையும், பூவும் பிஞ்சும் கனியும் வாய்ந்த இந்த மரத்தினைச் சுற்றிச் சுற்றி வருகிறான் மனிதன். இதிலேயே மயங்கிக் கிடக்கிறான். வேறுவழி அவனுக்குப் புலப்படவில்லை. வேறு வழி இருக்கிறதா என்பதை அவன் எண்ணிப் பார்ப்பதுமில்லை.

இப்படி மயக்கி மருட்டுகின்ற அந்த மரத்தை விட்டு வெளியேற வழி உண்டா? உண்டு. அந்த வழிதான் மகாத்மாக்கள், ஞானிகள், யோகிகள், சென்று; பின் இங்கு திரும்பாத வழி. அந்த வழியே செல்ல என்ன வழி? நீ அதைப் பற்றின்மை என்னும் கூர்மையான, வலிமை மிக்க, வாளால் வெட்டி வீழ்த்தி அதன் மூலம் உன் வழியை நீ அடைய வேண்டும். அவ்வழியே ஏகினால் பின் திரும்பி வாராத நிலையை நீ அடையலாம். பின் உனக்குப் பிறப் பிறப்பில்லை. சம்சார சாகரத்தில் நீ தத்தளிப்பதில்லை.

எவன் தன் ஆசைகளை எல்லாம் துறந்து பற்றென்பதே இல்லாமல் சுதந்திரமாக இவ்வுலகில் வாழ்கின்றானோ அவனே கிடைத்தற்கரிய சாந்தியை அடைகிறான். ஏனெனில் எவ்வகைப்பட்ட பற்றில் இருந்தும் முற்றிலும் விடுபட்டு—முழுத் துறவடைந்து—வாழ்தலே இறைவனை அடைய ஏற்ற வழியாகும். எனவே, நம் ஆத்மா, பொன், பொருள், உடைமை, வீடு வாசல், குடும்பம், நாடு, புகழ், பதவி அனைத்தையுமே அடியோடு துறந்துவிடும்படியான உள்ளத்துறவு பெறுதல் வேண்டும்.

ஐம்புலன் நுகர்ச்சிகளாம் விஷய போகங்களின் பின்னால் நாம் அலைந்து ஓடுவதைத் தடுத்தால் மட்டும் போதாது. அதிலே நாம் உவர்ப்பு கொள்ளுதல் வேண்டும். அச்சுவைகளிலே ஒரு வெறுப்பு நமக்குத் தோன்ற வேண்டும்.

உலகியலிலே வாழ்தலை விட்டு இறைவனிலே வாழ்தல் வேண்டுமெனில், எதையுமே எனதென்றிறாத பற்றின்மை வேண்டும்.

பொன், பொருள், சுற்றம், புகழ் முதலியவற்றினிடத்துள்ள பற்றைக் காட்டிலும், தன்னைத்தான் காதலிக்கும் பற்று மிக மிகச் சக்தி வாய்ந்தது. அந்தத் 'தன்னிலேதான்' கொண்ட மிகப் பயங்கரமான பற்றை அடியோடு அழித்தல் வேண்டும். இதையே 'தன்னுயிர்தான் அறப்பெற்றானை' என்கிறார் வள்ளுவ மாமுனிவர்.

இந்த 'தான்' என்பதை அடியோடு அழித்து விடுதல் தான் மகாபலியாகும்; (மகாயக்ஞமாகும்) மிகப் பெரிய தியாகம் அது. 'துள்ளும் மறியாம் மனதைப் பலி கொடுத்தேன்' என்கிறார் தாயுமான அடிகள்.

ஒரு சீடன் பல நாள் குருவிடம் பயிற்சி பெற்றவன். ஒரு நாள் தன் குருவிடம் கேட்டான்; 'குருவே நான் கடவுளைக் காண என்ன வழி?'

குரு இவனைப் பார்த்து "எதிலுமே ஆசை கூடாது அப்பனே! 'தான்' எனும் அகப்பற்றும் 'தனது' என்னும் புறப்பற்றும் துறந்து விட்டபின்னும் இந்தக் கடவுளைக் காண வேண்டும் என்னும் அவா உண்டாகின்றதே அதையும் துறத்தல் வேண்டும். அதையும் உள்ளத்தில் இருந்து நீக்கி விட்டால் 'அவனே' உன் முன் வருவான்" என்றாராம்.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்"

என்கிறார் திருமூலர்; இதுவே மனம் மாய்ந்தநிலை. "செத்தாரைப் போலே திரி" என்று பட்டினத்தடிகள் சொன்ன நிலை இதுவே.

எவன் ஒருவன் அனைத்து அவாக்களினின்றும், தன்னையும், அறத் துறந்து விடுகிறானோ, அவன் அகிலமனைத்தையும் சக்தியால் இயக்கும் அந்தப் பரம புருஷனிலே தன்னை ஆட்படுத்திக் கொள்ளுகிறான். அவனில் ஐக்கியமாகிறான். அத்தகைய அழியா நிலையினை அடைபவர்கள் யார் என்பதைக் கண்ணன் விளக்குகிறார்.

அகங்காரத்தை அடியோடு ஒழித்தவர்கள்; அவிச்சை (விவேகமின்மை) அற்றவர்கள்; பற்றினை வெற்றி கொண்டவர்கள்; ஆசையை அறவே ஒழித்தவர்கள்; பரமாத்ம ஞான நிஷ்டர்கள்; வாசனா மலத்தை;தேய்த்து அழித்தவர்கள்; இன்ப துன்பமாம் இருமைகளைக் கடந்தவர்கள்; மயக்க மொழிந்தவர்கள் ஆகிய இவர்களே அந்த அழிவில்லா நிலையினை அடைகின்றார்கள். XV (5)

*முந்தைய சுலோகத்திலே சொன்னபடி, தன்னைத் தான் அறப்பெற்று, பரமாத்மாவிலே தன்னை ஆட்படுத்திக் கொள்ளும் ஒருவனுக்கு இச்சுலோகத்திலே சொல்லப் படும் குணங்கள் தன்மைகள் அனைத்தும் இயல்பாகவே அமையும்.*

*இவன் தன் மனத்துக்கண் அடையக்கூடிய மாசுகள் எல்லாம் நீங்கப் பெற்றவனாகிறான். அதே நேரம் பரமாத் மாவிடத்திலே தீவிரமான நாட்டங்கொள்வதால் அவனிலே வாழ்கிறான். இப்படிப் பட்டவனுக்கு இயல்பாக அமைந்த குணங்களே மேலே கூறப்பட்டவை. இப்படிப் பட்டவன் அந்த பரமானந்தப் பேரின்ப நித்தியத்துவத்தை அடைதல் நிச்சயம்.*

*அந்த இடம் எப்படிப்பட்டது. விளக்குகின்றார் கண்ணன்:*

அந்த இடம் சுயம்பிரகாசமானது. (தானே விளங்கி ஒளிர்வது) சூரியனோ, சந்திரனோ தீயோ அங்கு விளக்கம் தருவதில்லை. அந்த இடத்தை அடைந்தவர்கள் திரும்பி வருவதில்லை. அதுவே எனது பரமபதம் ஆகும். XV (6)

*அங்கே, பரமாத்மாவின் பேரொளி நிரம்பி இருப்பதால், சூரியனோ சந்திரனோ, தீயோ, அவ்விடத்திலே தங்கள் ஒளியால் விளக்க மளிக்கத் தேவை இல்லை. நான்காம் சுலோகத்திலே சொன்னபடி எந்தப் பரம புருஷனிடமிருந்து நித்தியமான அழியாத மகா சக்தி பெருக்கெடுத்து வந்ததோ, அந்த ஆதி புருஷனைச் சரணடைந்தவர்கள். அனன்னிய*

சரணாகதி அடைந்தவர்கள், மீண்டும் வாரா நெறியை எய்தியவர்களே!

அந்த ஆத்மா எனும் ஜோதியை—பரமாத்மாவை—சூரியனோ, சந்திரனோ, தீயோ விளக்கம் செய்கிறதில்லை.

சூரிய சந்திர அக்னி எனும் புற ஒளிகள், விஷயங்களோடு இந்திரியங்கள் தொடர்பு கொள்ளத் தடையாகி நிற்கும் இருளைப் போக்கி அதன் மூலம் உபகாரம் செய்கின்றன. ஆனால் ஆத்மாவைப் பிரகாசிக்கச் செய்வது யோகம், ஞானம், பக்தி இவைகளே. இவைகளுக்குத் தடையாக நிற்பது பண்டைய கர்மம். இதை நிவர்த்தி செய்யக்கூடிய உபாயம் பற்றறுத்தலும் இறைவனிடத்திலே சரணாகதி அடைதலுமேயாம்.

இவ்வகையில் ஆன்மா எதையடைந்து மீண்டும் திரும்புவதில்லையோ, அந்த மகாஜோதியே என்னுடையது. அதுவே பரமபதம் ஆகும் என்று உரைக்கிறார், கண்ணன்.

**எக்காலத்தும் எனது அம்சமாகவும், அனாதியாகவும் உள்ள ஆத்மா, பிரகிருதியாகிய சரீரத்தில் அடங்கியுள்ள (இந்திரியங்களை அடுத்த) ஆறாவதான மனதையும் ஐந்து இந்திரியங்களையும் சம்சாரத்திலே (பிறப்பிறப்பிலே) புக இச்சை கொள்ளும்படிக் கவர்ந்து ஈர்க்கின்றது. XV (7)**

உலகம் என்னும் இந்த மகா மரத்திலே, உயிர்கள் தோற்றமளிக்கின்றன. அவைகளின் மூலம் எது? எப் பிறப்பிடத்திலிருந்து அவை தோன்றுகின்றன?

ஆத்மா என்பது பரமாத்மாவின் ஒரு கூறு, அம்சம். நித்தியமான அழிவற்ற நிலைபேறுடைய, பரமாத்மாவில் இருந்து தோன்றிய சுடர்ப்பொறிகள். இந்த உலகத்திலே ஜீவாத்மாக்களாகத் தனித்தனி உயிர்களாகப் பலப்பல உடல்களிலே குடிகொண்டு உலா வருகின்றன. எல்லா உயிர்களுமே பரம்பொருளின் சுடர்ப் பொறிகளே. அந்தோ, இதை மக்கள் மறந்து வாழ்கின்றனர். ஏனெனில்

அவர்கள் உலக மரத்தின் இலைகளிலே, காய் கனிகளிலேயே வாழ்கின்றனர்.

பரம்பொருளின் இச்சுடர்ப்பொறி உலகமாம் பருப்பொருளால் முகத்திரையிடப் பட்டுள்ளது. அது பிரகிருதி (மாயை)யிலே குடிகொண்டுள்ளது.

இந்த ஆத்மா ஐந்து இந்திரியங்களாலும்; ஆறாவதாக இந்த இந்திரியங்களை இயக்கும் மனத்தாலும் கவரப்பட்டு அதனால் அலைக்கழிக்கப்பட்டு உலக அரங்கிலே உலா வருகின்றது.

**ஆத்மா எந்த உடலை அடைகின்றதோ; அல்லது எந்த உடலைவிட்டு வெளியேறுகின்றதோ, அந்த உடலினின்றும் மணமிக்க மலரிலிருந்து காற்று அதன் மணத்தைச் சுமந்து கொண்டு போவதைப் போல இந்திரியங்களையும் மனத்தையும் உடலின் இறைவனாம் ஆத்மா கிரகித்துக் கொண்டு போகின்றது.** XV (8)

ஆத்மா எப்பொழுது ஒரு உடலை விட்டு வேறொரு உடலை அடைகின்றதோ, அப்பொழுது அது இந்திரியங்களையும் மனத்தையும் தன்னுடன் இழுத்துக் கொண்டு போகின்றது. ஏனெனில் தன்னுடைய கர்ம பலன்களை ஆத்மா அனுபவிக்க வேண்டி இருப்பதால், தானெடுக்கும் புதிய உடல் மூலமாக, கர்மபலன்களைத் தான் அனுபவிக்க அனுகூலமாக இருக்கும்படி இந்திரியங்களையும் ஆத்மா உடன் கொண்டு செல்கிறது.

அதாவது பூத உடலை நீத்துச் செல்லும் ஆத்மா, தன்னுடன் நுண்ணுடலைச் சுமந்து செல்கிறது. அந்த நுண்ணுடல் இந்திரியங்கள்; மனம், இவைகள் ஆற்றிய கர்மங்களின் நுட்பங்களை—சூட்சும பாகங்களைத்—தன்னுடன் சுமந்து சென்று மற்றோர் உடலை அடைகின்றது.

காற்றுக்கு இயற்கையாக மணம் இல்லை. ஆனால் அக் காற்று மலரின் மணமாகிய நுட்பமான தேகத்தைத்

*தன்னுடன் சுமந்து செல்கிறதே அதைப்போலவே அப்பழுக்கற்ற ஆத்மா உடலின் கரும பலன்களைத் தரும் இந்திரியமனங்கள் ஆற்றிய கருமங்களின் சூட்சும பாகத்தைச் சுமந்து சென்று வேறோர் உடலை அடைகின்றது.*

**மாந்தன், மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இவைகளைத் தன்னுடையதாக்கிக் கொண்டு உலக விஷய போகங்களை அனுபவிக்கிறான்.** XV (9)

*அதாவது நம் உயிர், இந்திரியங்கள், மனம் இவைகளின் துணையில்லாமல், உலக விஷயசுகங்களில் ஈடுபட முடியாது; துய்க்க இயலாது. நாம், நம் கர்மங்களுக்கு; ஏற்பவே விஷய சுகங்களில், துக்கங்களில் ஈடுபட, இந்த தேகம் நம்மை அடைந்துள்ளது. இந்த விஷய போகங்களை அனுபவிக்கவென்றே இந்திரியங்கள் மனம் இவைகளை (கிரகித்துக் கொண்டு) தன்னுடன் பற்றிக் கொண்டு போகின்றதாக முன்சூத்திரத்திலே சொல்லப்பட்டது.*

**இந்த உடலிலே குடிகொண்டிருப்பவனை, இந்த உடலை விட்டு வேறோர் உடலுக்குக் குடிபோகின்றவனை இவ் உடலிலேயே இருந்து கொண்டு விஷய சுகங்களை அனுபவிக்கின்றவனை முக்குணங்களோடுகூட இருப்பவனை (அதாவது இந்த ஆத்மாவை) மூடர்கள் அறியமாட்டார்கள். ஞானக் கண்ணுடையவர்களே அறிவார்கள்.** XV (10)

*சாக்கிராதி மூன்று அவத்தைகளால் (அதாவது விழிப்பு நிலை, கனாநிலை உறக்க நிலைகளால்) மாறி மாறி வந்து கொண்டிருக்கும் தூல சூக்கும, காரண சரீரங்களை, சுட்டிச் சுட்டி இது நான், இது நான் என்றும், விஷயங்களை எனதென்றும் அனுபவிக்கும், முக்குண ரூபமான, அஞ்ஞானத்தின் தாக்கத்துக் குட்பட்ட, மனிதர்களையே அஞ்ஞானிகள்—மூடர்கள் எனப்படுகிறது.*

*இந்த உடலுக்குள்ளே குடி கொண்டுள்ள, மூன்று நிலைகளிலும் சஞ்சரிக்கின்ற ஆத்மாவாகிய அறிவே நான் என்றும்*

*தூல, சூக்குமை, காரண உடல்கள், என்னால் அறியப்படு வனவே அவை என்னை அறியமாட்டா எனவும், இந்த உடல்தான் ஜடம், நானோ சித்து எனவும், பிரகிருதியின் தொடர்பால்தான் இந்த ஆத்மாவாகிய எனக்கு விஷய சுகங்களில் ஈடுபாடு உண்டாயிற்றெனவும், தெளிந்தவர்கள் யாரோ அவர்களே ஞானிகள், ஞானக்கண் உடையவர்கள்.*

*இந்த வகையிலே ஞானக்கண்களை உடையவர்களே ஆத்மாவை உள்ளபடி அறிவார்கள். அவர்களே ஆத்ம ஞானிகள் ஆவார்கள்.*

**யோகம், தியானம், பக்தி ஆகிய இவைகளால் ஆத்ம தரிசனம் பெற முயல்கின்ற யோகியர்; இந்த ஆத்மாவைத் தங்களுக்குள்ளே உள்ளனவாய்க் காண்கின்றனர். ஆத்ம பரிபாகமற்ற—சித்த சுத்தி இல்லாத—மூடர்கள் எத்தகைய பிற முயற்சிகளை மேற்கொண்ட போதிலும் இந்த ஆத்மாவைக் காண்பதில்லை.** XV (11)

*மனிதன் பலப்பல வழிகளில் பலவற்றை இந்த உலகிலே அடைய முயல்கிறான். போராடுகிறான். பண்பட்ட மனதுடைய சித்த சுத்தியுள்ள யோகியர்; யோகத்தினால் தியானத்தினால், பக்தியால், இடையறாது முயன்று, ஆத்ம தரிசனம் அடையப் பெறுகின்றனர். சித்த சுத்தியில்லாத மனப் பரிபாகமற்றவர்கள், எத்தனை காலம் முயன்றாலும்; தவம், தானம், இவற்றை அளவின்றிச் செய்தாலும், முக்குண கருமங்களுக்கு உட்பட்டவர்களாய் ஆத்மாவை அறியும் ஞானமின்றிப் பிறப்பிறப்புக்குட்படுவார்கள்.*

**சூரியனிடத்தில் இருக்கின்ற எந்தப் 'பிரகாசமானது உலகம் முழுமையும் விளக்கம் செய்கின்றதோ, சந்திரனிடத்தில் எவ் விளக்கம் பொருந்தியுள்ளதோ, தீயினிடத்திலே எவ்வொளி விளக்குகின்றதோ அந்த அனைத்து ஒளி வெள்ளங்களும் என்னுடைய மேலான ஜோதி என்றறிக.** XV (12)

இறைவன் ஒளிமயமானவன். அவனால் அருளப்பட்ட
வைகளே, சூரிய, சந்திர தீயின் விளக்கங்கள். அவனை
"தேஜோ மயானந்தன்" என்கிறார் தாயுமானவர். அந்த
தேஜோ மயத்தின்முன், சூரியன், சந்திரன் அக்கினி முதலிய
வைகள்; சூரியன் முன் மின்மினி போல் ஒளி இழந்தவைகளே.

எனவேதான் பரமாத்ம தரிசனம் பெற்றவர்கள்,
அவனை ஜோதிவடிவாய்க் காண்கின்றனர். அருட்பெருஞ்
ஜோதி ஆண்டவன் என்கிறார் வள்ளலார்.

சுலோகத்தின் முதலிலே சொன்ன மூவகை ஒளிகளும்
இறுதியில் சொல்லப்பட்ட ஆத்மப் பிரகாசமான ஜோதி
வடிவத்தின் முன் ஒன்றுமில்லாதவைகளே.

சூரியனும் சந்திரனும், தீயும், பரம்பொருளினிடத்
திருந்து வருபவைகளே. அவை ஜடப் பிரகாசம். ஈஸ்வரனே
ஆத்மபிரகாசம், அல்லது ஆத்ம சைதன்யம். ஜடப்பிரகா
சத்தை ஆத்மப் பிரகாசம் அறிகிறது. இவைகளை நன்கு
உணர்பவனே ஆத்ம ஞானி. அவன் இறைவனைப் பரஞ்
சோதியாய் காண்கிறான்.

நான் என்னுடைய ஓஜஸ் என்னும் சக்தியால் பூமியினுள்
பிரவேசித்து தடையற்ற என் வல்லமையால் உயிர்களைத்
தாங்குகிறேன். அமிர்தரச வடிவமான சந்திரனாகவும் நின்று
பயிர்களை எல்லாம் போஷிக்கிறேன். XV (13)

இந்த அண்டங்கள் அனைத்தையும் தாங்கி நிற்பவன்
இறைவன். அவனுடைய அந்தச் சக்தியே ஓஜஸ் எனப்படு
கிறது. "அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம் அளப்
பருந்தன்மை வளப் பெருங்காட்சி. ஒன்றனுக்கு ஒன்று
நின்று எழில் பகரின் நூற்றொரு கோடியின் மேற்பட விரித்
தன" என்கிறது திருவாசகம். இப்படி நூறு நூறு கோடி
களாய்ப் பரந்துள்ள கோளங்கள் அனைத்தையும் தாங்கி
நிற்பது இறைவன் சக்தி அதாவது (ஓஜஸ்). இந்த சக்தியே
உயிர்கள் அனைத்தையும் தாங்குகின்றது.

மேலே உள்ள சுலோகத்திலே சொன்னபடி சந்திரனு டைய கதிர்களும் இறைவன் ஒளியே. எனவே அந்தப் பரப் பிரம்மமே, சந்திரனுடைய அமிர்த தாமரையாகப் பொழிந்து பயிர்களை எல்லாம் செழிக்க வைக்கின்றன. இஃது பரமாத்மாவின் ஆற்றலை விளக்குகின்றது.

**மேலும் நான் உதரக்கனலாகி (ஜடராக்கினி) நின்று, உயிர் களின் உடலிலே நிலவி, பிராண அபான வாயுக்களுடன் கூடி, நான்குவித உணவு வகைகளைச் செமிக்கிறேன். XV (14)**

உலகனைத்தையும் தாங்குகின்ற ஆற்றல் மட்டுமல்ல, ஒவ்வொருவர் உடலுள்ளும் இயங்குகின்ற பிராணன், அபானன் எனும் காற்றாகவும் உள்ளவன் அவன். உண்ணல் தின்னல் நக்கல் பருகல் எனும் நான்குவிதமான உணவு களைத் தானே உதிரக்கனலாக நின்று செமிப்பவனாகவும் இருப்பவன் பரமாத்மாவே.

பரமாத்மாவின் ஆற்றல் அளவிடற்கரியது. உலகனைத் தையும் தாங்குபவன் அவனே. உயிர்களையும் பயிர்களையும் காப்பவனும் செழிக்க வைப்பவனும் அவனே. இவைகள் அன்றி மற்றுமோர் மகிமையும் அவனுக்குண்டு.

**நான் எல்லாருடைய உள்ளத்திலும் அந்தர்யாமியாக— ஒருவரும் அறியாதபடி இருக்கிறேன். என்னாலே தான் நினைவும் அறிவும் மறதியும் உண்டாகின்றன. சகல வேதங் களினாலும் அறியத்தக்கதான வேதாந்தத்தைச் செய்வனே அறிபவனும் வேதங்களால் அறியப்படு பொருளும் நானே. வேதாந்த குருவும், வேதவித்தும் நானே. XV (15)**

பரப்பிரம்மம் எல்லாருடைய உள்ளத்திலும் அறிவு மய மாக வீற்றிருக்கிறார். 'என் சித்தமிசை குடிகொண்ட அறி வான தெய்வமே' என்கிறார் தாயுமானார்.

இந்தக் காரணத்தினாலேயே—அதாவது இறைவன் ஒவ்வொருவர் உள்ளத்துள்ளேயும் வீற்றிருப்பதாலேயே அவனிலிருந்துதான் எல்லா நினைவலைகளும் எழுகின்றன.

நினைவு என்பது, தன் அனுபவத்திலிருந்து—எழுகின்ற அறிவும், அதனால் சித்தத்திலே பதிந்துள்ள, முத்திரையாம் சித்திரமுமே ஆகும்.

அறிவு என்பதோ, தன் புலன்களால், சூழ்நிலைக் கேற்பத் தான் அறிந்து உணர்ந்தவற்றைப் பற்றிய உறுதி யான முடிவு ஆகும். தான் கற்ற கேட்டவற்றைப் பற்றியதும் சிந்தித்து முடிவெடுத்தவைகளும் அறிவே ஆகும்.

இவைகள் யாவுமே இறைவன் சித்தத்தின்படியே நடை பெறுகின்றன.

மறதியும் இப்படிப்பட்டதுதான். நினைவுக்கு நேர் மாறானது மறதி. இந்த மறதிக்கும் காரணன் பரப்பிம்மமே. நினைவின்அழிவு மறதி. அறிவின் அழிவுஅறிவின்மை—இவை கள் அனைத்துக்கும் காரணன் அவனே என்க. ஏனெனில் இவையாவுமே சித்தத்தின் செயல்கள். சித்தமிசை குடி கொண்டிருப்பவன் இறைவன். எனவே, இவையாவும் ஆத்ம சைதன்யத்தின் செயல்களே. எனவேதான் கண்ணன் நினைவும் ஞானமும் அவற்றின் அழிவும் என்னிடமிருந்தே உண்டாகின்றன என்கிறார்.

வேதங்களால் அறியப்படுபொருள் அவன். ஏனெனில் அவனே வேதம். வேதமே அவன் உரு. வேதம் என்பது பிர பஞ்ச இயற்கை. இப்பிரபஞ்சம் அனைத்துமே அவன் உருவம். இப்பிரபஞ்சம்அவன் மகிமையையே வெளிப்படுத்து

வேதம் என்பது ஞானம். ஞானத்தால் அறியப்படும் பொருள் அவன். ஏனெனில் அவன் அறிவு சொரூபன்; ஞானமயமானவன். எனவே ஞானத்தால் அறிபொருள் ஞானசொரூபனே ஆகும் அல்லவா?

இது வேதத்துக்கு அந்தமான வேதாந்தம் எனப்படும்—ஞான காண்டத்தினை அதாவது உபநிடதங்களைச் செய்த வனும் அவனே. எப்படி எனில் அவனன்றி தத்துவமே

மலை. எனவே தத்துவங்களைப் பகரும் வேதாந்தமும் இவைகள் அனைத்துக்குமே வித்தாக உள்ளவனும் அவனே. வேத வித் என்பதற்கு வேதத்தை உள்ளபடி அறிந்தவன் என்பது பொருளாகும்.

இவ்வுலகிலே க்ஷரன், அக்ஷரன் என இரண்டே புருஷர்கள் தாம் உண்டு. பிறப்பு இறப்புகளுக்குட்பட்டு வடிவம் எடுத்தவர்கள் எல்லாம் க்ஷரன்(அழியும்தன்மை) உடையவன். ஆனால் கூடஸ்த புருஷன் மட்டுமே அழியாத்தன்மை வாய்ந்த அக்ஷரன் ஆகிறான். XV (16)

க்ஷரம் அல்லது க்ஷரப் பிரகிருதி என்பது மாறிக் கொண்டே இருப்பது. அழியும் தன்மை வாய்ந்தது. தற்காலிகமானது. வரையரைக்குட்பட்ட வாழ்க்கை நிலை உடையவை க்ஷரப் பிரகிருதிகள்.

அக்ஷரப் பிரகிருதி என்பது சைதன்ய சக்தி. இதிலிருந்தே க்ஷரப் பிரகிருதி உற்பத்தி ஆகிறது. இந்தச் சைதன்ய சக்தி என்பது கூடஸ்தன் என்றும் அழைக்கப்படும். இதுவே மாயை எனப்படுகிறது. இது எந்த வகைப்பட்ட மாறுதலுக்கும் உட்படாதது. அழிவில்லாதது. நித்தியமானது. இது பரப்பிரம்மத்தைச் சார்ந்துள்ள மாயா சக்தி.

சகுண பிரம்மத்தின் பலப்பல வடிவங்களான சிவன், சக்தி, முருகன், விஷ்ணு முதலியவைகள் ஒன்றாகி கூடஸ்த பிரம்மம் எனப்படுகிறது. எனவே அவை பரமாத்மாவைச் சார்ந்துள்ள மாயா சக்தியின் பலப்பல வடிவங்களாகும். இதுவே அக்ஷரன் என்றும், நிலைத்திருக்கும் அக்ஷய புருஷன் என்றும் கூறப்படுகிறது.

இனி க்ஷரன், அக்ஷரன் எனும் இரண்டுக்கும் அன்னிய மானவராக உள்ளவரே புருஷோத்தமன் எனும் பரப்பிரம்மம். அவர் மாறுபாட்டுக்குட்படாத அழிவற்ற ஈஸ்வரன், நிர்விகாரப் பரமாத்மா என்று அழைக்கப்படுவர் அவரே. அகில உலகத்தையும் ஊடுருவி நின்று அவரே அதைத் தாங்குகிறார். XV (17)

அழிவுக்குட்படுபவை, அழியாதவை எனும் இரண்டுக்கும் அன்னியமான உள்ளவன் புருஷோத்தமன்.

எப்பொழுதும் மாறுதலையுடையும் இந்த உலகிலே பிறந்துள்ள உயிர்கள் அனைத்தும் மாறுதலுக்கும் அழிவுக்கும் உட்படும் க்ஷரமே. ஆனால் அக்ஷரமோ மாறுதலுக்குட் படாத, அழிவற்ற மகாசக்தி. மாறுதலற்ற நித்தியமான ஒன்றாகிய ஆத்மா. மாறுதலுக்குட்பட்ட அநித்தியமான ஒன்றுக்குள்ளே (உடலுக்குள்ளே) இருக்கிறது.

எப்பொழுது இந்த ஆத்மா தன் சிரத்தையாலும் யோக ஞானப் பயிற்சிகளாலும் மாறுதலற்ற நித்தியமான நிலைக்கு மாற்றம் அடைகின்றதோ, அப்பொழுதே உலகியல்—உலக இயக்கம்—அதனின்றும் விலகி வீழ்ச்சியடைந்து விடுகிறது.

இந்த இரண்டும் ஒத்திணைந்து வாராத இருதுருவங்கள் அல்ல. ஏனெனில் பரப்பிரம்மம், ஒன்றாகி இரண்டாகிப் பலவுமாகி இருக்கிறது. பிறப்பிறப்புக்குட்படாத நித்திய வஸ்துவான அதுவே உலகத்திடையே பாய்ந்து பெருக்கெடுத் தோடும் மகாசக்தியாகவும் உளது.

தன்னுள்ளேயே, காலங்கடந்த நித்திய வஸ்துவான (ஆத்மா) அக்ஷரத்தையும், காலம் சார்ந்த நிலையற்ற முதலும் முடிவும் உடைய (உலகம்) க்ஷரத்தையும் கொண் டிருப்பவனாயினும், அவைகளிலிருந்து அன்னியனாய் அப்பாற்பட்டவனாய் உள்ளவனே புருஷோத்தமன் ஆவான்.

**க்ஷரத்தையும், அக்ஷரத்தையும் கடந்து மேம்பட்டவனாக நான் இருக்கும் காரணத்தினால், உலகத்திலும், வேதத்திலும், நான் புருஷோத்தமன் என்று புகழப்படுபவனாக இருக்கிறேன்.**
XV (18)

க்ஷரம் என்பது மாறுதலுக்குட்பட்ட அழியும் தன்மை வாய்ந்த இந்த உலகம். இதை ஒரு (உலக) மரத்தோடு ஒப்பிட்டு இந்த அத்தியாயம் முதற் சூத்திரம் இயம்பிற்று என்பதைக் கண்டோம்.

அக்ஷரம் என்பது உலகுக்கு மூலகாரணமாகி விளங்கும். மூலப்பிரகிருதியோடு கூடிய ஈஸ்வரன். இதுவே சித்சக்தி.

இந்த இரண்டுக்கும் மேம்பட்டவனாக, இரண்டையும் கடந்தவனாக, இருப்பவனே புருஷோத்தமன்.

சேவை பெறும் பரம் பொருள் புருஷோத்தமன். சேவை செய்பவன் (ஆத்மா) ஜீவன்; அக்ஷர புருஷன். இந்தச் சேவைக்குக் காரணமாகச்—சாதனமாக உள்ளது இவ்வுலகம் (க்ஷரம்).

1. அடைய வேண்டிய பொருள் )றைவன்—புருஷோத்தமன்

2. அடைய முயல்பவன் ஆத்மா (அக்ஷரம்)

3. இந்த முயற்சிக்குச் சாதனமானது உலகு (க்ஷரம்)

பாரதா! இங்ஙனம் மயக்கமற்றவனாய் என்னையே புருஷோத்தமன் என்று எவன் அறிகின்றானோ அவனே எல்லாவற்றையும் அறிந்தவனாகிறான். அவனே தன் முழு மனதோடும் என்னைப் போற்றுகிறான். (பூஜிக்கிறான்)
XV (19)

ஐயத்திற்கும் திரிபுக்கும் உட்படுபவன் மயக்க அறிவடைகிறான். அவன் உள்ளபடியான உண்மைகளை அறியும் சக்தியற்றவன். க்ஷரத்தையே அக்ஷரமெனச் சாதிப்பான். அக்ஷரத்தை க்ஷரமென நம்புவான்.

ஆனால் இந்த மயக்க அறிவு நீங்கப் பெற்றவன் (மதிமயக்கமில்லாதவன்) பரம் பொருள் யாது என்பதை அறியும் ஞானம் அடையப் பெறுகிறான். தன்னை அறிந்து தலைவனை அறிந்தபின்னர், ஒருவனுக்கு அறிய வேண்டியது ஒன்றுமே இன்று. எனவே அவன் எல்லாம் அறிந்தவனாகிறான்.

எவன் மயக்க அறிவாம் அறியாமையில் இருந்து நீங்கி (ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு) நிச்சய ஞானத்தோடு கூடியவனாக, மேற்கூறியபடி என்னையே தான் அடைய வேண்டிய புருஷோத்தமனாக அறிகின்றானோ அவனே யாவற்றையும் அறிந்தவன். பூரணப் பொருளான என்னை சகலத்திலும் உறையும் ஆத்மாவாகக் கண்டு, எல்லாவிதத்தி லும் என்னையே அவன் ஆராதிக்கிறான் என்பதாம்.

பாபமற்றவனே! அர்ஜுனா! இந்தப் பரம ரகசியமான சாத்திரம் என்னால் உனக்கு உரைக்கப்பட்டது. இதை அறிபவன் எவனோ அவன் ஞானியும் தன் கருமங்களைச் சரிவரச் செய்தவனுமாகிறான்.

பகவத் கீதையின் இந்த அத்தியாயம் மட்டுமே, கண்ண னால் சாத்திரம் என்று கூறப்பட்டுள்ளது. ஏனெனில் சகல சாத்திரங்களின் சாரமும் இதில் அடங்கி இருப்பதால் என்க. அர்ஜுனன் பாவமற்றவன், குற்றமற்றவன் என்பதால் கண்ணன் இதைப் பார்த்தனுக்கு உரைத்தருளினார்.

இதை ஆழ்ந்து கற்று, மயக்கத்தில் இருந்து நீங்கித் தெளிந்தவனாய் ஞானியாகி விட்டவனுக்குத் தான் செய்ய வேண்டிய மேலான கடமை வேறு யாதொன்றும் இன்று. எனவே அவன் கடமை முற்றுப் பெற்றதாகிறது.

ஞானம் ஒருவனுக்குப் பக்தியை நல்கி விடுகிறது. தனக்குத் தேவை பரம் பொருளே என்னும் உணர்வை அளிக்கிறது. தனக்கு மிகவும் அன்பான, மனைவி மக்கள், செல்வம், புகழ், கல்வி யாவும் உலக மரத்தின் பூ, பழம் என்பதை அவன் உணர்கிறான். தன்னுடைய வாழ்க்கையில் தான் அடைய வேண்டியது பரம் பொருளே என்பதை ஞானம் அவனுக்கு உணர்த்தி விடுகிறது. எனவே இவ்வகை யில் அந்த ஞானி தன் கருமங்களைச் சரிவர முடித்தவனா கிறான்.

(15ஆம் அத்தியாயம் முற்றும்)

அத்தியாயம்—16

# தெய்வத் தன்மையும் அசுரத் தன்மையும்

இவ்வுலகிலே வாழும் மனிதர்களிலே பலப்பலர் அசுரத் தன்மை வாய்த்தவர்கள். வெகு சிலரே தெய்வத்தன்மை வாய்த்தவர்கள்.

தெய்வத்தன்மை வாய்த்தவர்கள் சுபாவத்திலேயே இறையருளைச் சார்ந்தவர்கள். அவர்கள் இந்த உலகிலே வாழ்ந்திருந்த போதிலும் மாயையால் அலைக்கழிக்கப்படாதவர்கள். அவர்கள் ஆசையால் ஆட்கொள்ளப்படாதவர்கள். அவர்கள் யோக நெறியிலேயே, தடம்புரளாமல் செல்பவர்கள். போகத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டவர்கள் அவர்கள். அவர்கள் தன்மை என்னென்ன? கீதை கீழ்க்கண்ட இருபத்தாறு குணங்களைக் கூறுகிறது.

பகவான் அருச்சுனனுக்குக் கூறுகிறார்.

**அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்திருத்தல். ஈகை, புறக்கரணங்களை (புலன்களை) அடக்குதல். யாகம், சாத்திரங்களைக் கற்றல், தவம் செய்தல், நேர்மை; XVI (1)**

**அகிம்சை (தீங்கிழையாமை) உண்மை, சினமில்லாமை, துறவு, அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடத்திரக்கம்,**

பிறர் பொருளை விரும்பாமை, மிருதுத்தன்மை; நாணம் மனத்திண்மை' XVI-(2)

தைரியம், பொறை, மனஉறுதி, உடல்தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கில்லாமை, ஆகிய இவைகள் தெய்வ சம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன. XVI-(3)

மேலே சொல்லப்பட்ட இருபத்தாறு குணங்களையும் ஒவ்வொன்றாக இப்பொழுது நாம் ஊன்றிக் கவனிக்கலாம்.

## 1. அஞ்சாமை

உலகிலே வாழ்கின்ற பல மாந்தர் ஏக்கம் நிறைந்த வாழ்க்கை வாழ்கிறார்கள். ஏனெனில் அந்தப் பலர் கடவுளிடம் அன்பு செலுத்துவதில்லை. தன் உள்ளத்திலே கடவுளை வைத்துப் பூஜிப்பவன் எதற்கும் அஞ்சமாட்டான். தன் கடமையைக் கடவுள் பணியாகக் கருதுகின்றவன் பயத்தைத் தன்னிடமிருந்து விலக்கி விடுகிறான்.

## 2. உள்ளத்திலே தூய்மை

''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்'' என்கிறது குறள். உள்ளத்தூய்மை என்பது வஞ்சமற்ற மனம் உடைமை. இதுவே ஆத்மாவின் தூய தனித்தன்மை. வாழ்க்கையில் ஏற்படும் பயங்கரப் புயல் அனைத்தையும் வென்று நிற்பதால் அடையப்படுவதே உள்ளத்தூய்மை. இதை எய்த நாம் அடிக்கடி உச்சரிக்க வேண்டிய மந்திரம்;

"உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்,'' என்பதே ஆகும். தூய உள்ளம் உலகியல் அனைத்தையும் உதறித் தள்ளிவிட்டு, கடவுளை மட்டுமே அதில் இருக்க அனுமதிக்கிறது.

## 3. ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்திருத்தல்

இது ஞான, யோகப் பாதைகளிலே, நடை பயிலும் காலத்திலே, அமைய வேண்டிய மன உறுதி ஆகும். இந்த உறுதி

கண்டமை, ஞானத்தையோ, தத்துவத்தையோ தேடி அலையும் தன்மையல்ல. இது யோக ஞான அப்பியாசம், அன்றாட வாழ்க்கை முறையிலே கை கொள்ள வேண்டிய இடைவிடாத பயிற்சி முறை.

4. ஈகை

அதாவது பிறருக்கு ஈதலாம் அறம்.

நமக்கு இந்த உலகிலே கிடைப்பவை அனைத்தும் இறைவனால் அருளப்பட்டவைகளே. அவைகளைத் தாராளமாகத் துன்பப் படுகின்றவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியமில்லை உயிர்க்கு''

என்கிறார் வள்ளுவர்

ஈகை கைகளின் செயல் அல்ல. இதயத்தின் செயலே அது. இதயத்திலே சுரக்கின்ற அருள் காரணமாகப் பிறருக்குச் செய்கின்ற உதவி யாவுமே ஈகைதான். அறமே, தருமமே ஈகையாம்.

யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே

என்கிறார் திருமூலர்.

5. புறக்கரணங்களை அடக்குதல்

அதாவது புலனடக்கம்.

யோகம், தவம் யாவுமே புலனடக்கத்திலேயே அடங்கி இருக்கின்றன. புலன்களை வெற்றி கொள்ளாதவன் மேற் கூறிய யோகம் ஞானம் தவம் இவ்வகைகளை மேற் கொள்ளல் இயலாத செயலாகும்.

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து''

என்கிறது தமிழ்மறை.

முரட்டுக் குதிரைகளை எப்படி நாம் பழக்கப்படுத்து கின்றோமோ, அதைப் போலவே முரட்டுத்தனம் வாய்ந்த ஐம்புலன்களையும் நாம் அடக்கிப் பழக்கி, ஆள வேண்டும். ஆசை, பசி, காமம், குரோதம், லோபம், மதங்களாம் இவை களை நாம் அடக்கி ஆள வேண்டும்.

அதாவது நம்மை நாம் வென்று; நம்மை நாம் ஆளக் கற்றுக் கொள்ளல் வேண்டும்.

6. யாகம் — வேள்வி செய்தல்

வேள்வி என்பது தத்தம் கடமைகளைச் சரிவர ஆற்றுதல். தத்தம் கடமைகளை ஆற்றும் காலத்தில் அதை இறைவனுக்கு அர்ப்பணித்து செய்தல் யாகம் ஆகிறது. தன் கடமைகளை மட்டுமல்லாமல் தன்னையே ஒப்படைத்து விடுதலே உயர்ந்த வேள்வி. அதாவது தன்னையே தியாகம் செய்துவிடல் யாகம். பல யாகங்களில் உயிர்ப்பலி கொடுப்பார்கள். ஆனால் அவர்கள் தம் மனதைப் பலி கொடுப்பதில்லை. ''துள்ளும் மறியாம் மனதை பலி கொடுத்தேன்'' என்கிறார் தாயுமானார். அதாவது தன் மனமாகிய ஆட்டுக்குட்டியை பலியாக்கி விடுதலே உயர்ந்த யாகமாகும்.

7. சாத்திரம் பயிலல்

உலகியல் நூல்களைப் படித்தல் வேறு; சாத்திரம் பயிலல் வேறு.

முதல் வகையிலே; கலை, இலக்கிய, விஞ்ஞானம் அடங்கும். ஆனால் இவை யாவும் ஆத்ம போதத்தை வளர்க்காது.

இரண்டாவது வகையோ, ஆத்ம போதத்தினை உண்டாக்கி அதை மேலும் வளர்க்கும். சாத்திரப்பயிற்சியால் விவேக வைராக்கியம் எய்தி, ஞானம் முற்றி இறையருள் எய்தப் பெறுகிறோம். அதனாலேயே சுவாத்தியாயம் என்று சொல்லப்படும் சாத்திரப் பயிற்சி மக்களுக்கு இன்றியமையாததாகின்றது.

## 8. தவம்

தான் எய்த வேண்டிய புனிதமான தெய்வீக நெறிக்கெனத் தான் மேற்கொள்ளும் தவமுயற்சியிலே ஏற்படும் துன்பங்களைச் சகித்துக் கொள்ளுதல் தவம் ஆகும். உற்ற நோய் நோன்றல் தவத்துக்கு உரு என்கிறது குறள். மன, மொழி, மெய்களில் தூய்மை, உண்மையே நினைத்தல், பேசுதல், செய்தல், ஆடம்பரங்களை அறவே விலக்கி விடுதல், இவைகள் தவத்தின் தன்மைகள்

## 9. நேர்மை

வாழ்க்கையிலே ஒருவன் நேர்மையான வழியிலே நிற்றல் வேண்டும்; நடத்தல் வேண்டும். சிந்தை, சொல், செயல்களில் எவ்விதமான கோணலும் இல்லாமல் செப்பமாக, ஒழுங்காக வாழ்தலே நேர்மையான வாழ்க்கை ஆகும்.

## 10. அகிம்சை

பிற உயிர்களுக்கு எந்த வகையிலும் உடல், மனம், மொழிகள், எதனாலும் தீங்கு செய்யாமையே அகிம்சை ஆகும். நாம் மனிதனாகவே, மனிதத் தன்மையோடு வாழ்தல் வேண்டுமே ஒழிய மிருகமாக மாறுதல் ஆகாது. அனைத்துயிர்களுமே இறைவன் ஆலயம் என்று கருதும் தெய்வ சம்பத் உடையவன், பிற உயிர்கட்குச் சிறிதும் தீங்கிழைக்க எண்ணவும் மாட்டான்.

## 11. வாய்மை

நாம் அன்றாட வாழ்க்கையில் வாய்மையைக் கடைப் பிடித்தல் இன்றியமையாதது. உள்ளது உள்ளபடியே உணர்ந்து பேசுவது மட்டும் வாய்மை ஆகாது. நம்முடைய வாய்மையான பேச்சால் யாதொரு தீமையும் யார்க்கும் உண்டாகாதவாறு பேசுவதே வாய்மை. அதோடு, இறைவன் ஒருவனே உண்மையானவன். பிற யாவும் பொய்யானவை என்பதை உணர்வதும், அதைப் பிறர்க்குச் சொல்வதும், அம்மெய்ப்பொருள் வழி ஒழுகுவதும் வாய்மையே ஆகும்.

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவார்
மற்றீண்டு வாரா நெறி (குறள்)

## சினமின்மை

தெய்வ சம்பத்துடையவர்கள் கோபமோ குரோதமோ கொள்ளுவதில்லை. தங்களுக்குக் கேடு செய்தவர்களிடமும் எக்காலமும் அவர்கள் சினம் கொள்ளுவதில்லை. பிறர்கள் தமக்கு எரிச்சலை உண்டாக்கினாலும் அவர்கள் சினம் கொள்ள மாட்டார்கள். சினம் என்பது சேர்ந்தாரைக் கொல்லி. ஆகையினால் அதை அவர்கள் கணப்பொழுதும் தங்களிடம் வர அனுமதிப்பதில்லை.

## 13. துறவு (தியாகம்)

இவர்களிடம் இயல்பாகவே உள்ளத் துறவு பொருந்தி இருப்பதால் இவர்கள் முற்றத் துறந்தவர்களாய் தியாக வாழ்க்கை வாழ்பவர்களாவார்கள். தம் உயிரையும், பிறருக்கு வழங்கும் உத்தமர்கள் இவர்கள்.

## 14. சாந்தி

தேவ சம்பத் உடையவர்களிடம் அமைதி எக்காலமும் குடி கொண்டிருக்கும். சாந்தி வடிவான இறைவனிடம் இவர்கள் வாழ்வு அமைந்திருப்பதால் இவர்கள் உள்ளம் சாந்தியிலே

நிலைத்திருக்கும். நீடமைதி வாய்ந்தவர்கள் முகம் தெய்வீகக்களை பொருந்தியதாக இருக்கும். வாழ்க்கை, யோகம், தவம், ஞானம் முதலிய யாவுமே சாந்தியில்தான் முடிகிறது.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!!

### 15. கோள் சொல்லாமை (புறங்கூறாமை)

புறங்கூறுதல் புல்லர்கள் செயல். தெய்வ சம்பத் உடையவர்கள் புறங்கூறார். இவர்கள் பிறரிடம் குற்றம் காண்பதில்லை. அதனால் புறங்கூறுதல் இவர்களிடம் இல்லை.

### 16. இரக்கம் (பூததயை)

பிற உயிர்கள் வருந்தும் தன்மை கண்டு மனம் கசிதல் இரக்கமாகும். அருளின் செயலே இரக்கமுடைமை. ஓரறிவு உயிரான புல் பூண்டுகளும், பயிர் வகைகளும் வாடியதைக் கண்டு வருத்தப்படும் தன்மை வாய்ந்தவர்கள் இவர்கள். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ வேண்டும் என்னும் உண்மையான கருத்துடையவர்கள் இவர்கள்.

### 17. பிறர் பொருளை விரும்பாமை

பரம்பொருளைத் தவிர, வேறு எப்பொருளையும் தனக்கென வேண்டாத தன்மை வாய்ந்தவர்கள், பிறர் பொருளை ஏன் விரும்பப் போகிறார்கள்?

பொருளாசையற்ற புனிதர்கள் இவர்கள். தம் இந்திரியங்களைப் பிறரது சுகபோக வாழ்க்கையின்மீது உலாவ விடாத தன்மையால், பிறரைப் பார்த்து ஏங்கி, அவர் பொருள் மீது இச்சை வைக்கும் இயல்பு இவர்களிடத்திலே அமைவதில்லை.

18. இனிமை (மிருதுத்தன்மை)

இனிமையோடு பேசுதல், இனிமையாகப் பழகுதல், தெய்வ சம்பத் ஆகும். சொல்லாலும் செயலாலும் பிறர் நம்மை விரும்புமாறு நடந்து கொள்ளல் இனிமை. இதை பண்பாடு என்று குறிப்பிடலாம். பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல். பிறர் மாட்டு இனிய சொல்லாலும், செயலாலும் ஒழுகும் ஒருவன், பிறருக்கும் இன்பமளித்து தானும் இன்பமடைகிறான்.

19. நாணம்

வெட்கப்படுதல்—தீய செயல்களுக்கு வெட்கப்படுதல். கருமத்தால் நாணுதல்தான் நாணம். தீயவைகளான, வெட்கக்கேடான செயல்களைத்தான் செய்யநாணுதல்மட்டு மல்ல, உலகம் வெட்கப்படும் செயல்களைச் செய்யவும்தான் நாணுதல் வேண்டும். நாணத்தக்க செயல்களுக்குத்தான் நாணும் தன்மையும் பொருந்தி வாழ வேண்டும். இத்தன்மைத்தானவர்களே இவர்கள்.

20. மனத்திட்பம்

சபல சித்தம் உடையவர்கள் எந்தக் காரியத்தையும் சாதிக்க இயலாது. மாறாக மனத்திட்பம் வாய்ந்தவர்களால் எதையும் சாதிக்க இயலும். உள்ளச் சலனத்தால் உடல் சலனமடைகிறது. ஒன்றை விட்டொன்று பற்றும் தன்மைஏற் படுகிறது. எல்லா வினைத்திட்பங்களுக்கும் மனத்திட்பமே மூலகாரணம். யோக ஞானப் பயிற்சிக்கு இன்றியமையாதது மனத்திட்பமே. இது இவர்களிடம் உண்டு.

21. தைரியம் (அஞ்சாமை)

இதை தேஜஸ் என்கிறது சுலோகம். ''பாதகம் செய் பவரைக் கண்டால் நீ பயங்கொள்ளலாகாது பாப்பா'' என்கிறார் பாரதி. கயமைத் தனத்துக்கு அஞ்சாமல்

எதிர்த்து நிற்றலே தைரியம்; அதாவது மன வல்லமை எனப் படும். தெய்வ சம்பத்துடையவர்கள் இதை உடையவர்கள். இதை உடையவர்கள் தேஜஸோடு விளங்குவார்கள். தன்னுயிர் காக்கவும் இவர்கள் நேரிய வழியை விட்டு நீங்க மாட்டார்கள்.

22. பொறை உடைமை (மன்னித்தல்)

பிற மக்கள் தாம், தம்முடைய அகங்காரத்தால், இவர்க ளிடம் வரம்பு மீறியவற்றைச் செய்த காலத்திலும் இவர்கள் தாம் தம்முடைய மன்னிக்கும் குணத்தால், தம் தகுதியால் அவர்களை மன்னித்து வென்று விடுவார்கள். அவர்களை யும் மன்னிக்கும்படி இறைவனை வேண்டுவார்கள்.

23. உறுதி (தகுதி)

மனதில் உறுதி வேண்டும். நூ வாழும் முறைமையடி பாப்பா என்கிறார், பாரதி. 'இடுக்கண் அழியாமை' என்று தகுதியைக் குறிப்பிடலாம். அதாவது இது தளர்ச்சியின்மை. ''அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கண் படும்'' என்கிறது மறை. தாம் ஏற்ற கருமத்தின் இடையிலே எந்தஇடையூறு வரினும்தளர்ச்சியடையாமல் முன்னேறுபவர் தெய்வ சம்பத்துடையவர்.

24 தூய்மை (சௌசம்)

மனம் மொழி, மெய்ககளைத் தூய்மையாக வைத்திருத்தல் தூய்மையாகும். அகந்தூய்மை, புறத்தூய்மை இரண்டுமே யாவருக்குந் தேவைப்படுவதாகும். ''புறந்தூய்மை நீரால் அமையும்; அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்'' என்கிறது மறை.

25. வஞ்சகமின்மை

பொறாமையால், வன்மத்தால் பிறருக்குத் தீங்கு செய்ய வேண்டும் என்ற எண்ணம் வஞ்சகம் எனப்படும்

தெய்வ சம்பத் உடையவரிடம் வஞ்சகம் கிடையாது. ஏனெனில் அவர்கட்கு பகை எனஒன்றும் இன்று. எவரிடத்தும் அவர்களுக்கு வன்மம்—பொறாமை கிடையாது.

## 26. செருக்கின்மை

பிறர், தன்னை அதிகமாக மதிக்க வேண்டுமென விழைவது செருக்கு. போலித் தற்பெருமை. இவர்கள், பிறர் யாரைக் காட்டிலும் தாம் மேம்பட்டவர்களாகக் கருதுவதில்லை. எனவே இவர்களிடம் போலி தற்பெருமை குடிகொள்வதில்லை.

இங்குச் சொல்லப்பட்ட 26 குணங்களும் தெய்வ சம்பத்து உடையவர்களிடம் பொருந்தி

இதற்கு மாறான குணங்களை அசுர சம்பத்து எனக் குறிப்பிடுகிறது கீதை. நாம் அதை விலங்குக் குணம் எனக் கொள்ளலாம். இந்த இருபத்தாறு குணங்கள் தம்மிடம் பொருந்தாமை மட்டுமல்ல, இவைகட்கு மாறானவைகளும் அசுர சம்பத்தாரிடம் உள.

கண்ணன் கூறுகிறார் :

**பார்த்தா! பகட்டும், இறுமாப்பும், தற்பெருமையும் சினமும், கடுமையும் அஞ்ஞானமும் (அசுர சம்பத்து ஆகும்.) விலங்கு குணம் மேலோங்கப் பிறந்தவனுக்கு இவை உண்டு.**

XVI (4)

தன்னிடம் இல்லாததை உள்ளதாக காட்டிக் கொள்ளுதல் பகட்டு. ஒழுக்கம், அறிவு, கல்வி, அழகு இவை இல்லாதவன் இவைகளில் சிறந்தவனாகத் தான் மதிக்கப் பட வேண்டும் எனப் போடும் வேடமே பகட்டாகும். இது அசுர சம்பத்து.

## 27. தற்பெருமை கொள்ளுதல்

கீழ்மக்கள் செயல் இது. தனக்குக் கல்வியும், செல்வமும் குலப்பெருமையும் நன்கு வாய்த்திருக்கின்றதென இறுமாப்

போடு வாழ்தல், பேசுதல், நினைத்தல், தற்பெருமையாகும். இவர்களிடம் அடக்கம் எனும்அருங்குணம் தலைகாட்டாது. இதுவே அசுர குணம்.

### 28. சினம்

இவர்களிடம் சினம் எப்பொழுதும் மேலோங்கியே இருக்கும். தங்களது தற்பெருமை, பகட்டு இவைகட்கு மாறாக யாராவது பேசினால் இவர்கட்குச் சினம் பொங்கும். தங்கள் ஆசையால் எழும் தங்கள் மிருக இச்சைகட்கு மாறானவர்களிடம் இவர்கள் கடுங்கோபம் கொள்வார்கள்.

### 29. கடுமை

இவர்களிடம் அன்பு, அருள், சாந்தம் என்பதே கிடையாது. கடுகடுப்பான முகத்தோடு யாவரிடமும் கடுமையோடு நடந்து கொள்வார்கள். மிருதுத்தன்மை என்பதே இவர்களிடம் மருந்துக்கும் கிடையாது.

### 30. அஞ்ஞானம்

தர்மத்தை அதர்மமென்றும், நல்லதைத் தீயதென்றும், காணும் இவர்களே அஞ்ஞானிகள். ஞானசூன்யர்கள்.

பகவான் கூறுகிறார் :

**தெய்வ சம்பத்து வீடு தருவதென்றும் அசுர சம்பத்து பந்தப்படுத்துவதென்றும் கருதப்படுகின்றன. பாண்டவா! வருந்தாதே. நீ தான் தெய்வ சம்பத்தை அடையப் பெற்றவனாய்ப் பிறந்திருக்கிறாய்.** XVI (5)

எந்தச் செல்வம் தெய்வீகச் செல்வமோ, (திவ்ய சம்பத்தோ) அதுவே என்னிடம் அன்பு—பக்தி செலுத்த வைப்பதுதாம். அதனால் நான் அவர்களுக்குப் பந்த நீக்கம் செய்து மோட்சம் அளிக்கிறேன்.

மாறாக அசுர சம்பத்து என்னும் மிருகத் தன்மை—குணம் ஓங்கி இருக்கப் பெற்றவர்களோ என்னையடைய முயலாதவர்கள். வீடுபேறு அடைய விருப்பமற்றவர்கள். அவர்கள் மேனிலை அடையமாட்டார்கள் என்பது மட்டுமல்ல. பரிதாபமான வீழ்ச்சிக்கும் ஆளாவார்கள்.

எனவே பார்த்தா! நீ சஞ்சலப்படாதே! நீ என் பக்தன். என்னுடன் பழகும் நிலையை நீ அடைந்துள்ளாய். எனவே நீ தெய்வீக சம்பத்துடன்தான் பிறந்துள்ளாய் என்பதில் ஐயமில்லை, என்கிறார் கண்ணன்.

**பார்த்தா! தெய்வீகம் என்றும் அசுரம் என்றும் இருவகைப் பட்ட மனிதப் பிறப்புகள் உள. தெய்வீக இயல்பினை முன்னர் விரிவாக நான் உனக்கு உணர்த்தினேன். எனவே இனி அசுர இயல்பையும் கேள்.** XVI (6)

**அசுர இயல்பினை உடையவர்கள், செய்யத்தக்க நல்வினையையும்செய்யத்தகாத தீவினையையும்அறியார்கள். அவர்களிடம் தூய்மை இல்லை. நல்லொழுக்கம் இல்லை. வாய்மையும் இல்லை.** XVI-7

நல்வினை, தீவினை என இரண்டு உள. நல்வினை செய்யத்தக்க வினைகள்; நற்கருமத்தின் பாற்பட்டவை. அறவழிப்பட்டவர்கள் ஆற்றும் செயல்கள்தாம் உலகுக்கும் உயிருக்கும் சமுதாயத்திற்கும் நன்மையான செயல்கள் ஆகும்.

செய்யக்கூடாத வினைகள், அதர்ம வழிப்பட்ட வினைகள். உலகுக்கும் உயிர்க்கும் சமுதாயத்திற்கும் தீங்கு பயக்கும் செயல்கள்.

அசுர இயல்பினை உடையவர்கள் இந்தப் பாகுபாட்டை அறியார்கள். அல்லது அறிந்தும் அதைப்பற்றி கவலைப் படாமல் அதர்ம நெறியே செல்வார்கள், ஏனெனில் அவர்களிடம் உள்ளத்தூய்மை கிடையாது. மாசு படிந்த மனத்தினர்கள் அவர்கள். உள்ளத்தூய்மை இலாததால்

*அவர்களிடம் நல்லொழுக்கம் அமைவதில்லை. நல்லொழுக்கத்திற்கு அடிப்படையான வாய்மையும் அவர்களிடம் இல்லை. ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார் குடிப்பிறந்தார் என்கிறது தமிழ் மறை. இவர்கள் இதை அறியார்கள். இவர்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள்? இவர்கள் கொள்கை என்ன தத்துவம் என்ன?*

**இந்த உலகத்திலே சத்தியம் என்பது இல்லை. தர்ம நிலை இல்லை. கடவுள் இல்லை. இவ்வுலகம் ஆண் பெண் எனும் இரு பாலாரது சேர்க்கையால்—காமத்தால்—உண்டாகி இயங்குவது. இவையன்றி உலகில் வேறு என்ன இருக்கின்றது என்கின்றனர் இவர்கள்.** XVI (8)

*இவர்கள் லோகாதயர்கள். கண்டதே காட்சி கொண்டதே கோலம் என வாழ்பவர்கள். "பரமேது வினை செய்யும் பயனேது பதியேது பசுவேது பாசமேது பக்தியேது அடைகின்ற முத்தியேது அருளேது பாவ புண்ணியங்கள் ஏது வரமேது, தவமேது விரதமேது, ஒன்றுமிலை" எனும் வள்ளலார் வாக்குக்கேற்ப இவர்களுக்குக் காமம் தவிர வேறு ஒன்றும் கண்ணுக்குத் தோன்றாது. மாதரைக் கலந்து மகிழ்கின்ற சுகமே, கண்கண்ட சுகம் எனக் கருதுபவர்கள் இவர்கள், இவர்களுக்குச் சத்தியம் என்பதோ தர்மம் என்பதோ கிடையாது.*

**அற்ப அறிவு படைத்தவர்களாகிய இவர்கள், இந்தக் கொள்கையைக் கடைபிடித்தவர்களாய், ஆத்ம நஷ்டமடைந்தவர்களாய் கொடுஞ்செயல் புரிபவர்களாய், உலகத்துக்கும் சமுதாயத்திற்கும் பகைவர்களாய், அதன் அழிவுக்கென்றே தோன்றி இருக்கின்றனர்.** XVI(9)

*இவர்கள் இருளில், அறியாமையில், மூழ்கிக்கிடப்பவர்கள். புல்லறிவாளர்கள். இவர்கள் தம் ஆத்மாவை இழந்துவிட்டவர்கள், கொடூர செயல்கள் செய்யவென்றே தம்மை*

அரிப்பணித்துக் கொண்டவர்கள். பொய் மலிந்த அதர்ம வழியிலே நடக்கும் இவர்கள், மனித சமுதாயத்திற்கும் உலகுக்கும் பயங்கரமான பகைவர்கள்.

நிறைவேறாத நெடுங்காம இன்பத்தைச் சார்ந்து ஆடம்பரமும் தற்பெருமையும் மதமும் பொருந்தியவர்களாய், மதி மயக்கத்தால், கெட்ட எண்ணங்களைக் கிரகித்துக் கொண்டு தீய முடிவுகளுடன் இவர்கள் செயலாற்றுகின்றனர். XVI-(10)

இவர்கள், உலகம் காம இன்பம் அனுபவிப்பதற்காகவே எனும் எண்ணம் கொண்டவர்கள். எனவே இவர்கள் தங்களது நிறைவேறாக் காம இச்சைக்கு அடிமையாகி விடுகின்றனர். இவர்கள் வாழ்வது காம இன்பத்துக்கும் அதைச் சார்ந்த பிற இன்பங்களுக்காகவே. இந்தக் காரணங்களுக்காகவே இவர்கள் போலியான ஆடம்பரமான வாழ்வை மேற்கொண்டு, தற்பெருமையால் அகங்கரித்து, திமிரோடும் மதத்தோடும் திரிந்து வாழ்பவர்கள். தம்முடைய அறிவு மயக்கத்தால் செய்வது இன்னதென அறியாமல் கெட்ட எண்ணங்களுடன் தீயவற்றையே செய்யும் தீர்மானங்களோடு பாவச் செயலையே செய்ய முற்படுவார்கள்.

தாம் இறக்கும் வரையில் அளவில்லாத கவலைகளை உடையவர்களாய், காம நுகர்ச்சியே அனைத்திலும் மேலானதாகக் கருதி, இது தவிர வேறு ஒன்றுமில்லை என்று தீர்மானித்தவர்களாய், XVI—(11)

நூற்றுக்கணக்கான ஆசைக் கயிறுகளால் தளைக்கப்பட்டவர்களாய், காமக் குரோதங்களின் வசப்பட்டவர்களாய் காம இச்சையை நுகர்தற்காக, நியாயமற்ற வழியில் பொருட் குவியலைத் தேட முயல்கின்றனர். XVI-(12)

இப்படிப்பட்டவர்கள்தாம் மரணம் அடையும் வரையிலும் ஓயாத முடிவற்றகவலைகளால் சித்திரவதைக்குள்ளாகி விடுகின்றனர்.

இவர்கட்கு உலக இன்பம் தவிர வேறு ஒன்றும் தேவை இல்லை. சுவையான உணவு உண்ணுதல், மது குடித்தல், இன்பம் அனுபவித்தல் இவைகளே இவர்கள் குறிக்கோள்.

பாவமென்னும் காமவலைக்குட்பட்ட இவர்கள், அதர்ம வழியிலே சென்று, கோபம் காமம் இவைகளால் ஆளப்படுகிறார்கள்.

இவர்கள் பேராசைப் பிடித்தவர்களாய் லஞ்சம், திருடு, கள்ளப்பணம் முதலிய அயோக்கிய வழிகளில் பொருளை மிதமிஞ்சித் தேடித் தம் ஆடம்பர சொகுசான இன்ப வாழ்க்கைக்கு அடித்தளம் அமைத்துக் கொள்கின்றனர். போக வாழ்க்கைக்கும் காம வாழ்க்கைக்கும் தேவைப்படும் செல்வக் குவியல் அதர்ம வழியில் இவர்களால் ஈட்டப் படுகிறது.

இவர்கள் குரோதம்—கடுஞ்சினம்—வயப்பட்டவர்கள். இவர்களுக்குத் தான் என்னும் அகந்தை ஏராளமாக உண்டு. அவர்கள் எண்ணமும் செயலும் அகங்காரத்தின் மீதே அமைந்திருக்கும். தன்னைக் காட்டிலும் சிறந்தவன் உணர்ந் தவன் வேறு யாரும் இல்லை என்னும் அகம்பாவம் இவர் களுக்குண்டு.

இப்படிப்பட்டவர்கள் பிறர் மெச்ச வேண்டும் என்று கோவில் கட்டுவார்கள். கும்பாபிஷேகம் செய்து தம் செல்வப் பகட்டினை உலகுக்கு அறிவிப்பார்கள். தானம் செய்து தம்மை விளம்பரப்படுத்திக் கொள்வார்கள். "ஆகுல நீர பிற" என்ற வள்ளுவர் வாக்குக்கேற்ப ஆரவார மிக்க, ஆடம்பர தர்மச்செயல்களைச் செய்பவர்கள் இவர்கள்.

**"இன்று, இது என்னால் அடையப்பட்டது" "இன்று என்னுடைய விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளுவேன்"— "இது—இச்செல்வக்குவியல் — என்னிடம் இருக்கிறது." இச்செல்வம் மேலும் மேலும் எனக்கு வந்து சேரும். XVI-(13)**

''அந்தப் பகைவன் என்னால் அழிக்கப்பட்டான். மற்றவர்களையும் அழிப்பேன். நான் ஆள்பவன். நான் போகத்தை அனுபவிப்பவன், நான் எடுத்த காரியம் யாவினும் வெற்றியடைபவன், பலசாலி, இன்பத்தை அனுபவிப்பவன்.''
XVI-(14)

நான் செல்வம் மிகுந்தவன். உயர் குலத்திலே பிறந்திருக்கிறேன். எனக்கு நிகரானவன் வேறு எவன் இருக்கிறான்? ''நான் யாகம் செய்வேன். தானம் கொடுப்பேன். அதனால் மகிழ்ச்சி அடைவேன்'' என்று அஞ்ஞானத்தால் மதி மயங்கி யாவும் தன்னாலேயே ஆவதாக நினைப்பவர்கள். XVI-(15)

பல சிந்தனைகளால் குழப்பமடைந்த இவர் . மோக வலையில் முடப்பெற்றவர்கள், காம போகங்களில் பற்றுடையவர்கள் பாழ்நரகிலே வீழ்கின்றனர். XVI-(16)

*இவர்கள் அகந்தையால் மூடப்பட்டவர்கள். ''தான்'' என்னும் அகந்தை இவர்களை ஆட்டுவிக்கும். ''நான்'' என்பது என்ன என்பதை அறிய முடியாத அஞ்ஞானத்தால் இந்த உடம்பையே ''நான்'' எனக் கருதி மேலே சொன்ன சுலோகங்களில் சொல்லிய வண்ணம் மனதில் நினைத்து வாழ்க்கையில் நடந்து, தானும் குழம்பி சமுதாயத்தையும் குழப்பி விடுகிறார்கள்.*

*பிராமணர்கள் தங்கள் குலப்பெருமையால் மேலானவர்களாகத் தங்களைக் கருதுகிறார்கள். வேத சாத்திரங்களையும், கட்டளைகளையும் இயற்றினார்கள். நான்குரு,வித்தை அளிப்பவன்.மற்றவர்களோஎன்னிடம் அதைப்பெறுபவர்கள். என்னைத் தவிர வேறு யார் குரு என்கிறார்கள். அரசர்களையும் 'அடிமை கொண்டனர். அரசர்களை ஆட்டிப் படைத்தனர். வேதம் வேதாந்தம் சாத்திரங்களை எல்லாம் ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காத் தன்மை இவர்களிடம் இருக்கும். நான் படித்தவன், அறிவாளி, ஞானி என செம்மாந்து திரிபவர்கள் அவர்கள்.*

(இப்பொழுது மட்டுமென்ன அகந்தை இல்லாமலா போய்விட்டது) பதினைந்தாவது சுலோகம் இதைத்தான் சொல்கிறது. தன்னையறியாத—ஆத்ம ஞானமற்ற வெறும் சாத்திர ஞானம் மட்டும் ஒருவனுக்கு உதவாது. அது அஞ்ஞானத்தை வளர்த்து அகந்தையைத் தான் அதிகப் படுத்தும்.

அதற்கு முன்னுள்ள 14ஆம் சுலோகம் அரசர்களைப் பற்றியது. நான் அவனைக் கொன்றேன். இவனையும் அழிப்பேன். நான் பலவான். அசுவமேக யாகம் செய்து திக்விஜயம் செய்து, பல நாடுகளை அடிமைப்படுத்துவேன். என்னுடைய கருவூலத்திலே எத்தனை நவரத்தினங்கள் பொற்கட்டிகள் உள்ளன. பிற அரசர்களைக் காட்டிலும் மிக உயர்ந்தவன் நான். நானே சக்கரவர்த்தி என்றுஅகந்தை கொள்பவன் அரசன். அல்லது ஆள்பவன் (இக்காலத்திலேயும் எம். பி., எம். எல்.ஏக்கள் ஆளவந்த அமைச்சர்கள், பெரும் பணக்காரர்கள், இந்த அகந்தையால் ஆளப்படுபவர்களே)

படித்தவனும், பாமரனும், பிராமணனும், அரசனும், அகந்தையால் ஆளப்படுகின்றவர்கள். அனைவரும் அசுர சம்பத்து உடையவர்களே. சுலோகம் 7 முதல் 16 வரை அவர்களது சுபாவம் சொல்லப்பட்டுள்ளது. காமம், வெகுளி, மயக்கம் இவை மூன்றால் தம் வாழ்க்கையை நடத்தும் இவர்கள் யாருமே நிலையான புத்தி இல்லாதவர்கள். மனக் குழப்பம் உடையவர்கள். இவர்கள், காமம் எனும் விடுபட முடியாத வலையிலே சிக்கித் தவிப்பவர்கள். காமம் முதலிய உலக போகங்களிலே நீங்காத பற்றுடையவர்கள். இதனால் இவர்கள் பாழ் நரகிலே வீழ்கின்றனர்.

இப்படிப்பட்டவர்கள் யாகமும் செய்கிறார்கள்; தானமும் செய்கிறார்கள். ஏன்?

**இவர்கள் தற்புகழ்ச்சி உடையவர்கள். வணக்கமில்லாதவர்கள். செல்வச் செருக்கும், தான் என்ற மதமும் உடைய**

வர்கள், (டம்பத்துக்காக) ஆடம்பரத்துக்காக, பெயரளவில் விதிவழுவி யாகத்தைச் செய்கின்றனர். XVI-(17)

இவர்கள் தற்புகழ்ச்சி உடையவர்களாதலால் பிறர் மெச்சிப் புகழ வாழவேண்டும் எனும் எண்ணத்தினால் இறைவனை வணங்க வேண்டும் எனும் எண்ணம் கூட இன்றி, செல்வம் மிகுந்துள்ள செருக்கினால், கோயில் கட்டி, கும்பாபிஷேகம் செய்து, அபிஷேகஆராதனை செய்பவர்கள். யாகம் முதலியவைகூட தான் என்னும் மமதையால் விதிவழுவி ஊர் மெச்ச, பாவ வழியில் ஈட்டிய பணத்தைக் கொண்டு செய்வார்கள். இதனால் இவர்களுக்குச் சுய விளம்பரம் கிடைக்கிறது. அதன் மூலம் மேலும் மேலும் மக்களை ஏமாற்றிப் பணம் சேர்க்க வழியும் பிறக்கிறது.

அகங்காரம், பலம், இறுமாப்பு, காமம், குரோதம் இவை களைப் பூண்ட இவர்கள் தங்களது உடலிலும் பிற எல்லா உயிர்களின் உடலிலும் உறையும் என்னை வெறுத்து அவமதிக்கின்றனர். XVI-(18)

ஒருவருடைய உதவியும் இல்லாமல் நானே சகலமும் செய்கிறேன் என அகங்காரப்பட்டும்; நான் எதையும் செய்ய வல்லேன் என்று தன்பலத்தைத் தானே புகழ்ந்துகொண்டும்; எனக்கு ஈடு இணை யாருமே கிடையாது என்று இறுமாந்தும்; எனக்கு யாவுமே நினைத்த மாத்திரத்தில் கிடைக்கும் என்று வெற்றிக்களிப்படைந்தும்; எனக்கு யாராகிலும் தீங்கு செய்வார்களானால் அவர்களை அழித் தொழிப்பேன் என சினந்தும்; தன் மனம் போன போக்காய் ஆணவத்தால் மனக் கிளர்ச்சி ஓங்கப் பெற்றுள்ளவர்கள் என்னை மறந்து விடுகின்றனர்.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் நானே உள்ளேன் என அவர்கள் உள்ளம் உணர்வதில்லை. சகலமும் செய்விக் கிற வன் நானே என்பதையும் அவர்கள் அறிந்திலர்.

இந்த அகங்கார ஆணவத்தால் தன் பலத்தையே, மிக்க தெனச் வாழ்கின்ற இவர்கள் காமக் கடலிலே , குரோதம் எனும் கனலை தம் உள்ளத்திலே எரியவிட்டும் வாழ்வதால் என்னைப் பற்றி நினைக்கவும் நேரமில்லாமல் என்னை அடியோடு மறந்து விடுகின்றனர். வெறுத்து அவமதிக்கவும் செய்கின்றனர்.

பகைக்குணம் எனும் துவேஷம் உடையவர்களையும், கொடியவர்களாம் குரூரமானவர்களையும் கீழ்க்குணம் உடையவர்களையும் இழிந்தவர்களையும், பிறந்து, இறந்து, உழல்கின்ற இவ்வுலகில் அசுரகுணமிக்கவர்கள் குடும்பத்திலே இனத்திலே நான் எக்காலத்தும் தள்ளிவிடுகிறேன்.

XVI-(19)

குந்தியின் மைந்தனே! இந்த மூடர்கள் பலப்பல பிறவிகளின், அசுர குணமிக்கவர்கள் கருப்பத்தின் மூலமாகப் பிறந்து இறந்து, மீண்டும் பிறந்து, இறந்து என்னை அடையாமல் மேலும் மேலும் கீழ்க்கதியையே அடைகின்றனர். XVI-(20)

என்னையே துவேஷிக்கின்ற கொடியவர்களை, இழி குணத்தோர்களை, மேலும் மேலும் கெட்டழிய அசுர சம்பத்து உள்ளவரிடையே மேலும் பிறவி எய்திட வைக்கிறேன்.

அதாவது காமக் குரோத, லோபமிவைகளைத் தம்மிடமிருந்து விலக்கி, அவைகளை வெற்றி கொள்ள மாட்டாதவர்களாகி அதனால் நம்மை மறந்தவர்கள், மேலும் மேலும் அசுர சம்பத்து எய்திவிட அப்படிப்பட்ட பிறவி எய்திடும்படியான கீழ்த்தொழிலில் ஈடுபட கீழ்ச்சிந்தனைகளில் சொற்களில், காலத்தைப் போக்கிட நானே அவர்களுக்கு அப்படிப்பட்ட புத்தியைத் தருகிறேன். இது அவர்களின் அகங்காரத்தின் பரிசாகும்.

இவர்கள் பிறவிகள் தோறும் அஞ்ஞான விருத்தி அடைந்து விபரீதமாய் இறைவன் என்கின்ற நினைவே இல்லாமல் அதோ கதியடைகின்றார்கள்.

ஆனால் இவர்களுக்கு விமோசனமே கிடையாதா? எனில், உண்டு, விமோசனம் உண்டு. இவர்கள் அடியோடு புறக்கணிக்கப்பட்டவர்கள் அல்லர். இவர்களும் தத்தம் துன்பங்களால், துயரங்களால், இடுக்கண்களால், வேதனைகளால் தூய்மைப் படுத்தப்படுகின்றனர். எனவே இதன் மூலம் இவர்களுக்கும் மீட்சி உண்டு. இவர்களும் மறுவாழ்வு பெற முடியும்.

எந்த ஆத்மாவும் அடியோடு அழிந்து, கெட்டொழிந்து போவதில்லை. துறக்க வாழ்வு (மோட்சம்) அவர்களுக்கும் மறுக்கப்படுவதில்லை. அவர்களுக்கு அத்துறக்க வாழ்க்கை அடைய வாய்ப்புண்டு. ஆனால் அது பல ஆண்டுகள் பல பிறவிகள் எடுத்தபின்னேதான் கிடைக்கும். ஏனெனில் அவர்கள் ஆத்மாவில் உறைபவனும் இறைவன்தான். ஆனால் ஆணவமான படலம் அவர்கள் ஆத்மாவை மூடிக்கொண்டிருப்பதால் அவர்கள்அதை உணரமுடியவில்லை. இறைவன் தன் நினைவை தன் ஒளியின் ஒரு கீற்றை அவர்களுக்கு அடிக்கடி உணர்த்தி அவர்களையும் ஆட்கொள்ளவே செய்கிறார். அவர்கள் தத்தம் கீழ்க்குணங்களை வெல்லுகின்ற, தம்மைத்தாம் உணர்கின்றதன்மையையும், உடலின் தசைத் தினவை,வெல்லும் ஆற்றலையும் தந்துள்ளனர். அவர்களுக்கும் காலம் கனியும். அப்போது மீட்சி உண்டு.

எனவே அசுர சம்பத்து உடையவர்கள் செய்ய வேண்டியது யாது? கண்ணன் கூறுகிறார்:

**காமம், குரோதம், லோபம், என்று கூறப்படும்இம்மூன்றும் நரகத்தின் மூன்று வாயில்கள். இவைகளே ஜீவாத்மாவுக்கு சர்வநாசத்தை உண்டு பண்ணும் தன்மையன. இந்த மூன்றையும் அடியோடு துறத்தல் வேண்டும்.** XVI-(21)

காமம் என்பது இந்திரிய சுகங்களில் ஈடுபடும்படி மனம் குருட்டுத்தனமாய் கொள்ளும் வேட்கையாகும்.

அந்த வேட்கையை அனுபவித்து அடைவது பொய்யான இன்பமாகும்.

இந்த வேட்கைக்கு எதிரான எதையும் யாரையும், பகையாகக் கருதி பொங்கி எழும் மனவெழுச்சியே, கோபம் ஆகும். இதுவே குரோதமாகப் பழி வாங்கும் போக்காக மாறுதல் அடைகிறது.

இந்த உலகியல் இன்பங்கள், சுக போகங்கள், காம இச்சைகள் இவைகளுக்குத் துணை நிற்பது செல்வம். இந்தச் செல்வத்தை மிதமிஞ்சிச் சேர்க்க லோபித்தனமாக வாழ் வதும் பேராசையால் அலைந்து அலைந்து பொருளைப் பலப் பல அறம் அற்ற வழிகளில் ஈட்டுவதுமே லோபமாகும்.

மனித வாழ்க்கையில் நீக்க வேண்டிய குற்றங்கள் அசுர சம்பத்து என்னும் தலைப்பில் முன்னர், 7 முதல் 19 வரை உள்ள சுலோகங்களில் சொல்லப்பட்டன.

ஆனால் இந்த சுலோகங்களிலே, மனிதவாழ்வில் முக்கிய மாக நீக்க வேண்டியவை மூன்றே என கூறுகிறார் கண்ணன். ஏன்?

இந்தக் காமம் குரோதம் லோபம்எனும் முக்குற்றங்களே ஆத்ம நாசத்திற்குக் காரணமாகின்றன. இந்த மூன்றுள்ளே பிற யாவும் அடங்கும். எனவே இவைகளை நீக்க வேண்டும் என்கிறார் கண்ணன்.

இந்த மூன்றாலும் ஆட்கொள்ளப்பட்டவர்கள் இங்கும் அங்குமாக அமைதியின்றி அலைவார்கள். இவர்கள் குழப்பம், மயக்கம் எனும் வலைக்குட்பட்டவர்கள். இவர் களோ, தம் இதயத்தையும் நன்குணராத காரணத்தினால் ஒவ்வொருவர் உள்ளத்திலும் உறையும் இறைவனை உணர்வதில்லை. ஆகையால் இவர்கள் இறைவனிடம் அன்பு செலுத்துவதில்லை. மாறாக அவன் உண்மையை மறுத்து அவனைப் பகைக்கவும் செய்கின்றனர்.

இந்த மூன்றையும் கடிய வேண்டியது மனிதன் கடமையாம்!

> "காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றின்
> நாமம் கெடக் கெடும் நோய்"

என்கிறார் வள்ளுவர்.

இம்மூன்றினால் மனிதன் மேன்மையடைவதில்லை. மாறாக இவைகளே மனிதனின் வீழ்ச்சிக்குக் காரணமாகின்றன. இவைகளைக் கடிந்து துறந்தவனே மனிதருள் மேலோன் ஆகிறான்.

**அர்ஜுனா! இம்மூன்று நரக வாயில்களினின்றும் விடுபட்டவன் தனக்கும் நலன் உண்டாகும்படி வாழ்ந்து இறுதியில் வீட்டின்பத்தையும் அடைகிறாள். XVI-(22)**

காமம், குரோதம், லோபம் மூன்றுமே நரக வாயில்கள். இவைகள் மனிதனிடம் குடிகொள்ளக் காரணம் அறியாமை (அஞ்ஞானம்). இந்த அஞ்ஞானத்தின் காரியமாகிய காமம், குரோதம் லோபத்தினை தன்னிடமிருந்து நீங்கப் பெற்றவன் அசுரசம்பத்திலிருந்து நீங்கி தெய்வ சம்பத்தை அடையப் பெறுகிறான். அந்த தெய்வ சம்பத்து அடைபவனோ வாழ்க்கையில் நலன் எய்தி இறுதியில் துறக்க நிலையும் அடைகிறான்.

இந்த உலகம் தெய்வீக—மேலான—வாழ்வில் நாம் வாழவே உண்டாக்கப்பட்டது. அந்த மேலான வாழ்வென்பது அன்பும் கருணையும் நிறைந்தது. தியாகமயமானது. "நான்" "என"தென்னும் அகந்தையற்றது.

ஆனால் இந்த உலகத்தின் ஒப்பற்ற வளமாகிய அதன் சக்தி (ஆற்றல்) செல்வம் முதலியன, மனிதனுக்கு உதவியாக அமைந்து அவன் வாழ்க்கையை உயர்நிலைக்கு மேம்படுத்தவில்லையானால்—அந்தச் செல்வம் ஆற்றல் அனைத்தும் குவிந்து ஒருவனுடைய போக இச்சைக்காக மட்டுமே—தன் உடல் வாழ்க்கைக்காக மட்டுமே— தன்னலத்துக்காக மட்டுமே—அவை பயன்படுத்தப்படுமானால்

—அதாவது தன்னுடைய ஆற்றல் அதிகாரம் பதவி இவைகளை உயர்த்தவும் பிறர் பொருளைத் தீயவழியில் அபகரிக்கவுமே பயன்படுமானால் அவன் கீழ்நோக்கிப் பயணம் செய்கிறான். அவன் அசுர சம்பத்தை அடையத் துடிக்கிறான் என்பது பொருள். அவனிடமிருந்து தெய்வீக சம்பத்து விலகிக் கொண்டு விட்டது என்பதை நாம் உணரலாம்.

**காமத்தின் வசப்பட்டு சாத்திரங்கள் (அறநூல்களின்) ஆணையை மீறி நடக்கிறவன் பரிபூரணத்தன்மையை அடைய மாட்டான். வாழ்க்கையில் அவன் எந்த சுகத்தையும் அடைவதில்லை. அவனுக்கு துறக்க (மோட்ச) வாழ்வும் அமைவதில்லை.** XVI-(23)

பரிபூரணம் என்பது, பூரணத்துவம், சித்தி எனப்படும். பரிபூரணத்தன்மை சுகமுடையதாகத் தொடங்கி முக்தியில் முடிவடைகிறது.

இந்த சித்தி நிலையை காமத்தின் வசப்பட்டவன் அடைவதில்லை. ஏனெனில் அவன் செய்ய வேண்டியவற்றைச் செய்ய மாட்டான்; செய்யக் கூடாதவற்றைச் செய்ய முற்படுவான். அறநூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் அவனிடம் கிடையாது.

எனவே எவன் ஒருவன் தான் நரக வாயில் வழி செல்ல வேண்டா என எண்ணுகிறானோ அவன் ஆசைகளின் உந்துதலில் இருந்து விலகி விலகி ஓட வேண்டும். அறநெறியே ஒழுகி அறநூல்களில் செய்யத்தக்கவற்றை மட்டுமே செய்து விலக்க வேண்டியவற்றை விலக்கமுயல வேண்டும், அதாவது ஆசையற்ற அறவழி நிற்க வேண்டும்.

> ''செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
> செய்யாமை யானும் கெடும்''

எனும் பொதுமறை இங்கு கருதத்தக்கது.

**எனவே செய்யத்தகுந்தது எது? செய்யத்தகாதது எது? என்பதை நிச்சயிப்பதில் உனக்கு அறநூல்கள் பிரமாணம் ஆகின்றன. இங்கு சாத்திரங்கள் விதித்துரைப்பனவற்றை அறிந்து கருமம் செய்ய நீ கடமைப்பட்டுள்ளாய். XVI-(24)**

*அறமென்பது யாது என்பதைப் பரிமேலழகர் தம் திருக்குறள் பாயிரத்தில் இவ்வாறு சொல்கிறார்.*

*''அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலுமாம்''*

*இந்த வகையில் சாத்திரங்களில் விதித்தவற்றைச் செய்து விலக்கியவற்றை ஒழித்தல் வேண்டும்.*

*இப்படி அற நூல்களை மதித்து அதன்படி ஒழுகி நடவாமல், அவைகளைப் புறக்கணித்து, தன்னுடைய ஆசைகளால் உந்தப்பட்ட இச்சைப்படி நடப்பவன், உண்மையான இன்பத்தையும் அடைய மாட்டான்; உயர்வான துறக்கமும் எய்தமாட்டான்.*

*எனவே நாம் அசுர சம்பத்தை விலக்கிக் கொண்டே இருக்க வேண்டும். இந்த அசுர சம்பத்து என்பது காமம் (இச்சை) குரோதம் (சினம்) லோபம் (பேராசை) என்று மூன்றுள்ளே அடங்குகின்றது. இவைகளே அகில உலகையும் ஆட்டிப் படைக்கின்றன. நாம் இதிலிருந்து தப்பிப் பிழைக்க வேண்டும்.*

*கோபமும், பேராசையும் காமம் காரணமாகத் தோன்றுகின்றன. காமத்துக்கு அனுகூலமான நிலையால் பேராசையும், பிரதிகூலமான நிலையால் கடுஞ்சினமும் தோன்றுகின்றன. இம்மூன்றையும் நாம் நம்மிடை இருந்து விலக்கி விடவேண்டும்.*

*இந்தக் காம குரோத லோபங்களில் இருந்து தப்புவது எப்படி? இதற்குப் புலனடக்கம் ஒன்றே வழி. புலனடக்கம் மூலமாகவே நாம் காமக் குரோத லோபங்களை அகற்ற முடியும்.*

புலனடக்கம் வாய்ந்த மகான்கள் பெற்ற அனுபவங்களிலிருந்து சாத்திரங்கள் உருவாகின்றன. எனவேதான் தருமத்தை அனுசரிக்க, பாவங்களுக்கு அஞ்ச, சத்தியத்தில் உறுதி கொள்ளச் சாத்திர வழி நடக்க வேண்டும் என்கிறது கீதை.

மனிதன் தன் வாழ்க்கையில் தருமத்தின் வழி நடத்தல் வேண்டும். பழி பாவங்களுக்கு அஞ்ச வேண்டும். சத்தியத்தில் உறுதி பூண வேண்டும். இவைகளே தேவ சம்பத்துகள்.

பகவான் இந்த அத்தியாயத்திலே அசுர சம்பத்தை அகற்றிவிட்டு, தேவ சம்பத்தைப் பெறுமாறு வற்புறுத்துகிறார்.

(பதினாறாம் அத்தியாயம் முற்றும்)

## பதினேழாம் அத்தியாயம்

# சமய—தத்துவ இயலின், மூவகை முறைகள்

## (மூவகைப்பட்ட விசுவாசங்களின் வேறுபாடுகள்)

இவ்வுலகிலே மனிதனுடைய உள்ளத்திலும், அவனது பிரதிபிம்பம் அல்லது நிழலைப் போன்ற சமூகத்திலும், இரு வகை சம்பத்துகள், இருவகைப் போக்குகள் அல்லது இரு வகை கலாச்சாரங்கள் இடையே போர் நடந்து கொண்டே இருப்பதை முன் அதிகாரத்திலே கண்டோம்.

'அசுர சம்பத்தை விலக்கி தேவசம்பத்தைக் கைக்கொள்க' எனக் கண்ணன் அர்ஜுனனுக்குச் சென்ற அத்தியாயம் இறுதி சுலோகத்திலே சொன்னார் அல்லவா? அதற்குப் பிரமாணம் சாத்திரங்களே என்பதையும் கண்ணன் அச்சூத்திரத்திலே வலியுறுத்தியுள்ளார்.

இந்த அதிகாரத்திலே, சமய தத்துவ இயலில் மூவகை முறைகளைப் பற்றிக் கூறுகிறார் கண்ணன். அதாவது மூவகைப்பட்ட நம்பிக்கைகள் விசுவாசங்களின்—வேறுபாடு களைப் பற்றி அலசி ஆராய்கிறார், கண்ணன்.

அதாவது சிரத்தை + திரயம் + விபாகம் என்பது இதன் தலைப்பு.

(சிரத்தாத் திரய விபாக யோகம்)

சிரத்தை—நம்பிக்கை, விசுவாசம், செய்யும் தொழிலில் அக்கரை; திரயம்—மூவகை; விபாகம் — வேறுபாடுகள்.

அதாவது மனம், மொழி மெய்களினால் நாம் ஆற்றும் கடமைகளில் உண்டாகும் வேறுபாடுகள். அதன் காரணங்கள்; நாம் நடந்து கொள்ள வேண்டிய முறைகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன அதாவது மனிதன்—சமய தத்துவ சாதகன்—தான் மேற்கொள்ள வேண்டிய பணிகள் அதன் கூறுபாடுகள் ஏற்கத்தக்கன, விலக்கத்தக்கன, செயலாற்றும் முறை; யாவும் இதில் விளக்கப்படுகின்றன.

இந்த அத்தியாயத்திலே மூவகை 6 சுலோகங்களிலும், மூவகை உணவு 3 சுலோகங்களிலும், மூவகை ஆராதனை 3 சுலோகங்களிலும் மூவகை தவம் 6 சுலோகங்களிலும் மூவகை தானம் 3 சுலோகங்களிலும், கூறப்பட்ட இவைகளிலே குற்றம் வராமல் காக்கும் முறை 6 சுலோகங்களிலும் விளக்கப்படுகின்றன.

சென்ற அத்தியாயத்தின் இறுதி சுலோகத்திலே, சாத்திரங்களே பிரமாணம் என்று கண்ணன் சொன்னார். அதைக் கேட்ட அர்ஜுனனுக்கு ஒரு ஐயம் உண்டாயிற்று. சிரத்தை உடையவர்கள் அதாவது நம்பிக்கை அக்கரை, பக்தி உடையவர்கள் சாத்திர விதியைக் கைவிட்டு சிரத்தையோடு தெய்வ வழிபாடுகள் செய்வது நல்லதா? அது முக்குணங்களில் எதைச் சார்ந்தது? என்பதே அவன் ஐயம்.

சாத்திரங்கள் கூறிய புனித விதிமுறைகளை நாம் அறிந்து கொள்ள வேண்டியது அவசியந்தானா?

சாத்திரங்களின் விதிமுறைகள் நாம் அறிந்தாலும் அறியாவிட்டாலும் தாமே இயங்கும். அந்த விதிமுறைகள் அன்பு, சத்தியம், காருண்யம் முதலியவைகளை உள்ளடக்கியனவே. இவைகளே படிப்படியாக நம்மைத் தன்னையறிதல் என்னும் நிலைக்குக் கொண்டு செல்கின்றன. இவைகளை அறநூல் விதிகள் என்று நீ அறிந்திருந்தாலும் இல்லாவிடினும், நீ உன்னிலே நம்பிக்கை கொண்டிருந்து, இவைகளைக் கடைபிடித்தால் உனக்கு உய்தி நிச்சயம். நீ சாஸ்திர ஞானம்

அடைய வேண்டியதில்லை. வாய்மை, சத்தியம், பச்சா தாபம், அன்பு இவைகளுக்கு நீ அடிபணிந்து நடந்தால் போதும். நீ உன்னை அறிய வாய்ப்புண்டு.

*அர்ஜுனனுக்கு ஏற்பட்ட சந்தேகம் என்ன?*

**கிருஷ்ணா! யார் ஒருவர் சாத்திர விதிகளைக் கைவிட்டு —அவைகளை மீறி, ஆனால் சிரத்தை உடையவர்களாய், தெய்வ வழிபாடு செய்கின்றார்களோ, அவர்களது நிலை என்ன? சாத்விகமா? இராசதமா? அல்லது தாமதமா? எத்தகையது?** XVII (1)

*அர்ஜுனன் இப்படிப்பட்டவனைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அவன் தன்னையறியாமல் சாத்திரங் களிலே இவை விதிக்கப்பட்டுள்ளன என உணராமலேயே— அவைகட்கு அவ் விதிகளுக்கு அடங்கி நடக்கிறான். அவை களைக் கடைப்பிடிக்கிறான். முக்கியமானது என்னவெனில் ஒருவன் விதிகளுக்கு—அறநெறிக்கு ஏற்ப தன் வாழ்க்கையை அமைத்து நடத்தலே. அதைப் பற்றிய சாத்திர அறிவு மட்டும் இருந்தால் போதாது. அதைப் பின்பற்றி நடக்க வேண்டும். சாத்திர அறிவு பெற்றிருப்பவன் அதை அனுசரித்து அதன்படி நடக்கவில்லையானால், அவன் போலி யானவனே.*

*சிரத்தை, நம்பிக்கை அதுவும் பூரண நம்பிக்கை அற விதிப்படி செயலாற்றலில் அக்கறை, இவைகளே மனிதனுக்குத் தேவை. சிரத்தையே மனிதன். இதுவே தன் கடமையின் மூலம் இலக்கை அடைவிக்கும் கருவி.*

*இப்படிப்பட்ட சிரத்தை உடையவன், சாத்திரங்களைப் பற்றிய சிந்தனை கடுகளவும் இல்லாமல் வழிபாடுகள் செய் கிறான். அப்படி வழிபாடு செய்கின்றவன் மேன்மை அடைகின்றானா? இடைக்கண் நின்று விடுகின்றானா? அல்லது சாத்திர ஞானமின்மையால் கீழ்மை அடைகின் றானா? சாத்திர ஞானமின்றி சிரத்தையோடு கூடிய*

ஆராதனைகளால் உண்டாகும் பலன், சத்துவமா? ரஜோ குணமா? அல்லது தமோ குணமா?

*கண்ணன் பதிலளிக்கின்றார் :*

**உடலோடு கூடியுள்ள உயிர்களுக்கு இயல்பாக உண்டான அந்த சிரத்தைதான் சாத்வீகமென்றும் ராஜஸம் என்றும் தாமஸம் என்றும் மூன்று வகையாக உள்ளது. அதைக் கேள்.**

XVII (2)

*உயிர் தேகத்துள்ளே உள்ளது. அதனால் அதை தேகி என்கிறோம். இந்த தேகியின் இயல்பான தன்மை (ஸ்வபாவம்) பழைய வாசனையின்படி ஏற்பட்ட அசாதாரண தன்மையே. இரவு உண்ட உணவு செரித்த பின்னும் உணவைப் பிசைந்துண்ட கையிலே படிந்துள்ள நெய் (வாசனை) மணம், மறுநாள் காலை வரையிலே இருக்கிறது. அதைப் போல பழைய ஜென்ம வாசனை இந்த ஜென்மத்திலும் தொடர, அதற்கேற்ப அவனுக்கு வாசனை, ருசி, சிரத்தை ஏற்படுகிறது, அமைகிறது. போன பிறவியிலே செய்த வினைகள், சமஸ்காரங்களாக, உள்ளத்திலே பதிய மறு ஜென்மத்திலே அது அந்த ஜீவனுடைய இயல்பாகிறது.*

**பரதகுலத் தோன்றலே! ஒவ்வொருவருடைய சிரத்தையும் அவரவரின் அந்தக்கரணத்தில் உண்டாகிய சம்ஸ்காரத்திற்கு ஏற்ப அமைகிறது. இந்த ஜீவன் சிரத்தை மயமானவன். அவன் சிரத்தை எதுவோ அதுவே அவனாகிறான். இந்தச் சிரத்தைதான் மூவகைத்து. அவை சத்துவ குண சிரத்தை, ரஜோ குண சிரத்தை, தமோ குண சிரத்தை என்பனவாம். இவை மூன்றும் குணங்களின் சம்பந்தத்தால் உண்டாகும் ஆத்ம தர்மங்கள். இவைகளை உண்டாக்குபவைகளோ உடல், பொறிகள், மனம், பிராணன் முதலியவைகளாம்.**

XVII (3)

*சிரத்தை எனப்படுவது நாம் செய்ய மேற்கொள்ளும் செயற்பாட்டில் உண்டாகும் அக்கறை. இது மன எழுச்சி*

லும் செய்து முடிக்க வேண்டும் என்னும் விரைவினாலும் வினையாற்றுதலால் உண்டாகும் மகிழ்ச்சியாலும் நம்பிக்கை யாலும் ஏற்படுவதாகும். இந்த சிரத்தைதான் நமது சம்ஸ் காரத்தின் அடிப்படையிலே, அமைவது. நம் வாசனையை மூலதனமாகக் கொண்டது.

> ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
> எழுமையும் ஏமாப் புடைத்து''

என்னும் குறள் கூறியபடி ஒரு பிறவியில் அடைந்த சம்ஸ்காரம் ஏழு பிறவியிலும் தொடர்ந்து வரும்.

இந்த சம்ஸ்காரம் அல்லது வாசனையின் அடிப்படையில் அமைந்த சிரத்தையைக் கொண்டு ஒருவன் இதுவரை அடைந்தது என்ன? இனி அடையப் போவது என்ன? என் பதைநாம் அளந்து விடலாம்.

சிரத்தை மனிதன் இயல்புக்கு ஏற்றபடி அமைகிறது. அந்த மனிதனோ தனது நம்பிக்கை, சமயப் பற்று, கடவுள் நம்பிக்கை இவைகளுக் கேற்பவே அமைந்துள்ளவன். எதை உறுதியாக நம்புகிறானோ அதன் மயமாகும் தன்மை வாய்ந்தவன் மனிதன். அவன் நம்பிக்கையே அவனுடைய குண நலன்களை உண்டாக்குகின்றது.

இந்த வகையில் மனிதனிடம் அமைந்துள்ள சிரத்தையே அவனை மேலோங்கச் செய்கிறது. அல்லது கீழே வீழ்த்து கின்றது.

**சிரத்தை உடைய சாத்துவீகர்கள் இறைவனை (கடவுளர் களை) வணங்குகின்றனர். ரஜோ குணச் சிரத்தையாளர்கள் யக்ஷர்களையும், கடவுள் தன்மை வாய்ந்த சிறு தெய்வங்களை யும், தேவதைகளையும், வணங்குகின்றனர். தமோ குண சிரத்தையாளர்களோ, துர்தேவதைகளை, ஆவிகளை, பூத கணங்களைப் பூஜிக்கின்றனர்.** XVII (4)

சத்துவ குண சிரத்தை என்பது மிகத் தூய்மையானது. சத்துவ குணம் மேலோங்கப் பெற்ற நம்பிக்கையுடைய கடவுள் பற்று ஆகும் இது. இவர்கள் மனம் மொழி,மெய்கள் தூய்மையானவர்கள். அறிவுடையவர்கள். இவர்கள் இயற்கையாகவே ஞானத்தை அடையும் தன்மை வாய்ந்தவர்கள்.

ரஜோ குண சிரத்தை என்பது, வல்லமையை, சக்தியையே நம்பி வழிபடுவதாகும். இவர்கள் சக்தியை ஆராதிப்பவர்கள். தம் சக்தியால் வல்லமையால் தாம் அடைய வேண்டிய பொருள், பொன், மண், உலகியல் இன்பங்கள், புகழ்,முதலியவைகளை அவாவி இவைகள் காரணமாக இவர்கள் தாம் வெற்றி பெற—அதிகாரம் செல்வம், அடைய—இவைகளை எல்லாம் அருள்வதாகத் தாம் நம்பும் சிறு தெய்வங்களை, தேவதைகளை, காளி, கூளி, இலக்குமி, சரஸ்வதி முதலிய பற்பல, சிறு தெய்வங்களை இவர்கள் வணங்குவர்.

தமோ குண சிரத்தை என்பது, இருளையும், மருளையும் நம்புவது. இவர்கள் சோம்பல், அறியாமை பூண்டவர்சள். தன்னலமும், தூய்மையற்ற இருண்ட மனமும், கொண்டவர்கள். இவர்கள், துர்தேவதைகளை,ஆவிகளை, பூத கணங்களைப் பூசிக்கின்றவர்கள். இந்த ஆராதனையானது துக்கத்தோடு கலந்த அற்ப சுகத்தை நல்க வல்லது.

வீண் பகட்டும்,அகங்காரமும் உடையவர்களாய்க் காமமும், பற்றும் மேலோங்கப் பெற்றவர்களாய், எந்த அறிவற்ற மக்கள் தங்கள் உடலையும் இந்திரியங்களையும், தம் உள்ளத்தில் உறையும் என்னையும் துன்புறுத்திச் சாத்திரத்திற்கு ஒவ்வாத கொடுந்தவம் புரிகின்றார்களோ, அவர்கள் அசுர வழி ஏகத் துணிந்தவர்கள் என்று அறிக, XVII (5&6)

> ‘‘கற்பங்கள் பல கோடி செல்லத் தீயக்
> கனலின் நடு ஊசியின் மேல் காலை ஊன்றி
> பொற்பற மெய் உணவின்றி உறக்கமின்றி
> புலர்ந்தெலும்பு புலப்பட ஐம்பொறியை ஓம்பி’’

நிற்பவருக்கு ஒளித்து!' உள்ளவன் இறைவன் என்கிறார் வள்ளல் பெருமான். இப்படிப்பட்ட கடுந்தவம் புரிபவர்கள் வீண்டம்பமும், அகங்காரமும் மிக்கவர்கள்.

இவர்கள் காம வசப்பட்டவர்கள். பற்றென்னும் வகையில் சிக்கிக் கொண்டு உழல்பவர்கள். இவர்கள் புரியும் கடுந்தவம் தன்னலத்தின் பாற்பட்டதே. தான் என்னும் அகங்காரம் மேலோங்கப் பெற்ற இவர்கள் வீண்டம்பம், பகட்டு இவை காரணமாக முள், ஆணிப்படுக்கையின, மேல் படுத்துக்கிடக்கின்றனர். உபவாசத்தால் பட்டினி கிடந்து வருந்துகின்றனர். ஒற்றைக்காலில் நின்று இரு கைகளையும் கூப்பி வழிபடுகின்றனர். உடலிலே ஊசிகளை குத்திக் கொண்டும், முதுகு தசையிலே கொக்கி மாட்டி ரதம் இழுத்தும் தங்கள் உடலைச் சித்திரவதைக் குள்ளாக்கிக் கொள்ளுகின்றனர். தம் இந்திரியங்களை வதைத்துப் பாழாக்குகின்றனர். உள்ளத்திலே உறைகின்ற இறைவனையும் இந்த முறையில் துன்பந்துக் குள்ளாக் குகின்றனர்

உடலைச் சித்திரவதைக்கு உள்ளாக்குவது ஆத்ம ஞானத்துக்கோ, தன்னை உணர்தலுக்கோ, புலனடக்கத்திற்கோ வழி கோலாது. உடலை வருத்தி விரதம் காத்தலும் கடுந்தவம் புரிதலும் அறியாமையால் மேற்கொள்ளும்— "தான்" என்னும் அகங்காரத்தால் மேற்கொள்ளும்— சாதனைகளே. இவைகளால் இன்பமுமில்லை; நற்பயனுமில்லை.

சாத்திரம் சொல்லும் நெறியோ, சான்றோர் சென்ற நெறியோ இதுவல்ல. இவர்கள் அசுரத்தனமான நெறியில் செல்லத் துணிந்தவர்கள் என்பதை அறிதல் வேண்டும். இவர்கள் நெறி தெய்வ நெறி அல்லவே அல்ல.

இனி மூன்று வகைப்பட்ட உணவு முறைகளும், மூவகை யாகம், தவம், தானம் முதலியனவும் சொல்லப்படுகின்றன.

ஒவ்வொருவருக்கும் விருப்பமான உணவுகளும் மூன்று வகையாக உள்ளன. யாகமும், தவமும், தானமும்

அப்படியே அமைந்துள்ளன. அவைகளிடையே உள்ள வேற்றுமைகளைக் கேட்பாயாக. XVII (7)

*சிரத்தை எப்படி முக்குணங்களால் மூவகைப்பட்டதோ, அதைப் போலவே உணவு முறைகளும், வேள்விகளும், தவமும், தானமும் முக்குண மாந்தர்களுக்குத் தக்கபடி மாறுதலுக்குட்பட்டே அமைந்திருக்கும்.*

நீண்ட ஆயுள், அறிவு, வலிமை, ஆரோக்கியம், சுகம், விருப்பம், ஆகிய இவைகளை விருத்தி செய்பவை, இனிமையானவை, மிருதுத் தன்மை வாய்ந்தவை வலிவை, உண்டாக்குபவை, இன்பமானவை ஆகிய உணவுகள், சத்துவ குண மாந்தர்களுக்குப் பிரியமானவைகள். XVII (8)

*சத்துவ உணவு என்பது சத்துவ குணமுள்ள தூய்மையானவர்கள் உட்கொள்ளும் உணவு ஆகும். சத்துவ உணவு, ஒழுக்கத்தை—புத்திகூர்மையை—வலிமையை - ஆரோக்கியத்தை—இன்பத்தை, உடல், மன வலிமை வாய்ந்த வாழ்க்கையை, ஓங்கச் செய்யும். உற்சாகத்தையும் மகிழ்வையும் வாழ்வில் ஆனந்தத்தையும் உண்டாக்கும்.*

*சத்துவ குண ஆகாரங்கள் மனதுக்கு ஏற்றவை. இனிய சுவை வாய்ந்தவை. தித்திப்பானவை. சத்துள்ளவை. சாறு மிக்கவை. அவை அரிசி, கோதுமை, பருப்பு காய்கறிகள் பால், தயிர், நெய் போல்வனவாம்.*

கசப்பு, புளிப்பு, காரம், உவர்ப்பு, சூடுமிக்கவை உலர்ந்து போனவை, வறட்சி மிக்கவை. எரிச்சில் மிகுந்தவை, துன்பத்தையும் துயரத்தையும் நோய்களையும் உண்டு பண்ணுபவை, ஆகிய உணவுகள் ரஜோ குணத்தாருக்கு விருப்பமானவை. XVII (9)

*ரஜோ குண உணவு எளிதில் உணர்ச்சி வசப்படுபவர்கள் விரும்பி உட்கொள்வது. உலகியலிலே ஈடுபட்டு, போராட்டத்திலே குதிக்கின்ற வலிமை மிக்க மனிதர்கள் விரும்பும் உணவுவகை இது. இப்படிப்பட்ட ரஜோ குண மாந்தர்களின்*

உணவு, கசப்பாகக், காரமாகப் புளிப்பாகச், சூடுமிகுந்து, உலர்ந்து போய், கடித்துமென்று தின்னத்தக்கதாய் இருக்கும். புளி மிளகாய், உப்பு மிகுந்தான உணவு இது. ஆயுளைக் குறைத்து நோய்களைத் தரும் உணவு இந்த உணவு.

சமைத்து ஒரு ஜாமம் (3 மணிநேரம்) கழிந்த உணவு, சுவை இழந்த உணவு, துர்நாற்றமெடுத்த பழைய உணவு. பிறர் தின்று மிச்சிலானது. தூய்மையற்றதான உணவு, இவைகள் தமோ குணத்தார்க்குப் பிரியமானவை. VXII (10)

தாமத குணமிக்க உணவு வகைகளைக் கொடூர குணம் வாய்ந்த கீழ்மக்கள் விரும்பி உண்பார்கள். தாமத குண உணவுகள். அப்பொழுது சமைக்கப்படாதவை (பழையவை.) பதனிழந்து அழுகியவை. ருசி அற்றவை. தூய்மை அற்றவை. நாட்பட்டவை, நூர்நாற்றம் உள்ளவை. கைகளால் தீண்டத்தகாதவை முதலியனவாம். அவை ஊன், உணவு, மீன், முட்டை, ஊறுகாய், பழைய உணவு, ஊசிப் போன பண்டங்கள், போதைப் பொருள்கள், பிறர் உண்டு கழித்த எச்சில் பண்டங்கள் ஆகும்.

இங்கு சொல்லப்பட்ட மூவகைப்பட்ட உணவுகளிலே நாம் சத்துவ குண ஆகாரங்களையே உட்கொண்டு வருவோமானால் சத்துவகுணம் மேலோங்கி நிற்கும். அந்த உணவு வகைகள் இதயத்தைத் தூய்மைப்படுத்தும். தூய உணவு நேர்மையான வாழ்க்கை முறைக்கு வழிகோலுகிறது. தாம் உண்ணும் உணவு முறைக்கேற்பவே மனிதன் உருவாகின்றான். குண நலன்கள் அமைகின்றன. அதோடு உள்ளம் உணவின் வகைக்கேற்ப மாறுபடுகின்றது. எனவே, விழிப்போடு நம் உணவு வகைகளைத் தேர்ந்தெடுத்து உண்ணுதல் நன்மை பயக்கும்.

அடுத்து மூன்று வித ஆராதனைகள் விளக்கப்படுகின்றன.

சாத்திர விதிப்படி நியமிக்கப்பட்ட ஆராதனைகளைப் பலனை விரும்பாது ஆராதனை செய்வதே மேலானதென மனதில் நிச்சயித்து, எந்த எந்த ஆராதனை செய்யப்படு கின்றனவோ அவை சாத்விகமானவை. XVII (11)

*சத்துவ குண ஆராதனை ஒரு இன்றியமையாத கடமை யாகச் செய்யப்படுகிறது.*

*சத்துவ குண ஆராதனையில் தெய்வ நம்பிக்கை பொருந்தி இருக்கும். அறத்தின் பிடிப்பு இருக்கும். சா ரங்களின் விதிகளுக்கு இவை உட்பட்டிருக்கும், ஆராதனையில் ஆசை இல்லை. செய்யப்படும் ஆராதனை யின் பயனை செய்பவன் எதிர்பார்ப்பதில்லை. இதில் தன்னலமில்லை. இந்த ஆராதனை சாத்திர விதிகளுக்கு உட்பட்டிருப்பதால் ஆற்றப்படுகிறது. எவ்வித லாபமும் எதிர்பார்த்து இது செய்யப்படுவதில்லை.*

*தாய் தன் குழந்தையைப் பராமரிப்பது எவ்வித பலனை யும் எதிர்பார்த்தல்ல. அது அவள் கடமை. அதை ஒப்பவே சத்துவ ஆராதனை. (வழிபாடு)கூட கைம்மாறு கருதி செய்யப்படுவதில்லை. கடவுளை வழிபடுவது அவர்கள் இயல்பு. இதற்குரிய பலனைஅவர்கள் எதிர்பார்ப்பதில்லை. இதில் தன்னலமில்லை.*

*சத்துவ குண ஆராதனை—(வேள்வி) வழிபாடு இத்தகையது.*

பரதகுலத் தோன்றலே? பலனை விரும்பியோ, ஆடம்பரத்துக்காகவோ, செய்யப்படுகின்ற ஆராதனையே ராஜசமான தென்று அறிக. XVII (12)

*ரஜோ குண ஆராதனை, நேர்மையற்றது. இது பண்ட மாற்றைப் போன்றது. இந்த ஆராதனை மூலம் செல்வம், புகழ், அதிகாரம் இவைகளைத்தான் அடைந்திடச் சாதகன் அவாவுகிறான். ஆராதனை செய்கிறவன், தன்னலத்தோடு பலனையே விரும்பிச் செய்யும் ஆராதனை இது.*

சாத்திர விதியினின்று மாறுபட்டதும், அன்னதான மில்லாததும் மந்திரங்கள் அற்றதும், தட்சணை இல்லாததும் சிரத்தை யற்றதுமாகிய ஆராதனை தாமச ஆராதனை என்று அறிக. XVII (13)

இந்தத் தாமச ஆராதனை நம்பிக்கை என்பதே இல்லாதது. சாத்திர நெறிக்கு 'புறம்பானது பயன் அற்றது; இதில் ஊக்கம் இல்லை; விசுவாசமில்லை; சிரத்தை இல்லை. கடனே என ஆற்றும் ஆராதனை இது. சிரத்தை இல்லாமை யால் குறைபாடுடையது இது. இந்த தாமச ஆராதனை செய்வதைக் காட்டிலும் சும்மா இருப்பதே சுகம்.

இனி தவம் என்பது விளக்கப்படுகிறது.

மனிதனின் தனி ஒழுக்கத்தினை வெளிப்படுத்துவது தவம். இதுதான் மூவகைப்படும். அவை, உடல்தவம், வாக்குத்தவம், மனத்தவம் என்பனவாம். உடல் தவம் என்பது இங்கு விளக்கப்படுகிறது.

உடல் தவம் (தேகத்தால் செய்யப்படும் தவம்) கடவுளர் கள் (தேவர், தேவதைகள்), அந்தணர்கள் குருமார்கள் (ஆசிரியப் பெருமக்கள்) ஞானிகள், ஆகிய இவர்களைப் போற்றுவதும்; தூய்மையும் (வாய்மையும்) நேர்மையும் பிரம்மச்சரியமும் கொல்லாமையும் கை கொண்டு ஒழுகுவதும் உடலால் செய்யப்படும் தவம் எனப்படுகிறது. XVII (14)

மேற்சொன்ன கடவுளர்கள், அந்தணர்கள், குருக்கள், ஞானிகள் இவர்களைப் போற்றித் துதித்துக் கைகூப்பி வணங்குதல் தரையில் வீழ்ந்து வணங்கல் உடலால் செய்யப் படும் தவமாம்.

இதோடு உடலைத் தூய்மையோடு வைத்திருத்தலும் நேர்மையோடு வாழ்தலும் பிற உயிர்களுக்கு தீங்கிழைக்காம லிருத்தலும், பிரம்மச்சரியத்தை இடையறாது கடைப்பிடித்த லும் உடலால் செய்யப்படும் தவமே. இதற்கு, உடலது தசைத்தினவை, காமத்தை அடியோடு தவிர்த்தல்

*வேண்டும். இதற்கு, உடலைக் கடுமையான பத்தியங்களுக்கு உள்ளாக்க வேண்டும். சிற்றின்ப வேட்கைக்கு உள்ளாக்கும் யாவற்றையும் விலக்கி வாழ வேண்டும். ஆடம்பரத்தை அறவே துறந்துவிட வேண்டும். இவை யாவும் உடல் தவத்தின் பாற்படும்.*

பிறரது மனம் வாக்குக் காயங்களுக்கு எவ்வகையிலும் துன்பம் நல்காத வாய்மையும், இனிமையும், நலனும் கூடிய சொற்களைப் பேசுதலும், அறநூல்களை, ஞான நூல்களைக் கற்றலும், கற்பித்தலும், வாக்குத் தவம் என்று சொல்லப் படுகிறது. XVII (15)

*வாக்கினால் செய்யப்படும் தவம் என்பது கேட்பவர் களுக்கு இதமளிக்கும் சொற்களைப் பேசுவது. அது சொல்லினது தூய்மையே. உண்மையான சொற்கள், இனிமை யான சொற்கள், பயனுள்ள சொற்கள், பேசல், புறங்கூறாமை இவைகளுடன் அறநூல் கற்றல், பரப்புதல் போதித்தில், முதலியனவும் வாக்குத்தவமாம். (சொற் சுத்தமாக்கும் தவம்)*

*உண்மையான சொற்களையும், ஈரமான கருணைமிக்க பச்சாதாபமுள்ள சொற்களையும் நலிந்தவர்களுக்கு உபசார மான சொற்களைச் சொல்லுதலும் இறைவன் புகழைப் பாடுதலும் நாமத்தை உச்சரித்தலாகிய இவையாவும் நாவால் செய்யப்படும் தவமே.*

மன அமைதி, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், தூய்மையான நோக்கம், இவைகளைப் பெற்றிருத்தலே மானஸ தவம் (மனத்தவம்) எனப்படுகிறது. XVII (16)

*மன அமைதிதான் சாந்தி; ஒவ்வொரு மனிதனுக்கும் தேவை இந்த சாந்தியே! மனச்சோர்வு, மனக்குழப்பம், காமம், சினம் இவைகளாலாம் மனவெழுச்சி எனும் இவை களற்ற சாந்த நிலையில் இருத்தலே மன அமைதியாகும்.*

இதையே சுலோகத்தில் மனப்பிரசாதம் என்று குறிப்பிடப் படுகிறது.

உள்ளம் முழுமையும் அன்பு நிலவினால், வேறு பிற அங்கு தங்க இடம் இராது. அன்பு மயமான அந்த உள்ளத் திலே இறைவனே வீற்றிருக்கிறார். மௌனம் என்பது பேசாமலிருத்தல் அல்ல. உள்ளம் மௌனமே மௌனம். தீய எண்ணங்கள் மனதின் உள்ளே புகவிடாமல் மேலான நல்ல எண்ணங்களே உள்ளத்திலே உதிக்க இடந்தருதலும் இறைவன் நினைவு உள்ளத்திலே நீங்காமல் நிலைபெற வைத்திருத்தலும் மௌனம் எனப்படும்.

தன்னடக்கம் என்பது ஐம்புலன்கள் அந்தக்கரணங்கள் ஆகியவைகளைத் தன்னடக்கத்திலே வைத்திருத்தல். ஐந்தவித்து ஆற்றலோடு விளங்குதல்.

அடுத்து சுலோகத்திலே சொல்லப்பட்டிருப்பது தூய்மை யான நோக்கம். நம்முடைய நோக்கும் இலக்கும் தூய்மை யானதாக அமையவேண்டும். உதவாத சிந்தனைகள் கேவலமான எண்ணங்கள் உலாவுகின்ற தடமாக மனம் இருத்தலாகாது. வேறு எந்த எண்ணமும் சிந்தனையும் புகாமல் தெய்வ சிந்தனை மட்டுமே குடிகொண்டிருக்கும்படி நம் மனதை நம் கட்டுப்பாட்டிலே தூய்மை கெடாமல் வைத்திருத்தலே மானஸ தவம் ஆகும்.

பயனை விரும்பாதவர்களும், யோகத்திலே உறுதி பெற்ற வர்களுமான, மனிதப் பிறவிகளால் மிகவும் சிரத்தையோடு செய்யப்படும் மேற்கூறிய மூவகைத் தவங்களுமே சாத்வீக மான தவம் என்றே இயம்பப்படுகிறது. XVII (17)

சாதாரணமாக எச்செயலைச் செய்தாலும் அதனைப் பற்றி வரும் பயனைக் கருதாதே என்பது கீதையின் தத்துவம். இச்சுலோகத்திலே தவம் செய்வதற்கு மிக இன்றியமையாத முதல் தகுதி பயன் விரும்பாமையே. தவத்திலே பயன் விரும்பினால் அது தன் தூய்மையை இழந்து விடுகிறது.

தவமியற்றுகின்ற இந்த யோகத்திலே எப்போதாவது அடைகின்ற தோல்விகளுக்குத் தாம் துவண்டுவிடாமல், பிற ஏதாவது காரணங்களால் இடையில் தம் தவ முயற்சியைக் கைவிடாமல், இடையறாமல், தவமியற்றல் வேண்டும். இதையே யோகத்திலே உறுதி பெற்றவர்கள் என்கிறது சுலோகம். இங்ஙனம் உறுதியோடும், சிரத்தையோடும் பலன் கருதாமல் செய்யப்படுகின்ற மேற்கூறிய மூவகைத் தவங்களே சாத்வீகத் தவமாகிறது.

பிறரது பாராட்டுதலையும், பெருமையையும் (தம்மைப்) போற்றி காலில் வீழ்ந்து வணங்கும் வணக்கத்தையும் முன்னிட்டு, ஆடம்பரத்துடன் எத்தகையதான தவம் இங்கு செய்யப்படுகிறதோ அத்தவம் தற்காலிகமானது உறுதியற்றது; அத்தவம் ராஜச தவம் எனப்படும். XVII (18)

தவத்தின் உண்மையான தன்மை என்ன? இதில், தான் தன் உடைமை என்பதைத் துறந்துவிட்ட நிலை உண்டா? தன்னைப்பற்றி நினைக்கும் நினைவும் இல்லாமல் நீங்கி விட்டதா?

தன்னலம், தற்பெருமை, தன்னைப்பற்றிய சிந்தனை பகற்கனவுகள் இவைகள் தன்னிடம் இல்லாமல் ஒழிந்து போயினவா?

உண்மையான தவம் என்பது பகட்டான ஆடம்பரமான வெளிவேடம் பூண்பதல்ல.

ஆனால் பல சாமியார்கள் தாம் பெரிய தவசிகள் போல் நடித்துப் பிறர் பாராட்ட, பிறர் தம் காலில் வீழ்ந்து வணங்கப், பிறர் தம்மைப் பெருமையாகப்பேச, நடையுடை பாவனைகளில் தவத்தினால் உயர்ந்தவர்களைப் போல காணப்படுகின்றனர். வள்ளுவர்,

> ''தவமும் தவம் உடையார்க்கு ஆகும் அவம்அதனை
> அஃதிலார் மேற்கொள்வது''

என இத்தன்மையினையே கடிந்து கூறுகிறார்.

தவசிகளுக்குப் புலன்களையும் உள்ளத்தையும் ஒறுத் தடக்கும் வன்மை தேவை. புலன் உணர்ச்சிகளின் தூண்டு தலை தேவைகளைக் கடிதல் வேண்டும். ஒருவன் மன வலிமை, தசை உணர்வுகளை வெல்வதிலும் தூய்மை அடைவதிலும் மேலோங்க வேண்டும். இன்ப நுகர்ச்சியின் தூண்டுதலை, முளையிலேயே கிள்ளிவிட வேண்டும். உண்மையான தவம், தன் நல இன்ப மறுப்பும், தன் உள்ளுணர்வுகளின் ஒறுத்தலுமே ஆகும். வாழ்வில் 'தான்' என்னும் அகங்காரத்தை மையமாகக் கொண்ட வாழ்வை உதறித் தள்ளவேண்டும்.

"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்குதலே" தவசியின் தன்மை.

இவைகளில்லாமல் ஆடம்பரத்துக்கும், பிறர் மெச்ச மெச்ச தம் காலில் விழுந்து வணங்க, ஓகோ ஆ! ஆ! என்று பாராட்டத் தவ வேடம் பூண்டு, தன்னலத்தோடுபட்டான வாழ்வை வாழ்ந்து உள்ளத்துறவின்றி வாழ்பவர்கள் இரஜோ குண தவசிகளேயாவார்கள். அவர்களால் இயற்றப் படும் தவமும் தற்காலிகமானது; உறுதியற்றது.

மூடக் கொள்கைகளால் கவரப்பட்டுத் தன்னைத் துன்புறுத்தும் சித்ரவதைக்குட்பட்டோ அல்லது பிறரைப் பிறர் வாழ்வை, நாசம் செய்தற் பொருட்டோ செய்யப்படு கின்ற தவம் தாமஸ தவம் எனப்படுகிறது. XVII (19)

இந்தத் தாமஸ தவம் என்பது அறிவில்லாத மக்களால் "நான்" என்னும் அகங்காரத்தால் மூடப்பட்டவர்களால், மூட நம்பிக்கைகளால், மூடக்கொள்கைகளைக் கடைப் பிடிப்பவர்களால் மேற்கொள்ளப்படுவது. இவர்களுக்குத் தம்மை அறிதலாம் ஆத்ம ஞானம் இல்லை. இவர்கள் தம் உடலை வருத்துவதாலேயே தாம் எண்ணிய எண்ணம் ஈடேறும் என்று தவறாக நினைப்பார்கள்.

விரத காலத்தில் பட்டினி கிடத்தல், இரவெல்லாம் கண் விழித்தல், முதலான பலப்பல வகையால் உடலை

துன்பத்துள்ளாக்குதல் ஈறான இந்த தாமஸ குணத்தார் தவம் என்பதன் பொருளை நன்கு புரிந்துகொள்ளாமல் தவம் செய்தலை மேற்கொள்வார்கள். (இவைகளை எந்த அற நூலும், ஞானிகளும் அனுமதிப்பதில்லை)

இவர்கள் இன்னும் ஒரு படி மேலே சென்று, பிறர் அழியவும், பிறர் துன்பமடையவும், பிறர் வாழ்வை நாசம் செய்யவும், பலப்பல வகையில் தவமியற்றுவார்கள்.

இவைகள் முக்தியைத் தருவதில்லை. ஆத்ம ஞானத்தை அருள்வதில்லை. இது எல்லா வகையிலும் பயனற்ற ஒரு செயலே ஆகும்.

இனி மூன்று விதமான தானத்தைப் பற்றி விளக்கப் படுகிறது.

தக்க இடத்திலே தக்க காலத்திலே பிரதி உபகாரம் செய்யாதவர் என்ற போதிலும் தக்கவர்களுக்கு (சற்பாத்திர மானவர்களுக்கு, எந்த தானம் கொடுக்கப்படுகிறதோ, அது சாத்வீகமான தானமாகும். (XVII-20)

தானம் என்பது வறியவர்கட்கு ஈவது தான். மற்று ஏதோ ஒரு பலனை எதிர்பார்த்து பணம், பதவி படைத்தவர் களுக்குக் கொடுத்தல் தானமாகாது.

"மாறியீவார்க்கீதல் பொலி கடன் என்னும் பெயர்த்து"

சத்துவதானம் என்பது, பிரதிபலனை எதிர்பாராதது. காலத்தால் உதவி செய்யும் தானம், இடம்நோக்கிச் செய்யும் தானம், தக்கார்க்குக்கொடுக்கும் தானம், சமுதாயத்திற்குத் தேவைப்பட்ட கிணறு, குளம், சமைத்தல், சாவடி சத்திரம் கட்டல், சாலை அமைத்தல், சாலை ஓரம் மரம் வளர்த்தல் இவைகள் யாவும் சத்துவதானமே.

தானம் கொடுப்பவன் தான் என்னும் அகங்காரம் அற்றவனாகி இருத்தல் வேண்டும். கொடுக்கப்படும் தானமும் ஈஸ்வரார்ப்பணமாகக் கருதி தருதல் வேண்டும்.

இதுவே சத்துவதானம். இதற்குத் தானம் தருபவனிடம், பொருந்தி இருக்க வேண்டியகுணம், அடக்கமும், பணிவுமே, ஆடம்பரம், விளம்பரம், படாடோபம் இன்றிச் செய்யப் படுவது இந்த சத்துவதானம்.

மற்று, கைம்மாறு கருதியாவது பலனை உத்தேசித் தாவது வழங்கப்படும் தானமோ அல்லது மனவருத்தத்தோடு தரப்படும் தானமோ, ராஜஸ தானமெனக் கருதப்படுகிறது. (XVII-21)

ரஜோ குணமுள்ளவன் பிறருக்குத் தானம் செய்யும் போதே அதற்குரிய பிரதிபலன் எப்பொழுது கிடைக்கும் என்று கருதியே செய்கிறான். பிரதிபலனும் பன்மடங்கு அதிகமாகக் கிடைக்க வேண்டுமென விரும்புகிறான். தந்த, தரும், தன் தானத்தால் தனக்குப் பேரும் புகழும் விளம் பரமும் கிடைக்க வேண்டும் என்று கணக்குப் போடுகிறான், மனிதனுக்கு மட்டுமல்ல, ஆலயங்கள், சமுதாய கூடங்சள். முதலியவற்றுக்கு அவன் உதவுவதும், பணம் செலவழிப்பதும் இந்த நோக்கத்தோடேயே ஆகும்.

இந்த ராஜஸ தானத்திற்கு "தான்" என்னும் அகந்தையே காரணம். முழுமனத்தோடு இது தரப்படுவ தில்லை. காழ்ப்புணர்ச்சியோடோ, அல்லது விருப்பமில்லாம லேயோ இது தரப்படுகிறது. இந்த உலகத்தில் அடையும் பதவி போகங்களோ, அல்லது அந்த உலக சுவர்காதி போகங் களோ, இவர்கள் தமது தானங்களுக்கு எதிர்பார்க்கும் பிரதிபலனாகும்.

தகாத இடத்திலும் தகாத காலத்திலும் தகுதியற்ற மனிதர்களுக்கு வணக்கமில்லாமல், இகழ்ச்சியுடன் உதாசீன மாக எப்படிப்பட்ட தானம் செய்யப்படுமானாலும் அது தாமஸதானம் என்று சொல்லப்படுகிறது. (XVII-22)

இடம் அல்லாத இடத்தில் தானம் செய்தலாகாது. காலமல்லாத காலத்திலும் தானம் செய்யக்கூடாது. இடம் நோக்கிச் செய்யாத தானம் பிறருக்கு உபகாரம் செய்வ

தாகாது. அதைப்போலவே ஒழுக்கமற்றவன். குடிகாரன் மனைவி மக்களைக் காப்பாற்றாதவன், கொடியன், வஞ்சகன், இவர்களுக்குச் செய்யும் தானமும், இகழ்ந்து பேசியோ, அலட்சியமாகவோ செய்யும் தானமும், மிகவும் கீழ்த்தரமானதே.

தானம் என்பது மிகவும் உன்னதமான செயல். அது ஒருவனது இதயத்தின் கருணை வெள்ளத்தினைவிளக்குவது. இறைவனது படைப்பாகிய பிற மனிதர், விலங்கு, தாவரம் இவர்கள் மீது பொழியும் அருட்செயலே தானம் என்பது. வசதி குறைந்த பிற மாந்தர்களது இதயம் நிறைந்து களிப் படைய, இறைவனது படைப்பாகிய உயிரினம் மேலோங்கிச் செழித்து விளங்க, எழிலோடு திகழச் செய்யப்படும் கனிவான ஒரு நற்காரியம்தான். தானம் இதை உதாசீனமாக இகழ்ச்சியோடு, இடம், காலம் கருதாது, உதவாத கயவர் கட்கு, கீழ்கட்கு, செய்வது தகாது; நற்பயனை விளை விக்காது. எனவேதான் இது தாமஸ தானம் எனப்படுகிறது.

இதுவரை சொன்ன சிரத்தை, உணவு, ஆராதனை, தவம், தானம் இவைகளிலே சூழ்நிலைகளால் சமுதாய, அரசியல், சிக்கல்களால் குற்றங்கள் தடைகள் ஏற்படலாம். அவைகளை நீக்குவது எப்படி என்பதைக் கண்ணன் விளக்குகின்றார்.

பிரம்மம் என்பது ஓம், தத், சத், என மூவகையாகப் பெயரிட்டு மொழியப்பட்டுள்ளது, இந்த பிரம்மத்திலிருந்தே அந்தணர்களும், வேதங்களும் வேள்விகளும் தோன்றின.

(XVII-23)

அகர, உகர, மகரச் சேர்க்கையே ஓம் என்னும் பிரணவம். அதுவே பிரம்ம சொரூபம் எனப்படுகிறது. அகிலாண்ட ஓசைகளின் தொகையே ஓம் என்னும் பிரணவம்.

''தத்'' என்பது அது என்னும் பொருளுடையது. ''சத்'' என்பது உண்மையானது என்றும் பொருளுடையது.

எனவே "ஓம் தத் சத்" என்பதன் பொருள் ஓங்கார வடிவினனான பரப் பிரம்மாகிய அதுவே உண்மையாம் என்பதாகும்.

இந்த பிரம்ம சொரூபத்திலிருந்து உண்டானவைகளே அகிலாண்டமும், அனைத்து உயிரினங்களும். ஆனால் இந்த சுலோகத்திலே சொல்லப்படுபவை அந்தணர், வேதம், வேள்வி எனும் மூன்றுமே.

பரப்பிரம்மம் அறவடிவினர். எனவே உலகத்திலே, உலக மக்களுள்ளே சிறந்த அறவோர்களாம் அந்தணர்களையும் அறத்தையே போதிக்கும் அறநூலாம் மறைகளையும் அந்த அறநூல் வகுத்துள்ள நற்கடமைகளாம் வேள்வி முதலிய தொண்டுகளையும் இறைவனது மேலான படைப்பாகையி னால், இந்த சுலோகத்திலே, பிரம்மத்திலிருந்து தோன்றிய வைகளாக அறத்தின் கூறுகளான அந்தணர் மறைகள், வேள்விகள் என்பவை கூறப்பட்டன.

ஆகையால் ஓம் என்று உச்சரித்த பின்னரே, சாத்திரங் கள் உரைக்கும் வேள்வி, தானம், தவம், ஆகிய மூன்று செயல்களும், சாத்திர விதிப்படி, வேதத்தை (பிரம்மத்தை) உணர்ந்தவர்களால் தொடங்கப்படுகின்றன. XVII-(24)

ஓம் என்பதற்கு ஆம் என்று பொருள். பரம்பொருள் என்னும் பொருள் சிரஞ்சீவி, அழிவற்றவன். நித்திய வஸ்து அவன். நான் சாதகன். நான் அடிமை அவன் ஆண்டவன், இந்த சிருஷ்டி அவன் வழிபாட்டுக்கு உதவுவது என்று நாம் நினைக்க வேண்டும். எனவே, தானம், தவம், வேள்வி, அனைத்தும் "இறைவன் உளன்" எனும் கருத்துள்ள "ஓம்" எனும் சொல்லை உச்சரித்த பின்னரே, சாத்திரமறிந்தவர்கள் தொடங்குகின்றனர்.

எந்த ஒரு செயலும், ஏதாவது குறைபாடு உடையதே. குறைபாடு உண்டு என்பதற்காக எந்த ஒரு செயலையும் நாம் புறக்கணிப்பதில்லை. அந்தக் குறைபாட்டை நிவர்த்தி

செய்யவல்லது இறைவன் உளன் எனும் சிந்தனையோடு அதைஅவனுக்கு அர்ப்பணம் செய்தலே ஆகும். எனவேதான் சாத்திரத்தை நன்குணர்ந்தவர்கள் ஓம் என்னும் பிரணவ சொல்லோடு ஒவ்வொரு செயலையும் தொடங்குகின்றனர்.

''தத்'' எனும் (பிரம்மமாகிய ''அது'' வேறானது, இந்த சிருட்டியில் இருந்து வேறுபட்டது என ஒலிக்கும்) அந்தச் சொல்லை உச்சரித்து தம் செயல்களின் பயனைக் கருதாமல் வீட்டின்பத்தை நாடுபவர்களால், பலவகைப்பட்ட வேள்வி தவம், முதலிய செயல்களும் தானங்களும் செய்யப்படுகின்றன. XVII-(25)

தத் எனும் சொல் ''அது'' (பிரம்மம்) வேறானது. இச்சிருட்டியிலிருந்து வேறுபட்டது என்னும் பொருளைத் தருவது. இந்தச் சொல்லை உச்சரித்து நாம் செயலாற்றும் போது, சிருட்டியில் இருந்து வேறுபட்ட நம்மிலிருந்து வேறான அது 'பிரம்மம்' ஆண்டவன் என்றும் நாம் அவன் அடிமை என்றும், இந்த உலகம் யாவும் அவன் உடைமை என்றும் நம்முள் எண்ணம் எழுகிறது. எல்லாம் அவன் செயல் என்னும் சிந்தனை உதிக்கிறது. சூரியன் உதித்ததும் இருள் அகல்கிறது. பறவைகள் பறக்கின்றன. தாமரை மலர்கள் மலர்கின்றன. சூரியன் எங்கோ இருந்தும் உலகில் இவை நிகழ்கின்றன. இதைப்போலவே நம்மிலிருந்து வேறாகி விலகி இருப்பினும், வேறுபட்டிருப்பினும், பிரம்மமே நம் செயல்கள் அனைத்துக்கும் காரணம் என்பதை நாம் உணர்வோமானால் நம் செயல்களில் உள்ள பற்று அறும். அந்த பற்றின்மையை நம் செயல்களில் நாம் கொள்ள முடியுமானால் தான் நாம் ''தத்'' எனும் சொல்லின் பொருளை நன்குணர்ந்தவர்களாவோம்.

பார்த்தா? உண்மை என்ற பொருளிலும் நன்மை என்னும் கருத்திலும் ''சத்'' என்ற இச்சொல்லானது வழங்கப்படுகிறது. அங்ஙனமே அதே பொருளில் பற்பல மங்கல காரியங்களிலும் இந்த ''சத்''என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. XVII (26)

சத் என்னும் சொல்லுக்கு உளதாம் நன்மை என்று பொருள் அதாவது எக்காலத்தும் எந்நிலையிலும் அழியாது நிலைத்து நிற்பதே "சத்" ஆகும். இந்த வகையில் இறைவன் ஒருவனே "சத்"; பிற யாரும்—யாவுமே "அசத்" (நிலையுதலற்றவை) என்பதின் பாற்படும். இறைவன் ஒருவனே குறைபாடற்றவன். எனவே அவன் நித்தியன் (சத்) ஆகிறான். பிற யாவும் ஏதோ ஒரு வகையில் குறைபாடுடையன. எனவே அவை அழியும் தன்மை வாய்ந்தவை. அவை "அசத்"

சத் என்பது இறைவனின் உண்மையையும், நிலைத்து உளதாம் அவனது தன்மையையும், மங்கலத்தையும் விளக்கும் சொல். பிரம்மம் நலனே வடிவானது. உண்மை வடிவானது. இதயத்தின் அந்தரங்கத்திலே, தெய்வீக சாந்தி குடி கொண்டுள்ளது. நன்மையும் சாந்தியும் கலந்த அதுவே "சத்". பரப்பிரம்மம் நலன்; ஆற்றல் நிறைந்த சாந்தி மயமானவன்.

சத் என்பது மங்கலம்; நல்லன எல்லாம் விளைவிக்கின்ற விளை நிலம்.

பரப்பிரம்மத்துக்குத் "தான்" என்னும் தன் அகங்காரத்தைப் பலி கொடுத்து, நம் செயல்களை பிரம்மத்துக்கு அர்ப்பணித்துச் செய்கின்ற எல்லாச் செயல்களுமே "சத்" ஆகும்.

(முன்னர் உரைத்த) வேள்வியிலும், தவத்திலும், தானத்திலும் நிலைத்திருப்பது "சத்" ஆகும். அதுவன்றி "அதன்" (பிரம்மத்தின் பொருட்டுச்) செய்கின்ற கருமங்களும் "சத்" என்றே சொல்லப்படுகின்றன. XVI (27)

இந்த வகையிலும் பிரம்மமாகிய உண்மைப் பொருளை எய்த "சத்தாகிய" வேள்வி, தவம், தானம் பயன்படுகின்றன. பிரம்மத்தின் பொருட்டுச் செய்யப்படும் அனைத்து கருமங்களும் "சத்" எனப்படுகின்றன.

அதாவது சத்தாகிய பிரம்மத்தை அடைய முயலும் நெறிகளும் சத்தே ஆகின்றன. இந்த நெறி முறைகளில் ஏற்படும் குறைகள், தவறுகள், நீங்கவே ஒவ்வொரு செயலின் தொடக்கத்திலும் ஓம் தத் சத் என்று சொல்லி, அச்செயல்களைச் சிரத்தையோடு ஈஸ்வரார்ப்பணமாகச் செய்ய வேண்டும் என்கிறது பகவத்கீதை.

சிரத்தை இல்லாமல் செய்யப்படும் வேள்வியும் தானமும், தவமும் பிற கருமங்களும் ''அசத்'' எனப்படும். அர்ஜுனா! அவை மறுமைக்கும் உதவாது. இம்மைக்கும் உதவாது.
XVII (28)

சிரத்தை இல்லாமல் செய்யப்படும் உலக கருமங்கள் எதுவுமே பயன் தருவதில்லை. அப்படி இருக்கும்போது தெய்வீக கருமங்களாம் வேள்வி, தானம், தவம், பயன் தருவனவாகுமா?

எனவே, எச் செயலைச் செய்த போதிலும் சிரத்தை யோடு செய்தல் இன்றியமையாதது. சிரத்தையோடு செய்யப்படும் செயல்களைத் தொடங்கும் போதே முன்னர் சொன்ன ஓம் தத் சத் என்னும் சொற்களைப் பலமுறை உச்சரித்து நாம் செய்யும் செயலை இறைவனுக்கு அர்ப்பணித்துத் தொடங்குக. இல்லையேல் அச்செயல்கள் அனைத்துமே ''அசத்'' ஆகிவிடும். அதாவது எவ்விதப் பயனு மின்றி வீணாகிப் போகும்.

ஆற்றில் கரைத்த புளி எப்படி எதற்கும் பயன்படாமல் போகுமோ அதைப் போல சிரத்தை இல்லாமல் செய்யப் படும் செயல்கள் யாவும் இம்மை, மறுமை இரண்டுக்குமே பயன்படாமல் வீணாகிவிடும்.

(பதினேழாம் அத்தியாயம் முற்றும்)

பதினெட்டாம் அத்தியாயம்

# முடிவுரை

## மோட்ச சந்நியாச யோகம்

### பயனைத் துறத்தல்—ஆண்டவன் அருள்

கீதையின் இறுதி அத்தியாயமான இதிலே, கிருஷ்ணன், அர்ஜுனனுக்கு, உண்மையான வீடுபேறு (மோட்சம் மன வைராக்கியத்தினாலும், தன்னலமற்ற சேவையினாலுமே அடையப்படுகிறது என்பதை விளக்குகின்றார்.

உண்மையான சந்நியாசம் என்பது, தன்னல ஆசைகளை, அடியோடு துறந்து விடும் உள்ளத் துறவே. இந்த உலகம் என்னும் பலிபீடத்திலே, உன் ஆசைகள் அனைத்தையும் பலி கொடுத்து விடு. உன் சக்திகளை எல்லாம் அதன்மீது அபிஷேகம் செய். உன் கருமங்களை— கருமபலன்களைத் துறந்துவிடு. எல்லாக்கருமங்களையுமல்ல, தன்னல ஆசைகளால் தூண்டப் பெறும் அனைத்து ஆசைகளையும் துறந்துவிடு.

உண்மைத் துறவி, எல்லா கருமங்களையும் துறந்து விடுவதில்லை. ஆனால் தன்னல கருமங்களை எல்லாம் துறந்து விடுகிறான். ஓர் உண்மைத் துறவிதான் மனித சமுதாயத்தின் உண்மையான, தன்னலமற்ற தொண்டன்.

உண்மைத் துறவி, எல்லா வகைப்பட்ட வேறுபாடுகளிலிருந்தும் மேலுயர்ந்து விளங்குகிறான். மத, இன வேறுபாடுகள், அரசியல் கட்சி வேறுபாடுகள், சமுதாய, பொருளாதார, கலை, இலக்கிய வேறுபாடுகள் அனைத்தையும் கடந்தவன் அவன். மயக்கத்திலிருந்து விடுபட்டவன் அவன்; தான்

என்னும் அகங்காரத்தைத் தன்னிடமிருந்து ஒழித்து விட்டவன் எதிலும் எவரிடத்தும் அவன் பரமாத்மாவையே காண்பதனால் அவன் உலகச் சமுதாய சேவைகளில் தன் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்து விடுகிறான்.

எல்லையற்றதிலே அவன் வாழ்கிறான். அழிவற்ற நித்தியத்தில் அவன் தங்குகிறான்.

இந்த இறுதி அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே, முதல் சுலோகத்திலேயே, அர் ச்சுனன் தன் ஐயத்தினைப் போக்கிக் கொள்ள ஒரு கேள்வியை எழுப்புகிறான்.

**கண்ணா! சந்நியாசம், தியாகம், (துறவு) இவைகளின் தத்துவங்களைத் தனித் தனியாக அறிந்து கொள்ள அவாவுறுகின்றேன். XVIII (1)**

சந்நியாசம் என்றால் என்ன? தியாகம் (துறவு) என்றால் என்ன? இரண்டும் ஒன்றா? வெவ்வேறா?

சந்நியாசம் என்பது எல்லா கருமங்களையும் துறந்து விடுவது என்றும், தியாகம் அல்லது துறவு என்பது எல்லா கரும பலன்களையும் துறந்துவிடுவது என்றும், இந்தச் சுலோகத்தின் மூலம் உணர்த்தப்படுகிறது. அர்ஜுனன் இப்படி நினைத்தே இந்தக் கேள்வியைக் கேட்கிறான்.

அர்ஜுனனுக்குக் கண்ணன் பதிலளிக்கிறார்.

**ஞானிகள் காமிய கர்மங்களைத் துறந்துவிட்டு வாழ்தலே சந்நியாசம் என்று உணர்ந்துள்ளனர். அனைத்துக் கருமங்களின் பலனைத் துறந்து விடுவதைத் தியாகம் (துறவு) என்கின்றனர், தீர்க்கதரிசிகள். XVIII (2)**

காமிய கருமங்கள் யாவை? தன்னல ஆசையால் உந்தப்பட்டுச் செய்யும் கருமங்கள் யாவுமே காமிய கருமங் களே. செல்வம், பூமி, வீடு, புகழ் நீண்ட ஆயுள் முதலியவை களும் பிற யாவும் அடைய வேண்டிச் செய்யும் அனைத்துப் பணிகளும், காமிய கருமங்களே. ஆனால் இவைகளைத்

துறந்து விட்டாலும் அன்றாட வாழ்க்கையில்தான் கைகொண்டு ஆற்ற வேண்டிய உண்ணல் உறங்கல் பேசுதல் நடத்தல் மற்றுந் தன் வாழ்க்கைக்கு இன்றியமையாத பிற செயல்களை எல்லாம் தான் துறந்துவிட இயலாது. செயலற்றிருப்பது, ஜடம் போலிருப்பது, உண்மையான சந்நியாசியின் குறிக்கோள் அல்ல.

சரி, தியாகம் (துறவு) என்பது என்ன?

துறவு என்பது எல்லா கருமப் பலனையும் துறந்து விடுவதுதான்.

ஒரு துறவி, தன்னுடைய அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துக் கருமங்களையும் செய்கிறான். அதோடு உலகத்துக்கும் சமுதாயத்திற்கும் நன்மைகளை விளைவிக்கும் தொண்டும் ஆற்றுகிறான். தொண்டுக்குத் துணை நிற்கிறான். இவைகள் யாவையும் அவன் தன்னல மற்ற தியாக உணர்வோடு செய்கிறான். இப்படிக் கருமங் களை ஆற்றுகின்ற அவன் அவற்றால் விளையும் பயன்களை எதிர்பார்ப்பதில்லை. அவைகள் அவனை அடைந்தாலும் அவைகளையும் (கரும பலன்களையும்) அவன் தியாகம் செய்து விடுகிறான்

இந்தச் செயல்களை அவன் செய்யும் காலத்தில் அவன் அவைகளால் பந்தப்படுவதில்லை. ஏன்? அவை தன்னல மற்றவை; பயனை எதிர் பாராதவை. மாறாக இத்தகைய பணிகளால் அவன் பற்றிலிருந்து விடுபடுகிறான். எவ்வித பந்தமும் உள்ளத் துறவுடைய ஓர் உண்மைத் துறவியைப் பிணிப்பதில்லை. பற்றற்ற அவன் நிச்சயம் வீடுபேறு அடை கிறான். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' அல்லவா?

சில அறிஞர்கள் அனைத்துக் கருமங்களும் தோஷ முடையவைகளே. ஆகவே அவை அனைத்தும் துறக்கப்பட வேண்டியவைகளே எனக் கூறுகின்றனர். மற்றும் சிலரோ

வேள்வி, தானம், தவம் ஆகிய இக்கருமங்களைத் துறக்க லாகாது என்கின்றனர். XVIII (3)

*சாங்கியர்கள் எல்லாக் கருமங்களும் குறைபாடுடையன; தோஷமுடையன என்று கூறுகிறார்கள். ஏனெனில் கருமங்கள் அனைத்துமே பந்தத்தை உண்டுபண்ணுவன என்பது அவர்கள் கருத்து.*

*ஆனால் மீமாஞ்சகர்களோ, வேள்வி தானம், தவம் ஆகிய கருமங்களைத் துறக்கலாகாது என்கின்றனர். ஏனெனில் அவைகளே இதயத்தைத் தூய்மைப்படுத்துகின்றன. ஆத்ம முன்னேற்றத்துக்கு வழிகோலுகின்றன என்கிறார்கள் இவர்கள்.*

*இங்கே கீதை வலியுறுத்துவது என்னவென்றால் ஒருவன் எல்லா பற்றுகளையும் அறவே துறந்திட வேண்டும். கரும பலன்கள் அனைத்தையுமே துறந்துவிட வேண்டும். அவன் தருமத்தை, அறத்தை, கடமையைத் தருமத்தின் பொருட்டாக மட்டுமே கடைபிடிக்க வேண்டும். எவன் ஒருவன் கருமபலனில் ஒரு சிறிதும் நாட்டமின்றிஅப்பலனைப் பற்றறத் துறந்து செயலாற்றுகின்றானோ அவனே மெய்யுணர்வோடு செயலாற்றுபவன். அவனே உண்மைத் துறவி—தியாகி.*

*கண்ணன் மேலும் தொடர்கிறார்:*

பார்த்தா! (துறவு தொடர்பாக) தியாகத்தைக் குறித்து நான் கொண்டுள்ள முடிந்த முடிவைக் கேள். துறவு (தியாகம்) மூன்று வகைப்பட்டதென்றே சொல்லப் பட்டுள்ளது, XVIII (4)

வேள்வி, தானம், தவம் ஆகிய கருமங்கள் துறக்கப்பட வேண்டியதில்லை. ஏனெனில் அவை மூன்றும் அறிஞர் களுக்குத் தூய்மை தருபவைகளாம். XVIII (5)

பார்த்தா! இக்கருமங்கள் அனைத்துமே பற்றற்று செய்யப் பட வேண்டும் என்பதே என்னுடைய உத்தமமான உறுதியான கொள்கையாகும். XVIII (6)

வேள்வி இயற்றுதல் இறைவனுக்கு எனச் செய்யப்படும் வழிபாடு ஆகும். தானம் செய்தல் சமுதாயத்திற்குச் செய்யும் தன்னால் ஆன உதவியாகும் தவமோ தன் ஆத்ம முன்னேற்றத்திற்கு ஆற்றப்படும் நற்செயலாகும்.

இவ்வகையில் தான், தன் சமுதாயம், இறைவன் எனும் மூன்றையும் ஒரு சேர கடைத்தேறும்படி இம்மூன்று செயல்களும் (வேள்வி, தானம், தவம்) அமைந்திருப்பதால் இம் மூன்றும் துறக்கப்பட வேண்டுவன அல்ல. இக்கருமங்களுள் யாதொன்றைத் துறந்து விடினும் அது ஆத்ம முன்னேற்றத்திற்குரிய முழுமையான செயலாகாது. இம்மூன்றையுமே சத்துவ குணத்தோடு "நான்" என்பதை மறந்து துறவு மனப்பான்மையோடு ஆற்றினால், அதுவே வீட்டு நெறிக்கு வழி வகுக்கும்.

இந்தக் கருமங்கள் வேள்வி, தானம், தவம் யாவும் துறக்கப்பட வேண்டுவன அல்ல. மாறாக இவைகளை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். உலக நன்மைக்கெனவும் இவைகள் அர்ப்பணிக்கப்பட வேண்டும்.

இதற்கு மிக இன்றியமையாத தன்மையாதெனில் ஆசைகளின் நினைவை அடியோடு துறத்தலும், "நான்" என்னும் அகந்தையை அடியோடு அழித்தலுமே ஆகும். இவைகள் முற்றுமாக நம்மிடமிருந்து நீங்காவிட்டால், காமம் (அவா—பேராசை) பெருஞ் சுவாலையாகி மேலெழும். ஏனெனில் அக்காமம் மனத்திலும் இந்திரியங்களிலும் இரண்டறக் கலந்துள்ளது. அடக்க அடக்க அது மேலெழும். மாறாக அதைத் திருப்திப் படுத்துவதன் மூலம் அதை அகற்ற முயன்றாலோ, நெய் பெய்த நெருப்பைப் போல அது மேலும் சுடர் விட்டுப் பற்றி எரியும்.

எனவே இந்தக் காமத்தை—அவாவை அடக்க வழி என்ன? இடைவிடாத பயிற்சி, தியானம், எண்ணங்களை ஒழுங்கு செய்தல், தீய எண்ணங்கட்கு மாறான நல்லெண்ணங்களையே எண்ணுதல் இவைகளே,

*உள்ளத்தின் கொந்தளிப்பை, மன எழுச்சியை, மனோ விகாரத்தினை, மெய்யுணர்தலை உலகின், உயிரின் தன்மையை, உள்ளவாறு உணர்ந்து கொள்ளுதல் எனும் வலிமை வாய்ந்த சக்தியால் அடக்கிக் கொள்ளுதல், மிகச் சிறந்த பயிற்சியாகும்.*

*இந்த வகையில் நம்முடைய உள்ளமும் இந்திரியங்களும் தூய்மை அடைகின்றன. மனம் ஒழுங்கு முறைப்படி இயங்கு கின்றது.*

*இந்த வகையிலே பண்பட்ட—தூய்மையான மனம் வாய்ந்த — தன்னலமற்ற தான், தனது எனும் அகங்கார மமகாரங்களைத் துறந்த — உள்ளத்துறவுடைய துறவி உலகிலே மக்களோடு மக்களாகப் பழகி நடமாடுகிறான். அவன் உள்ளத்திலே ஆசை இல்லை. காமாதிகள் இல்லை. அமைதி மிக்க ஞானச் சுடர் அவன் முகத்திலே வீசுகிறது.*

மேலும், நித்ய கர்மத்தினை—அன்றாடம் செய்ய வேண்டிய இன்றியமையாத கருமங்களை—விலக்கி விடுவது முறை யற்றது. அறிவில்லாமையால் அதைத் துறந்து விடுவது தாமசத் துறவு என்று சொல்லப்படுகிறது. XVIII (7)

எவன் இக்கருமத்தால் துன்பம் உண்டாகும் என்று கருதி உடல் பிரயாசைக்கு (உழைப்பிற்கு) அஞ்சி அதை விடுகிறானோ, அவன் ராஜஸ தியாகம் செய்கிறான். அதனால் அவன் தியாக பலனை அடைவதே இல்லை.

XVIII (8)

அர்ஜுனா! அன்றாடம் செய்யப்பட வேண்டியதென்று விதிக்கப்பட்ட எந்தக் கருமமும் செய்யப்பட வேண்டியதே! அவை எவ்விதப் பற்றுமின்றி பலனில் கருத்தின்றி (அபிமானத் தையும், பயனையும் விட்டு) செய்யப்படுகின்றபோது அத்துறவு சாத்வீகமானதென்று கருதப்படுகிறது. XVIII (9)

*துறவு (தியாகம்) தாமசத்துறவு, ராஜஸத்துறவு, சாத்வீகத்துறவு என மூன்று வகைப்படும்.*

தாமஸத் தியாகத்திலே (துறவிலே) பற்றும் பலனில் விருப்பமும் பொருந்தி இருக்கும். இந்தத் தாமஸ தியாகத்தில் உழன்றாடும் மனிதன் மோகத்திலே மூழ்கி இருப்பான். அறியாமையில் ஆழ்ந்திருப்பான். பற்று அவனைப் பற்றிக் கொண்டிருக்கும். இது ஒரு பயனற்ற துறவு போலித்துறவு.

ராஜஸத் தியாகம் ஒருவனை வீடுபேறடைய வழி கோலாது. ஏனெனில் அவன் தான் செய்கின்ற கருமத்தால் தான் அடையப் போகும் துன்பம், துக்கம், வேதனை இவை களுக்கு அஞ்சி உடல் உழைப்பிற்கு—பிரயாசைக்குப் பயந்து தான் மேற்கொள்ள வேண்டிய அத்தியாவசிய கருமங்களை யும் துறந்து விடுகிறான். எனவே இதுவும் பயனற்றதே.

எனவே உண்மைத் துறவு என்பது சத்துவ—சாத்வீக மான துறவே. அத்துறவிலே, பலனில் விருப்பமோ, பற்றோ இல்லை. உண்மைத்துறவு உனக்கென இன்றியமையாத கடமைகளைச் செய்ய அனுமதிக்கின்றது. ஏனெனில் கடமை களால் உண்டாகும் பலனில் விருப்பின்றி, ''தான்'' என்ப தற்று, அவை செய்யப்படுகின்றன. அங்கே கடமை, கடமைக் காகவே.

சாத்வீகத் துறவி தன் கடமைகளை எல்லாம் கருமங் களை எல்லாம் தன்முனைப்பற்று, எவ்விதப் பற்றுமற்று, கரும பலன் யாவற்றையும் துறந்து செய்கிறான். எனவே அவன் எவ்வித பந்தத்திலும் சிக்காமல் விடுதலை அடைந்தவ னாகிறான்.

சத்துவகுணம் மேலோங்கப் பெற்றவனும், பேரறிஞனும், சந்தேகமற்றவனுமான துறவி (தியாகி) துன்ப வினையை வெறுக்கவுமாட்டான்; இன்ப வினையை விரும்பவுமாட்டான்.
XVIII (10)

சத்துவ குணத்துறவி, வெறுப்பு விளைவிக்கிற; கருமங் களையோ அல்லது தாழ்வான, கருமங்களையோ வெறுப்ப தில்லை. அல்லது மனதுக்குகந்த, விருப்பமான, மேன்மை

யான, கருமங்களிடம், விருப்பங் கொண்டு அவன் பற்று வைப்பதும் இல்லை. அவன் தன்னிடத்துள்ள சந்தேகங்கள் அனைத்தும் அறப்பெற்றவன். "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணியதுடைத்து" என்கிறது குறள். சந்தேகமற்ற, மனக்குழப்பமற்ற; அவன், மெய்ப் பொருளை உணர்ந்தவன்; மனத்தெளிவுள்ளவன். அவன் தன் கருமத்திலே, விருப்போ, வெறுப்போ அல்லது பற்றோ அடைவதில்லை. அவன், தன் கடமைகளைப்—பற்றற்று, பலனை எதிர்பாராமல் தான் கர்த்தா எனும் முனைப்பின்றிச் செய்கிறான். அவன் வாழ்வை விருப்பு வெறுப்பற்று அப்படியே ஏற்றுக் கொள்ளுகிறான். அதைக் கடவுள் சித்தமெனக் கருதுகிறான்.

இந்தச் சத்துவத் துறவி ஆற்றங்கரையோரம் வளர்ந்துள்ள மாமரம் போன்றவன். மாமரத்தின் பழங்கள் யாருக்குத் தேவையோ அவர்களைச் சென்றடைகின்றன. அதைப் போல இவன் கரும பலன்கள் யாவுமே சமுதாயத்திற்குச் சென்றடைகின்றன.

கருமங்கள் அனைத்தையும் அடியோடு துறந்து விடுவதற்கு, உடம்போடு கூடிய உயிருக்கு இயலாது. ஆனால் அக்கருமங்களின் பலன்கள் அனைத்தையும் துறந்தவன் எவனோ அவன் தியாகி—துறவி என்று இயம்பப்படுகிறான்.

XVIII (11)

நாம் உடலெடுத்துள்ளதால், நாம் செய்ய வேண்டிய கருமங்களை முற்றும் விடுவதென்பது இயலாது. உலகில் உயிர் வாழ, உண்ணல், உறங்கல் இவை தொடர்பான பிற செயல்கள், முதலியவைகளை நாம் அறவே நீக்கிவிட முடியாது. அவைகளை நாம் செய்தே ஆக வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிறோம்.

எனவே, உண்மைத்துறவி கருமங்களை முற்றும் துறந்து விடுபவனல்லன். அப்படி விட்டுவிடவும் முடியாது. ஆனால் தான் செய்கின்ற கருமங்களில் உண்டாகும் கரும பலன்களில்

*எள்ளளவு இச்சையும் கொள்ளாமல் எவன் அவைகளைத் துறந்து விடுகின்றானோ அவனே உண்மைத்துறவி.*

இத்துறவு நிலையினை அடையாதவர்க்கு, அவர்களது மரணத்திற்குப் பிறகு, இன்னாதது (கொடிய கரும பலன்கள்); இனியது (நலம் சார்ந்த கர்ம பலன்கள்); இவ்விரண்டும் கலந்தது (நன்மை தீமை இரண்டையும் விளைவிக்கும் கரும பலன்கள்); என மூன்று விதமான வினைப் பயன்கள் உண்டாகின்றன. ஆனால் துறவிகளோ இந்த மூன்று வகை வினைப் பயன்களிலிருந்தும் எக்காலத்தும் விடுபட்டவர்களாவார்கள்.

XVIII (12)

*இன்னாதது—கொடிய கரும பலன்கள் என்பன, நரகப் பிராப்தியும், விலங்கு இனமாகப் பிறப்பதும் ஆகும்.*

*இனிய—நலம் சார்ந்த கரும பலன்கள் என்பன, சுவர்க்காதி போகம் துய்த்தலும், தேவ கணங்களாகப் பிறப்பதுமாகும்.*

*இனியதும் இன்னாததும் கலந்த கலப்புக் கரும பலன்கள் என்பன, மக்களினத்திலே, பூவுலகிலே பிறவி எடுத்து இன்ப துன்பங்களை அனுபவிப்பதாகும்.*

*ஆனால், மேற்கூறிய துறவிகளோ, இவைகள் அனைத்திலிருந்தும் விடுதலை அடைந்தவர்கள் ஆவார்கள். எக்காலத்தும் அவர்களை வினைப் பயன் சென்றடைவதில்லை. ஏனெனில் அவர்கள் கரும பலனைத் துறந்தவர்கள். தான் யார் என்பதை அறிந்த உள்ளத் துறவுடையவர்கள்.*

*"அறத்தான்" இயற்றும் அவனிலும் கோடி அதிகம் இல்லம்*
*துறந்தான் அவனில் சதகோடி உள்ளத்துறவுடை*
*யோன்",*

*என்கிறார் பட்டினத்தடிகள்.*

பார்த்தா! சகல கருமங்களையும் செய்து நிறைவேற்றுவதற்கென, கரும காண்டத்தின் முடிவு காட்டும் (வேதாந்த)

சாங்கிய சாத்திரத்தில் சொல்லப்பட்டுள்ள இந்த ஐந்து காரணங்களையும் என்னிடம் இருந்து அறிந்து கொள்க.
XVIII (13)

உயிரின் இருப்பிடமாகிய உடல் (1) செயலைச் செய்யும் கர்த்தா (2) வெவ்வேறு விதமான இந்திரியங்கள் (3) பல விதமான வேறுபட்ட செயல்கள் எனும் நான்கோடு, தெய்வச் செயலும் சேர்ந்து ஐந்து காரணங்களாகின்றன, XVIII (14)

*வேதங்கள் கரும காண்டம், ஞான காண்டம் என இரண்டாகப் பகுக்கப் பட்டுள்ளன. கரும காண்டத்தின் முடிவு ஞான காண்டம். அதாவது வேதாந்தம். அந்த வேதாந்த சாத்திரத்தில் கருமங்களைச் செய்து முடிக்கத் துணை செய்வன ஐந்து உபகரணங்கள் எனச் சொல்லப் பட்டுள்ளது. அவைகள் :—*

1. அதிஷ்டானம் *அதாவது* இருப்பிடம். *ஜீவாத்மன்* உறைகின்ற உடல். ஆசைகளின் ஊற்றாகிய இந்த உடம்பு.

2. கர்த்தா : *அதாவது கருமத்தைச் செய்பவன் யார் அவன்? ஜீவனின் தனித்தன்மை, ''தான்'' என்னும் முனைப்பு.*

*பிரகிருதியோடு (பிரபஞ்ச மூலமாக உள்ள மாயை) இணைந்து இந்த ஜீவாத்மா, தன்னுடைய பண்டைய ஆத்ம சொரூப நிலையை —வடிவை மறந்து விடுகிறது. அதனால் அது ''நான்'' என்னும் முனைப்போடு நானே கர்த்தா. நான் தான் இதைச் செய்தேன் என்று கருதுகிறது, சொல் கிறது. விடுதலைக்கு மோட்சத்திற்கு— வழி இந்த ''நான் என்னும் முனைப்பை ஒழித்தலே ஆகும்.*

3. கரணங்கள் : *அதாவது புறக்கரணங்கள் மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறிகளும், அந்தக் கரணங்களாம் மனம், புத்தி, சித்தம் அகங்காரம் எனும் நான்கும் இதனுடன் ஐந்து செயற்கருவிகளாம், வாக்கு,*

பாதம், பாணி, பாயுரு உபஸ்தம் எனப்படும் வாய், கால், கை, எருவாய், கருவாய் எனும் ஐந்தும் சேர்ந்து பதினான்கும் செயல் செய்யும் கருவிகளாகின்றன.

4. பல்வகைப்பட்ட செயல்கள்—முயற்சிகள் : இந்த உடல், பிராணன், அபானன் முதலிய (தச வாயுக்களால்) பத்து வகைப்பட்ட காற்றின் இயக்கத்தால் இயங்குகின்றது. நாம் உயிர்வாழ, சக்திபெற, உண்ட உணவு செமிக்க பிற பிற அன்றாட நிகழ்ச்சி நிகழ இந்தப் பத்து வாயுக்களின் இயக்கம் தேவை. இவை இயக்க உடல் இயங்கும். உடல் இயங்க அனைத்துச் செயல்களும் நிகழும்.

5. தெய்வம்—நியதி : மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி, மனிதனுடைய முயற்சிகளை, செயல்களின் பலன்களை, உண்டு செய்வது; உலகியல் பணிகள் அனைத்தையும் கட்டுப்படுத்திச் சீராக்குவது.

இவ்வகையில் மேற்சொன்ன இந்த ஐந்துமே, எல்லா விதமான கருமங்களுக்கும் - நல்ல கருமங்கள், தீய கருமங்கள் அனைத்துக்குமே, துணைக்கருவிகளாகின்றன.

மெய்யாலும், மொழியாலும், மனதாலும் (மனோ, வாக்கு காயங்களால்) ஒருவன் (மனிதன்) நேர்மையானதோ அல்லது, அறத்திற்கு மாறானதோ (விபரீதமானதோ) ஆய எந்தக் கருமங்களைச் செய்தாலும் மேற்கூறிய இந்த ஐந்துமே) அதற்குக் காரணங்களாகும். XVIII (15)

மனம், மொழி, மெய் என்னும் முக்காரணங்கள் மட்டுமே இந்தச் சுலோகத்திலே எடுத்துச் சொல்லப் பட்டுள்ளன. மற்றைக் கண், காது, மூக்கு முதலிய எந்த இந்திரியங்களும் எடுத்துச் சொல்லப்படவில்லை. ஏன் எனில் கண் முதலியன மனம், மொழி மெய்களுக்குத் துணைக்கருவிகள். எப்படியெனில் (சப்த ஸ்பரிசமே ரூப, ரச கந்தம்) சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவெல்லாம், கண் முதலியவைகளுக்கு விஷயமாயினும், அறியப்படு பொருளாயினும்

*அவைகளைக் கிரகித்து அனுபவிக்க வேண்டியது மனமே. இந்த மனம்தான் கண் முதலியவற்றோடு பொருந்தினா லன்றி அவைகள் எதையும் கிரகிக்க மாட்டா. எனவே மனம், வாக்கு, காயம் மட்டுமே இதில் சொல்லப்பட்டுள்ளன. மற்றைய யாவும் இம்மூன்றுக்குள்ளே அடங்குபவைகளே. ஆகையினால் சொல்லப்படவில்லை.*

அது அங்ஙனமாக, முழு முதற்பொருளாகிய ஆத்மா வையே, (செயலாற்றும்) கர்த்தாவாக எவன் காண்கின் றானோ, அவன்தன் அறிவு தெளிவில்லாத அந்த அறிவில் மெய்யறிவை அடைபவனல்லன். அவன் உள்ளதை உள்ளபடி யறிந்தவன் அல்லன். XVIII (16)

*எவன் தன்னுடைய எச்செயலுக்குமே, தானே காரணன் என நினைக்கின்றானோ தன்முனைப்புள்ள அவன் அறிவற் றவன். நான் என்பது எது என்பதை நன்கு உணராதவன். உண்மையை உணராத குருடன். உள்ளதை உள்ளபடி காண மறுக்கின்றவன்.*

*தன்முனைப்பற்ற அவன், பிற உயிரைக் கொன்றாலும் அவன் கொல்பவனல்லன். ஏனெனில் அவன் தான் என்னும் முனைப்பால் தளை பூணப்பட்டவன் அல்லன்.*

எவனுக்கு நான் கர்த்தா என்னும் எண்ணம் இல்லையோ, எவனுடைய உள்ளம் பற்றற்று இருக்கிறதோ, அவன் இவ்வுல கில் உள்ள ஒன்றை அல்லது ஒருவனைக் கொன்றாலும், அவன் கொலைகாரன் அல்லன். அவன் அதனால் பந்தப் படாதவனே. XVIII (17)

*''நானே கர்த்தா'', என்னும் நினைவுக்குள்ளாகாமல் மேனிலையில் சஞ்சரிப்பவன் எவனோ, தான் என்னும் ஆத்மாவைத் தான் உணர்ந்து, அது (ஆத்மா) உள்ளத்தின் எல்லையைக் கடந்து மேம்பட்டதென எவன் அறிகிறானோ யாருடைய அறிவுணர்ச்சி ஆசையாலும், கரும பலனின் இச்சையாலும் களங்கப்படவில்லையோ, அவன் தன் செய்*

கைக்கு ... கருமங்களுக்கும் தான் காரணமாக மாட்டான். அவன் ந்தட தப்படுபவனல்லன். இங்கே கீதை வற்புறுத்துவது ரண்டு குணங்கள். ஒன்று தன் முனைப்பிலிருந்து விடுபடல்; இரண்டு, மாசற்ற மெய்யுணர்வு.

ஒவ்வொரு செயலுக்கும் இரண்டு காரணங்கள் உண்டு.

1. அகவுணர்வு.

2. புறச்செயல் முறை.

அகவுணர்வு என்பது செயல் செய்வதற்கு உரிய உள்ளத் தூண்டுதலைக் குறிப்பதாகும். அதாவது, ஒரு செயல் செய்வதற்கு முன்னர், செயல் செய்யத் தூண்டும் மன எழுச்சி. முதற்கண் உள்ளத்திலே நிலவி உள்ள நுட்பமான கருவே. பின்னர், உடலால் செய்யப்படும் கருமமாக, பணியாக, உருவெடுக்கிறது, இதுதான் சுலோகத்திலே கர்ம சோதனா எனப்படுகிறது. இதுவே (Mental Planning) எனப்படும். இது அறிவு என்றும், அறியப்படுபொருள் என்றும், அறிபவன் என்றும் மூவகைப்படுகிறது.

புறச் செய்கை என்று சொல்லப்படுவது, கர்ம சங்கிரகம் என்று கீழ்வரும் சுலோகத்திலே சுட்டிக் காட்டப்படுகிறது. ஒரு செயல் செய்யப்படும்போது அதில் மூவகைப்பட்ட இணைந்தியங்கும் பொருள்கள் உள. அவை, கருவி, கருமம், கர்த்தா என்பனவாம். இது (Actual Execution of work) எனப்படும்.

கருமத்துக்கான மனத் தூண்டுதல் (1) அறிவு (2) அறியப்படுபொருள் (3) அறிபவன் என்னும் மூன்றாகும். இனி கருமத்துக்கு இருப்பிடமாய்த் துணை நின்று இணைந்தியங்குவன, கருவி, கருமம், கர்த்தா என மூன்றுமாம்

XVIII (18)

உலகத்தைப் பற்றியவைகளை எல்லாம் அறியும் அறிவே, அறிவாம். அறியப்படுபொருள், இந்த உலகப்

பொருள்கள், நிகழ்ச்சிகள், முதலியனவாம். ... உலகப் பொருள்களை, நிகழ்ச்சிகளை அறிபவன் ஜீவன். ... மூன்றும் ஒன்றோடொன்று இணைந்துள்ளன. ஜீவன் அறிகிறான். உலகம் அறியப்படுகிறது. அறியும் ஜீவன் தன் மயக்கத்தால், மனத்தின் குண பேதத்தால், சூழ்நிலையால் செயலாற்றும்படி உள்ளம் தூண்ட, கருமம் நடைபெறுகிறது.

இப்படி கருமம் நடைபெற அந்த ஜீவனே, "தான்" என்னும் முனைப்போடு கருமம் ஆற்றுகிறது. அதற்குக் கருவியாக நமது மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என்னும் நான்கும் அகக்கருவிகளாகவும், அறிகருவிகளாம் (ஞானேந்திரியங்கள்) மெய், வாய், கண், மூக்கு, செவிகளாம் ஐந்தும் செயல் கருவிகளாம் (கர்மேந்திரியங்கள்) கால், கை, வாய், எருவாய், கருவாய் ஐந்தும் ஆக இப்பதினான்கும் செயல் செய்யும் கருவிகளாகின்றன. இந்தக் கருவிகளால், மயக்க அறிவுடைய ஜீவன் செயலாற்றக் கருமம் உண்டாகின்றது.

கருமம் செய்யத் தூண்டப்படும்பொழுது அறிவு அறிபவன் அறியப்படுபொருள் எனும் முக்கோணத்திலே உள்ள அறிபவனாகிய ஜீவனே (உயிரே), கருமத்திற்கு இருப்பிடமாய்த் துணை நின்று, இயங்கும் கருவி கருமம், கர்த்தா என்னும் முக்கோணத்திலே உள்ள கர்த்தாவாக, தன் மயக்க அறிவால், முக்குண பேதத்தால் தன்னைக் கருதுகிறது.

ஞானமும், கருமமும், கர்த்தாவும் குணபேதத்தினால் மூன்று வகைப்பட்டவை என்று, குணங்களைப் பற்றிப் பேசுகின்ற சாங்கிய நூல் கூறுகின்றது, XVI'I (19)

இந்த வகையிலே ஞானமும், கர்மமும் கர்த்தாவும் முக்குண பேதங்களால் மும்மூன்று வகைப்படுகின்றன.

வேறு வேறாய் உள்ள பூதங்களில் வேறுபடாத பொருளை, அழியாத பொருளை, ஏகமாம் பரம்பொருளை, (ஏக வஸ்துவை) ஒருவன் எதன் மூலமாகப் பார்க்கிறானோ எந்த அறிவால் (ஞானத்தால்) ஒருவன் காண்கிறானோ அந்த ஞானம் சாத்வீக ஞானம் என்று அறிக. XVIII (20)

அந்தப் பரம்பொருள் எவ்வகையிலும் வேறு படாதது; அழியாதது; கூடுதல் குறைகள் இல்லாத ஏக வஸ்து; அகண்ட வஸ்து.

அது ஏழை, பணக்காரன், நல்லவன், கெட்டவன், பாவி, புண்ணியவான் எனப் பலப்பலவாம் பாகுபாடுள்ள மக்கள் திரளின் உள்ளத்திலே உள்ள, உயிரின் உயிராக உள்ள, பொருள் அது.

தனித்தனியாகப் பிரிந்துள்ள அனைத்து உயிர்களிலும் உள்ள அந்தப் பரம்பொருளை ஒன்றாக எவன் காண்கின் றானோ, வேற்றுமையில் ஒற்றுமையை எவன் காண்கின் றானோ அவனே சாத்விக ஞானத்தைப் பெற்றவனாவான், "ஒன்றாகக் காண்பதுவே காட்சி".

அடுத்து, எந்த ஞானமானது, எல்லா பூதங்களிலும் வெவ்வேறு வகைப்பட்ட பல ஜீவன்களை ஒன்றிலிருந்து ஒன்று, வெவ்வேறு விதமாகத் தனித்தனியாக அறிகிறதோ அந்த ஞானத்தை ராஜசம் என்று அறிக. XVIII (21)

ராஜஸ ஞானம் பலவற்றைப் பலவாகவே காண்பது. அது வேற்றுமையைத் தவிர வேற்றுமையில் ஒற்றுமையைக் காணமாட்டாதது.

ராஜஸ ஞானம் நாம ரூபங்களையே காண்பது. அதா வது பெயர் உருவங்களை மட்டும் கண்டு, அதனுள் பொதிந் துள்ள சாரமாகிய ஆத்மாவைக் காண்பதில்லை.

ராஜஸ ஞானம், தன்னுடைய மயங்கிய வேற்றுமையான ஞானத்தினால் எல்லா உயிர்களும் வேறு வேறு மாறுபட்டத் தன்மை வாய்ந்ததாகக் காண்கிறது. அது ஒவ்வொரு உடம்பிலும் உள்ள ஜீவன் மாறுபாடு உடையதாகக் காண் கிறது. பண்பு, குணநலம் அல்லது பதவி பணம் சமூக நிலை இவைகளின் வேறுபாட்டால் ஒவ்வொரு ஆத்மாவையும் ராஜஸ ஞானம் வேறு வேறாகக் காண்கிறது.

எந்த ஞானம் ஒரே செயலே—காரியமே சகலமும் என்று பற்றுவைத்து, யுக்திக்குப் பொருந்தாததாயும் உண்மைக்கு ஒவ்வாததாயும், அற்பமானதாயும் அமைந்துள்ளதோ, அந்த ஞானமே தாமத ஞானமாகும். XVIII (22)

*தாமஸ ஞானம், பொய்யானது, ஆதாரமற்றது. அது ஓர் அற்பமானதை முழுமையானதென மயக்க அறிவால் கருதுகிறது. ஒரு மனிதன் தன் மனைவியைத் தன் மோகத்தால் எல்லாமாக, ஏன் இந்த உலகமாகவே காண்கிறான். ஒருவன் தன் குடும்பத்திலே வைத்துள்ள பற்றால் தன் குடும்பத்தையே உலகமாகக் காண்கிறான். தன் ஊர், தன் நாடு மீது வைக்கும் வெறிமிக்க பற்றும் தாமஸ ஞானமே. உண்ணுவதே உலகம், பணமே உலகம், உல்லாசமே உலகம், பதவியே உலகம், எனக் கருதுவது அனைத்தும் தாமஸ ஞானமே.*

*ஞானம் எப்படி மூவகைப்பட்டதாகப் பகுத்து சொல்லப் பட்டதோ, அப்படியே கருமமும் மூவகைப்பட்டதாக இனிச் சொல்லப்படும்.*

கரும பலனில் விருப்பம் வைக்காத ஒருவனால் பற்று இல்லாமல், விருப்பு வெறுப்பு இல்லாமல், தனக்கென நியமிக்கப்பட்டுள்ள எக்கருமம் செய்யப்படுகிறதோ, அதுவே சாத்வீக கருமம் என்று சொல்லப்படுகிறது.

*சத்துவ கருமம், தூய்மையானது. நேர்மையானது. மனித உயிர் வாழ்க்கைக்கு என நியமிக்கப்பட்டுள்ள சுவாசித்தல், உண்ணல், உறங்கல் வாழ்க்கைக்கென உழைத்தல், ஒரு தாய் தன் குழந்தையைக் கவனித்தல் போல்வன யாவும் நியமிக்கப்பட்ட கருமங்களே, அதாவது கடப்பாடுடைய கருமங்களே.*

*சத்துவ கருமம், பற்று முற்றும் ஒழிந்தது. தான் கர்த்தா என்பது அடியோடு அழிந்தது. ஈகே "தான்" எனும் அகங்காரமில்லை.*

*இது பலனை அல்லது லாபத்தை எதிர்பார்த்துச் செய்யப் படுவதன்று. இது ஆசையற்றது. தற் சார்பற்றது. கருமத் திற்காகவே செய்யப்படுவது. விருப்பு வெறுப்புக்குட்பட்டு செய்யப்படுவதன்று.*

ஆசை வசப்பட்டவனால், அல்லது அகங்காரமுடையவ வனால், அதிக முயற்சியுடன் எக்கருமம் செய்யப்படு கின்றதோ அக்கருமம், ராஜஸமான கருமம் என உரைக்கப் படுகிறது. XVIII (24)

*ராஜஸமான கருமங்கள், பயனற்றவை. உணர்ச்சி பூர்வமானவை.*

*அவைகள், இயற்கைக்கு முரணாகச் செய்யப்படுபவை. மனச்சான்றுக்கு மாறானவை. மிக்க சிரமத்தோடும் கடு முயற்சியோடும், ஊக்கத்தோடும் ஆற்றப்படுபவை.*

காமம் அல்லது பேரவாவின் தூண்டுதலால் செய்யப் படுபவை. மாதர்கள், பொன், பொருள், பதவி, அதிகாரம், அந்தஸ்துகளுக்காக முயன்று பாடுபட்டுச் செயலாற்றப் படுபவை, செய்யப்படும் செயலின் விளைவையும், அதனால் ஏற்படும் நஷ்டத்தையும், துன்பத்தையும், தன் வல்லமையை யும், சீர்தூக்கி ஆராயாமல் பேரவாவால்—மோகத்தினால் எக்கருமம் ஆரம்பிக்கப்படுகிறதோ, அது தாமசக்கருமம் எனப்படும். XVIII (25)

*தாமசக் கருமங்கள் குண நலன் என்பது உலக சுகங் களில் பெரும் ஈடுபாடு கொண்டவர்களால், பேரவா, மயக் கத்தால், போகத்தால் மதி மயங்கிய நேரத்தில், தனக்காகத் தன்முனைப்போடு மனக் கோட்டத்தோடு செய்வதாம்.*

*அது செயலின் விளைவைப்பற்றி ஆராய்தலின்றி, பிறருக்கு அதனால் ஏற்படும் இன்னல்களைப் பற்றிக் கவலைப்படாமல் செய்வது. தன் பலம், பணம், கீர்த்தி புகழ் இவைகள் பாழ்படச் செய்யும் செயல் ஆகும் இது.*

இந்த தாமதக் குணக் கருமங்களாற்றும் ஒருவன், இதைச் செய்வதற்குரிய ஆற்றல் தன்னிடம் உள்ளதா இல்லையா என எண்ணிப் பார்ப்பாதில்லை. இது மனிதாபிமானமற்ற, அசட்டையான, அலட்சியமான, செயல் என்பதனையும், இதனால் தாள் அடையும் தன் அழிவைப்பற்றியும் கவலைப் படாதவன் அவன்.

இந்த முறையிலே செயலாற்றும் கர்த்தாவும் சாத்வீக கர்த்தா என்றும் ராஜஸ கர்த்தா என்றும் தாமச கர்த்தா என்றும் மூவகைப்படுவர்.

இவர்களுள் சாத்வீகக் கர்த்தா யாரெனில், பற்று நீங்கியவன், ''தான்'' என்னும் அகங்காரம் அற்றவன். உறுதியும், ஊக்கமும் உடையவன். வெற்றி தோல்விகளில் மனவேறுபாடு கொள்ளாதவன். இப்படிப்பட்டவன் சாத்வீகக் கர்த்தா எனப்படுகிறான். XVIII (26)

உலகமே எதிர்பார்த்து நிற்கும் சத்துவிக கர்த்தா தன் கர்மத்திற்கு உண்மையானவன். அவன் ஆசை என்பதே இன்றிச் செயலாற்றுபவன். அவனுக்குப் பற்றில்லை. கரும பலனில் அக்கரை இல்லை. அவன் பேரிலும், புகழிலும், அந்தஸ்திலும் நாட்டம் கொள்வதில்லை. அவன் பகட்டிலிருந்து, ஆடம்பரத்திலிருந்து நீங்கியவன். தன் செயலுக்காக அவன் யாரிடமும் தம்பட்டம் அடித்துத் தற்பெருமை பேசமாட்டான். ''இது என்னால் செய்யப் பட்டது'' ''நானே இதற்குக் கர்த்தா'' ''நான் இல்லாவிட்டால் இச் செயல் முற்றுப் பெற்றிராது'' என்று தற்பெருமை பேசும் கர்வம் அவனிடம் கிடையாது.

சாந்தமும், தைரியமும் நிறைந்தவன் அவன். அவன் தன் செயல்களுக்கு ஏற்படும் இடையூறுகளுக்கு இடையில் நெஞ்சுரத்தோடும், ஆர்வத்தோடும் சகிப்புத் தன்மையோடும் நிலை குலையாது நிற்பான்.

*அவன் சமநிலையிலே சஞ்சரிப்பவன், லாபமும், நஷ்டமும் அவனைப் பாதிப்பதில்லை. இன்பமும், துன்பமும் அவனுக்கு ஒன்றே. வெற்றி தோல்விகள் அவனைப் பாதிப்பதில்லை.*

*அடுத்து ராஜஸ குண கர்த்தாவைப் பார்ப்போம்.*

ஆசையுள்ளவன், கரும பலன்களை விரும்புகிறவன், பேராசைக்காரன், பிறரைத் துன்பத்துக்குள்ளாக்கும் இயல்பினன், தூய்மையற்றவன், மகிழ்ச்சியிலும், துக்கத்திலும் ஊசலாடுபவன். இப்படிப்பட்டவன் ராஜஸ கர்த்தா எனப் படுகிறான். XVIII (27)

*ராஜஸ கர்த்தா எனப்படுகிறவனுக்கு, உலக விஷயங்களில் அதிக நாட்டமுண்டு. இந்திரிய இச்சைகள் அவனை அலைக்கழிக்கும். தன் வெறுப்பு விருப்புகளால் அவன் மனச் சலனமடைவான், தடுமாற்றமடைவான்.*

*தன் கருமங்களுக்கான பலன்களை அவன் ஆவலோடு எதிர்பார்ப்பான். பிறர் தன்னைப் புகழ வேண்டுமென அவன் ஆவலோடு எதிர்நோக்கி நிற்பான். பேராசையும் காமமும் மிகுந்தவன். பிறரிடம் கடுமையாகவும் கடுகடுப் போடும் நடப்பவன். அவன் நடத்தை பிறரை, மனஉளைவுக்குட்படுத்தும். துன்பத்தை உண்டு பண்ணும்.*

*இவன் வெற்றி எய்தினால் மகிழ்ச்சியிலே துள்ளிக் குதிப்பான். தோல்வி என்றாலோ துவண்டு விடுவான்.*

*இனி தாமஸ கர்த்தா எப்படிப்பட்டவன் எனில் !*

யோகத்திற்கு ஒவ்வாத மனமுடையவன். அறிவு வளரப் பெறாதவன், முரடன். வஞ்சகன், பழிகாரன், சோம்பேறி, துயரத்தின் வசப்பட்டவன், காலம் கடத்துபவன், இப்படிப் பட்டவன், தாமஸ கர்த்தா எனப்படுகிறான். XVIII (28)

*தாமஸ கர்த்தா என்பவன், ஒழுங்கற்றவன், நெறி திறம்பியவன். பண்படாத அறிவாற்றல் உடையவன், அவன்*

இதயம் அவன் ஆற்றும் செயலில் ஈடுபட்டிருக்காது; அவன் முட்டாள், பிடிவாதக்காரன், வஞ்சகன், கெடுநோக்கமுடைய வன். எதையும் தாமதப்படுத்தியே செய்யும் செயற்பாடுடை யவன் நாளைக்கு நாளைக்கு எனக் கருமங்களைத் தள்ளிப் போடுவதில் வல்லவன். எளிதாக அவன் வாட்டமடை வான். சோர்வடைந்திடுவான், அவன் தீய குணங்களோடு தான் எச் செயலையும் ஆற்றுவான்.

இனி கண்ணபிரான் அறிவும் மன உறுதியும் முக்குணங் களால் பெறும் வேற்றுமைகளை விளக்குகிறார்.

தனஞ்செயனே! அறிவுக்கும், மன உறுதிக்கும், சத்துவம் முதலான முக்குணங்களுக்குத் தக்கபடி உண்டாகின்ற மூன்று பேதங்களைப் பாகுபடுத்தித் தனித் தனியே எச்சமின்றி உரைக்கின்றேன், கேள். XVIII (29)

பகுத்தறிவோடு கூடிய நிச்சய ஞானமான புத்தியே மூன்றுவகைப்பட்ட புத்திகளாய் முக்குண வசத்தால் உண்டா கின்றன. புத்தி, அறிவு, மெய் உணர்தல், பகுத்தறிவு இவை யாவும் புத்தியின் பல்வேறு பெயர்கள்.

மனவுறுதியும் முக்குண வசத்தால் மூன்று வகைப்படும். செய்யத் தொடங்கிய பணி இடையில் ஏதாவது இடையூறு நேரிட்டாலும் கை விடாமலிருக்கின்ற இந்த மனஉறுதியும் மூவகைப்படும்.

அறிவும், மன உறுதியும் கருமத்தோடு மிக நெருங்கிய தொடர்புடையன. என்ன செய்ய வேண்டுமென அறிவு நிச்சயிக்கிறது. மன உறுதி அதைச் செயலாற்ற முற்படு

புத்தி சிந்திக்கிறது, திட்டமிடுகிறது. மன உறுதி செயலாற்றுகிறது.

எந்த அறிவு தான் ஆற்ற வேண்டிய சரியான கருமத்தை யும் (பிரவிருத்தி) தான் விலக்க வேண்டிய கருமத்தையும் (நிவர்த்தி) சரியான முறையில் பகுத்தறிகிறதோ, எந்த-ு

செயல்களைச் செய்ய வேண்டுமோ, எந்தச் செயல்களைச் செய்யக் கூடாதோ, எதற்கு அஞ்ச வேண்டுமோ, எதற்கு அஞ்சத் தேவை இல்லையோ, ஆத்மாவை எந்தச் செயல் பந்தப்படுத்துமோ, ஆத்மாவை எந்தச் செயல் வீடுபேறடை விக்குமோ, இவைகளை நன்குணர்ந்து கடைப்பிடிப்பவனே, சத்துவ புத்தி அமையப் பெற்றவன். XVIII (30)

*இந்தச் சுலோகத்தின் ஆரம்பத்திலே, சொல்லப்பட்ட பிரவிருத்தி என்பது இவ்வுலகிலே ஒருவன் க்ஷேமத்தோடு வாழவும், சொர்காதி போகம் அடையவும், தான் ஆற்ற வேண்டிய கருமங்களாகும். அதாவது தானங்கள், தர்மங்கள் வேள்விகள் முதலியன இதில் கைக்கொள்ளப்படுவன.*

*அடுத்துச் சொல்லப்பட்ட நிவர்த்தி என்பது; வீடு பேற்றுக்குச் சாதகமான துறவுநிலை (சந்நியாசம்). இதில் எவை எவை தள்ளி விலக்கப்படவேண்டியவை. எவ்வெ வற்றில் இருந்து தான் விலகி நிற்றல் வேண்டும் என்பதை அறிதல் நிவர்த்தி மார்க்கம் என்பது. சந்நியாசம் வீடு பேற்றுக்குத் தடையாக உள்ளவைகளை விலக்குதலும் அவற்றினின்று விலகுதலுமாகும்.*

*மேற்சொன்ன இரண்டு வழிகளில் ஒன்றைக் கைப் பற்றி அனுஷ்டிப்பவன் பிரவிருத்தியில் செய்ய வேண்டியவை களைக் கடைபிடிக்க வேண்டியவைகளை நன்கறிந்திருக்க வேண்டும். அடுத்து நிவர்த்தியில் (அதர்மத்தில்) தன்னிட மிருந்து விலக்க வேண்டியவைகளை நன்குணர்ந்து இருக்க வேண்டும்.*

*வாழ்க்கையிலே செய்ய வேண்டிய சரியான கடமைகள்; செயல்கள் எவை எவை என அறிந்திருக்க வேண்டும். அதைப்போல எவை எவை விலக்கப்பட வேண்டிய தீய கடமைகள் என்பதையும் ஒருவன் அறிந்திருக்க வேண்டும்,*

ஏனெனில்,

“செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமையானும் கெடும்”

என்கிறது குறள்.

செய்யத்தகாத செயல்களைச் செய்பவன் கெடுவான். செய்யத்தக்க செயல்களைச் செய்யாமல் வாளா இருப்பவனும் அழிவான். அறச்செயல்கள் செய்யப்படவேண்டும். மறச் செயல்கள் விலக்கப்படவேண்டும். ஒருவன் அஞ்ச வேண்டியவை எவை எவை என்பதையும், அஞ்ச வேண்டாதவை எவை எவை என்பதையும் அவன் நன்குணர்ந்திருக்க வேண்டும்.

“அஞ்சுவ தஞ்சாமை பேதமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்”

என்கிறது குறள்.

அறச் சார்புடையவற்றுக்கு அஞ்சத் தேவை இல்லை. மறச் சார்புடையவற்றிற்கு அஞ்சி விலக வேண்டும். இவைகளை நன்குணர்ந்தவனே சத்துவ அறிவாளி. அதோடு அந்த சத்துவ புத்தி உடையவன், தன் ஆத்மாவைப் பிணிப்பவை யாவை என்பதையும், தன் ஆத்ம விடுதலைக்கு வழிவகுப்பன யாவை என்பதையும் நன்குணர்ந்திருப்பவன் ஆவான்.

மேலே சொன்னவைகளை நன்கு பகுத்தறியும் புத்தியே சாத்வீகமான புத்தியாகும்.

பார்த்தா! தர்மமும் அதர்மமும், தக்க காரியமும், தகாத காரியமும் உள்ளபடி அறியாமல் மாறுபாடாக எந்த புத்தி அறிகிறதோ, அந்த புத்தி ராஜச புத்தி எனப்படும்.

XVIII (32)

ராஜச குணத்தால் இயக்கப்படும் புத்தி ராஜச புத்தி எனப்படும். எனவே எது சரியானது, எது தவறானது

என்பதில் ராஜஸம் குழப்பம் அடைகிறது. இவனிடம் உழைப்பு அபரிமிதமான உழைப்பு—இருக்கும். ஆனால் நேர்மை காண இயலாது. ரஜோ குண புத்தி உடையவன் தர்மத்தையே அதர்மமாகவும், அதர்மத்தையே தர்மமாகவும் கருதி குழம்புவான்.

தன் ஆற்றலையும் அறிவையும் ஓயாது பயன்படுத்தும் இவன் தன்னலங்கருதி பிறரை அவதிக்குள்ளாக்குவான். நலமோடு தான் வாழ, பிறர் அல்லல்படவும், துன்பப்படவும் காரணமாவான். நேர்மையின்றி அதர்ம வழியிலே செல்லும் இவன், தன் மனக்கோணலால் தான் செய்வன யாவும் சரியானதே என வாதம் செய்வான். தர்மத்தை அதர்ம மாகக் கருதி அதர்மங்களைத் தர்மங்களாகக் கருதி, தகாத காரியங்களில் ஈடுபட்டு, தான் செல்வம் குவிக்க, சமுதாயத் திற்குச் சிறிதும் பயன்படாத, ஆனால் தீமை விளைவிக்கும் பல கொடிய நஞ்சன்ன பொருள்களை உற்பத்தி செய்து பணம் குவிப்பான். தான் அதிகார மிக்க பதவியில் இருந் தாலோ பிற அப்பாவிகளையும் தன் விரோதிகளையும் அழிப்பதில் ஆனந்தம் கொள்வான். தெய்வ சிந்தனை இன்றி நல்லோர் கூட்டுறவு இன்றி, நாட்டுக்கும் சமுதாயத்திற்கும் இவன் தீமையே விளைவிப்பான். தொண்டு செய்து பிறர் துயர் துடைக்கமாட்டான்.

பார்த்தா! அஞ்ஞான இருளில் மூடப்பட்டதாய், அதர்மத்தை எல்லாம் தர்மம் என்று கருதி எல்லாப் பொருள் களையும் வித்தியாசமாகவும் விபரீதமாகவும் எந்த அறிவு காண்கின்றதோ அந்த அறிவு தாமஸ அறிவென்று அறிக.
XVIII (32)

தாமத அறிவு, மையலில்—மோகத்தில் ஆழ்ந்து கிடக் கிறது. தான் செய்வதறியாது திகைக்கும் தன்மை உடையது இது. இதற்கு நியாயம் அநியாயம், தர்மம், அதர்மம் ஒன்றும் புரியாது.

இந்தத் தாமத அறிவு, நீதி, நெறிகளில் கூட தன்னலத்தையே காண்கிறது. இது ஒளியற்ற அந்தகாரத்திலே உழல்கிறது.

தாமத புத்தி உடையவனுக்கு சத்சங்கம் வேம்பெனக் கசக்கும். தீய எண்ணம், கடுஞ்சொல், பயனில் சொல். தூய்வினை இன்மை இவனுக்குத் தீங்கரும்பு.

தாமத குணத்தால் இவன் அறிவு இயங்குவதால், உலகில் உள்ள அனைத்து தீய குணங்களும் இவனிடம் அமைந்திருக்கும். கள்ளுண்ணல், சூதாடல், பிறர்மனை விழைதல் முதலிய விபரீதங்களும் இவனிடம் பொருந்தி இருக்கும். மொத்தத்தில் இவன் ஒரு சமூகப் பிரஷ்டன் (சமூகத்தால் ஒதுக்கப்படுபவன்)

இனி, மன உறுதியின் மூன்று தன்மைகளைக் கண்ணன் கூறுகிறார்.

பார்த்தா! ஒருமுக நோக்குடைய மனத்தைக் கொண்டு பிறழாத எந்த உறுதியால், மனம் பிராணன், இந்திரியங்களின் செயல்களை ஒருவன் காக்கின்றானோ அந்த உறுதியே சாத்வீகமான உறுதியாகும், XVIII (33)

மன உறுதி என்பது உள்ளத்தின் திடப்மான சக்தி. அந்த உள்ளத்தின் உறுதி சத்துவ குணத்தைச் சார்ந்து நிற்கும்போது; உள்ளம் அலை பாய்தலில்லை. அப்பொழுது மனம் ஒவ்வொன்றிலும் உறுதியாக நிலைத்து நிற்கும். யோகப் பயிற்சியால், மனம் ஒருமுகப்பட்டிருக்கும். இந்த சத்துவ உறுதி, மனதின் செயலாற்றல்களைத் தன் கட்டுப்பாட்டில் நிலைநிறுத்தும். பிராணனையும் ஐம்புலன்களையும் தன் தடுப்பாற்றலால் புறத்தே அலையாமல் ஒழுங்கு படுத்தும்.

சத்துவ குண உறுதி; நம்முடைய தளராத எண்ணங்களையும் தன் கட்டுப்பாட்டிலே வைத்திருக்கும். அது

*மட்டுமல்ல, நம் செயலாற்றலையும் அது தன் ஆட்சியிலே வைத்திருக்கும். இதன் மூலம் நாம் செய்யும் செயல்கள் தன்னலமற்றிருக்கும். நாம்அருளோடும், கழிவிரக்கத்தோடும் செயலாற்றுவோம். தூயதான, அந்தச் சத்துவ உறுதி உள்ளத்தினை, பிராணனை பொறிகளை, தன் கண்டிப்பான ஒழுங்கு முறையில் வைத்து, நம்மைச் சரியான நெறியிலே உய்த்து விடுகிறது. உள்ளம் அலைவதில்லை, பிராணன் ஒரே சீராகிறது. பொறி புலன்கள் கட்டுப்படுத்தப்படுகின்றன.*

பார்த்தா! எந்த உறுதியால், ஒருவன் அறம்பொருள் இன்பங்களைக் காக்கின்றானோ, அதிகமான பற்றுள்ளத்தோடு, தன் செயல்களின், பயன்களை எல்லாம் தான் அடைய விரும்புகின்றனோ, அந்த உறுதிதான் ராஜஸ உறுதி எனப்படுகிறது. XVIII (34)

*தன்னுடைய செயலாற்றல்களின் முழுப்பயனையும் தேடி அலைவதுதான். அவைகளை அடைய ஏங்குவதுதான் ராஜஸ உறுதியின் தன்மையாகும். அது தன்னலம் வாய்ந்தது; இலாபத்திலே ஆசை கொண்டது. இந்த உறுதி ஒருவனைத் தர்மம், கருமம், இன்பம், பொருள், மாடு மனை முதலியவைகளைத் தான் அடைய பெரும்பொருள்; செல்வம் குவிக்க, பதவி, அந்தஸ்து, இவைகளை அடைய தான் மேன்மேலுயர எவ்வகையிலாவது முயலும் மன உறுதியாகும்.*

பார்த்தா! புத்தியற்றவன், எந்த உறுதியால் தூக்கத்தையும், பயத்தையும், துயரத்தையும், மனக்கலக்கத்தையும், செருக்கையும், விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறானோ அந்த உறுதி தாமஸ உறுதி எனப்படும். XVIII (35)

*அஞ்ஞான இருளின் செயல் தமோ குணம். தமோ குண உறுதியானது தூக்கத்திலும் அசட்டுத்தனத்திலும் சுற்றிச் சுழலும்; வட்டமிடும்; தயங்கி நிற்கும்.*

தாமத குண உறுதி உள்ளவன், காமம் சோம்பல் போன்ற உருப்படாதவற்றின் பின் ஓடிக்கொண்டிருப்பான்; தாமத குண உறுதி உள்ளவர்களைத் தமது முன்னோர் தேடியதோ அல்லது தாம் எவ்வகையிலோ அடைந்த பொன், பொருள், மாடுமனைமுதலியவைகளோ தம்மைவிட்டுப் போய்விடுமோ என்னும் அச்சம் வாட்டும். அப்படிப் போய்விட்டாலோ அவர்கள் துயரத்திலே ஆழ்ந்து துக்கிப்பார்கள். மனக்கலக்கம் அடைவார்கள். ஆனால் அயலாரிடம் தங்களது பெருமை பாராட்டும் செருக்கு மட்டும் இவர்களை விட்டு நீங்குவதே இல்லை.

இனி இன்பம், சுகம், ஆனந்தம் பற்றிய முக்கூறுகளைக் கண்ணன் கூறுகிறார்.

முன்னர் கூறிய ஞானம், கர்மம், உறுதி யாவும் எதற்குத் துணைக்கருவியாகிறதோ, அந்த ஆனந்தத்தினைப் பற்றி இப்பொழுது சொல்லப்படுகிறது; ஆனந்தம் என்பதும் முக்குணங்களுக்குத் தக்கபடி சத்துவ ஆனந்தம், ரஜோ ஆனந்தம், தாமஸ ஆனந்தம் என்று மூவகைத்து.

பரத குலத் தோன்றலே! எந்த விதமான பயிற்சியால் ஒருவன் துக்கத்தின் முடிவைக் கடந்து இன்பத்தினை, ஆனந்தத்தை அடைகின்றானோ அந்த ஆனந்தத்தின் மூவிதப் பாகுபாட்டையும் இப்பொழுது என்னிடமிருந்து கேள். XVIII (36)

இந்த உலகிலே இன்பத்தை ஆனந்தத்தை விரும்பாத உயிரினம் ஒன்றுமே கிடையாது. உண்ணுதலில் இன்பம்; உறங்குதலில் இன்பம், பார்த்தலில் கேட்டலில் இன்பம், மனைவி குழந்தைகளால் அடையும் இன்பம் எனப் பலப்பல விதமான இன்பங்களை நாம் அடைகிறோம். மேலும்மேலும் அந்த இன்பங்களை எதிர்பார்க்கிறோம். இதற்காக நாம் படும்பாடுகளும், எடுத்துக்கொள்ளும் முயற்சிகளும்; அடையும் துன்பங்களும் கணக்கிலடங்கா. ஆனால் மேற்கூறிய யாவுமே கண நேர இன்பங்களே; தோன்றி மறைவனவே.

இங்கே இந்தச் சுலோகத்திலே சொல்லப்படுவது பயிற்சியால் எய்தும் ஆனந்தம். அது துன்பத்தின் எல்லையில் உண்டாவது.

'துன்பம் துன்பம் துன்பம்
துன்பத்துக்கோர் எல்லை காணில்
இன்பம் இன்பம் இன்பம்'

என்கிறார் பாரதி.

அந்தத் துன்பத்தின் எல்லையாகிய இன்பத்தை அடைய இடையறா முயற்சி, அப்பியாசம் தேவை. அப்படிப்பட்ட இடையறாப் பயிற்சியால் அடையும் இன்பமே சத்துவ இன்பம்.

சாதாரணமாக இன்பம், ஆனந்தம் முக்குண இயக்கத்தால் சத்துவ இன்பம், ரஜோகுண இன்பம், தாமத குண இன்பம் என மூவகைப்படுகிறது.

எது முதலில் விஷத்தைப் போன்று இன்னலுக்குள்ளாக்கி, அமைந்து, முடிவில் அமிர்தத்துக்கு ஒப்பானதாகக் கருதப்படுகிறதோ, எது ஆத்மாவிலே நிலைபெற்ற புத்தியின் தெளிவிலே தோன்றுகிறதோ, அந்த இன்பமே சத்துவ இன்பமாகும்.

XVIII (37)

சத்துவ இன்பம், தன்னை உணர்தல் அல்லது தன்னை அறிதல் என்னும் ஆத்ம தரிசனத்திலிருந்து தோன்றுகிறது. இந்தச் சத்துவ ஆனந்தம் முன் சுலோகத்திலே சொன்னபடி, நீண்டகால இடையறா அப்பியாசத்தால் அடையப்படுகிறது.

சத்துவ சுகம் என்னும் இந்த ஆனந்தம் கீழ்க்கண்டவைகளால் எய்தப்படுகிறது.

இந்தச் சத்துவ ஆனந்தம் நீண்ட கால இடையறாத் பயிற்சியால் அடையப்படுகிறது. அதாவது யோக முயற்சி,

பக்தி செலுத்துதல், பஜனை செய்தல், தியானம் செய்தல் பூஜை செய்தல் முதலியன.

இது முதலில் ஆரம்பத்தில் விஷத்தைப் போல கசக்கும். தன் ஆத்ம தரிசனத்துக்காக, பக்தி, யோகம், ஞானம், கருமம் இவைகளைக் கடைப்பிடித்துப் பயிலும் பயிற்சி காலத்தில் இது விஷம் போன்று கசக்கலாம். ஆனால் முடிவிலே இது அமிர்தத்தைப் போல இனிக்கும். ஆனந்தத்தை நல்கும். இது வெளியுலக அறிவாலும் வெளியுலகப் பொருள்களாலும் அடையப்படுவதல்ல. ஆனால், இது மாசு மருவற்ற தூய்மையான மெய்யுணர்வால் அடையப்படுகிறது. இது விஷய போகங்களால் அடையப்படுவதல்ல. ஆனால் இது ஆத்மாவின் உள்ளே நிலவும் சாந்தியால் எய்தப்படுகிறது.

சத்துவ இன்பம் என்பது பேரானந்தம். அது ஆத்ம தரிசனத்தின் களிபேருவகை. அது, ஆத்மாவின் நீடமைதி. அது வீடுபேறடைவிக்கும் ஞானம்.

விஷய இந்திரிய சுகங்களால் அதாவது பொறிபுலன்களின் கூட்டுறவால் முதலில் அமிர்தத்திற்கு ஒப்பானதாக இருந்து இறுதியிலே விஷம் போன்று கசப்பானதாகி வெறுக்கப்படும் அந்தச் சுகம் (இன்பம்) ராஜஸமென்று சொல்லப்படுகிறது. XVIII (38)

ராஜச இன்பம் எனப்படுவது சிற்றின்ப சுகம்—புலன் உணர்வால் அடையும் சுகம். இது ஆரம்பத்திலே அமிர்தம் போன்று இனிக்கும். ஆனந்தமாய் இருக்குமானாலும் முடிவிலே விஷத்தைப் போல கசக்கும். முடிவில்லாத துன்பத்தைத் தரும்.

இதையேதான் பாரதியார்
"இன்பம் இன்பம் இன்பம்
இன்பத்துக்கோர் எல்லை காணில்
துன்பம் துன்பம் துன்பம்" என்கிறார்.

*ராஜச சுகம் விரும்புகின்றவனுக்கு அவன் துய்க்கும் ஆனந்தமே ஞானம். ஆனால் சிறிது காலத்துக்குள்ளாகவே அவன் அதில் திருப்தி அடைந்துவிடுகிறான். பின்னும்தான் இன்பமாக இருக்க வேண்டுமென அலைகிறான். அதைப் பின்பற்றி ஓடுகிறான். ஆனால் முதுமைக் காலத்திலே அந்த இன்பம் உயிராற்றல் அற்றதாகி விட்டதைக் காண்கிறான். இப்படிப்பட்ட மனிதனுக்கு ஆசையும் காமமுமே தன் கடமையாகி விடுகிறது. தன் காலமெல்லாம் அவன், குடியிலும் கேளிக்கைகளிலும் பெண்கள் சகவாசத்திலும் விருந்திலும் பகட்டிலுமே செலவிடுகிறான்.*

எந்த இன்பம் ஆரம்பத்திலும் முடிவிலும் தனக்கு மயக்கத்தை (மனக்குழப்பத்தை) உண்டு பண்ணுகிறதோ, எது தூக்கம், சோம்பல், தடுமாற்றம் இவைகளில் இருந்து உற்பத்தி ஆகின்றதோ, அது தாமஸ சுகம், தாமஸ ஆனந்தம் என்று இயம்பப்படுகிறது. XVIII (39)

*தாமஸ சுகம் என்பது முழுமையான பொய் இன்பம் அது ஆத்மாவை அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்கிறது. அதனுடைய ஆரம்பமும் முடிவும், மயக்கமே! குழப்பமே!*

*தாமஸ குணச் சுகபோகி, மடிமை (சோம்பல்)யின் அடிமை. மடத்தனத்தின் அடிமை. ஆத்மாவைக் கலங்க வைக்கும் அறியாமை, குழப்பம் ஆகியவற்றின் கைக்கூலி.*

பிரகிருதியில் (இயற்கையில்) இருந்து தோன்றிய இந்த மூவகைப்பட்ட குணங்களிலிருந்து விடுதலையடைந்த உயிர் இந்த மண்ணுலகிலும் இல்லை. வானுலகில் உள்ள தேவர் களுள்ளும் இல்லை. XVIII (40)

*மேற்கூறிய அனைத்தும் முக்குணங்களால் வேறுபாடு உடையன. முக்குணங்களோ பிரகிருதியில் தோன்றிய ஒவ்வொருவருக்கும் உண்டாகும் தன்மை. முக்குணத்தில் இருந்தே அகங்காரம் தோன்றுகிறது. அதுவோ எளிதில் நீங்குவதில்லை. இந்த முக்குண வசப்பட்டுழல்பவர்கள்*

மக்கள் மட்டுமல்ல தேவர்களுமே. எனவே மனிதன் கடமை முக்குணங்களுள் சிறந்ததான சத்துவ குணம் மேலோங்கிப் பெற பாடுபட வேண்டும். பயிற்சி செய்ய வேண்டும். அதுவும் இடையறாத பயிற்சி இன்றியமையாதது.

அடுத்து சுலோகங்கள் 41 முதல் 48 வரை உலகிலே சமுதாயத்திலே நிலவியுள்ள நான்கு வகைப்பட்ட வர்க்க பேதங்களின் விளக்கம் கூறப்படுகிறது.

எதிரிகளை எரிப்பவனே! அந்தணர்கள் என்றும், ஆளும் அரச வர்க்கம் என்றும், வணிகர்கள் என்றும் வேளாளர் என்றும், அவரவர்கள் செய்யத்தக்க கருமங்கள் அவரவர்கள் (இயல்பில்) சுபாவத்தில் பிறந்த குணங்களுக்கு ஏற்ப பிரிக்கப் பட்டுள்ளன. XVII (41)

ஒவ்வொருவர் சுபாவமும் அவரவர் முன்பிறப்பிலே செய்த கரும பலனுக்கு ஏற்ப அமைகிறது. இந்த சுபாவம் இறைவனது மாயை. இதுதான் முக்குணமாக உள்ளது. குணத்துக்குத் தக்கபடி கருமங்கள் வேறுபடுகின்றன.

நம் உள்ளுறையும் ஆத்மாவைப் பொருத்தவரை, மக்கள் பிறப்பில் எந்தவித பேதமும் கிடையாது. நாம் நம்முடைய உயிரைச் சார்ந்த உள்ளியல்பிலே துறக்க வாழ்வடைதலிலே விதியால் ஆட்டுவிக்கப்படுதலிலே ஒருவரே ஒரே தன்மைய வரே ஆகும். ஆனால் குண வேறுபாட்டால் செயல் வேறு பாட்டால் நாம் வேறுபடுகிறோம்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்

என்கிறது குறள்.

எனவே பிறப்பினாலே எவரும் உயர்ந்து விடுவது மில்லை. தாழ்ந்து போவதும் கிடையாது. அவரவர்கள் குணங்களுக்கு ஏற்ப அமையும் தொழிலால், கருமங்களால்; அவர்கட்குச் சிறப்பும் சிறப்பின்மையும் அமைகிறது.

அந்தக்கரணங்களை அடக்குதல் புறக்கரணங்களை அடக்குதல். தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, ஞானம், நூலறிவு, இறை நம்பிக்கை இவை யாவையும் சுபாவத்தில் (இயல்பாக) உண்டான (உண்மையான) அந்தணர்கள் கரும மாகும். XVIII (42)

சூரத்தன்மை, துணிவு, உறுதி, சாதுர்யம், போரில் புறங் காட்டி ஓடாமை, கொடைத்தன்மை, இறைமை எனும்இவைகள் சுபாவத்தில் உண்டாகிய அரச தர்மங்களாகும். XVIII (43)

உழவு செய்தல், கால்நடை காத்தல், வாணிகம் இவை இயல்பாக உண்டான வணிகன் தொழில். பிற தொழில்கள் யாவற்றையும் செய்வது, தொழிலாளர்க்கு—தொழில் செய்யும் வர்க்கத்திற்கு இயல்பாக உண்டாகிய கருமம். XVIII (44)

*(பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னே பகுக்கப்பட்ட வர்க்க பேதங்கள் மேற்சொன்னவை. கீதை சொல்லப்பட்ட காலத்திற்குப் பிறகு எத்தனையோ ஆட்சி மாற்றங்கள், சமுதாய மாற்றங்கள், படை எடுப்புகள், பிற மத சிந்தனை களின் கலப்புகள், பலவகைப்பட்ட தத்துவங்களின் கலப்புகள் யாவும் சேர்ந்து இந்த நால்வகை பேதங்களை நாலாயிரம் பேதங்களாக்கி விட்டன. எனவே இது இன்றைக்கு— இன்றைய சமுதாய வாழ்வுக்கு ஏற்றதல்ல.)*

தத்தமக்குரிய பணிகளில் வேலைகளில் இன்பமடையும் மனிதன் நிறை நிலையை அடைகிறான். இவ்வகையில் தன் கருமத்திலே (பணியிலே) கருத்து வைப்பவன், எப்படி பரிபூரணத் தன்மையை அடைகிறான் என்பதைக் கேள். XVIII (45)

யாரிடமிருந்து உயிர்கள் தோன்றினவோ, இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் யாரால் வியாபிக்கப்பட்டிருக் கின்றதோ அந்தப் பரம்பொருளைத் தன் சுய கருமத்தால் வணங்கி மனிதன் மேன்மையடைகிறான். XVIII (46)

நற்குணமில்லாத சுயதர்மமானது நன்கு அனுஷ்டிக்கப் படும் பரதர்மத்தைக் காட்டிலும் சிறந்தது. சுபாவத்திலமைந்த கருமத்தைச் செய்பவன் கேடு அடைவதில்லை. XVIII (47)

குந்தியின் மைந்தா! தோஷத்தோடு கூடியது எனினும் உடன் தோன்றிய கருமத்தை ஒருவன் துறக்கலாகாது ஏனெனில் அக்கினி புகையால் சூழ்ந்திருப்பதைப் போலவே எல்லாக் கருமங்களும் தோஷத்தால் சூழ்ந்துள்ளன.

XVIII (48)

*இந்த நான்கு சுலோகங்களிலும் இதற்கு முன் சொன்ன நான்கு வருணத்தாரும் தத்தமக்கென வரையறுக்கப்பட்ட தொழில்களையே செய்ய வேண்டும் என்றும், அந்தந்த குலத் தொழிலை அவனவன் செய்வதால் பரிபூரணத் தன்மை எய்த முடியும் என்றும், எல்லாக் கருமங்களும் தோஷ முடையனவே, எனவே எவையும் இழிந்தவை அல்ல என்றும், தன் சுய தர்மம் நற்குணமில்லாமற் போயினும், அதையே அனுஷ்டித்தல் வேண்டும் என்றும், ஏனெனில் பரதர்மத்தைக் காட்டிலும் அது மேலானதென்றும் கூறப் பட்டுள்ளது.*

*(பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகின்றன. மக்கள் தொகை, சமுதாய அமைப்பு முறை, தொழில் வளர்ச்சி, விஞ்ஞான வளர்ச்சி முதலிய மாற்றங்களால், இந்தச் சுய தர்மத் தொழில் முறை அடியோடு இப்பொழுது மாற்றம் அடைந்து விட்டது.)*

எங்கும் எவ்வகையிலும் பற்றற்ற புத்தி உடையவனாய், சிந்தையை அடக்கியவனாய், ஆசையற்றவனாய் இருப்பவன் எவனோ, அவனே சந்நியாசத்தால் உத்தமமான வினைகளற்ற பெரு நிலையை (நைஷ்கர்ம்ய சித்தி) அடைகிறான்.

XVIII (49)

*கருமங்களின் மூலமாகவே கருமங்களற்ற நிலையாம் பூரண நிலை எய்தப் பெறுகிறது. இந்தப் பூரண நிலையே*

*விடுதலை—கருமங்களில் இருந்து விடுதலை. இந்தப் பூரண நிலையே, இறையுணர்வு நிலை.*

*இந்தப் பூரண நிலையடைய மூன்று படிகள் உள.*

1. *முதல் படி—மனிதன் 'தான்' என்னும் அகங்காரத்தைத் துறக்கிறான்.*

2. *அடுத்தபடி—அவன் தான் செய்யும் சகல கருமங்களின் பலன்களையும் துறந்து விடுகிறான்.*

3. *மூன்றாவது படி—தான் செய்கின்ற கருமங்களைப் பற்றிய சிந்தனைகளையும், எண்ணங்களையும் துறந்து விடுகிறான். இவ்வகையில் அவன் தனது எல்லா கருமங்களையும் துறந்து விடுகிறான்.*

*அவன் தன்னையே வெற்றி கொண்டவன் (நைஷ்கர்ம்ய சித்தி) முழுமையான கருமங்களைக் கடந்த நிலையை அடைகின்றான்.*

குந்தி மைந்தனே! சித்தியை அடைந்தவன் எவ்வகையில் ஞானத்தின் மேலான வடிவமான பிரம்மத்தை அடைகிறானோ அவ்வகையைச் சுருக்கமாகச் சொல்கிறேன், அறிவாயாக.
XVIII (50)

*"சித்தியடைதல்" என்றால் பக்குவமடைதல் என்பதாம்.*

தூய அறிவுடையவன் உறுதியுடன் உடலையும் உள்ளத்தையும் அடக்கியும், சப்தம் முதலிய இந்திரிய விஷயங்களைத் துறந்தும், ராகத் துவேஷங்களை விட்டொழித்தும், XVIII (51)

தனித்திருந்து உண்டியைச் சுருக்கி, மனம் மொழி மெய்யை அடக்கியவனாய், எப்பொழுதும் தியான யோகத்திலே விருப்பம் உள்ளவனாய், வைராக்கியத்தை மேற்கொண்டவனாய், XVIII (52)

அகங்காரத்தையும், ஆசையின் வலிமையையும், செருக்கையும், காமத்தையும் குரோதத்தையும் விலக்கி, தனது உடைமையையும் நீத்து விட்டு, மமகாரமற்று, சாந்தமாயிருப்பவன் பிரம்மமாவதற்குத் தகுதி உடையவனாகிறான்.

XVIII (53)

*ஒரு சாதகன், எந்த வகையில், தன்னலமற்ற கருமங்களை அப்பியாசித்த பிறகு, எவ்வகையிலே தன்னையறிந்து பின் தலைவனை அறிகிறான் என்பதை கண்ணன் அர்ஜுனனுக்கு இப்பொழுது சொல்லுகிறார்.*

1. *முதலாவது, ஒரு சாதகன் தன்னலமற்ற கருமங்களின் மூலமாகத் தூய உணர்வாற்றல், தூய மனத்திட்பம் இவைகளை விருத்தி செய்து கொள்ளுகிறான். இவை அவனை, மனக்குழப்பங்களில் இருந்து விடுதலையளித்து விடுகின்றன. இதனால் தன் உடலை ஆத்மா என நினைக்கும் பொய்ம்மை அழிகிறது.*

2. *சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்பொறிகளின் இன்ப நுகர்விலிருந்து அவன் விடுபடுகிறான்.*

3. *தன்னடக்கம், மன அடக்கம், பொறிபுலன் அடக்கம், அவனிடம் அமைகிறது. அதனால்அவன் உலக விருப்பு வெறுப்பு, அன்பு பகைமை ஆகியவற்றை உதறித் தள்ளி மேலெழுகிறான்.*

4. *தான் தனிமையிலே இனிமை கண்டு அக உணர்விலே ஒதுங்கி வாழ்கிறான்.*

5. *அவன் உட்கொள்ளும் எளிய (சத்துவ) உணவும் சொற்பம்; உறக்கமும் சொற்பம்; பேசுதலும் சொற்பமே.*

6. *தன் உடல், உள்ளம், பேச்சு இவைகளிலே அவன் தன்னடக்கத்தோடு இயங்குகின்றான்.*

7. அவன், உண்மை வடிவான, ஆனந்த வடிவான அறிவு வடிவான, பரப் பிரம்மத்தைச் சோகம், ஓம் என தியானிக்கிறான். அதிலேயே ஆழ்ந்து நிற்கிறான்...

8. காமத்தையும் குரோதத்தையும் தன்னிடமிருந்து விலக்கி விட்டு, அவா இன்மை; பற்றின்மைகளிலே அடைக்கலம் புகுகின்றான். இவைகளில் அவன் வைராக்கியமாக இருக்கிறான்.

9. பேராவல், அற்பத்தனம், பகட்டு, பலாத்காரம், பெருமை, அகங்காரம், காமம், கோபம் இவைகளி லிருந்து அவன் விடுபட்டவன்.

10. அவன் அமைதியானவன், இதயத்திலே சாந்தி நிலவப் பெற்றவன்; அன்பு, தன்னலமற்ற தன்மை; பச்சாதாபம், கனிவு இவைகளை அடையப் பெற்றவன்.

சாதகன் இவ்வகையில் தான் தகுதியடையப் பெற்றவனாய், பிரம்மத்தை உணரத் தக்கவனாகிறான். அவன் தன் உண்மையான ஆத்மாவிலே ஒன்றி விடுவதால்; எல்லையற்ற பரம் பொருளில் ஒன்றி விடுகிறான்.

பிரம்ம ஞானத்தில் உறுதி பெற்ற மனமுடையவன், துயர் அடைவதில்லை. அவா அடைவதில்லை. எல்லா உயிர் களிடத்தும் சமநோக்குடைய அவன் என்மீது மேலான பக்தியை அடைகிறான். XVIII (54)

இந்த வகையில் பரம் பொருளோடு ஒன்றிவிட்ட அவன், எதைப் பற்றியும் துக்கப்படுவதில்லை. எதைப் பற்றியும் ஏங்குவதில்லை. அவன் எல்லாவித பந்தங்களிலிருந்தும் விடுதலையடைந்து விடுகிறான். தன்னுள்ளே அவன் ஆனந்த மாக இருக்கிறான். அவன் உள்ளம் சாந்தியில் நிலை பெறு கிறது. பார்வையில் கனிவு காணப்படுகிறது. தன்னுடைய

*உள்ளத்தினால் எல்லா உயிர்களையும் தன் உயிர் போல் கருதுவதால், என் மீது அவன் மேலான பக்தி கொண்டு வழி படுகிறான். இந்தப் பக்தி மாயையின் முக்குணங்களையும் கீழாக்கி மேலோங்குகிறது.*

*"அவர்களுள் இடையறா யோகம் பூண்டு, மாறாத பக்தி செய்யும் ஞானியே மேலானவன். ஏனெனில் நான் ஞானிக்குப் பிரியமானவன். அவனும் எனக்குப் பிரிய மானவன்" என்னும் சுலோகம் (அத்.7 சுலோகம் 17) இங்கு கருதத் தக்கது.*

மேற் கூறியவன், எத்தன்மை உடையவனாகவும் யாராக வும் நான் இருக்கிறேன் என்று என்னை பக்தியினால் உள்ள படி அறிகிறான். அங்ஙனம் உள்ளபடி அறிந்த பின், விரை வில் என்னை அடைகிறான். XVIII (55)

*பிரம்ம மாகிறான், பிரம்மத்தை அடைகிறான் என்பது என்ன? இறைவனை உள்ளபடி உண்மையாக உணர்தல், அவன் யார் என்பதை அறிதலே. அப்படி உள்ளபடி அறிய, உண்மை உணர்வு பெற வழி பக்தி செய்தலே ஆகும். ஆம், பக்தியினால் மட்டுமே இறைவனை உணர முடியும்.*

*கண்ணனைக் காதலிக்கிறான், பக்தி செய்கிறான், என்றால் அவனை அறிகிறான் என்பது பொருள். அவன் எவ்வளவு மகத்தானவன். அவன் உண்மையான தன்மை என்ன? அவன் செயலாற்றல்களைக் கடந்து நிற்கும் தத்துவங்கள் என்ன? என்பதை பக்தி மட்டுமே அறிவிக்கும். அவனை அறிவது என்பது அவனுள்ளே புகுவது; அவனையே பக்தியால் அடைவது;மரண பரியந்தமும் அதற்கு அப்பாலும் கூட.*

எப்பொழுதும், சகல கருமங்களையும், ஒருவன் செய்த போதிலும், என்னைச் சரணடைகின்றவன், என் அருளால் நித்தியமானதும் நிலைபேறுடையதுமான என் பதத்தை அடைகிறான். XVIII (56)

*எனவே ஒரு பக்தன் இறைவனிடம் தன்னை ஒப்படைத்து விடுகிறான். அதன் மூலம் தன் காரிய கருமங்களை நிஷ்காம்ய கருமங்களாக மாற்றி அமைத்துவிடுகிறான். அவன் எல்லா வகையிலும் ஓயாது பணியாற்றிய வண்ணம் இருப்பினும், அவன் (ஜீவாத்மா) தான் இடையறாது செய்கின்ற பக்தி மூலமாகவும் அருளின் மூலமாகவும் கண்ணனிலே (கண்ணன் பாதங்களில்) பரிபூரண அமைதி யோடு குடி கொண்டிருக்கிறான். அதாவதுஅந்தத் தெய்வீக நிலையிலே அவன் வசிக்கிறான். அவன் செய்வதனைத்தும் ஒன்றேதான். தன்னையே அவன் கண்ணனிடம் பரிபூரண சரணாகதியாக்கி விடுகிறான். எனவே அவன் அருள் அவன்மீது பொழிதலால் அவன் கண்ணனிடம் சரணடைதல் எளிதாகிறது.*

எனவே அர்ஜுனா! விவேகத்தால் எல்லாக் கருமங்களை யும் என்பால் ஒப்படைத்து என்னையே குறிக்கோளாகக் கொண்டு புத்தி யோகத்தைச் சார்ந்திருந்து எக்காலத்தும் உன் சித்தத்தை என்னிடம் வைப்பாயாக. XVIII (57)

*இந்தச் சுலோகத்திலே மூன்று படிகள் இயம்பப்படு கின்றன.*

1. *தன்னலமற்ற கர்மயோகம் ஆத்மாவை ஞானத் திற்குக் (ஆத்ம அறிவுக்குக்) கொண்டு செல்கிறது.*

2. *ஞான யோகத்தினால் ஆத்மா பக்தி நெறி சென்றடைகிறது.*

3. *பூரணமான நிரம்பிய பக்தியால் பிரேமையால் ஆத்மா பரமாத்மாவை அடைகிறது.*

*எனவே சாதகன் மூன்று வழிகளிலே பரமாத்மாவை வழி படுகிறான். வழிபட வேண்டும்.*

1. *நிஷ்காம்ய கர்மம்—தன்னலமற்ற கர்மம் ஆற்றுதல்.*

2. *சரணாகதி—இறைவனிடம் பூரண அடைக்கலம் புகுதல் (தன்னலத்தோடு அடைக்கலம் புகுந்தாலும் பின்னர் தன்னலம் அற்றுப் போகும்) அதோடு உலகியல் கருமங்கள் அனைத்தையும் அவனிடம் ஒப்படைக்க வேண்டும்.*

3. *பிரேம பக்தி (தெய்வீகக் காதல்) கொள்ளுதல். எனவே, எல்லாக் கருமங்களையும் அவனிடம் சமர்ப்பித்து விட்டு, நம் மனதையும் இதயத்தையும் அவனிடம் ஒப்படைக்க வேண்டும்.*

*நம் உள்ளத்திலே "நாம் கடவுளின் பணியாற்ற வந்தவர்களே; எச்செயலையும் நாம் செய்வதில்லை; அவன் இட்ட பணிகளையே நாம் ஆற்றிக் கொண்டிருக்கிறோம்" எனும் எண்ணம் தேவை.*

*புத்தி யோகத்தை—அதாவது மன அமைதி தரும் ஞான யோகத்தை—பயிற்சி செய்க. உலகத்தைத் துறத்தல் தேவை இல்லை. உள்ளத்துறவு எய்துக. உன் கருமங்கள் கரும பலன்கள் ஒவ்வொன்றாக உன்னிலிருந்து கழன்று கீழே வீழ்ந்து விடும்.*

உன் உள்ளத்தை நீ என்பால் வைத்துவிடு. எனது அருளால் நீ இடைஞ்சல்களை எல்லாம் கடந்து செல்லக் கூடும். ஆனால் உன் அககாரத்தால் என் மொழிகளைக் கேளாமற் பே வாயானால் நீ அழிய வேண்டியவனே.

XVIII (58)

*ஆத்மா இறைவனிடத்திலே தன் சித்தத்தை வைத்து விடவேண்டும். தானே கர்த்தா எனும் நினைப்பை ஒழித்து விடவேண்டும்.*

*எவன் இந்த வகையில் தன்னைத் தன் பக்தியால் இழந்து தன் அகங்காரம் அழிந்து இறைவனிலே வாழ்கிறானோ அவன் தன் இடைஞ்சல்களை எல்லாம் எளிதில் கடந்து விடுவான். மாறாக தன் அகங்காரத்தால்—தற்செருக்கால்*

இறைவன் சொற்களாம், தன் இதய ஒலியைக் கேளாமற் போவானானால் அவன் அழிய வேண்டியவனே.

இவ்வகையில், தன் அழிவுக்குக் காரணமான துன்பங்கள் எல்லாம் அகங்காரத்திலிருந்தே பிறக்கின்றன.

அகங்காரம் கொண்டு போர்புரியேன் என நினைப்பாயாகில் அத்துணிவு பொய்த்துவிடும். உன்னுள் நிலைத்துள்ள பிரகிருதி—இயல்பு—உன்னைப் போரில் ஈடுபடுத்திவிடும்.
XVIII (59)

நீ உன் உடலையும் உள்ளத்தையும் "நான்" எனத் தவறாக நினைத்து உன்னுடைய கோணல் புத்தியால் அகங்காரம் கொண்டால், நீயே உன் செயல்களுக்கெல்லாம் காரணகர்த்தா என்று நினைத்தால், இந்த உலகிலே நீ வீழ்ச்சி அடைய வேண்டியவனே. தெய்வீக மூலாதாரத்திலிருந்து நீ அப்புறப்படுத்தப்பட்டு நீயே உன் அழிவைத் தேடிக்கொள்வாய்.

அதாவது உன் வீழ்ச்சிக்கு முன்னே உன் தற்செருக்காம் அகங்காரம் நடை போடும். மாறாக இறைவனிடம் உன் உளம் ஒன்றுதலே வெற்றிக்கும், பயனுக்கும் வழியாகும்.

இறைவன் சித்தத்திற்கு மாறாக எழும் மனப்போராட்டமும் அவன் ஆணையை மதித்து நடவாமையுமே ஆன்ம வீழ்ச்சிக்குக் காரணமாகிறது

அர்ஜுனா!

உன்னுடைய தற்செருக்கால், நான் போர் செய்ய மாட்டேன் என்று சொல்லி விடலாம். ஆனால் உன் குணம் அரசர்—ஆள்வோர்கட்குரிய குணம், உன்னைத் தானாகவே இப்போரில் ஈடுபடும்படிச் செய்துவிடும். ஏனெனில் உன்னைக் கட்டுப்படுத்துகின்ற கர்மத்தை நீயாகவே, படைத்துவிட்டாய். அதன் சக்தியின் முன்னே நீ செயலற்றவன். உன் தற்செருக்கால் செய்யக்கூடாது என்னும் பணியை நீயாகவே நிச்சயம் செய்வாய். க்ஷத்திரிய குணம்

*க்ஷத்திரியனின் இயல்பு போர் செய்தல். அதில் நீயாகவே ஈடுபட்டு விடுவாய். இயற்கையின் தூண்டுதலை நீ வெல்ல முடியாது.*

*குந்தியின் மைந்த!*

உன் மதி மயக்கத்தால் நீ எதைச் செய்யமறுக்கின்றாயோ, அதையே, அவ்வினையையே உன் சுபாவத்தின் பிறந்த குணத்தால் வினையால் கட்டுண்டு—உன் வசமிழந்தவனாய் நீ செய்வாய். XVIII (60)

*அர்ஜுனன் சுபாவம் க்ஷத்திர சுபாவம். அது அவனை விட்டு நீங்காது. வெளிமனம் தன் அகங்காரத்தால் போர் செய்யேன் என்று கூவினாலும் அவன் உள் மனம், அவன் குண இயல்பினைத் தூண்டிவிடும். ஒருவன் சுபாவம்; அவன் பிறவிக்குணம்; நிழல் போல நீங்காது. எங்கும் அவனைப் பின்தொடரும். அவன் சுபாவத்திலிருந்து உதிக்கும் கருமத்தை அவன் செய்தே ஆகவேண்டும்.*

அர்ஜுனனா! பரம்பொருள் எல்லாஉயிர்களையும் (உடல் என்னும்) இயந்திரத்திலேற்றி, மாயையினால் அவைகளை ஆட்டுவித்தபடி, அவைகளின் உள்ளத்திலே வீற்றிருக்கிறான். XVIII (61)

*எல்லாருடைய ஆத்மாவிலும் நிறைந்துள்ள ஆண்டவன் தான் படைத்த உடலுறையும் உயிர்களை, மாயை என்னும் சக்கரத்திலே பொருத்தி வைத்துச் சுற்றிச் சுழற்றி ஆட்டுவிக்கிறான்.*

*பொம்மலாட்டக்காரன் திரைக்குப் பின்னால் இருந்து, ஒவ்வொரு பொம்மையையும், தன் விரல் நுனியிலே கட்டப்பட்டுள்ள கயிற்றின் இயக்கத்தால் ஆட்டுவிப்பதைப் போல மாயையும் உடலுள்ளே சிறைப்படுத்தப்பட்டுள்ள ஆன்மாக்களைத்தன் சக்தியால் நம் உள்ளுறையும் இறைவன்ஆணைக்கேற்ப ஆட்டுவிக்கிறது. அவன் தான் உள்ளியங்கும், நம்மை இயக்கும், பரம்பொருள், உன்னுடைய இயல்பை; பிரகிருதியைத் தூண்டி நீ முற்பிறவிகளில் செய்த கருமங்களின் விளைப்பயன்களின்படி நீ போர் புரியும்படிச் செய்கிறான்'*

இதன்படி மாயையே முதற்காரணம். நம்முள் உறையும் இறைவனே துணைக் காரணம்.

ஆத்மாக்களை மாயை என்னும் சக்கரத்திலே சிக்க வைத்து இப்படியும் அப்படியும் பிரகிருதி நம்முடைய கரும பலன்களின் படி நம்மை இயக்குகிறது.

அர்ஜுனா! உன் முழு இதயத்தோடும் உடல் பொருள் ஆவியுடன் அவனையே சரணடைக, அவனருளால் மேலான சாந்தியையும் நிலைத்த பதவியையும் நீ பெறுவாய்.
XVIII (62)

எல்லா வகையிலும் எல்லா பாங்கிலும் இறைவனையே சரணடைக. பேராசைகளை விளைவிக்கும் காமத்திலே ஈடுபட உள்ளத்தைத் தூண்டும் ஆத்மாவின் கீழ்ப்பகுதியை நம்பாதே! அவனது கருணையால் பரம்பொருளோடு நீ இணைந்து, அவன் சொரூபமாகி விடுதலைப் பேறடைந்து சாந்தியை எய்துவாய்.

இங்ஙனம் ரகசியங்களுள் மிக ரகசியமான ஞானம் என்னால் உனக்கு இயம்பப்பட்டது, இதை நீ முழுமையாக ஆழ்ந்து சிந்தனை செய்து, மீண்டும் நினைவுக்குக் கொணர்ந்து, அவைகளுள் நீ விரும்பியதைச் செய்க.
XVIII (63)

இந்தச் சுலோகத்திலே உள்ள "விம்ருச்ய அசேஷண" என்னும் சொல், மிச்சம் மீதி இல்லாமல் முழுமையாக என்னும் பொருளது. இவைகளை—இந்தத் தத்துவங்களை—ஆழ்ந்து சிந்தித்து, உன்னுடைய பகுத்தறிவால் இவைகளின் வேறுபாடுகளைக் கண்டறிக என்பதாம்.

"யதா இச்சஸி ததா குரு" என்னும் சொற்றொடருக்கு நீ எதை தேர்ந்தெடுக்கிறாயோ அதனைக் கைக்கொள்க என்பது பொருள்.

இச்சுலோகத்தின்படி கடவுள் தன் புறத்தோற்றத்திலே; நம்மிடம் அசட்டையாக இருப்பது போல் காணப்படுகிறார்

ஏனெனில் அவர் அர்ஜுனன் வழியைத் தானே தேர்ந்தெடுக்கட்டும் என்கிறார். அவரிடம் (இறைவனிடம்) தெளிவாகக் காணப்படும் இந்த அலட்சியத்திற்குக் காரணம், நாம் ஒவ்வொருவரும், நாமாகவே தேர்ந்தெடுத்த வழிமுறைகளின்படியே, பக்தியோ கருமமோ, ஞானமோ எவ்வழியோ அவ்வழி தன்னை வந்தடைய வேண்டும் என்னும் அவனுடைய பெருங்கருணைப் பேரவாவே ஆகும்.

அவன் யாரையும் பலவந்தப்படுத்துவதோ கட்டாயப் படுத்துவதோ கிடையாது. ஏனெனில் சுதந்தரமான தன் விருப்பநிலைக்கேற்ப எந்த மார்க்கத்தை மனிதன் தேர்ந்தெடுக்கிறானோ அவ்வழியே அவனுக்குச் சிறந்ததாகும்.

மனிதன் யாராலும், இறைவனால்கூட வற்புறுத்தப் படக்கூடாது. எனவேதான் இறைவன் தன் ஆணையை யார்மீதும் திணிப்பதில்லை. இந்த வகையில் தெய்வீக அழைப்பைக் கூட நாம் எந்த நேரத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் ஏற்றுக் கொள்ளலாம்; மறுத்து விடலாம். எனவே தான் கண்ணன், நீ எவ்வழியைத் தேர்ந்தெடுக்கிறாயோ, அவ்வழியையே கடைப்பிடிக்கலாம் என அர்ஜுனனுக்கு இயம்புகிறார்—சுதந்தரம் தருகிறார்.

இனி வரும் மூன்று சுலோகங்களில் சரணாகதி தத்துவம் கூறப்படுகிறது.

யாவற்றிலும் மிகவும் ஆழமான, எனது மிகச் சிறந்த சொற்களை நீ மீண்டும் கேள், நீ எனக்குற்ற நண்பனாகையினால் உனக்குரிய நலத்தையே நான் நவில்கிறேன்,

XVIII (64

என்னிடத்திலே மனம் வைத்தவனாய், என்னையே ஆராதனை செய்திடுவாய். என்னையே வணங்கு. அதனால் நீ என்னையே அடைவாய். உண்மையாகவே உனக்கு நான் சத்தியம் செய்கிறேன், ஏனெனில் எனக்கு நீ மிகவும் பிரியமானவன்,

XVIII (65)

எல்லா தருமங்களையும் பரித்தியாகம் செய்துவிட்டு (என் ஒருவனையே) என்னிடமே சரண் புகுக. நான் உன்னை சகல பாவங்களிலிருந்தும் விடுவிப்பேன், நீ வருந்தாதே,
XVIII (669)

இங்கே சொன்ன மேலான மொழிதான் கீதையின் சாரம். இதுவே யோகத்தின் சாரமும் கூட.

அர்ஜுனன் கண்ணனுடைய அன்புக்குப் பாத்திர மானவன். எனவேதான் கண்ணன் அர்ஜுனனிடம் தூய பக்தியைப் பற்றிச் சொல்கிறார். கிருஷ்ணனிடம், உன் முழு இதயத்தையும் அர்ப்பணித்து விடுவதன் மூலம், அவனையே போற்றிப் பூசித்து வழிபடுவதன்மூலம், அவனிடம் அன்பு காதல்—பிரேமை கொள்ளுவதன் மூலம், அவன் முன் அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்குவதன் மூலம், நீ அவனைக் காணலாம்; உணரலாம்.

சாத்திரங்களில் வற்புறுத்தப்பட்ட எல்லாத் தருமங் களையும் பரித்தியாகம் செய்வதன் மூலம் என்னையே சரணடைக. அதாவது சாத்திரத் தர்மங்களைப் பற்றி நீ வாதாடாதே, சச்சரவிடாதே. அவைகள் அனைத்தையும் நீ அடைக்கலம் புகும் என்னிடம் ஒப்படைத்து விடு.

ஓர் உண்மையான பக்தன் தன் இதயத்தையும் ஆன்மா வையும் இறைவனிடம் சமர்ப்பணம் செய்து விடுகிறான். அவன் இறைவனிடம் சரணாகதி அடைந்து விடுகிறான்.

''அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட் கொண்டபோதே
கொண்டிலையோ''
(திருவா)

அப்படிப்பட்ட அனன்ய சரணாகதி அடைந்த பக்தனின் பாவங்களையும் குறைபாடுகளையும் கண்ணன் அடியோடு அழித்து விடுகிறான்.

வீழ்ச்சியடைந்த ஆன்மாவின் சூழ்நிலையிலே, ஒருவன் மனம், மொழி செயல்களின் கடமைகளுக்கு, நீதிகளு

விதிகளுக்கு, பழக்க வழக்கங்களுக்கு கடுந்துறவு நெறிக்கு தியான யோகத்திற்கான நுணுக்கத்திறனுக்குக் கீழ்ப்படிதலும், இணங்கி ஒத்துப்போதலும் இன்றியமையாதவை. ஆனால் பக்தியின் மூலமாக ஒருவன் தனக்குரிய ஆத்ம பலத்தை எய்திய பிறகு விதிக்கப்பட்ட கடமைகளுக்கோ, தர்மங்களுக்கோ அல்லது கோட்பாடுகளுக்கோ அவன் அடிமையல்லன்.

இறைவன் தன்னிடம் நம்மைக் ஏற்று கொள்ளவும், தன் வயமாக்கவும் தன்னுடைய கருணையை, அன்பை, ஆவலை தன் அளப்பரிய மகிமையை வெளிப்படுத்துகிறார். நம் முன்னே அவர் புகுந்து நம்மை அடைக்கலமாக ஏற்க, அவர் தயாராக உள்ளார். நாம் நம்முடைய இதயங்களை அவருக்காகத் திறக்க வேண்டியதுதான் ஆன்மீக வாழ்வு நாம் அவனை நோக்கிப் போகும் எல்லை அளவினையே பொறுத்திருக்கிறது. அவ்வளவே! அவன் நம்மை நோக்கி இறங்கி வருகிறான். நாம் அவனை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தால், அவன் நம்மை நோக்கிப் பத்தடி நடந்து கீழ் இறங்கி வருவான். நம்முடைய உண்மையான நன்றிக்காகவும் மனம் கசிந்துருகும் பக்திக்காகவும், அவன் காத்திருக்கிறான். அந்நிலை நாம் அடையும் அக்கணமே அவன் நமக்கு உதவுகிறான்; ஆட்கொள்கிறான்.

கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ''எதைப் பற்றியும் கவலைப் படாதே என்றும், தன்னையே வணங்கி வழிபடுக'' என்றும் சொல்லுகிறார்.

ஒருவன் தன் வாழ்வை, தன் கருமங்களை, உணர்வுகளை, எண்ணங்களை எல்லாம் தெய்வப்படையலாக்கிப் படைத்து, தன்னையே இறைவனுக்குச் சரணாகதியாக, அர்ப்பணித்து விட்டால், இறைவன் அவனுடைய வாழ்க்கைப் போரில் துணை நின்று அவனைக் காப்பான். எனவே ஒரு பக்தன் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை.

நாம் நம்முடைய விதிகளை—வினைப்பயன்களைத் தெளிவாக உணர வேண்டுமெனில், அவைகளை அடியோடு

துடைத்தெறிய வேண்டுமெனில், நாம் அவன் முன் நிர்வாணமாக பொய், காமம், சினம், பந்தம், பாசம் முதலிய தீய தன்மைகளான நாம் அணிந்துள்ள ஆடைகள் அனைத்தையும் களைந்தெறிந்து அவனைச் சரணடைந் தால், அவன் நம் வினைகளைத் துடைத்தெறிவான்.

"குந்தியின் புதல்வா! என் பக்தன் நாசமடைவதில்லை. என்று நன்கு அறிக" என்று கண்ணன், கீதை ஒன்பதாம் அத்தியாயம் 31ஆம் சுலோகத்தில் சொல்லி இருப்பது இங்கு கருதத்தக்கது.

திருவருட்பிரகாச வள்ளலாரும், "மரணமிலாப் பெரு வாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்" என்கிறார். யார் மரண மிலாப் பெரு வாழ்வு வாழ்பவர்கள்.

"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீர் அதனால்
உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வளைந்து வளைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்"

இறைவனிடத்திலே மாறாத பக்தியால் கண்கள், நீர் ஆறாகப் பெருகி ஓட வழிபடும் பக்தர்களுக்கு மரணமிலாப் பெருவாழ்வு கிட்டும் என்பது ஐயா அவர்கள் வாக்கு. இது கண்ணன் கூறிய என் பக்தன் நாசமடைவதில்லை என்பதின் பிரதிபலிப்பே ஆகும்.

"என் செயலால் ஆவது யாதொன்றுமில்லை, இனித் தெய்வமே உன் செயலே என்று உணரப் பெற்றேன்" என்னும் எண்ணம் உள்ளத்திலே ஆழமாக வேர் ஊன்றப் பெற்றாலொழிய, பக்தி உள்ளத்திலே முகிழ்க்காது. இந்தப் பக்தியின் முதிர்ச்சியால் பக்தன் தன்னையே ஒப்படைத்து விட வேண்டும். நீ வேறு எனாதிருக்க, நான் வேறு எனா

திருக்கும் நிலை அடைதல் வேண்டும். "தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள், தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" எனத் தன் பெயரையும் மறந்து விட வேண்டும். நீ யார்? எனக் கேட்பவர்களுக்கு "நான் கண்ணன் என்று பதில் சொல்லும் அளவிற்குப் பக்தி முதிர்ச்சியடைய வேண்டும்." இப்படிப்பட்டவன் சகல பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

இந்தக் கீதையிலே, இதுவரை சொல்லப்பட்ட உபதேசங்களை தவமில்லாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும், தொண்டு மனப்பான்மை இல்லாதவனுக்கும் என்னை நிந்திக்கும் தெய்வ நிந்தனை உடையவனுக்கும் நீ உபதேசிக்காதே! XVIII (68)

இது முதல் மூன்று சுலோகங்கள் இந்தக் கீதையைக் கேட்கத் தக்கவர்கள் யார்? என்று விளக்குகின்றார்.

பன்றிகள் முன்னே முத்தை இறைக்காதே என்றார் இயேசுபிரான். ஏன்? முத்தின் மதிப்பு பன்றிக்குத் தெரியாது. அதை அவைகள் பயன்படுத்தவும் முடியாது.

நல்ல ஓவியம் குருடனால் பார்த்து ரசிக்க முடியாது. அதைப் போலத் தவம் அல்லது யோக நன்னெறியில் ஈடுபட வேண்டும் எனும் எண்ணமில்லாதவனுக்கு இது சொல்லத் தக்க நூலல்ல. பக்தி இல்லாதவன்; தெய்வ சமூகத் தொண்டில் ஈடுபடாதவன், தெய்வ நிந்தனை செய்பவன். இவர்கள் யாவரும் இதைப் படிக்கக் கேட்க அதிகாரியல்லர்.

ஒவ்வொரு துறையிலும் அமைந்துள்ள, உணர்ந்த ஆய்வு நூலை, அத்துறையில் நன்கு கற்றுவல்ல—மேற் கொண்டு அறிய வேண்டிய ஆய்வுகளில் அவாவுள்ள அறிவுத் தாகமுடையவர்களே படிக்க அருகதை உடையவர்கள் ஆவார்கள்.

உதாரணமாக மருத்துவம், விஞ்ஞானம், பொறியியலில் மேற் படிப்புக்குப் படிக்கும் நூல்களைச் சாதாரணமான யாவரும் படிக்க இயலாது. படித்தாலும் விளங்காது.

அதைப் போல இந்தக் கீதையின் உபதேசங்களைக் கேட்ப தற்கும் தகுதி தேவை. அவன் தவம், பக்தி உள்ளவனாகத் தொண்டுள்ளம் கொண்டவனாகத் தெய்வ நிந்தனை அற்றவனாக, அமைந்திருந்தால் தான் இதை நன்கு உணர முடியும்.

பிறனுக்கு இது விளங்காது என்பது ஒன்று. விளங்காத காரணத்தால் இது கேலிக்குரியதாகி விடும், இது இரண்டு. மூன்றாவது தெய்வ நிந்தனை செய்பவனிடம் இதை உபதேசித்தால் அவன் இதை அலட்சியப்படுத்துவான். உபதேசம் செய்பவனை முட்டாள், அறிவிலி என்பான். எனவே இந்நால்வரும் இதைக் கேட்கும் அதிகாரியாக மாட்டார்கள்.

இங்குக் கூறியவர்களைத் தவிர்த்து இந்த கீதா தத்து வங்களைப் பிறருக்குச் சொல். அதாவது தவத்திலே நாட்ட முள்ளவன், நல்லவன். நல்விஷயங்களைக் கேட்க ஆவலுள்ளவன், பக்தி உள்ளவன், தொண்டு செய்யும் உள்ளமுள்ளவன், என்னை நம்புகின்றவன், தொழு கின்றவன், ஆகிய இவர்களே இந்த கீதா தத்துவங்களைக் கேட்கத் தக்கவர்கள். அவர்களுக்கு இதை உபதேசி.

கீதையின் இந்தத் தெய்வீக ஞானத்தைத் தன்னலம் கருதாமல் பயபக்தியோடு, பிறருக்கு உபதேசிக்கும் மகத் தான சேவையைச் செய்பவன் உண்மையிலேயே மிகவும் உயர்ந்தவன். ஏனெனில் அவன் பிறரையும் சம்சார சாகரத்தைக் கடக்கச் செய்து, மோட்சமடையும்படியான வழியைக் காட்டுகிறான். இப்படி ஒருவன் தன்னலம் கருதாமல் பயபக்தியோடு பிறருக்கு உபதேசிப்பதன் மூலம் அவன் உன்னதமான பக்திமான் ஆகிறான். எனவே அவன் ஐயமின்றிப் பரம் பொருளை அடைகிறான்.

(கீதோபதேசத்தைப் பிறருக்கு உபதேசிப்பதாகிய) எனக்கு விருப்பமான இச் செயல் செய்பவனைக் காட்டிலும் மாந்தருள் எனக்குப் பிரியமானவன் வேறு யாரும் கிடையாது.

இவ்வுலகத்திலே அவனை விட எனக்கினியவனும் வேறு யாரும் இலர். XVIII (69)

*பக்தியின் மூலம் சம்சார சாகரத்தைக் கடந்து விட்ட பக்திமான், தன்னைப் போலவே பிறரையும் கரையேற்ற உதவி செய்கிறான். இப்படிப்பட்ட இறைவனுக்குரிய இனிய சேவை செய்கிறவன் இறைவனுக்குப் பிரியமாகிறான். அவன் பிறரைக் கரையேற்ற அந்தப் பிறர் மற்றும் பிறரைக் கரையேற்ற, சமுதாயமே அதன் மூலம் உய்தி அடைகின்றது. அதனால் அவனை விட இனியவன் இறைவனுக்கு வேறு யாரும் இலர்.*

நம்மிடையே நடைபெற்ற தருமம் நிறைந்த புனித இந்தச் சம்பாஷணையை யார் கற்றறிகிறானோ அவனுடைய ஞான வேள்வியால் நான் ஆராதிக்கப்படுபவன் ஆவேன். இதுவே என் கொள்கையாகும். XVIII (70)

*இந்த மகத்தான தத்துவத்தை, தருமம் நிறைந்த புனித தத்துவத்தை நம்பிக்கையோடு சாதாரணமாகக் கற்றறிகின்றவனும், நாளடைவில் பக்தனாகிறான். அவனுக்கும் விடுதலை கிடைக்கிறது. அவன் பாவங்களி லிருந்தும் விடுதலையடைகிறான்.*

சிரத்தை உடையவனாய், இதை அவமதிக்காதவனாய், எம்மனிதன் குறைந்தபட்சம் இதைக் கேட்பானாயினும், அம் மனிதன் விடுதலையடைந்து நல்வினையாளர் எய்தும் நல்லுலகங்களை அடைவான். XVIII (71)

*பகவத் கீதை மயக்க அறிவை அழித்தொழிக்கும் ஒரு தத்துவ நூல். ஐயங்கள் இதனால் அழிவெய்துகின்றன. பகவத் கீதையைப் படிக்க வாய்ப்பில்லாவிட்டாலும் கேளுங்கள். அந்தக் கேள்வி ஞானம் கூட உங்களுக்கு உய்தி அளிக்கும். கேட்கும் மனிதர்கள் கூட நல்வினையாளர்கள் சென்றடையும் நல்லுலகங்களை அடைவார்கள்.*

பார்த்தா! இதுவரை நான் சொன்ன அனைத்தும் ஒருமை மனத்தோடு, உன்னால் கேட்கப்பட்டதா? உன்னுடைய அஞ்ஞானத்தால் உண்டாகிய குழப்பம் அழிந்ததா? XVIII (72)

அதற்கு அர்ஜுனன் பதிலளிக்கிறான்.

அச்சுதா! என் மயக்கம் அழிந்து விட்டது. உன்னுடைய அருளால் நான் என்னை உணரப் பெற்றேன். என் ஐயங்கள் அகன்று போயின. உறுதியாக இருக்கிறேன். உமது சொற்படி நடப்பேன். XVIII (73)

இறுதியில் அர்ஜுனன் தன் குருவும் நண்பனுமான கண்ணன் சொன்னபடி கேட்கும் பக்குவ நிலையை அடைந்து விடுகிறான். தன் கையிலேந்திய வில்லை நழுவ விட்டு "என் உடலில் நடுக்கமும் மயிர்ச் சிலிர்ப்பும் உண்டாகின்றன. கையிலிருந்து காண்டீபம் நழுவுகின்றது. என் உடல் தோல் எரிகிறது. என்னால் நிற்க இயலவில்லை. மனது சுழல்கிறது'' என்று ஆரம்பத்தில் பேசிய அர்ஜுனன் இவன் அல்லன். இவன் தத்துவ விளக்கங்களைக் கேட்டதால் உண்மை உணர்ந்த மெய்யறிவு வாய்க்கப் பெற்ற அர்ஜுனன்.

அவனுடைய ஐயங்கள் அனைத்தும் அவனை விட்டுப் போய் விட்டன. அவன் மனம் இப்பொழுது மலையைப் போல உறுதியாக நிற்கிறது. உண்மை ஒளி அவனை வந்தடைந்து விட்டது. அவன் தன்னை உணரப் பெற்றவனாகிவிட்டான்.

இன்றியமையாத உண்மையான ஞானத்தினால் அவன் ஆன்மாவின் தத்துவத்தை அறிந்து கொண்டான். ஞானத்தின் விடிவெள்ளி அவனுள் எழுந்தது.

அவன் மயக்கம் எனும் மாயத்திரை விலக்கப்பட்டு விட்டது. அவன் மறந்து போன ஞான நினைவலைகளை திரும்பப் பெற்றான். இதன் மூலம் அவனுக்கு ஆத்மா என்பது இறைவனின் சாசுவதமான அடிமையே என்னும் ஞாபகம் உண்டாகிறது. ஓர் ஆத்மாவின் உணர்ந்த நிலை அவன் பாதங்களே என்றும் ஓர் ஆத்மாவின் உயர்ந்த ஞானம் அந்தத் தெய்வீகப் பரம்பொருளிடத்து அடைக்கலம் அடைதலே—சரணம் புகுதலே என்றும், அவன் உணர்ந்து விட்டான். எனவே என்றும், எக்காலமும் இருப்பது இதுவே! இதுவேதான்! இந்த உண்மையேதான்!

ஆத்மா மெய்யுணர்வு அடைந்து விட்டால், அதன் அகங்காரம் அகன்று விடுகிறது. மயக்கம் அழிவெய்துகிறது. ஐயங்கள் சிதறிப் போய் விடுகின்றன. பின் அந்த ஆத்மா, இறைவனின் மெல்லிய குரலொலியைத் தன்னுள்ளே கேட்கிறது. அது இறைவனின் கருவியாக அமைந்து செயலாற்றுகிறது.

இதோடு கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசித்தளித்த பகவத் கீதை முடிந்து விடுகிறது.

இனி இதனைத் தன் ஞானக் கண்ணால் நேரே கண்டு அவர் உபதேசத்தைக் கேட்ட சஞ்சயன் தன் பக்கத்தில் வீற்றிருக்கும் திருதராஷ்டிரனிடம் சொல்கிறான்.

இங்ஙனமே வாசுதேவருக்கும், மகாத்மாவான பார்த்தனுக்கும் இடையிலே நிகழ்ந்த மயிர்க் கூச்சம் உண்டு பண்ணும் அற்புத சம்பாஷணையை நான் கேட்டேன்.

வியாச பகவான் அருளாலே; இந்த மேலான ஆழ்ந்த யோகத்தைத் தாமே சொல்லலுற்ற, யோகேசுவரன் கண்ணனிடமிருந்து நான் நேரே கேட்டேன்.

அரசனே, கேசவனுக்கும், அர்ஜுனனுக்கும் இடையே நடந்த வியப்புக்குரிய இந்தப் புண்ணிய சம்பாஷணையை, நினைத்து நினைத்து, நான் மீண்டும் மீண்டும், மகிழ்வடைகிறேன்.

அரசே! ஹரியின் அந்த அதிசய வடிவத்தை இன்னும் எண்ணி எண்ணி எனக்குப் பெரு வியப்பு உண்டாகிறது.

யோகேஸ்வரனாகிய கிருஷ்ணனும், வில்லை ஏந்திய பார்த்தனும் எங்குள்ளனரோ, அங்குத் திருவும், வெற்றியும் நன்னலமும், ஒழுக்கமும் நீதியும் நிலைத்து விளங்கும் என்பது என் கருத்து.

ஓம்! தத் ஸத்!

(பகவத் கீதை மூன்றாம் ஷட்கம் முற்றும்)

பகவத் கீதை முற்றும்.